வேறு.

தரையிலூரனைத்துமொருபெருந்தட்டிற்றங்தொருதட்டினிற் கமலா, புரியெனும்பதிதந்தரனருளதனினிறுப்பவும்பொன்னகர்க் கனத்தி, னொருபதினறுபங்கிலொன்றேனுமுலகிலூரனைத்தினுந்தி லவப், பெருமைகண்டலரோன்கேத்திரவரப்பேர்பேசினன்பெருந் தவமுனிவீர். (எ)

சூடகமலர்க்கைச்சுரிகுழன்ஞானச்சுந்தரியு மூலகுய்யப்
பாடல்சால்சிறப்பிற்பொலிதருமமுதப்பாதலத்தாதியாய்ப்பரம
வாடகமூர்த்தியமர்ந்தகாரணத்தாலாதாரமெனுந்திருப்பேர்
நீடுசீர்வளத்தினிலவுமாரூர்கருதிமுந்துநிறைபெருந்தவத்தீர். (அ)

சந்திரமௌலித்தம்பிரானருளாற்றூமணைத்தவிசுறைகடவுள்
இந்திரன்முதலாமேறுசீர்த்தேவர்யாவருமெண்ணருங்காலஞ்
செந்தழல்வேள்விபுரிதலாற்றெய்வயாகமாபுரமெனுந்திருப்பேர்
வந்ததுகமலமலரின்மேன்மடந்தைமாதவம்புரியுமாநகர்க்கே. (கூ)

அறங்களுமுயிரின்றொகுதியுமுலகுமளித்தருளல்லியங்கோ தை, யுறைந்ததோர்பங்கினொருபெருங்கடவு ளுதவியவரத்தி னொளியிற், செறிந்தவெள்ளிலைவேற்சேவகனுந்திருவருள்புரிந் துகாத்திடலாற், பிறங்குசீர்க்கந்தபுரமெனுந்திருப்பேர்பெற்றதா ரூரெனும்பேரூர். (க0)

நகுசுடர்நேமிநாரணன்றேவர்நாயகன்பூசனைபுரிந்த, திகழுமா டரவக்கிண்கிணித்திருத்தாட்செல்வனைத்தாபனஞ்செய்து, மிகுவி ழாவெடுத்துவிறன்முசுகுந்தன்வீற்றிருந்தரசுசெய்தளித்த, புகலரு ஞ்சிறப்பாற்புகழ்முசுகுந்தபுரமெனப்பொலிந்துளதன்றே. (கக)

புலமைசால்சிறப்பிற்புகழ்சனற்குமரன்முதலினோர்பொருகலி க்கஞ்சி, மலரினன்விடுப்பவந்துபுற்றிடத்துமணியினைப்பூசனைபுரிந் து, கலியினல்வருந்தாதுய்ந்தகாரணத்தாற்கலிசெலாநகரெனுந்தி ருப்பேர், தொலைவுறுவளத்திற்சிறந்தவாரூர்க்குவந்ததுதொல்லைமா தவத்தீர். (கஉ)

வேறு.

இணைதவிரின்பஞானத்துணைவியோடநாதியாகப்
பணியணிசோதியார்க்குமறிவரும்பண்பிற்பார்க்கீ
ழணைதருகாரணத்தாலந்தரகேசுரப்பேர்
மணமலிபொழிலாரூர்க்குவந்ததுமாதவத்தீர். (கங)

அகலிருவிசும்பிற்கோமானுக்கியபுற்றினூடு
மகிழ்சிறந்தாதிமுக்கண்வானவன்மருவுமாற்றாற்
புகழ்செய்வன்மீகநாதபுரமெனப்புகழுந்தொல்லைத்
திகழ்தருதெய்வநாமஞ்சிறந்ததுதிருவாரூர்க்கே. (கச)

வேறு.

பூவாரணனுநாரணனும்புத்தேள்கணமும்புரந்தரனு
மூவாவமுதைப்புற்றிடங்கொண்முழுமாமணியைமுதல்வியொடுந்
தாவாவழிபாடினிதாற்றித்தணவாமதன்றுஞ்சார்ந்திடலாற்
றேவாசிரயமெனுந்திருப்பேர்திருவாரூர்க்குச்சிறந்துளதால. (கரு)

தவிராவென்றிச்சமற்காரன்றுவாவேதமாதவனா
நவைதீர்வளத்திற்றுபித்துநயமேம்பட்டளித்தநற்சிறப்பாற்
கவலாவறிவின்மாதவத்தீர்கமலாலயமாநகரிதனைப்
புவியாதரிக்குஞ்சமற்காரபுரமென்றுரைப்பார்புலவோரே. (கசு)

நாலாரணத்தினுட்பொருளைநன்குதெரிந்தேயாவர்க்கு
மேலாங்கடவுள்சிவனெனவேவிரும்பிப்போற்றுமெய்யுணர்வி
னூலாரகலத்தருந்தவத்தீர்நுவலுமண்டத்தனிப்புத்தேண்
மூலாதாரமாதலினன்மூலாதாரமெனமொழிவார் (கஎ)

வேறு.

தேசுசாலுலகின்மேலாஞ்சிவதலம்பலவுமற்று
ளாசுதீர்காசிமேன்மையடைந்துளததனிற்சால
வேசிலாமேன்மைபெற்றதாரூரொன்றேயதுணைக்கு
மாசுதீர்தொன்மைசான்றமறைமுதனூல்களெல்லாம். (கஅ)

தேனலர்கமழுந்தேவதீர்த்தமேயாதியாக
மேன்மைகொடீர்த்தம்பலவேறுளவவையன்றிமேனாள்
வானகநீங்கிவந்துமன்னுபுகழாரூர்வைகு
மோனமாதவத்தின்மிக்கீர்மூன்றரைகோடிதீர்த்தம். (ககூ)

வேறு.

அரியுநான்முகத்தேவனும்வானநாட்டரசுஞ்
சுரரும்விஞ்சையரீட்டமுமாதவர்தொகையு
முரகர்யாவருமுயர்கணநாதரும்பிறரும்
விரவியீசனைப்போற்றியிங்கென்றும்வீற்றிருப்பார். (உ0)

உலகமுய்ந்திடப்பலங்கெடத்தருமநின்றோங்கப்
புலவர்வாழ்வுறநுதல்விழிப்பொருவின்மாணிக்க
மலையினீலமாமணியொடுவிளங்கெழுமாரூ
ரிலகுபுற்றிடங்கொண்டினிதிருக்குமாலென்றும். (உக)

இறந்திடாஞானசத்தியெல்லையாமாரூரெல்லை
யிறந்தவரிறவார்சித்தியிறந்திறவாரூரெல்லை
பிறந்தவர்பிறவாரீசன்பேரருட்பேறணிபற்றிப்
பிறந்தையாப்பரவைநீந்தும்பிறங்குசீர்ப்பெருந்தவத்தீர். (உஉ)

எண்ணிலாப்பிறவிதோறுமியம்புநால்விதியுமாம
லெண்ணிலாத்தருமப்பலவேறிழைத்தவர்தமக்கேயன்றி
யெண்ணிலாப்புரிந்தருமாலையிற்பழத்தலகூடா
தெண்ணிலாத்தவத்தின்பயனிதுபெரிதுசாரதமாமால. (உங)

இங்ஙனந்தொல்லையின்கட்பிறந்தவர்யாருமுத்த
ரன்னவர்தம்மையீசனருங்கணநாதரென்றே
யுன்னுதலன்றிமாந்தரென்னவுணர்ந்துழன்றுகுற்றம்
பன்னருங்கேள்வியோடுபடிவமாசாலபழமைமிக்கீர். (உச)

இந்தநற்பதியிற்றோன்றமன்பலசிறப்புயிருமெல்லா
மந்தமிலின்பமுத்தியடைந்திடுமென்றுமெவ்வூ
வந்துதித்துழையுயர்ந்தார்மாசறுமுத்தியதாலப்
பந்தமற்றடைவரென்றேபகரவும்வேண்டுங்கொல்லோ. (உரு)

வேறு.

எண்ணில்பாவமிழைத்தவராயினு
மண்ணலார்திருவாரூரடைந்திடிற்
புண்ணியந்திரண்டன்னமெய்ப்புங்கவர்
திண்ணமன்னவர்முத்தியிற்சேர்வதே. (உசு)

இழிகுலத்திலெய்ந்தவராயினு
மழிதொழிற்பலவாற்றினராயினு
மழுவலத்தினராரூர்வணங்கினோர்
தொழுகுலத்தவர்தம்மினுந்தூய்மையோர். (உஎ)

இந்தமாநகரின்னிளங்கால்படு
மந்தண்மாமரம்புள்விலங்காதிய

பந்தவல்வினைவீட்டிப்பரனடிச்
செந்தணீழலிற்சேர்வதுதிண்ணமே. (உகூ)

வேறு.

தாக்கணங்கரியமாதவம்புரிந்துறை
பூக்கமலாலயமெனும்புரத்தினை
நோக்கினிலொருவிசைநோக்கநோக்குமு
னுக்கியபாதகமனைத்துமாயுமே. (உகூ)

கறைத்திருமிடறுடைக்கடவுள்காமுறு
நறைப்பொழிற்கமலைமாநகரைநன்மனங்
குறித்திடிலொருகணங்கோடிபாவமா
னெறித்திடும்பரிதிமுன்னிருளினீங்குமே. (௩0)

ஈறிலாருரொனவியம்பினோர்முறை
நூறுநூறாயிரம்பாவநொய்தினின்
மாறுமாறாயவெம்புலத்தைவாட்டிய
கூறுசீர்மாதவசுகுணத்தின்மேலையீர். (௩க)

சேண்டொடாநிவந்தவொண்சீர்த்திநல்வள
னீண்டியதிருநகரிதனைமெய்யினுற்
றீண்டிடிலவெஞ்சனற்றீண்டுமபஞ்சியின்
மூண்டிடும்பவமெலாமாதவத்தினீர். (௩உ)

வேறு.

துலைமுதற்கொடைவழங்கியுந்தொல்பரிமேதம்
பலவிழைத்துமற்றுள்ளபன்மகத்தொழில்பயின்று
மலைமுழைக்கணுற்றலர்சருகருந்தியுமாறாப்
புலனடக்கியும்பூமியிற்புனல்பலபடிந்தும். (௩௩)

ஐந்தழற்கிடையருந்தவமாற்றியுமளவின்
மந்திரத்தொகைபற்பலவெண்ணியும்வரம்பில்
சந்தநான்மறையோதியும்பணிப்பதிதாங்கு
மிந்தஞாலமேலிரும்பதியெண்ணிலதொழுதும். (௩௪)

பல்லமாண்விரதத்தொகையியற்றியும்படைக்கு
மெல்லைதீர்பலனிறைவனாரொனவொருகாற்
சொல்லவேவரும்பலனெவ்வாதென்றுமித்தொல்லை
மல்லன்மாநகர்ப்பெருமையையாவரேவகுப்பார். (௩௫)

## தலமகிமைச்சருக்கம்.

பொட்டுவாணுதலரம்பையர்பூண்முலையுழுது
கட்டவிழ்ந்ததார்மார்புடைக்கடவுளருலகு
மட்டசித்தியுமுத்தியுமெய்திமோரூர்
வட்டநோக்கியேயாண்டுநின்றுயினும்வணங்கில். (கசு)

நீடுநல்லருட்டேசிகர்ப்பழித்தநீள்பவமும்
பாடுநான்மறையந்தணருயிர்க்கொலைப்பழியு
மாடகங்கரவாற்றியபாவமுமாரு
ருடுசெல்லுமுன்கோடியோசனையகன்றொழியும். (கஎ)

கள்ளருந்தியுமிழ்குலமடந்தையர்களிவாயுந்
தெள்ளுதேய்புனன்மாரியுஞ்சேர்ந்ததீவினைக
ளெள்ளலம்புனலசன்பனைப்புரியவாரூ
ருள்ளமுள்ளுமுன்வெயிற்படுபனியினின்றொழியும். (கஅ)

மாதராருயிர்வதைத்தவெப்பாவமும்வஞ்சாத்
தீதிலாருயிர்செகுத்தவெப்பாவமுஞ்சிறுவர்
கோதிலாருயிர்கொன்றவெப்பாவமுங்கபிலை
யாதிமாநகரடையுமுன்னுசமாகலடையும். (க௯)

கொய்யுளைப்பரியோதனங்குளிர்புனற்றரும
மையரிக்கண்மாமகளிரைப்பகர்ந்தபாவமுஞ்
செய்யநற்கமலாலயஞ்சேருமுன்றிரு
மையமற்றதற்கில்லையாலருந்தவத்தறவீர். (உ0)

ஈதுதீர்சிவலிங்கமொன்றடிமைசெய்வன்று
ஞேதுஞானநூலாகமமுன்னைசான்றுடைய
வேதநூலிவைவிற்றவெம்பாவமுமாரூர்
போதுமுன்னரேவளியெதிர்பூளையிற்போமால். (உக)

பரமனாலயப்பொருள்கவர்பாவமும்பன்னாட்
விரதநோன்பினைவிடுத்தவெப்பாவமும்பயந்த
குரவர்நல்லுரைமறுத்தமாபாவமுங்கொடிதாழ்
புரிசைசூழ்கமலாலயம்போற்றிடப்போமால். (உஉ)

நன்றுதென்புலவாணர்தந்தொன்மைசால்கடன்க
ணின்றுசெய்திடாப்பாவமுஞ்செய்ததோர்நன்றி
கொன்றபாவமுநம்பினர்க்கோறல்செய்பவமும்
பொன்றவயங்கியபுரிசையாரூர்தொழப்போமால். (உங)

துறைமடைப்புனலருந்துமானினையினைத்துரப்போர்
நெறிதிரிப்பவர்பிறர்மனைவிழைபவர்நின்று
பிறர்பழித்திறங்கூறுவோர்பெரியவர்ப்பிழைத்தோர்ப்
பொறையுடைக்கொடும்பவமுமாரூர்தொழப்போமால். (௪௪)

ஆலயத்தெதிரூர்திகளிழிந்திடாதணைவோ
ராலயத்தினைக்கண்டிடிற்றொழுதிடாரன்னை
பாலர்நற்கிளைகுரவர்கள்பசிப்பவூண்மிசைவோர்
பாலளப்பில்வெம்பவமுமாரூர்தொழப்பாறும். (௪௫)

அடிசிலுண்டிடுகாலையிலெல்லமாங்கடைப்போர்
நடுவிகந்தவர்பொய்யினர்சோருநாநவில்வோ
ரொடிவிலாநியமத்துறைமுடித்திடாதுண்போர்
நெடியபாவமுநிமலனாரூர்தொழநீங்கும். (௪௬)

தணிவிலுண்டியர்தமக்கெனநல்லுணுச்சமைப்போ
ருணவுசெய்திடும்பந்தியில்வேறுசெய்துண்போர்
துணைசெய்தோழர்பால்வஞ்சனைசூழ்ந்தவெம்பவமு
மணநறும்பொழில்வளங்கொளாரூர்தொழமாயும். (௪௭)

தானநன்பொருள்விலக்கினோர்தானமாங்கொடுப்பற
மாநிலம்பொருள்வெளவினோர்பல்லுயிர்வதைசெய
தானருந்துவோருடையகோனுயிர்ப்பழுதுசெற்று
மீனர்பாவமுங்கமலையிலேகுமுன்னேகும். (௪௮)

மணமகன்மொழிமறுப்பவன்மகிழ்நனுண்பதன்மு
னுணவுசெய்பவடியிலுமுன்றுயிலபவளுறங்குந்
துணைவன்முன்னெழப்பின்னெழுங்கோதைகதன்பவமு
மிணர்கொள்கொன்றையான்கமலையிலேகுமுன்னேகும். (௪௯)

எத்தலத்தினுமொழிந்திடாப்பாவமுமீசன்
சத்திதன்புரமாகுமித்தலத்தினிலொழியு
மித்தலத்தினிலொழிந்திடாப்பாவமெத்தலத்து
மெய்த்தவத்தினிரொழிந்திடாதிம்மொழிமெய்ம்மை. (௫௦)

வேறு.

சிவன்றிருவக்கமாலைதரித்திடாத்தீமையோருஞ்
சிவன்றிருத்தெய்வநீறுதரித்திடாவடிவினோருஞ்
சிவன்றிருவஞ்செழுத்துக்கணவினுஞ்சிந்தியாருஞ்
சிவன்றிருவாரூர்சேரிற்சிவபதஞ்சேர்வர்திண்ணம். (௫௧)

அரனடிக்கன்பிலோருமழிவிலாவமலஞான
வரனடிக்கன்பர்தம்பாலன்பிலார்தாமுந்தொல்லை
யரனிசைப்புராணகாதையிகழ்ந்திடுமறிவிலோரு
மரன்விருப்புறவாரூரடையின்வீடடைவரம்மா. (௩௨)

வேறு.

துண்டவெண்பிறைமுடிச்சோதிநாயகன்
வண்டமர்குழன்மலைமங்கையோடுறை
யண்டர்சூழலர்கமலாலயப்பதி
கண்டவர்வறுமைநோய்கண்டிடார்களோ (௩௩)

மின்றிகழ்மெல்லிடை வேலைமேகலைப்
பொன்றிகழ்பூண்முலைப்பூமிநேருஞ்சக
மன்றலங்கமலமாங்கமலைமாநகர்ச்
சென்றவர்நமனபதிசென்றிடார்களோ. (௩௪)

படங்கெழுபாம்பணைப்பச்சைமாமுகி
லிடந்திகழ்மாலைமார்பிலங்குந்தாமரை
மடந்தைமாதவம்புரிகமலையாலய
ரடைந்தவரிருளுலகடைந்திடார்களே. (௩௫)

வேறு.

அரம்பைமாதர்தமஞ்சுணங்கேந்திய
குரும்பைவெம்முலைப்போகமுங்கொய்யமலா
நெருங்குகற்பகநீழலும்வேண்டினோர்
விரும்பியாரூர்நகர்தொழவேண்டுவார். (௩௬)

நந்தன்வாழ்பதிநான்முகன்வாழ்பதி
யிந்திரன்பதியெய்தவிரும்பினோ
ரந்தணீர்கமலாலயமாம்பெயர்
முந்தைமாண்பதியெய்தமுயல்வரால். (௩௭)

வேறு.

அன்புவாய்ந்தநல்லருந்தவக்கிழமைசாலறவீர
பொன்பொலிந்தபூங்கொன்றையான்பொன்னடிநீழ
லின்பம்வேண்டினீரிந்நகர்தொழுவீரில்லாத்
துன்பம்வேண்டினீரிப்பெருந்திருநகர்தொழாரால். (௩௮)

அரிவைமாதர்தங்காமம்வாணிகங்கரவாதி
கருமவேதுவினுயினுங்கடிமதிலாரூர்

மருவினோர்களும்வானகத்தரசராய்வாழ்வ
ரிருளின்மாதவிர்வேறினியிசைப்பதென்யாமே (௫௯)

ஒருபகற்பொழுதாயதன்பாதிநாழிகையொன்
றொருகணப்பொழுதோரணைக்கணப்பொழுதேனு
மிருவருக்கரியார்கமலாலயத்திருந்தோ
ரிருளறுத்துயர்சிவபதத்திருப்பரால்லென்றும். (௬0)

வேறு.

ஐந்துபாதகமாற்றினராயினு
மெந்தையாரூரிடத்தைவலஞ்செய்து
வந்துளாரொளில்வல்வினையாவையுஞ்
சிந்திவீட்டினிற்சேர்வதுதிண்ணமே. (௬௧)

மாறில்வண்புகழ்வான்கமலாலய
மூறுமன்பொடுபோற்றியவுத்தமர்க்
கீறிலாதவிருந்தவத்தெப்பணிர்
வேறுபுண்ணியஞ்செயயவும்வேண்டுமோ. (௬௨)

வேறு.

ஒன்றாம்மித்திருநகரிடைக்கலிவலிநொடரா
தென்றுநன்மையேபயங்குமித்தலத்தினிலிழைத்த
வொன்றொர்நல்லறங்கோடியாயழிவின்றியோங்கும்
பொன்றும்வெம்பவச்சூழமெலாம்பொன்றிடாததவத்தீர். (௬௩)

துயில்வதெம்பிரான்றியானமந்திரமொழிசொலல
லயில்வதாகுதிநடப்பதாலயவலஞ்சேரடன்
முயறரும்பிறதொழிலெலாஞ்சிவன்பணிமுயற்சி
நயமலிந்தசீர்த்தென்கமலாலயநகர்க்கே. (௬௪)

இத்தலத்துளவற்புதமெண்ணிலவிணைதீ
ரித்தலத்துளசிவலிங்கமெண்ணிலவன்றி
யித்தலத்துளதீர்த்தமுமெண்ணிலமுன்னா
ளித்தலத்தினிற்கதியடைந்தோருமெண்ணிலரோ. (௬௫)

வேறு.

வார்புனல்யமுனைகங்கைவாணிகோதமைமுன்னய
பார்புகழ்நதிகள்கோடிபடிந்திடும்பலனாரூரி
லோர்பகலுறையும்பேற்றிலொருபதினாறிலொன்று
நேர்தராதிதுமற்றுண்மைநிலைமைசானெடுந்தவத்தீர். (௬௬)

கருவாழிநீந்திபின்பக்கரைகண்டதவத்தீர்செல்வத்
திருவாரூரறியாதாரோசிவலோகமறியாதாரோ. (எச)

தண்டுழாய்மாலேமேகந்தாமரைக்கடவுண்முன்னு
மண்டர்சூழ்ந்தேத்தவென்றுமல்லியங்கோதையோடு
வண்டுலாங்கொன்றைமோலிவாணவன்வாழுமாரூர்
கண்டுளார்தாமேமேலாஞ்சிவலோகங்கண்டுளாரே. (எரு)

எண்ணின்மாதவத்துயர்ந்தவிருடிகளிறைவராகி
மண்ணெலாம்புரந்துவாழும்வளத்தினோனுமுக்க
ணண்ணலாரூர்தொழாதாரறியரேனைத்துங்காணும்
கண்ணுளாரோனுமாரூர்காணுதார்கண்ணிலாரே (எசு)

இந்தமாநகர்க்குமேலாநகரமுமீறிலசெல்வத்
திந்தமாநகரமொத்தநகரமுமெறிநீர்சூழ்ந்த
விந்தமாநிலத்திலில்லையிணையிதற்கிஃதேயாரு
மிந்தமாநகரின்மேன்மையிசைப்பரிதெவர்க்குமம்மா. (எஎ)

வேறு.

இந்தமான்மியம்படிப்பவர்கேட்பவர்யாரு
நந்தலில்லதோர்திருவொடுநனிமகிழ்வெய்தி
முந்தைவல்லவினைத்தருவினைமுதலொடுமுருக்கி
யந்தமெய்திடாவளந்தருசிவபதமடைவார். (எஅ)

வேறு.

என்றுகூறினன்சூதனிளம்பிறை
கொன்றையோடுமுடித்தபொருப்புஞ்சடை
வென்றிமால்விடைவிண்ணவன்ருண்மல
ரொன்றுகாதன்முனிவருவப்பவே. (எகூ)

தலமகிமைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௨௦

## வன்மீகநாதச்சருக்கம்.

ஆரூரில்வன்மீகத்தகிலசராசரந்தழைப்பப்
பேரூர்பற்றிகவிறப்புப்பிறப்பந்தமுதலில்லாக்
காரூருமணிகண்டன்கருணையுருக்கொண்டமர்ந்த
சீரூருந்திருக்காதைதிகழ்சூதனுரைசெய்வான். (க)

# வன்மீகநாதச்சருக்கம்.

முறைகாலதமதாருணோன்றுமுகுந்தன்மகபதிமுதலோர்
சொற்கான்றபுகழ்க்குருக்கேத்திரத்தின்கட்டொக்கமர்ந்து
பொற்பாருமகமொன்றுபுரிதரவாங்கிசைந்தந்த
நற்காமர்மகத்திற்குவேண்டுவனநன்கமைத்தார். (௨)

வேண்டுவனநன்கமைத்துவிளம்பியநூல்விதிவழியே
யீண்டுமகமிதுமுற்றவினை யிளையாநினைத்தோரோ
மாண்டகையதலைவரெனமுற்றவர்நடம்பிவினையர்
தாண்டுமகமதுபுரிந்தாராயிரமாண்டதற்கப்பால். (௩)

இந்திரனேமுதலிமையோரினைத்தயர்ந்தாரரியினையா
தந்தமகம்புரிந்தெவர்க்கும்பதியாமென்றநங்கையுற
வெந்தழனுவொன்றுநெடுவின்னாறுநீட்டியதென்னச்
செந்தனுவொன்றெழுந்ததாணையினுற்றமகத்தில். (௪)

ஒருமூன்றுசுடர்காலவொளிர்வடிவினைகுரப்பேர்
வரியார்வெஞ்சிலையந்தமகத்தெழக்கண்டதுபற்றி
யரியாங்கோர்நெடுமின்னோடணைந்தமுகிலெனத்தோன்றிச்
செருவாகைமடங்கலெனத்தேவர்கண்மேற்சினந்தெழுந்தான். (௫)

எழுந்துநெடுமால்யார்க்குமாற்றலேவனெனவெண்ணி
யொழிந்தறியாமருண்மதர்ப்பாலொண்சிலைகாலுறவளைத்துக்
கொழுந்துறுசெங்கனன்பாரிக்கொழுப்பகுவாய்க்கருங்கொண்மூப்
பொழிந்ததெனச்செஞ்சரங்கள்பொழிந்தமரர்தமைத்துரந்தான். ()

வேறு.

துரந்தெழல்கண்டுதேறுஞ்செகனெஞ்சம்
புரந்தரனாதியபுங்கவர்முன்னோன்
விரிந்தெழுநஞ்செரிவெந்தனல்வீச
விரிந்தெனவேங்கியிரிந்தனரன்றே. (எ)

இரிந்தவர்தம்மையிருஞ்சினமாயன்
றுரந்துதொடர்ந்தனனஞ்சுதொடர்ந்தாங்
கருங்கயிலாயமடைந்தெனவானோர்
வரந்தருசத்திபுரத்திடைவந்தார். (அ)

வேறு.

வந்துமேவினன்மாயனும்வந்ததோரளவின்
மூண்டுவெவ்வலிமுழுவதூஉமழிந்தனன்முக்க

ணைந்தைதன்புடையெய்தியவெரிபுகைவிடத்தி
னந்தமில்வலியனைத்துமாய்கழிந்தவாறதுபோல். (கூ)

வெறிகொள்கொன்றையஞ்சிகழிகைவிரிசடைவேய்ந்த
விறையவன்பராசத்திதன்னெல்லையாமியல்பாற்
குறைவில்வெவ்வலிகுறைந்துபோரடுதொழில்குன்றி
யறிவுநீங்கிமால்கண்டுயின்மயக்கமாய்கடைந்தான். (க0)

அறிவுநீங்குமால்சத்தியினுணையாலடல்விற்
றனையிலூன்றிமேற்றலையுரந்துடமணிக்கழுத்தி
லுறவுறங்கினுனிவை துரந்துபோலூன்றி
நறியதாமரைநான்மலர்ச்சண்டுயின்றதுபோல். (கக)

பால்விரிந்திடாதோங்கிவீழ்றான்றுபார்வீழ்த்து
மாலமாமணியருவிநாமுணிநெடுங்குன்றம்
போலமாநிலனூன்றியபொருவருஞ்சிலையின்
மேலுறங்கியேநின்றதுதிகிரிமாமேகம். (கஉ)

அனைவர்தம்மையுமையல்செய்தழிக்குமாயவனு
நினைவுநீங்கியேநெடுந்துயின்மயங்கொடுநின்ருன்
வனையிளம்பிறைமௌலியான்மாபராசத்தி
தனதுமாயையின்பெருவலியாவரோதணப்பார். (கங)

வேறு.

அலைத்தலையழல்வாய்ப்பாந்தளணைத்தலையாலம்பச்சை
யிலைத்தலையுறங்குமேகமிருநிலத்திடையினூன்றுஞ்
சிலைத்தலையுறங்குஞ்செய்கைசினக்கொலைவேடர்சூழ்ந்த
வலைத்தலைமானைமயாத்துவாசவன்முதலோர்கண்டார். (கச)

கண்டதோர்காலவானோர்குரவன்காதலனைக்காணா
மண்டியசீற்றத்தெம்மைமலைத்தபோர்மாயன்வாளாக்
கொண்டதோர்சிலையிற்றூங்குங்கொள்கைமற்றென்கொலென்னும்
விண்டலவேந்தர்க்காசான்மகனிவைவிளம்பலுற்ருன். (கரு)

ஒருபெரும்பரமஞானவுயர்பராசத்தியெல்லை
திருவளரிந்தவைப்புத்திசைமுகன்முதலோர்முன்னு
ளரியபூசனைபுரிந்தவாடகவிலிங்கமூர்த்தி
மருவியிப்பூமியின்கீழநாதியாய்வைகுமன்றே. (கசு)

## வன்மீகநாதச்சருக்கம்.

ஆதலாலிந்தவைப்பிற்செருக்கினலடையவொண்ணு
தேதமார்செருக்கினிந்தமாயனிங்செய்தித்தொல்லைத்
தீதிர்பர்மசத்திதிரோபவஞ்செயமயங்கிப்
போதமதிழந்துறங்கிநின்றனனென்புலவர்கோவே. (கஎ)

மாயவனுான்றிநிற்கும்வார்சிலைமுரணவிசன்
றூயவார்சிலைமதங்கன்முதலிய ... ... ...
தீயதோராக்கர்முன்னும் ... ... ...
காய்கதிர்மதிதிமூன்றின்வடி ... ... ... (கஅ)

மகத்தொழின்முற்றுதூறுவருவித்துச் ... ... ...
யகத்துறுதருகனிந் ... ... ... ...
மிகைத்தொழிற்காரண ... ... ... ...
யிகற்படைமாயன்சென்னிவிட் ... ... ... சாபம். (கசு)

மற்றிதுகாலைநீர்போய்மாநில ... ... ...
புற்றிழைத்ததன்பாற்செலவினுருவமாய்ப்பொருந்தியூன்றும்
விற்றலைப்பிணித்தநாணினடியினை ... ... ...
லற்றிடப்புரிந்தாற்சென்னியற்றிடுமாயம்கம்மா. (உ0)

என்றுபொன்மைந்தன்கூறவிந்திரனமரரோடு
மன்றவுண்மகிழ்ச்சியெய்திவகுத்தவம்முறைமையிழைப்பப்
பொன்றனதணிகழுத்திற்பொலிதிருமங்கலப்பொன்
மின்றிகழ்நாணற்றுங்குவிலவினுணைற்றதன்றே. (உக)

நாரிநைந்திறுதலோடுநனிபெருவிசையிற்சால
வார்சிலைநிமிர்ந்தகாலைவலியநாம்விசையிலெற்றக்
கார்தவழ்கனகக்குன்றின்கதிர்முடிபறிபட்டென்ன
சூரியங்கிரிப்புத்தேன்முடிபறிபட்டதன்றே. (உஉ)

முறுகியசீற்றத்துப்பின்முழங்கொலிப்பகுவாய்வெய்ய
பொறிவிழிநரமடங்கற்பொருதிறல்வாட்டுஞ்சிம்புட்
சிறையறைவிசையின்முன்னமுடைந்தெனத்திருமால்சென்னி
பறிபடுவிசையிலண்டப்பித்திகைபகிர்ந்ததம்மா. (உங)

பிரமமூதண்டத்துச்சிபிளந்திடவெழுந்தசென்னி
புருமிடியனந்தகோடியொலித்துவீழ்ந்தென்னமுன்ன
மரபொடுபுரிதந்துள்ளமாபெருவேள்விக்குண்டத்
தருகுறவீழ்ந்ததெண்டோளமலனதாணைதன்னால். (உச)

வேறு.

அன்னவேலையிலலேந்தனமூதண்டமனேத்தும்
பன்னகங்களுமாதிரக்கரிகளும்பதைத்த
பொன்னின்மேருவுமசைந்ததுமற்றதன்புடைசூழ்
மன்னுமால்வரைக்குலங்களுநடுங்கினமாதோ. (உரு)

ஏழுதெண்டிரைக்கடல்களுமொன்றுபட்டெழுந்த
பாழிவெங்கனல்வடவையுஞ்சிகைபரந்தெழுந்த
வூழிவன்கடுங்கால்பலவெழுந்தனவொருங்கே
யாழியங்கதிராறிரண்டெழுந்தனவம்மா. (உசா)

வேறு.

விரிபுகைவெங்கனல்வெந்தவிரும்பின்
பெருமுசலத்தொடுபேரொலிவிம்மு
முருமிடிவீழ்ந்தனவொல்லெனவெங்கு
மிருண்முகிலேழுமெழுந்தனவன்றே. (உஎ)

தேவர்கள்சிந்தைதளர்ந்தனர்தேவர்
காவலனெஞ்சுகலங்கியயர்ந்தா
னுவுறைகின்றதொர்ஞானமடந்தை
யாவியையன்னவனற்புதமுற்றான். (உஅ)

ஏழிருதொல்லையிரும்புவனத்துள்
வாழுயிர்யாவுமயங்கிமறிந்த
வாழியினுன்சிரமற்றதொரங்கா
ளூழியினீற்றினையொத்துளதன்றே. (உகூ

வேறு.

இனையகாலையினேங்கியுள்ளொடுங்கியவிமையோ
ரனைவருஞ்சிவனருளினலவனடிக்கமல
மனநினைந்தவன்மந்திரமூலமாங்குறைத்து
நனிவெருக்கொடுநண்ணினர்நண்ணியகாலே. (௩௦

தாமரைக்கணன்றலையொடுதலைமைபெற்றுய்ய
மாமலர்த்தவிசுறைபெரும்புகழவன்மகவான்
காமர்பொற்புடைவிண்ணவர்கலங்களூர்நீங்கி
யேமகற்பலவரத்தொடுமின்பவாழ்வெய்த. (௩௧

பண்டைமாதவம்பழுத்தநற்பண்ணவர்தழைப்ப
மண்மொருயிர்பிறவெலாமயக்கொழிந்துய்ய

## வன்மீகநாதச்சருக்கம்.*

வெண்டிசாமுகமாகுபோய்விளங்கவெண்கடந்த
வண்டகோடிகளனைத்துமாங்கசைவின்றிநிற்ப. (கஉ)

வரைகளுகங்கள்வன்புறக்கமடமாதிரத்துக்
கரிகளேழ்பெருங்கடல்கள்செங்கதிர்மதிபிறவு
முரியதொன்மையிற்பிறழ்ந்திடாதுற்றிடவுயர்ந்தோர்
பரவுநல்லறப்பசுங்கொடியுலகெலாம்பட ர. (கக)

மந்திரம்மறையாகமபுராணநூல்வயங்க
வெந்தநாட்டிற்குந்திலகமாய்ப் பொன்னிநுடங்கச்
சந்தவெண்டிருநீற்றொளித்தண்ணிலாத்தயங்க
முந்தைவைதிகசைவமாமுதலகோங்க. (கச)

திருமடந்தைமங்கலத்தொடுசிறப்பநீடுலாப்
பெருமடந்தைநல்வனப்பொடுபிறங்கநாற்கலவி
யொருமடந்தைபேரொளியொடுவிளங்கவொண்சயா
மருமடந்தைவாழ்வடைந்தகத்துவகைபூத்தலர. (கரு)

வேறு.

உருவொடுதொழிலொப்பில்லாவுயிர்க்குயிராகியொன்றாய்ப்
பிரமமாயநாதியாகிநின்றதோர்பிறங்குசோதி
திருவளர்ஞானச்செம்பொற்சிவலிங்கமயமாய்த்தேவர்
புரவலனிழைத்ததெய்வப்புற்றிடத்தெழுந்ததன்றே. (கசு)

புற்றிடங்கொண்டெழுந்தபொன்னொளியிலிங்கநேமி
வெற்றியம்படையினுனும்விரிஞ்சனுமருட்கைநீங்க
முற்பகலெழுந்தசெங்கேழ்முழுமணித்தானுவென்னக்
கற்றையங்கதிர்பரப்பிக்ககனமேனிமிர்ந்ததம்மா. (கஎ)

பாய்கடன்ஞாலமாதிபாதலமுருவிமீப்போ
யாயிரகோடிஞாயிறணைந்தெனப்புற்றகத்துச்
சேயொளியிலிங்கந்தோன்றத்தீர்ந்தவுற்பாதம்யாவும்
ஆயநான்முகனவ்வேலைதுண்ணெனவெழுந்துபோந்தான். (கஅ)

வேறு.

எழுந்துதன்மனைவதிநீங்கியாவருந்
தொழும்பராசத்தியூரெய்திச்சோர்ந்துணர்
வழிந்தவிந்திரன்முதலமரர்யாரையுஞ்
செழுங்கமலாசனத்தேவன்றேற்றினன். (கக)

தேற்றியங்கவரொடுஞ்சிவபிரான்புகழ்
போற்றிமற்றவன்றிருமந்திரம்புகன்
றேற்றினனுருவமாமிலிங்கமூர்த்தியைச்
சாற்றருங்காதலிற்றாழ்ந்திறைஞ்சினன். (சo)

இறைஞ்சிவிண்ணவரொடுமெழுந்துநான்முக
னறம்பகரெம்பிரானருளின்மேனியாரு
சிறந்தமூலத்தொளிர்சிவலிங்கத்தினை
நிறைந்தெழுமன்பினிற்றொழுதுநின்றனன். (சக)

வேறு.

தொழுதயன்மகவான்விண்ணோர்தொகையொடுநிற்குங்காலை
யழலவிர்நெடியநாணுவகத்துமுன்றோன்றியென்னச்
செழுமணிப்புற்றிற்றோன்றுந்திருமூலட்டானத்தொல்பே
ரொழுகொளியிலிங்கத்தூடுதோன்றினனொப்பிலாதான். (சஉ)

வேறு.

கரியமைக்குழல்வெண்ணகைப்பசிளங்கழைத்தோ
ளருணமழைத்தடங்கண்மலரல்லியங்கோதை
திருமணிககதிர்மாணிக்கமலையிடஞ்சேர்ந்த
மரகதக்கொடிபோலொருபுறத்தினில்வயங்க. (சஙு)

ஒருகைமாமலருறைச்சிறுமன்றுவிளங்க
வொருகைமாமலரொளிமழுப்படையொடும்பொலிய
வொருகைமாமலரொப்பிலாவரதமோடிலங்க
வொருகைமாமலரருள்புரியபயமோடொளிர. (சச)

உதயமால்வரைதோன்றிளம்பரிதிகளொப்பக்
கதிர்செய்மாமணிக்கடகநாற்றோண்மிசைக்கவின
மதியமண்டலமலர்ந்தசெந்தாமரைவாசப்
புதியபோதனமுகத்திருகண்மலர்பொலிய. (சரு)

வேறு.

குளம்பூத்ததாமரைச்செங்கொழுங்கிரணவெயில்கொழிப்ப
வளம்பூத்தகருணைமுகமலர்முறுவனிலவெறிப்பக்
களம்பூத்ததிருநீலங்கரியவிருள்காட்டவெம
துளம்பூத்ததிருவடிமேலொலிமறைக்கிண்கிணியொலிப்ப. (சசு)

## வன்மீகநாதச்சருக்கம்.

படர்ந்தபெரும்பாற்கடலிற்பஃறிரையிற்கிடந்தலையு
மடர்ந்ததுகிர்க்கொழுந்தென்னவாயிரமாமுகக்கங்கை
நெடுந்திரையிற்கிடந்தலையச்சடைக்கொழுந்துநிலாக்கொழுந்து
தடந்திரைவான்கங்கைநுரைத்தயங்குகொழுந்தெனத்தயங்க. ()

பவளமலைப்பாலருவிபசும்பொன்னோடுதாழ்ந்தென்னத்
தவளநெடுநூல்செம்பொனரிமாலைத்தாரோடுந்
துவளமணித்தடமார்பிற்சுந்தரப்பொற்றிருத்தோளிற்
றிவளமணிக்குண்டலஞ்சாடிருநுதப்புணரந்திகழ. (௪௮)

திருந்தியவெண்பட்டுடையின்றிருவழகுந்திருவுந்தி
பொருந்தியசீர்வலஞ்சுழியின்பொலிவுநம்பிறவாத
மருந்தனையதிருமேனிவழிந்தொழுகும்பேரழகு
நெருங்கியெதிர்தொழுமன்பர்நெஞ்சமெலாநின்றுருக. (௪௯)

வேறு.

காலைநற்கதிராயிரங்கோடியிற்கவினுங்
கோலநற்றிருமேனியங்கொழுஞ்சுடர்பரந்து
மூலநெட்டிருள்வேர்முதலபடுங்கீழ்துலவி
னீலநெட்டிருள்விழுங்கிழுதண்டத்திமிர. (௫௰)

கருங்கடாம்பொழிகவுண்மடைக்களிற்றுமாமுகத்துத்
திருந்துசீர்த்திருமைந்தனுஞ்செங்கைவேன்மகனு
மருங்குறப்பொலிந்தேத்திடநந்திமாகாளர்
புரிந்துவாழ்ததிடமற்றையகணம்புடைபோற்ற. (௫௧)

நந்திவாகனனிம்முறைதோன்றநான்முகத்தோ
னந்தவாசவன்வானவர்துன்னெனவஞ்சி
யுந்துகாதலிற்றாழ்ந்தெழுந்துச்சிகைகூப்பி
யெந்தையீசனையுளங்கரைந்தேத்துதலுற்றார். (௫௨)

வேறு.

தெய்வப்பொருளேதிருவாலங்கிழன்
மெய்வைத்தவறம்பகர்வேதியனே
மைவைத்தொளிருமணிகந்தரனே
சைவச்சுடரேசரணஞ்சரணம். (௫௩)

தேவேசரணந்திருஞானமணைப்
பூவேசரணம்பொழியுங்கருணைக்
காவேசரணங்கதிதந்தருளுந்
தாவேதுமிலாத்தலைவாசரணம். (ருச)

ஆராவமுதேயாரூரமரும்
பேரார்முதலேபெருநாவலர்தஞ்
சீரார்நிதியேதிகழ்பொன்னிதழித்
தாரார்புயனேசரணஞ்சரணம். (ருரு)

சிந்தாமணியேசரணஞ்சிவமா
நந்தாவொளியேசரணநமனஞ்
சந்தாளுடையாய்சரணமகிலந்
தந்தாய்கயிலைச்சைலாசரணம். (ருசா)

வேறு.

பொன்மேனிக்கோலங்காட்டிப்புன்கணோய்தவிர்த்தாய்போற்றி
வின்மேருப்பிடித்தசெங்கைவிண்ணவர்பிரானேபோற்றி
பன்மாலைப்பசும்பொற்கற்றைப்படர்நெடுஞ்சடையாய்போற்றி
வன்மீகத்தெழுந்ததெய்வமாணிக்கமலையேபோற்றி. (ருஎ)

வல்லியம்பாந்தள்போற்றமாமறைவாழ்த்தமன்றிற்
பல்லியந்தழங்கவாடும்பரமனேபோற்றிகன்னல்
வில்லியங்கெரியநோக்கும்வீரனேபோற்றிஞான
வல்லியங்கோதைபாகத்தண்ணலேபோற்றிபோற்றி. (ருஅ)

பெருமூலத்தொல்லையண்டபுருடனும்பிறங்குபுத்தே
ளருமூலத்தலமென்றோதுமாரூர்ப்புற்றகத்தினூடு
திருமூலட்டானத்தொல்பேர்ச்சிவலிங்கவடிவிற்றோன்றிக்
கருமூலப்பிணியோடெங்கள்கவலைநோய்களைந்தாய்போற்றி. ()

சீருருஞ்செல்வத்தேவாசிரயமாந்திருப்பேர்பெற்ற
வாரூரிலரசேபோற்றியாழிமால்விடையாய்போற்றி
நீருருமுடியாய்போற்றிநெருப்பூருங்கரத்தாய்போற்றி
பாருரும்புகழாய்போற்றிபரமகாரணனேபோற்றி. (சுo)

அளவிலாவண்டநாகந்திசைக்கரிகமடமாழி
பளவிலாவகைகளாதியழிவுறுதமர்ந்துநிற்ப
வளவில்பேரொளிகொண்ஞானவாடகவிலிங்கமாகி
யளவில்பொருளாற்புற்றினகத்தெழுமானேபோற்றி. (சுக)

## வன்மீகநாதச்சருக்கம்.

வேறு.

விமலாவுலகம்பதினான்கும்விருப்பினீன்ற
வுமைமாதுவிரும்பிமணந்தருளொப்பிலானே
யமுதாய்விடமுண்டுமுனாண்டதுபோலமற்றின்
றெமையாண்டெமதின்னுயிர்ந்தவிறைவபோற்றி. (௬௨)

தானும்மடங்கலியாமைபோர்த்தாலவராகத்
தாண்மைத்திறல்சிந்தியவடிபோற்றிபுற்றிற்
ருணுச்சுடராயெழுந்தப்பெருந்தாணுவின்பா
னீண்மைக்குழன்மாதொடுதோன்றியவிந்தபோற்றி. (௬௩)

வேறு.

என்றுபோற்றிமுன்றொழும்பெருந்தொழிற்கரங்குவித்து
நின்றதாமரைசடவுளாதியர்தமைநிமல
னன்றுநோக்கியேயஞ்சலியொன்றுநான்மறையு
மன்றுதந்தசெவ்வாய்மலர்ந்தாங்கிவையருள்வான். (௬௪)

பரவுவானவர்கேண்மினிப்பழயபதிநந்த
மொருபெருப்பராசத்திதனைப்பதியில்லுறுவித்தோர்
புரைதவிர்ந்தரசணத்தபரிணாமுபுமியின்கீழ்
மருவிமாதொடுமோதிபாயவைகுலமகிழ்வாரல. (௬௫)

அங்குவைகியவாடகமூர்த்தியாமயாமே
யிங்குறுந்துயரகற்றிடத்தோன்றினமிந்தத்
துங்கமாநகர்நினையினுஞ்சொலினுஞ்சோடி
பொங்குதீப்பெருமபாதகங்கோடியோசனைபோம். (௬௬)

அளவின்மாதவமளவினற்பிறவிதோறிழைத்த
விளைபெரும்புகழ்ப்புண்ணியாதமசகலாலயினியா
வளமைசான்றவிபபதியினிற்பிறப்பதுவாயா
தொளிகொளிந்நகர்சகுவடைமற்றிலலைமூவுலகில். (௬௭)

இந்தவெல்லைநம்பராசத்தியின்பமார்வடிவ
நந்தமக்குகந்துளபதியிந்நகன்னைசர
மைந்துபாதகமாயிரங்கோடியாற்றினரும்
வந்திறைஞ்சிடிற்புனிதராய்ச்சிவபதம்வாழ்வார்.

செப்பருஞ்புகழ்த்தேவிர்காள்சிறப்பினற்பொலிந்த
மூப்பெரும்புவனங்கொழுமுடிவிலாச்சீர்த்தி
யிப்பெருந்திருவெல்லையையவமதித்தெய்தி
மைப்பொலிந்தகார்வடிவினன்மௌலிபோய்மாய்ந்தான். (௬௯)

எனமொழிந்திறைமருத்துவர் நமைவிளித்திந்தப்
பனகமாமணிப்பாயலான்சென்னிமுன்பயின்ற
வனல்கொள்வேள்வியினையலுறப்பிடந்துளதாங்குத்
துணைவினேடுமாலுடலுநம்மாணையாற்றுன்னும். (௭௦)

எமைநினைந்துடலிருஞ்சிரம்பொருந்திடலெழுவன்
கமழ்துழாய்முடிக்கரியமேனியனெனக்கழறி
யுமைமடந்தைதன்கணவனவ்வேள்வியிலுதித்த
சமர்வலங்கெழுசிலையினைச்சதமகற்குதவி. (௭௧)

மூந்துவேள்வியிலுதித்தெழூரிசான்மதுகை
யிந்தவார்சிலைதன்னையீரம்புயன்மழையருகி
லந்தவானிடைவைத்திடின்மழைபருகாது
தந்திடும்மெனத்தனக்கிணையிலவன்சாற்றி. (௭௨)

வேறு.

இப்பெருந்திருப்புற்றகத்தாடகவிசைகொளுமிலிங்கத்தின்
மூப்பெரும்புவனங்களுமுய்ந்திடமுறையுளியெப்போது [டோர்
மொப்பிலபேமொழி லுமையுடனுறைகுது மும்பர்காளமைக்கண்
செப்பினேமாமதிபற்பெயர்நினைப்பவர்பிறவிமவருசிறைசேரார். ()

இங்கிசைத்திடுமிம்மொழிசரமென்றிசைத்துநான்முகனுறி
புங்கவர்க்கருள்புரிந்துமுன்புரிமகமுடிவுறப்புரிந்தாழிச்
செங்கரத்தினன்றன்னெடுமிவ்விடைச்சேருமென்றுரைசெய்தே
யங்கைவைத்தமான்மழுவினன்மறைந்தனனாடகவிலிங்கத்தில். ()

அனையகாலையினான்முகனுறியாமமரர்வன்மீசத்தி
னினிதுதோன்றியமூலவாடகச்சுடரிலிங்கமூர்த்தியையேத்திப்
புனிதமாம்பெரும்பூசைசெய்தனைவரும்விடைகொடுபோந்தீசன்
றனதுபேரருளான்முனஞ்செய்மகம்விதிமுறைதாஞ்செய்தார். ()

தழன்மகத்தொழின்முடிபின்மாலுடலரனுணையாற்றுனெய்த
விழைகருத்தொடுமருத்துவரரிசிரமெய்ப்பொருத்தினரீசன்
கழனினைத்தவண்கரியவனெழுந்தனன்கண்டுபின்றெழுந்தென்ன
மழவிடைப்பிரானுணையின்வலியையார்வகுத்துரைசெயற்பாலார்.

வீரபத்திரனாணையால்வேள்வியில்வேறுவேறுயற்ற
சீருறுப்புடலொன்றுபட்டெழுந்தவர்செய்கைபோற்றிகழ்சேமிக்
காருடற்றிருமாலெழுந்தீசனகழலிணைகருத்தின்க
ணேரவைத்தவனருளினாலறிந்தனனிகழ்ந்தகாரியமெல்லாம். (எஎ)

நிகழ்ந்தயாவையுமீசனதாணையென்றறிந்தவனெடுஞ்சீர்த்தி
புகழ்ந்துவானவர்க்கின்னருள்புரிந்துமற்றவரொடும்போந்தாரூர்த்
திகழ்ந்தவெல்லையைச்சேர்ந்துறவணங்கியேசெழுமணித்திருப்புற்றி
னகம்பொருந்தியமூர்த்தியைக்கண்டனன்புரிநாரணனம்மா. (எஅ)

(வேறு.)

நோக்கினான்பணிந்தெழுந்தானுவலருமுவகைநெஞ்சந்
தேக்கினான்வேறுகொண்டசிந்தையும்புலனுமொன்றா
வாக்கினானெழுதும்பாவையாயினானையனருளிற்
போக்கினானறிவுகண்ணீர்பொழிந்தனன்புளகம்போர்த்தான். (எகூ)

ஆடினான்கைகொட்டியாளவிலாவையன்சீர்த்தி
பாடினானின்பத்தேறல்பருகினான்கரஞ்சென்னிச்
சூடினான்வலத்திற்சூழ்ந்தான்றுள்ளினானருளினூடு
நீடினானெடியோனன்பின்பெருமையார்நிகழ்த்துவாரே. (அ0)

அம்முறைதொழுதுவேதனாதியரோடுபோற்றி
மைம்முகினிற்குஞ்சாலைபலைமரோடுமுகட
செம்முகில்புற்றகத்துச்சிவலிங்கத்திறையேதோன்ற
விம்மெனவணங்கிமாயன்றேவரோடேகலுற்றான். (அக)

மீனுமைகேழலசிங்கமுதலவெப்பிறப்பின்முன்னாந்
தானுனைமறந்தபோதுதண்டஞ்செய்தளித்துமென்னை
வானுதமருட்கைநீக்கியடியனேன்றனையின்றாளா
தேனுறுகொன்றைமோலித்தேவாதிதேவபோற்றி. (அஉ)

வெள்ளைமால்விடையாய்போற்றிவெள்ளிவெற்புடையாய்போற்றி
தெள்ளுநீர்ச்சடையாய்போற்றிதிரிமழுப்படையாய்போற்றி
யள்ளனீர்ப்பழனவேலியாரூரிலாதிமூல
வள்ளலேபோற்றியெங்கள்வன்மீகநாதபோற்றி. (அங)

உதிப்பவர்தமக்குமுத்தியுதவுமாரூரபோற்றி
விதிக்குமோர்விதியாய்நிற்கும்விமலனேபோற்றிமேலாங்
கதிப்பழம்பொருளேபோற்றிகருணையங்கடலேபோற்றி
துதிப்பவர்க்கிரங்குஞானச்சோதியேபோற்றிபோற்றி. (அச)

காய்கலிவந்துசூழாக்காமர்பூம்பதியாய்போற்றி
தீயனேன்மருண்மதர்ப்புச்சிந்தியேகருணைசெய்த
தாயினுமினியாய்போற்றிசங்கராபோற்றிதெய்வத்
தூயபொற்புற்றினூடுதோன்றியசுடரேபோற்றி. (அ௫)

ஆக்குமாதொழில்விரிஞ்சற்களித்தருளத்தபோற்றி
காக்குமாதொழிலெனக்குக்கற்பித்தகடவுள்போற்றி
போக்கொடுவரவுதீர்ந்தபுங்கவபோற்றிபோற்றி
வாக்கொடுமனங்கடந்தமாசிலாமணியேபோற்றி. (அ௬)

என்பிழைபொறுத்தின்றுண்டவெந்தையேபோற்றியின்னும்
வன்பிழைபுரிந்தாலுமற்றதும்பொறுப்பாய்போற்றி
புன்பிழைகோடிதொண்டர்புரியினுமவைமேலா
மன்பிழையாயிற்போற்றியாரூர்நாயகனேபோற்றி. (அ௭)

வேறு.

என்றுபோற்றியிமையவர்தம்மொடு
நின்றநீலுருநேமியைநோக்கியே
மன்றல்வேரிவழிந்தபொன்மாமலர்க்
கொன்றைவார்சடைவானவன்கூறுவான். (அஅ)

முப்பெரும்புவனம்முடிவெய்தினு
மிப்பெரும்பதிதான்முடிவெய்திடா
தொப்புமூவுலகத்திலிவ்வூர்க்கிலை
செப்பருந்தகைத்திந்நகர்ச்சீர்த்தியே. (அ௯)

ஞானபூமியிந்நன்னகரெய்திய
வீனவெம்புழுவுங்கதியெய்திடு
மூனவெம்பவங்கோடியுஞற்றினோ
தாநினைந்திடினுங்கதிசார்வரால். (௯௦)

வேறு.

அறப்பசுங்கொடிதவமாற்றுமிந்நகர்ப்
பிறப்பவர்நினைப்பவர்நாவிற்பேசுவோ
ரிறப்பவர்காண்பவர்யாருமீறிலாச்
சிறப்புயர்சிவபதஞ்சேர்வர்திண்ணமே. (௯௧)

இத்தலமீறிலாவெமதுஞானநற்
சத்திதன்வடிவமெத்தலத்துமித்தல
முத்தமதலமெமக்குவகைதந்திடு
முத்தரித்தலத்தினின்முளைத்துளோரெலாம். (௯௨)

புணர்துழாய்மௌலியாய்புவனசாரமா
மிணையமாநகருதித்தவரையெம்முடை
யனகமாகணமெனமதிப்பதன்றியே
மனிதராய்மதிப்பவர்நிரயமன்னுவார். (௯௩)

வேறு.

எண்ணரியபல்வகையதானவகையிந்தும்
பண்ணரியவேள்விமுறைபற்பலவிழைந்து
நண்ணுமிகுபுண்ணியமிந்நானகரமொழிந்தி
னெண்ணவருபுண்ணியமெவ்வாதினிதிசைக்கில். (௯௪)

தேவியனாறும்பொருனைசிந்துநதிதன்கோ
தாவிரிபவம்பலதடிந்தொழுகுகங்கை
வாவுபுனலாடுபயனிந்நகரில்வாழா
மேவவருநற்பயனெவ்வாறிஃதுமெய்ம்மை. (௯௫)

நீணிலநிறைந்தபதியாவுநெடிதூழி
மாணுறுவிதிப்படிவணங்குபயனாரூர்
காணவருநற்பயனெவ்வாதுனைசங்கம்
பாணிமிசைகொண்டிலகுபச்சைமுகிலன்னாய். (௯௬)

வேறு.

இரும்புகழாரூர்மேன்மையின்னுமோர்கோடியுண்டித்
திருந்துசீர்நகரைப்போற்றிவாழ்த்துவார்செல்வமுத்தி
பொருந்துவரவமதிக்கும்புன்கணோர்புன்மையெய்தி
வருந்திமாய்ந்தொழிவரீதுவழுவுறாவாய்மையாமால். (௯௭)

ஆதலாலிந்தவாரூரமரரோடடைந்தேயன்பாற்
போதினுலெம்மைநாளும்பூசனைபுரிந்துபோற்றித்
தீதெலாமகன்றுதொல்லைத்திருவொடும்வாழ்தியென்று
மாதவன்றனக்குநாதன்வரம்பலவழங்கிப்பின்னர். (௯௮)

இந்திரன்றன்பாலன்புசெய்தினிதிருத்தியென்று
வந்தமிலருள்வழங்கியருமணிப்புற்றகத்துச்
சுந்தரலிங்கத்தூடுமறைந்தனன்றேகையோடுஞ்
சந்திரமௌலிஞாலமுழுவதுஉந்தழைப்பமாதோ. (௯௯)

அன்னதோர்காலையீசனமர்ந்துறைபுற்றகத்துப்
பொன்னொளிமூலலிங்கமூர்த்தியைப்பூசைசெய்தே
பின்னருளினிதுபெற்றுங்கெந்தையைவிடைகொண்டேகி
மன்னுதந்தொல்பதத்துமான்முதல்வானோர்போந்தார். (௱)

பேர்ந்தமாதவனை மூன்னும்புங்கவரன்றுதொட்டு
வாய்ந்தசீர்ப்புகழாரூரிற்றினந்தொறும்வந்துவைகி
யாய்ந்தநூல்விதிவழாமலமலனைப்பூசையாற்றி
யேய்ந்தநற்செல்வமாதியெண்ணிலாவரம்பெற்றுய்ந்தார். (க0க)

மாதவன்முதலோரொன்றும்வந்துவந்திக்குமிந்தச்
சோதியைப்புற்றினூடுதோன்றியமணியைத்தொல்லை
யாதியையின்பவாராவமுதினையனந்தருான
நாதனைநினையிற்கோடிபாதகநாசமாகும். (க0உ)

செந்திருமாமடந்தைசெம்பொன்மங்கலநாணைய்த
வந்துபுற்றிடையெழுந்தவளரொளித்தெய்வகுான
வெந்தைதன்னுமயோர்காலினைத்தினூறுகோடி
யைந்துமாபாதகங்களக்கணத்தகலுமன்றே. (க0௩)

பாயிருங்கடல்சூளேழும்பரந்தெழுந்தொன்றுபட்டு
மாயிரும்புவனம்யாவுமாய்ந்திடவரினுமாயாத்
தூயுமாண்புகழாரூரிற்சோதியையொருகாற்காணி
லாயிரங்கோடிபாவமகன்றுமாய்ந்தொழியுமன்றே. (க0௪)

பொலன்சுடர்விரிந்தசோதிப்புற்றிடங்கொண்டதேவை
வலங்கொடுசூழ்ந்துமுக்கால்வணங்கிடிற்கோடிகோடி
நலந்தவிர்வெம்பிறப்பினன்னியபாவமெல்லா
மிலங்கொளியிரவிமுன்னாிருளெனவிரியுமன்றே. (க0௫)

புற்றிடங்கொண்டதெய்வப்புனிதற்குப்புரிசைகோயி
லற்றமிலன்பிற்செய்தோர்சிகரகோபுரமமைத்தோர்
குற்றமின்மலர்பூணுடைதூபதீபங்கொடுத்த
நற்றவருழியூழிசிவபதநண்ணிவாழ்வார். (க0௬)

செழுமணிப்புற்றிற்றோன்றுந்திருமூலட்டானமூர்த்திக்
கொழுகியமதுரச்செந்தேனெண்கனிச்சாரமான்பால்
கொழுநறுந்தயிர்நெய்சாந்தங்குளிர்புனலிளநீராதி
பழுதின்மஞ்சனத்திற்கீந்தோர்பரமனதருகிருப்பார். (க0௭)

பொன்னிவர்புரிசையாரூர்ப்புற்றிடங்கொண்டமூர்த்தி
தன்னைநூல்விதிவழாமலருச்சனைபுரிந்துசால
மன்னுகாதலிற்பணிந்துமனநினைந்தேத்துமன்பர்
மின்னவிர்சடிலத்தெண்டோள்விமலனதுருவமாவார். (க0௮)

திருவளர்செல்வவாரூர்ச்செழுமணிப்புற்றிற்றோன்று
மொருபெருமூர்த்திதன்னையிடையறாதுளத்தடத்து
மருவியகமலக்கோயில்வைத்தகந்தவிர்த்துவாழ்வோ
ரிருளறுபரமசோதியிடைக்கலந்தின்பந்துய்ப்பார். (௧௦௯)

மாசறவயங்குஞ்சோதிவன்மீகநாதன்கோயிற்
றேசுறுசிகரச்செம்பொற்கோபுரந்தெரிசித்தோர்க
ளாசுறுபவங்கணீங்கியாயிரகோடிகற்ப
மீசனதுலகில்வாழ்வார்வேறியாமிசைப்பதென்னோ. (௧௧௦)

மருத்துளவலங்கன்மௌலிவானவன்முதலோரோதுந்
திருத்தகுசெல்வவாரூர்த்திருமூலட்டானமென்றதொல்பேர்
தரித்தவன்மீகநாதன்றனதுமாண்பெருமைமுற்று
முரைத்திடிற்கோடிகோடியுகத்தினுமுடியாதன்றே. (௧௧௧)

இந்தவன்மீகநாதரின்பமெய்ம்மகிமைகேட்டோர்
சுந்தரமுறச்சொன்னோர்கள்சுபமெலாநிரம்பவாழ்வுந்
தந்தமின்மகப்பேறெய்தியரியவான்போகந்துய்த்துப்
பந்தமதகற்றுஞானப்பசுபதிபதத்தில்வாழ்வார். (௧௧௨)

வன்மீகநாதச்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-௪௱௨.

---

## ஆடகேச்சுரச்சருக்கம்.

பற்றிடங்கொண்டபண்பிற்பரவைநற்றொண்டர்நெஞ்ச
முற்றிடங்கொண்டுநீங்காதுறைபெருங்கடவுளாரூர்ப்
புற்றிடங்கொண்டமூர்த்திமான்மியம்புகலக்கேட்டுக்
கற்றிடங்கொண்டபோதத்திருடிகள்கழறுகின்றார். (௧)

பாடல்சாலமரருய்யப்பல்பெரும்புவனம்வாழ
வாடகேச்சுரப்பேர்பெற்றவநாதியாமூர்த்திபுற்றி
னூடினிதெழுந்ததென்றேயுரைத்தனையப்பிலிங்க
நீடுமான்மியம்விரித்துநிகழ்த்தெனநிகழ்த்தினோ. (௨)

நிலைதருதவத்தோராங்குநிகழ்த்தியமாற்றங்கேளா
மலைவறுகேள்விசான்றமாநிலம்புகழுஞ்சூத
னலரொளியகண்டசோதியாடகேச்சுரப்பேர்மூர்த்தி
நலமலிசிறப்பின்மிக்கமான்மியநவிற்றல்செய்வான். (௩)

வேறு.

பொன்றிகழ்சோதிப்புற்றிடங்கொண்டபுனிதனாலயமதன்கீழ்த்
தென்றிசையொருபான்றண்டநீளெல்லைக்கப்புறந்திகழ்பிலவாயி
லொன்றுளததனையுலகெலாநாகபிலமெனவுரைக்குமப்பிலத்தின்
குன்றுருமேன்மைப்பனகராசற்குமுடிபுறக்கூறுவதரிதால். (௪)

இனையபாதாளத்தெல்லையைச்சேணின் றிறைஞ்சியேயிருகர
ங்கூப்பிற், புனிதமாதவத்தீரயுதமாம்பிறபபுற் புரியுமாபாவம்வெங்
கதிர்நேர், பனியின்விண்டகலுங்கோடியெவமபிறப்பிற் பாதகம்பா
ழிவாய்வடவை, யனல்படுபஞ்சினெனலிலையிலழியு மருகுறவணாந்தி
டிலம்மா. (௫)

அறைந்தவப்பிலத்தினருகணைந்தொருகாலன்பொடுசூழ்ந்திடி
லனந்தம், பிறந்தைதோறணைந்தமாபெருமபாவபபிறங்கனுண்டுள்
படும்பிறங்கு, மிறந்திடாவளங்கொளசிவகதியின்ப மெய்திடுமெய்
தருந்தவத்திற், சிறந்தநால்வேதநூறபொருடகேள்விதிருநதியதெ
ய்வமாமுனிவீர். (௬)

இப்பெரும்பிலத்திலநாதியாயுமையோடிலங்கொளியாடகேச்சுரப்
ரொப்பிலாமூர்த்தியுலகெலாமுய்யவூழிதோறூழிவீற்றிருக்கு [பே
மப்பெருமூர்த்திமலரடியருச்சித்தழிவிலாமுத்திபெற்றுய்ந்த
மைப்புயன்மேனிநாரணர்விரிஞ்சர்வானுடுககணத்தினும்பலரால்.

அந்தமாமூர்த்திதிருவடிவழிபட் டழிவிலாவளங்களொன்வ
கைத்தா, நந்துறுவியல்பிற்சித்தியேயாதி நல்வரமுத்திபெற்றுயர்
ந்த, விந்திரர்வானோர்கணங்கண்மாநாகரியககர்கந்தருவர்வான்கரு
டர், முந்தைமாமுனிவர்முதலினோர்தொகுதிமுதுகடன்மணலினு
ம்பலவே. (௮)

மாதவமுனிவீரனையபாதாளவாயிலினையதியாங்குறையுஞ்
சோதிமாமேனிமூர்த்திமையொருகாற்றொழுபவர்சுடர்மணிவிமா
மீதுகொண்டம்பொனுடடைந்தாங்குமேதகுமாசியலாற்றி [ன
யேதமில்சிறப்பினிந்திரபீடத்தினிதுவீற்றிருப்பராலென்றும். ()

செம்மைமாதவத்தீரிருமுறைதொழுவோர் திசைமுகனுருவ
மேயாவார், மும்முறைதொழுவோர்முளரியஞ்செங்கண்முகுந்தன
துருவமேயாவார், மைம்மணிமிடற்றோனுருவமேயாவார் நான்மு
றைதொழுபவர்மரபி, னைம்முறைதொழுவோர்பூரணவகண்டவம
ரமாமூருவமேயாவார். (௧௦)

ஆடகமூர்த்தியென்றெடுத்தொருகா லறைந்திடலக்கணத்தயு
த, கோடிவெம்பிறப்பிற்புரிந்தமாபாவக்குழாமெலாங்குறைந்திடேல்
குறையாப், பாடல்சால்சிறப்புஞ்செல்வமுங்கல்விப் பெருகியுமெனி
தில்வந்தெய்தும், வீடுறுவீடுங்கிடைக்குமீதுண்மைவிழுப்பொரு
ள்வேதமாமுனிவீர். (கக)

வேறு.

சித்திரையென்னுந்திங்கட்டொடையுருபர்சூழ்சேர்ந்த
பக்கின்மேனுங்குபேரன் பரப்பிற்பதுமைகேள்வன்
புத்திதழ்முளரிமேயோன்புலவர்போன்புலவரீட்டம்
பைத்தலையனந்தனுடுப்பராக்கியிஞ்சையரியக்கர். (கஉ)

கின்னரர்கருடர்சித்தர்சாரணர்வசுக்கள்கேடில
வசனியோநிருதிகாலனருணனாநிலனா திசைக்கோ
னுன்னருஞ்சீர்த்தியீசனுருத்திரருவனாவர்
பன்னருமாயுள்வேதர்பலவனாயுபிவீட்டம். (கங)

கதிர்மதிமுதற்கோளவர்கடங்காலங்கள்சங்கையாதி
நதிகள்வேதாகமங்களவைதவிர்புராணமேனைத்
துதிதருகலைகடையவருதூயமந்திரங்கடோமலை
யுததிகண்மேருவாதியோகானமாதிரவேழங்கள். (கச)

சனகரோசனற்குமாரர்சனந்தனர்சனற்குஞான
வனகவற்திரிவசிட்டர்பராசிபனரதியப்பேர்ப்
புனிதன்போதபனாபர்ந்ரனாடைபுரம்பொன்னிகான்முன்னுய
முனிவர்மாதாளர்கற்றிருதுவேபசிவதனன். (கரு)

இந்திராணிமனைவிவாணியிருவிலபூசன்பூமங்கை
விந்தைமாகாளியேனைச்சத்திகள்விண்ணின்மேவும்
பைந்தொடியரம்பையரின்னுரர்பலவனையலமெல்லா
முய்ந்திடவருள்வழங்குமோரெழுகன்னிமாதர், (கசா)

கொதியழற்சிற்றத்துப்பிற்குஞ்சரமுகனைக்காய்ந்தோன்
மதியகடுழுதகோட்டுமாலவனைநெஞ்சுபோழ்ந்த
வுதிரமூற்றிருந்தசெவ்வேலொருதிருமுருகனற்கோட்
டதிர்குரலவெள்ளையானையடலசொள்சென்னெடுத்தவையன். ()

வெயில்விடுகடகத்தின்றோள்வீரபத்திரப்பேர்வேந்தன்
வயமிகுமழல்கொள்குண்டவயிற்றினன்பாணுகம்பன்
சயமிகுகமடப்புத்தேள்சகமெலாமினிதுகாக்கு
முயர்புகழ்வடுகனுதியுருத்திரகணங்களேனோர். (கஅ)

வேறு.

அனைவருஞ்செறிந்தநாதியாயனையபாதாளத்
தினிதுமேவியவாடகவிலிங்கமாமூர்த்தி
தனைவிதிப்படிமுறைமுறையருச்சனைதந்து
கனிவிருப்பொடுதொழுதனர்போற்றுவர்நாளும். (கக)

அந்தவேலையிலனையபாதலத்தினைவலங்கொண்
டந்தமூர்த்தியையொருமுறைதொழுமவர்யாரு
மந்தரத்தவர்போற்றிடவமருலகடைந்தாங்
கந்தமுற்றிடாத்திருவொடும்பல்லுகமமர்ந்து. (உ0)

வெய்யபாசமாம்வனத்தினைவேரறவீட்டி
மையுலாவியமிடற்றினுன்மறைச்சிலம்பொலிக்குஞ்
செய்யதாமரைச்சேவடித்திருநிழல்சேர்ந்து
துய்யபேரின்பவீர்ஞ்சுவைதுய்த்துவீற்றிருப்பார். (உக)

இன்னமாண்புசாலாடகவிலிங்கமாமூர்த்தி
தன்னையோர்முறைதொழுதியாவருநனிசார்ந்து
பொன்னினுடிடமின்மையாற்புலவர்தங்கோமான்
முன்னைவைகலப்பிலத்தினைமூடுவான்மதித்தான். (உஉ)

மதித்துமற்றவனரதனசிருங்கமால்வரையாற்
பதத்தின்மேதகுபதந்தரும்பாதலமதனைக்
கதிப்பெருந்திருமுத்தியாங்கடவுண்மாநகர
மதற்கணைந்திடுநெறியடைத்தாலெனவடைத்தான். (உங)

அடைத்தவவ்வரைமீமிசையஞ்சுடர்வடிவேற்
படைக்கலத்தொடுசத்திகளுல்வரைப்பண்டு
தொடைக்கடம்பணிகாளைதாபித்ததொல்காதை
யெடுத்தியம்புவன்கேண்மின்களெல்லையிறவத்தீர் (உச)

வேறு.

சாலநீள்காலொடுதடக்கைபெற்றதோர்
நீலமால்வரையெனப்பிறங்குநீர்மையா
ஞாலமுமாழிவாயூழியங்கியுங்
காலனும்வெருவருங்கடியசீற்றத்தான். (உரு)

எட்டெனுந்திசைக்கரியெட்டுமோல்வரை
வட்டெனவாடியவலிபடைத்துளா
னெட்டலருராங்கிழித்துதிரமாந்திய
விட்டெரியுமிழ்சுடர்விசயவேலினன். (உசு)

வார்தருவரிகழன்மடங்கலேறனான்
றாருகனெனும்பெயர்த்தறுகட்டானவன்
கூர்முனைவச்சிரக்குரிசிறன்னைமுன்
போரிடைவென்றனன்புறங்கண்டானரோ. (உஎ)

போரிடைவென்றனன்புறங்கண்டிந்திர
னூரினையழித்தனனும்பர்நாட்டுளா
சீர்கெழுவளனெலாஞ்சூறைசெய்துளான்
றாருகனவன்விறல்சாற்றலாகுமே (உஅ)

வேறு.

இந்திரன்றன்னைத்தேவரினத்தொடுதுரந்துபன்னா
ளந்தரநாடுகைக்கொண்டாயிரங்கோடிவெள்ளம்
வெந்திறலவுணரோடுங்கிரௌஞ்சவெற்புமேவிச்
செந்தழல்சொரியுங்கண்ணான்றீயகோல்செலுத்தினானே. (உகூ)

மற்றவன்கொடுங்கோலோச்சிவைகுநாளமரரோடுங்
கொற்றவன்வெள்ளிவெற்பிற்குறுகியேநெடுவான்கங்கைக்
கற்றைவார்சடையான்செம்பொற்பதமலர்பணிந்தவுணன்செய்கை
சொற்றபோதவன்மேலீசன்குமரனைத்தூண்டினானால். (௩0)

தம்பிரான்விடுத்தவேலைசதமகனாதியாய
வும்பர்தங்கணங்கள்சூழவோரிரண்டாறுதின்மே
னம்பிபோந்தவுணனோடுநனிசமர்புரிந்துசெந்தீ
வெம்பொறியுமிழும்வைவாய்வேலினைவிடுத்தானன்றே. (௩க)

விடுத்தவேல்கிரௌஞ்சப்பேர்வெற்பைநுண்டூளியாகப்
பொடித்தெதிர்தாருகப்பேர்ப்பொருதிறலவுணனாவி
குடித்துமிழுதிரமூழ்கிகுளித்துவான்கங்கைநீபத்
தொடைத்தடந்தோளான்றன்பாற்றுண்ணெனமீண்டதன்றே ()

வேலைவேள்விடுத்தவேலைவேலையும்வெற்புந்திக்கு
ஞாலமுநாகமெட்டுநடுங்கினவனையகாலைப்
பாலுறழ்களிற்றோன்முன்னம்பாதலவாயின்மூடு
மால்வரையசைந்ததந்தமால்வரைபசைதலோடும். (௩௩)

வளங்கெழுமாரூர்வைப்பில்வைகியமாந்தர்யாருந்
துளங்கினர்துளங்குங்காலைத்தூயவப்பதியில்வாழும்
விளங்கொளியோகஞானமெய்த்தவர்விளைவினெய்தி
யிளந்தனிமுருகற்போற்றியெய்தியதிசைத்துநின்றார். (௩௪)

மாக்காத்துவைகுமன்பதைவெருவும்வண்ண
ஞானமாமுனிவர்கூறநம்பியஞ்சலியொன்றாங்குப்
பாணிறவேழவூர்திபாதலமடைத்தவெற்பின்
மேனெடுஞ்சுடரிமைக்கும்வேற்படைதன்னைவைத்தான். (௩௫)

அரும்பெறலமரர்கோமானரசலையாதவண்ணம்
பரிந்தருள்புரிந்ததென்னப்பாதலவாயில்சேர்ந்த
பெருங்குவடலையாவண்ணம்பிறங்கொளிமுருகன்வாகை
தருந்திறன்மதுகைவேலாற்றலையளிதந்தானன்றே. (௩௬)

நாமவேற்படையினோடுசததிபோர்நாலவர்தம்மைக்
காமர்பூங்கடம்பனந்தககடவுணமால்வரைமேற்றாபித்
தேமமார்புரிசையாரூர்வெருவுறாதினிதளித்தா
ணமவெங்களிற்றுவேந்தனன்னகரளித்ததென்ன. (௩௭)

சத்திகணால்வரோடுசண்முகப்பெருமானசெங்கைச்
சத்திதானன்றுதொட்டுத்தனிப்பெருங்காவல்பூண்டு
சத்தியமுனிவீர்நாளுஞ்சங்கரனின்பஞான
சத்திமாநகரமூதூர்தனையளித்தமர்ந்ததன்றே. (௩௮)

வேறு.

மாறில்சித்திரைத்திங்களில்வளர்பிறைமருவு
மாறெனுந்திதிதன்னிலவ்வேலினையந்த
வீறில்சத்திகணால்வரைத்தொழுபவர்க்கென்னும்
பேறனைத்தும்வந்தெய்துமப்பெருந்தவமுனிவீர். (௩௯)

இருட்பெரும்பவம்வீட்டிடுபாதலத்தலை
விருப்பினெய்தியேசூழ்ந்துகைதொழுதவண்மேவிக்
கருத்தினஞ்செழுத்தெண்ணிடாங்கிசைப்பவர்கரியன்
றரித்தநாயகனுருவமதாவரீதுண்மை. (௪௦)

இப்பெருந்திருவாடகேச்சுரனெனுமெந்தை
யொப்பரும்புகழுரைப்பவர்கேட்பவரோகை
செப்பருந்திறற்றனதனேயெனச்சிறந்தோங்கி
முப்புராரிதாண்முளரியினின்பமூழ்குவரால். (௪௧)

ஆடகேச்சுரச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௪௭௩

---

# தியாகராஜச்சருக்கம்.

---

தேமலிபொழிலாரூரிற்செம்பொற்சிங்காதனத்திற்
கோமளவல்லியோடுங்கோதைவேற்குமரனோடு
நாமநீருலகமுய்யநண்ணிவீற்றிருக்கும்வேதக்
காமர்பூங்கிண்கிணிக்காற்கடவுடன்காதைசொல்வாம். (௧)

தொழுதுளார்வினைதொலைத்தலாற்றெருளைவுறுத்திறத்தா
லழிவில்வீடினிதளித்தலாலமலமாந்தகையான்
முழுதுமேனிநீற்றொளிகெழுமுக்கணான்போலு
மழைநறும்பொழிற்சாரலங்கயிலைமால்வரையே. (௨)

காண்டகுந்திருப்புணர்தருகாமருசிறப்பான்
மாண்டகும்புவிமுழுவதூஉம்போற்றியமரபா
னீண்டுவானுறநிமிர்தலானேமியான்போலுஞ்
சேண்டொடும்புகழ்முனிவர்சூழ்கயிலையஞ்சிலம்பு. (௩)

தவளவான்பிறைமருப்புவாரருவியர்தானந்
திவளுமாமணிஞாயிறுமுகபடாஞ்செறிகா
ரவிருமோசைமென்புழைபடுதடக்கைநீடமையாக
கவளமாவயிராவணமொத்ததுகயிலை. (௪)

கள்ளுலாவுபூங்கடுக்கையஞ்சடைநெடுங்கற்றை
வள்ளன்மேற்கொடுவெயங்கலான்மலர்ந்தவாலொளியா
லெள்ளருங்குலநாகமேலாகியவியல்பால
வெள்ளைமால்விடைபோன்றதுவெள்ளிமால்வரையே. (௫)

கனிகொள்செய்யவாய்க்கவுரிதன்கருணையுமவடா
னினிதுபோற்றியதருமமுமவளருளெய்து
முனிவருள்ளமுமுதியவம்முனிவரர்தங்கள்
புனிதஞானமும்போன்றதுகயிலையம்பொருப்பு. (௬)

கலைகளிற்சிறந்துள்ளதோர்தென்கலைகறங்கு
மலைகளிற்சிறந்துள்ளதோர்பாலலையறத்தி
னிலைகளிற்சிறந்துள்ளதோர்சைவநன்னிலைபோன்
மலைகளிற்சிறந்துள்ளதுகயிலைமாமலையே. (௭)

பூவினூன்முதலமரர்தம்பதங்களும்புவியுந்
தாவிலாமறைமுனிவர்செய்தவங்களுந்தழைப்ப
நாவலோவொழித்தேத்தியநம்பிரானந்தி
தேவனுடொறுங்காப்பதத்தெய்வமால்வரையே. (அ)

ஏழுவாம்பரியிரவிமாமதிமுதலெழுவர்
பாழிவாயுடைநாகங்களுடுக்கள்பல்லமரர்
வாழுமாதவர்கணங்கண்மற்றவரெலாம்வலமாய்ச்
சூழுமாறினிதமர்வதத்தொல்லையம்பொருப்பு. (கூ)

ஏழுதடந்திரையெழுகடலொன்றுபட்டெழினு
மழைநிறங்கொண்மாலயன்முதல்வானவர்யாரு
மொழிதல்செய்யினுமுலகெலாமொடுங்கினுஞ்சிவன்போ
லழிவதின்றியேயமர்வதத்திருக்கயிலாயம். (க0)

தேவர்விஞ்சையர்கணங்கண்மாதவரொடுசித்தர்
யாவருந்தொழவுலகெலாமுய்ந்திடவெங்கோ
னேவுருவருளுமையுடனூழிதோறூழி
மேவிவாழ்வுறுகயிலையின்பெருமையார்விரிப்பார். (கக)

வேறு.

இனையமாமலைச்சாரலினிடத்தோரிரும்பொழிற்புடையெம்பி ரான்மேனுட், கனிகொள்செய்யவாய்வெண்ணகைப்பசுந்தார்க்கரி யவார்குழற்பொற்றொடிக்கழைத்தோள், வனிதைபோடுறைவேலை யப்பொழிற்கண்வாழ்முசுக்களினொன்றுகூவிளையின், சினைநறுந்த ளிர்கொய்தெமையாளுந்தேவிதேவன்மேற்சிந்தியதன்றே. (கஉ)

சிந்துமெல்லையிலெம்பெருமாட்டிசிவந்துநோக்கலுந்திரிபுரமி றுத்தோ, னந்தண்வில்லுவத்தளிரினுலெம்மையரியவர்ச்சனையன் பினுலிழைத்த, விந்தமாமுசுக்கலையைநீமுனிவதென்கொலென்றி னிதிசைத்துமற்றதன்பான், முந்தைமாமருளகற்றிவாலுணர்வுமு ழுதளித்தனன்முழுதுலகுடையோன். (கங)

அளித்தகாலையின்முசுக்கலைவெருவியன்பினுலடைந்தேத்திய தாங்குக், களிச்சுரும்பறைகொன்றையஞ்சடையான்கருணையாலெ திர்நோக்கிவில்லுவத்தின், றளிர்க்கொடெம்மைநீயருச்சனைபுரிந்த தன்மையான்மனுகுலத்தினிலுதித்து, வளைத்தநீருலகாளுதியென் றுவாய்மலர்ந்தனன்மற்றதுகாலை. (கச)

ஈங்குவைகியேவைகலுறும்மையினிதுபோற்றியேபிருந்தருள் பெற்று, நீங்கிலெங்ஙனமுய்குவனென்று நிகழ்த்தியேமுசுகின்று னைங்தேத்த, வாங்குநோக்கியேநின்றனையாட்கொண்டளித்துமஞ் சலென்றாருள்சுரந்து, தேங்கொள்கொன்றையான்விடுத்தனன்ம னுவின்றிருக்குலத்தினிற்சென்றுதித்ததுவே. (௧௫)

வேறு.

பனிமதிக்கண்ணிவேய்ந்தபகவனதருளினாலே
மனுகுலத்துதித்துச்செம்பொன்மாமணிமகுடஞ்சூடி
முனையுடைக்கதிர்வேல்வென்றிமுசுகுந்தனெனும்பேர்தாங்கிக்
கனைகடற்புவனிமுற்றுங்காவல்பூண்டமர்ந்ததன்றே. (௧௬)

வில்லுவமுறியைவாளாவீழ்த்தியவிலங்குமிக்க
சொல்லரும்புகழ்சால்செல்வத்தொன்மனுகுலத்திற்றோன்றி
யெல்லைநீருலகுக்கெல்லாமிறைவனாயமர்ந்தநென்றா
லல்லுறழ்மிடற்றோன்பூசைப்பெருமையையளக்கலாமே. (௧௭)

புதியதெள்ளமுதம்பில்கும்பொங்கொளிநிலவுபூத்த
கதிருமிழ்செம்பொன்மௌலிக்கண்ணுதலருளாற்போந்து
முதுமனுகுலத்துதித்தமுசுகுந்தவேந்தன்முன்னா
ளதிர்கடலவனிகாத்தவரசியல்சிறிதுசொல்வாம். (௧௮)

மறமிகுகொடியபாவவன்பசியுடற்றவாடி
யுறுதுயருறாதுநீதியொண்சுவையமுதமூட்டி
நிறைதருகருணையென்னுநிறைமணித்தொட்டிலுய்த்தாங்
கறமெனுங்குழவிதன்னையன்பினால்வளர்த்தானன்றே. (௧௯)

மன்பதைவண்டினீட்டமகிழ்வெனுந்தாதனைந்தாங்
கின்பமாமதுரச்செந்தேனினிதமாந்துண்டுலாவத்
துன்பமாம்பாசிதோயாத்தொலைவிலாத்தெய்வத்தூநீர்ப்
பொன்பொலிமனைப்பூம்பொய்கைபுரிந்தனன்புவனியெல்லாம். ()

போர்மகடனக்குந்தொல்லைப்பொருதிரைமுந்நீர்வேலைப்
பார்மகடனக்குமாலைப்பணைநெடுந்தோளளித்தான்
சீர்கெழுதிருமகட்குச்செம்பொன்மார்பினிதளித்தான்
வார்பூலைநாமகட்குவயங்குநாவளித்தான்மன்னே. (௨௧)

கருதலர்தொகுதிக்கெல்லாங்கனைகுரற்கடலளித்தா
னரியநூற்பாவலோர்கட்காடகமலையளித்தான்
வெருவருகருங்கலிக்குவெந்தழற்காடளித்தான்
மருவினர்தமக்குச்செல்வவளங்கெழுநாடளித்தான். (௨௨)

சிவனெனுங்கடவுட்குள்ளச்செம்பொனங்கோயிலீந்தா
னவனடியன்பர்தஞ்சேவடிமலர்மௌலிக்கீந்தான்
கவினுறுபசும்பொன்வாகைக்கனைகழற்செந்தாட்கஞ்ச
முவரிசூழுலகமன்னரொளிமணிமுடிகட்கீந்தான். (உ௧)

வாசிமாமேதமாதிமகம்பலமரபிற்செய்தா
ஞசுதீர்துலையையாதியளவறுதானந்தந்தான
காசினிவரைப்புமுற்றுங்கண்ணுதற்கங்கைவேணி
யீசனதாலயங்களெண்ணிலவிழைத்தானன்றே. (உ௪)

கால்கொடுபுவியளந்தோன்கவலையின்றினிதுதுஞ்சக்
கோல்கொடுதிசையளந்துகுடைகொடுவெம்மைநீக்கி
நூல்கொடுதருமம்போற்றிநுதிகெழுமதுகைசான்ற
வேல்கொடுபொதுக்கடிந்துவிரிகடலுலகுகாத்தான். (உ௫)

நால்வகைமரபுந்தத்தநன்னெறிநடப்பநீத்த
சீலமாமுனிவர்செய்யுந்தெய்வமாதவந்தழைப்ப
வாலொளியறிஞர்போற்றும்வைதிகசைவமோங்க
வாலமர்கடவுளீசனருளினலரசுசெய்தான். (உ௬)

ஓதியில்வாய்மைதன்னிலொழுக்கத்திலறத்திற்செங்கோ
னீதியிற்பொறையிற்குன்றாநியமத்தினிலைமைதன்னின்
மேதகுபுகழின்மிக்கவீரத்தின்மிகுவலத்தி
லாதியங்கடவுளீசனடிமலர்திளைத்தவன்பில். (உ௭)

திண்மையிற்சிறப்பினீங்காச்செலவத்திற்செலலறீர்கரும்
வண்மையிற்படையிறன்றாலலைவைதிகசைவமோம்பு
முண்மையிற்புனிதநோன்பிலுற்றவர்தம்மைக்காக்குந்
தண்மையிற்பண்பிற்கல்வித்தலைமையிற்றலைமைதன்னில். (உ௮)

மூதுசான்மனுகுலத்துமுசுகுந்தற்குவமைகூறிற்
பூதலந்தன்னிலின்றாற்பொன்னுலகத்துமஃதே
வேதநூன்முதலாந்தொல்லைவியன்கலைமுழுதுணர்ந்த
வாதிமாமுனிவீரன்றாற்கவனலதுவமனின்றால். (உ௯)

வேறு.

நாகருமேத்தும்புகழ்முசுகுந்தநரபதியுதித்தபின்பகுவாய்
நாகமுங்கனமுகடுமுகுமிகுசுடர்வடவரைமுதலா
நாகமும்வயிரக்கிம்புரிகிளைத்தநான்மருப்போடைம்மாதிரத்து
நாகமுமிளைப்புமாறினவென்றாலவனதுபெருமையார்நவில்வார். ()

குருதிகொப்பளிக்கும்வேன்முசுகுந்தன் கொற்றமாமாலைவெ ண்குடைபோற், றிருநிலமளிக்குந்தட்பமுமெட்டுத் திசையொடு வானகம்விளக்கும், விரிசுடரொளியுமின்மையாற் சால்வெண்மதி க்கடவுடானுடலங், கருகியதன்மைகருதிலர்போலுங் களங்கமென் றுரைத்தனர்கலையோர். (௯௧)

உலகிருள்கடிந்துவான்றிசை விளக்கியுயர்தருமேருவைவலங் கொண், டிலகொளிவிரிப்பதொரும்பெருபரிதியெனுமொழிப்பொ ருடெரிந்திசைகளி, லலைகடலவிழுந்துமலைமிசையடைந்து மலமரு மழலவனன்று, நிலைதருசெல்வத்தனிமுசுகுந் தனிறையொளிகே மியேயாமால. (௯௨)

படிதவிர்சிறப்பின்மனுகுலமவிளங்கப் பரமனதருளினுலுதி த்த, வடிசுடரிமைதவானமுசுகு தன் வண்புகழ்க்கொடிநிலத் தெழுந்து, முடிவிலவானபந்தர்ரிசை படர்ந்தேறிமு கிழ்த்தபல்ல ருமயினையன்றே, வடுவெ வுவபப றிதினையலமபுமொவிகட லுடுத்தமூதுலகம. (௯௩)

கலையுணரறிவிற்பணியிறைபணியககண்டனன்றிண்மையாற் செம்பொன், மலையினைமலைந்தான்மடங்கலுமடங்கவாட்டினன்றிற லினற்படையா, லலையினையலைந்தான்கொடையினுற்கமலவலரினுக் கலரினையளித்தான், றுலையினைதெொலைத்தானடுவினுலவன்சீர்சொ ல்லினும்பலலுகதொலையா. (௯௪)

விலங்கினம்பகையினறுறவுதந்துறையமிடிபகைகள்வராற்பிற வாற், கலங்களுருருதுமன்பதைவாழகசரும்புயல்பதந்தவாதுதவ, வலம்புநீர்ச்சடையானுலயந்தோறுமாகமநூலவிதிவழாது, மலிந்த வன்பூசைவிழாப்பொலிந்தோங்கவ யங்குகோலசெலுத்தினன்மா தோ. (௯௫)

இன்னணஞ்செங்கோல்செலுத்திமாவரசிருந்திறையளந்துரி ன்றேத்தப், பன்னருங்கலைதேர்முதுக்குறைப்புலவர்புரோகிதர்பல் பெருஞ்சுற்ற, நன்னெறியமைச்சர்சூழ்ந்தினிதமரநால்வகைப்படை புடைநெருங்க, மன்னவர்மன்னன்வளங்கெழுகருவூர்மன்னிவீற்றி ருந்தனன்மன்னோ. (௯௬)

இத்திருவேந்த னுலகெலாமுய்ய விளையமாமகனெடுமிமயச், சித்திரமடமான் றன்னெடுந்தெய்வச் சிறந்தசிங்கா தனத்துறையு,

ைத்தனையாரூரகத்தினிற்ருபித்தருளியமுறைவகுத்தறைவன், மை
த்தவிர்விருப்பின்மரபொடுகேண்மின் மறைமுடிபுணர்ந்தமாதவத்
தீர். (௩௭)

வேறு.

வெம்பகைவெண்டிரைவேலையுழக்குங்
கம்பமலேந்தகடாக்களியானைச்
சம்புமனுப்பெயர்தாங்கியமன்ன
னம்புவிமுற்றுமளித்துறைநாளில். (௩௮)

மாயவனுங்கொருமைந்தனைவெஃகிக்
காய்புலவேடர்கணத்தைமுருக்கி
யாய்தருமஞ்செழுத்தெண்ணியகங்கைத்
தீயனைநோக்குபுநற்றவஞ்செய்தான். (௩௯)

வரைதருதொய்யில்வயங்கியகொங்கை
வரைதருதோண்மலர்மாதுறைமார்பன்
வரைவறுநாள்வெயின்மாரியின்மாயா
வரையெனநின்றனன்மன்னுதவத்தின். (௪0)

மாதவமாற்றிவருந்துபுபன்னுண்
மாதவனின்றுழிவானதிவேய்ந்தோன்
மாதடிந்தானெடுமால்விடையேறி
மாதவடன்னெடுந்தோன்றினன்மாதோ. (௪௧)

வேறு.

தோற்றுமெல்லையிற்றுன்னெணுவெரீஇத்
தோற்றம்பத்துடைத்தோன்றறாழ்ந்தெழீஇத்
தோற்றுமுப்புரந்தொலையவென்றதோர்
தோற்றமீறிலாச்சுடரைப்போற்றினன். (௪௨)

ஆதியீசனைப்போற்றினைவன்
பாதிமேனியைப்பகிர்ந்துகொண்டதோர்
மாதுசேவடிவணங்கல்செய்திலன்
சீதரன்முனஞ்செய்ததீமையால். (௪௩)

போற்றிநின்றதோர்பூவைவண்ணனை
யேற்றினன்றெரிந்தென்கொல்வேண்டிய
சாற்றுகென்றனன்றாழ்ந்துநேமியான்
மாற்றமின்னணம்வகுத்துக்கூறுவான். (௪௪)

எந்தையிறிலாத்திருவுமின்பமு
முந்தைமாநிலமுழுதுங்காப்பதோ
ரந்தமெய்திடாவரசுமாழியு
நந்தலில்லதோர்பதமுநல்கினாய். (௪௫)

சிறுவனில்லதோர்சிறுமையன்றியே
சிறுமைவேறிலைசெங்கைவேலுடைச்
சிறியபேரொழிற்சேயையாகிய
சிறியவென்பிறைத்திங்கள்வேணியாய். (௪௬)

வேறு.

என்றுநாரணனிசைத்துமாசப்பேறீங்களித்தருளெனத்தொழுதேத்தி, நின்றுவேண்டுதலுமவ்வரமீந்தா னிலவுலாவுசடைநின்மலனுங்கு, மன்றவேமுனிவுகொண்டிடேனவென்று வலியதோர்வினையின்மாயநின்னைமந்தன், பொன்றிபாயிமுடிவெய்துகவென்னுப் புவனமீன்றவள்புரன்றனளன்றே (௪௭)

புரன்றுதன்கணவனைக்கொடுவலவேலபோயினனலகுபூத்தருள்செய்த, வகிர்ந்ததிங்கள்புரைவாணுதல்வஞ்சிமருங்குனங்கைகயிலாயமருங்கிற், றிகழ்ந்தபொற்றிகிரிவெள்வளையேந்துஞ்செங்கையானரிதுதேடியசெல்வ, மகன்றதோர்வறியனெனவெதும்பியாரணூர்க்கடலிலாழ்ந்தனனம்மா. (௪௮)

ஆரணூர்க்கடலிலாழ்ந்தயாவெய்தியச்சுதக்கடவுளம்பிகைபொற்றாள், வாரிசத்துணைவணங்கிவெழுந்துமறப்துனர்பழயவல்வினைதன்னாற், பார்முதற்புவனம்பாவுமளித்த பரமனையிகழ்ந்ததோர்சாபம், யாரினிப்பிரிவுசெய்பவரந்தோ யாதுசெய்வதெனவெண்ணியினைந்தான். (௪௯)

யாதிமைப்பதினியென்றுதன்னுள்ளத்தெண்ணிமற்றவணிலங்குமோர்செம்பொ, னாதனத்திலுமைகந்தனோடெங்களாதிநாயகனைநூன்முறைதாபித், தோதுதப்பரியகாதலவிருப்பினுள்ளநெக்குருகியொப்பில்சிறப்பிற், சீதரக்கடவுளெல்லையில்காலந் திருந்துபூசைமுறைசெய்தனன்மாதோ. (௫௦)

திருந்துபூசனைசிறப்பொடுசெய்தேதேவதாருவனமேவியசெங்கைப், பொருந்துநேமிநெடியோனெதிர்ஞானப்பூவைகந்தனொடுகூவிளமத்தை, கரந்தைநொச்சியறுகார்சிறுபூளைகடுக்கைவன்னி

மதியங்கைபுனைந்த, விரிந்தவேணிமுடிவிண்ணவர்கோமான்வெள்
ளிவெள்விடையின்மீமிசைவந்தான். (ருக)

வேறு.

வந்ததோர்காலையின்மாமலைவல்லிமலர்ப்பாத
முந்துவணங்கிவழுத்தியொராறுமுசங்கொண்ட
கந்தனைவந்தனைசெய்துகனிந்தசருத்தோடு
நந்தியடித்துணைதாழ்ந்துதுதித்தனனந்தன்றான். (ருஉ)

தாழ்ந்துதுதித்ததொர்சங்கரிசங்கரிதனைநோக்கி
யாழ்ந்தகடற்புவியன்னையறத்தினருட்செல்வி
சூழ்ந்துவழுத்தியபோகர்மனத்திடைதொல்லூழி
வாழ்ந்தவிளக்கொளியென்றுபழிச்சிவகுக்கின்றான். (ருங)

வண்ணவருக்கனைற்கதிர்மாமலர்வாசம்போ
லண்ணலுநீயுமமர்ந்ததொர்தன்மையினையன்று
ளுண்ணிறையன்பின்வணங்கியதன்றியுளத்துன்னை
யெண்ணிலஞகியிகழ்ந்திலனேழைலகின்றுள்ளாய். (ருச)

தந்தருள்செய்ததொர்சந்ததியூறுதணந்தாவி
யுய்ந்திடநீயருள்செய்தியெனத்தொழுதோராழி
நந்துடனேந்தியநாரணன்வேண்டலுநூலத்தோ
டந்தமில்பேரறமுந்தருள்செய்தவளருள்செய்வாள். (ருரு)

வேறு.

யானுரைத்ததொர்சாபமதீறுரு
தானிடத்திலேந்தடுமெய்ம்மண்ணறன்
றீறுதற்கட்படையினின்செமமரு
ஞானமுற்றுயிருய்க்குவனுண்மையால். (ருசா)

என்றுநாயகிகூறியவெல்லையி
னின்றுபோற்றியநேமியைநோக்கியே
மன்றவேயருள்கூர்ந்துமலர்ந்தபொற்
கொன்றைசூடுங்குழகனுரைசெய்வான். (ருஎ)

இன்னும்வேண்டும்வரம்பகரொன்றன
னன்னவூர்திதன்றாதையகமகிழ்ந்
துன்னரும்பொருளாகியவொப்பிலான்
பொன்னஞ்சேவடிபோற்றிப்புகலுவான். (ருஅ)

எந்தையர்ச்சனைகாணுமிழைத்தியா
னுய்ந்திடத்திருவுள்ளமுகந்துமை
கந்தன்மற்றிவரோடுகலந்துநீ
யிந்தமுப்படிவத்திலிருத்தியால். (௬௧)

வேறு.

எனமொழிந்துமால்வேண்டலுமுலகத்திலெண்ணிலாப்பதிதம்மு
ளனகமாபராசத்திதன்றிருநகரதிகமென்பதுதேறப்
புனிதநாயகிகந்தனோடெந்தையப்பொழுதுஞ்சுடர்வடிவஞ்சேர்ந்
தினிதுமேவிவீற்றிருந்தனன்மயிலையிலிருந்துவீற்றிருந்தென்ன. ()
வீற்றிருந்தருளெந்தையையன்னைவீரனையவ்வேளையோனைப்
போற்றிமற்றவர்தமைக்கொடுபாற்கடற்போய்த்துநாடொறும்பூசை
யாற்றிநெஞ்சமாமம்பொனையமேனாயிலினைத்துவைத்தினைந்து
நூற்றுவாயரவணைமிசைத்துயின்றனனுவலரும்புகழ்மாயோன். ()
மேகமொன்றுநீள்வெள்ளிவெற்பணைந்தெனவிளங்குநாகணைமேவி
யோகநற்றுயில்கொண்டுறைபடவுணாடுயிர்ப்பசைவாலன்னு
ளுகமீதசைந்தாடியேயமர்ந்தனனமுதசந்திரமோலி
யேகநாயகனம்பிகைகந்தனோடெண்ணிலாவுலகுய்ய. (௬௨)
அருளினாலசைந்தாடியவசைவினாலருளினாலளவில்லா
வரமுமாமகப்பேறுமாங்கெய்தியேவளங்கொள்வாழ்வொடுமேல்கித்
திருவினாயகன்சிறப்பொடுபொலிந்தனன்றெண்ணிலாமதிவேணி
யிருளிலசோதியைப்பூசனைசெய்பவர்கெய்திடாவளனுண்டோ. ()

வேறு.

இன்னநாளிலவுணவெள்ளமிடையறப்பரந்தெழீஇப்
பொன்னினாடுசூறைகொண்டுபொங்குதீமுனைப்படைப்
பின்னலந்தரங்கமீதெறிந்திடப்பிறங்குசீர்
மன்னுதேவர்மன்னனண்மைவண்கனையுடைந்ததால். (௬௪)
உடைந்தவேலையும்பரோடுமும்பர்வேந்தனும்பர்வா
னிடந்தணந்திரிந்துபோகியின்னலோடுபிருநிலத்
தடைந்துஞானமுனிவர்நெஞ்சகந்தனிற்பொலிந்ததோர்
படர்ந்தசீதவெண்டிரைப்பயோததிக்கணெய்தினன். (௬௫)
எய்தியாயிரப்பெருந்திரிச்சுடரிமைத்தலிற்
பைதயங்குமணியெறித்தபாந்தளேந்துபாயலின்
மைதயங்குமேனியானைவானநாடர்தம்மொடு
கெய்தயங்கும்வச்சிரக்கைவிருபனுங்கிறைஞ்சினன். (௬௬)

இனிறைஞ்சியும்பர்தங்களோடுமிந்திரன்புகுந்தவா
றறைந்துநின்றுபோற்றுமெல்லையம்புயாசனத்துமே
லுறைந்தமங்கைமுலைமுகங்களுமூதமார்பன்முழுதரு
ணிறைந்தகஞ்சமுகமலர்ந்துமற்றிவைநிகழ்த்துவான். (௬எ)

வேறு.

அறந்தருமுமையொடுமலர்கடம்பொடு
நறுங்குரவணிந்தவேனம்பிதன்னொடு
முறைந்தவெம்மாவியாமொப்பிலாதவிச்
சிறந்தமாமூர்த்தியைப்பூசைசெய்திடில். (௬அ)

தீக்கொடுந்தொழிலருந்திருகுவெம்பகை
மாக்கடுஞ்சினமுதுவலியதானவ
ராக்கமுமுங்கள்பாலடைந்துநின்றதோ
ரேக்கமுங்கதிரொதிரிருளினீங்குமால. (௬௯)

எனமொழிந்துமையொடுமிளையசேயொடுங்
கனகசிங்காதனத்துறைந்தகண்ணுத
லனகனையினிதளித்தாயிரங்கணன்
றனையரிவிடுத்தனனமரர்தம்மொடும். (எ0)

விடுத்தலுமாயிடைநீங்கிவென்றிவே
லெடுத்தசேயுமையுடனிறையைநூல்விதி
யடுத்தபூசனைபுரிந்தம்பரத்தினன்
மடுத்தபோரவுணர்தம்வாதைநீங்கினன். (எக)

மைதவிர்சிறப்பொடுவளங்கொள்வானர
செய்தியாங்கமரரோடினிதுமேவினன்
பொய்தருநுண்ணிடைப்புலோமசைப்பெயர்க்
கொய்தருபூங்குழற்குமரிநாயகன். (எஉ)

வேறு.

வண்ணவேன்முருகனேடுமலையிளங்குமரியோடு
நண்ணிவீற்றிருக்குமெங்களையகன்றன்னைநாளு
மண்ணல்வானரசனர்ச்சித்தளவில்பல்கோடிகால
மெண்ணிலாவளத்தினேடுமிருந்தனனிருக்குநாளில். (எஙு)

தேசுறுசெல்வவாரூர்செய்தநற்றவத்தினலே
பூசல்வேல்வலனெனும்பேர்ப்பொருதிறனிருதன்செங்கட்
காசினவவுணர்தானைக்கருங்கடல்வளைந்துசுற்ற
வாசமர்வினைமேற்கொண்டுவானநாடடைந்தான்மன்னே. (எச)

# தியாகராஜச்சருக்கம்

அடைந்தபோதமரரோடுமமரர்கோனடர்ந்துபன்னாள்
கொடுஞ்சமர்புரிந்துவென்றிகுன்றியேபுறங்கொடுத்தாங்
கொடைந்தனனுலகமுய்யவுமையொடுங்குமரனோடு
மடங்கலந்தவிசில்வைகும்வானவனாணைதன்னால். (௭௫)
உடைந்ததோர்மகவானென்றனுயிர்த்துணையாகுமன்பன்
முடங்குளைமடங்கலன்னான்முசுகுந்தமன்னனுந்தொல்பேர்
விடுங்கதிர்வேலினானைவிரைந்திவ[illegible]
தொடுங்கணைவிசையிற்செல்லுந்தூதனைத்தூண்டினானால். (௭௬)
தூண்டியதூதமேகித்தொடுபுழலவோர்ந்தேய்ந்த
மாண்டகுகோடிகோடிமணிமுடியுழுதுசேர்ந்த
காண்டகுகால்வணங்கிக்கைதொழுதுலகங்காக்கு
மாண்டகையரசர்கோமாற்கடைந்தவாறுரைத்தானன்றே. (௭௭)

வேறு.

அறைந்தகாலையிலுலகுசெய்புண்ணியமன்று
னிறைந்தவொண்மணிவில்விடுநெடுந்தனிக்குன்றத்
துறைந்தவாளரியிழிந்தெனவரியணையுமப
ரிறங்கினானுடனெழுந்ததுபல்படைவட்டம். (௭௮)
நிரந்தவையமாநெடுவரைத்தொகுதிநெருங்க
முரண்கொள்வாரணப்பெருங்கலமிசையிடைமொய்ப்ப
விரிந்தகொய்யுளைவாம்பரிப்பஃறிரைவிரவப்
பரந்துதோன்றியதெண்ணறுபதாதிபாய்பரவை. (௭௯)
அனையமாகடல்சுற்றநூறாயிரங்கோடி
புனையுமாமுடிமன்னவர்புடைதொறுஞ்செறியக்
கனகவையமீதேறியேகாவலன்கடவுட்
டினகரன்கொலென்றையுறச்சேண்வழிச்சென்றான். (௮0)
சிறைபடைத்தெழுமேருவிலெழுந்ததோர்செம்பொற்
பொறைமணித்தடந்தேர்மிசைக்கொண்டுவான்போந்த
வறைகழற்கதிரிலங்குவேலாண்டகையமர
ரிறைவனைக்கடிதெய்தியேயிறைஞ்சினானரோ. (௮௧)
எதிரிறைஞ்சலும்புலோமசைமுலைத்தலையெழுதும்
புதியகுங்குமம்பொலிந்தபொன்மார்புறப்புல்லிக்
கதிர்செய்வச்சிரன்றன்னொடுங்கனகபீடிகைமே
லதிர்கருங்கழலரசனையிருத்தினானங்கு. (௮௨)

இருத்திமற்றவனமரர்சேனபதியெனப்பேர்
தரித்துவெம்பகைத்தானவர்தலைவன்மேல்விடுப்பப்
புரத்தைவாட்டியகடவுள்சேயசூர்மிசைப்போந்தாங்
கரத்தைவாட்டியவேலினன்போந்தனனம்மா. (அ௩)

மேருமால்வரைசூழ்குலகிரியெனமிடைந்து
தார்கொண்மாமுடிமன்னவரொண்ணிலர்தழுவப
போர்செய்தானையந்தலைவருமமைச்சருமபொருவில
வீரவாளடன்மீளியர்தொகுதியுமவிரவ (அ௪)

பாற்றினஞ்சுழல்புலவுவேற்பட்டபதிபர்போமா
னுற்றலவஞ்சிமேற்கொளைடனலவலனெனவறையு
மாற்றலன்படைமாசகடலவறந்திட வுகுதி
னீற்றிறுங்கெழுமெரியெனவெழுந்ததோரெல்லை. (அ௫)

கரிகளெண்ணிலவெழுந்தனகலிலவாய்ககடிய
பரிகளெண்ணிலவெழுந்தனபம்றுகிடபபாகை
யிரதமெண்ணிலவெழுந்தனவெழுந்தனபதாதி
திரைகளெண்ணிலவெழுந்தனபலவியதமெழிபபு. (அ௬)

கொடிகளெண்ணிலகுடைவரையெண்ணிலகுழுமி
மிடையவிண்ணினைமூடிருள்விளிந்ததுவெந்திப்
படையுரிஞ்சிவீழ்படலைவெந்தீயினுப்பகலோன்
சுடரினுனிலமூடிருடொலைந்ததாலென்ன. (அ௭)

இன்னபான்மையின்முசுகுந்தனேகியவெல்லை
துன்னுநாற்படைகடலொடுங்காஞ்சிமேற்சூடி
மின்னல்வாளெயிற்றவுணனேற்றெதிர்ந்தனன்வெகுண்டு
மன்னுமொண்பகறனையிரவெதிர்ந்தெனமாதோ. (அ௮)

எதிர்ந்தவெல்லையிலிகலியவிருபெரும்படைக்குங்
கதங்கொண்மாசமர்விளைந்ததுகாலையங்கதனி
லதிர்ந்தவேழ்புவியலைந்தனநாகங்களண்டம்
பிதிர்ந்தவெண்டிசைதுளங்கினபிளந்தனபிறங்கல. (அ௯)

படகமார்த்தனபம்பைகளார்த்தனசங்கக்
கடல்களார்த்தனதண்ணுமையார்த்தனகறங்குந்
துடிகளார்த்தனகுடமுழவார்த்தனதுண்ணென்
றடிகளார்த்தெனவார்த்தனவேணையவியங்கள். (௯0)

கரிமுழக்கமுங்கண்டையின்முழக்கமுங்கலினைப்
பரிமுழக்கமுந்தாரொலிமுழக்கமும்பஃறேர்
விரிமுழக்கமும்விடுகொடித்தேர்நிரைபூண்ட
வரிமுழக்கமுமாழிவாய்முழங்கினையமைத்த. (கூக)

போரடுந்திறன்மீளியரரவமும் பொலந்தாள்
வீரகிண்கிணியரவமும்வீரர்தம்வீர
மூரிவெஞ்சிலைநாணொலியரவமுமுழங்குங்
காரிரும்புயலேழினுங்ஈறங்கினவன்றே. (கூஉ)

பருதிசிந்தினர்கப்பணஞ்சிதறினர்படைவேற்
குருதிபொங்கியசூலம்வச்சிரமழுக்குந்தம்
பொருசரம்பலவிடுத்தனர்போர்கினர்தண்ட
மிருபெரும்படைவீரருமேற்றெதிர்ந்திகலி. (கூ௩)

காற்றுமங்கியுமேகமுமிடியுநீள்கடலுங்
கூற்றுமாலமுந்தம்மினேர்ந்திடுதிறற்கொடும்போ
ராற்றுதன்மையிற்பொருதனரிருபடையவருஞ்
சாற்றுமாறரிதனந்தற்குமனையபோர்த்தன்மை. (கூ௪)

வேறு.

இருபெரும்படையுமிவ்வாறெதிர்ந்து ழியிருபுறத்துங்
கரிபரிதேரனந்தங்சவிழ்ந்தனவனந்தசோடி
வரிகழல்வயவர்மாய்ந்தார்மலிந்தனபிணத்தின்குப்பை
குருதியாறெழுந்ததெங்குங் குரவையாட்டயர்ந்தகூளி. (கூ௫)

போரிதுநிகழுந்தபோதுபுரவலர்பெருமான்சேனை
வீரர்தாமடர்ந்துசீறிமிகுபொருடுஞ்சமர்விளைப்ப
வார்கழல்வாளெயிற்றுவலாசுரன்படைத்தலைவேற்
காருடலவுணர்தானைக்கனைகலுடைந்ததம்மா. (கூ௬)

வேறு.

உடைந்தசெயல்கண்டவுணர்சாவலனுருத்தான்
மடங்கலினெழுந்தனன்மறித்திதழ்கறுத்தான்
கொடுஞ்சிலைவணக்குபுகுணத்தொனியெடுத்தா
னடுங்கின நெடுங்களகநாகமுதனகம். (கூ௭)

காற்றெறுகெடுங்கனல்கலந்தனையகாட்சிக்
கூற்றுவனுமுட்கியகொலைக்கொடியவாளி
யாற்றலுடைவல்லவுணரண்ணறனதுள்ளச்
சீற்றமெனநங்குரிசில்சேனைமிசைவிட்டான். (கூ௮)

மரீசிவிரிதாரையெனவாளிபலகோடி
காரவுணர்காவலன்விடுத்தொருகணத்திற்
றேர்களிறுபாய்புரவியெண்ணிலசிதைத்து
வீரர்தொகையோரயுதகோடிவிளிவித்தான். (௯௯

தொடைப்புதியதும்பைமுடிசூடியசமழ்க்கான்
மிடற்கெழுமறக்கொடியவீரர்தமையீட்டிக்
கடக்களிறுதேர்பரிகவிழ்ந்திடமுருக்கி
வடித்தபடைமாற்றலன்மடங்கலெனவார்த்தான். (௧00

வல்லவுணன்வெஞ்சினமடங்கலெனவார்க்கு
மெல்லைமுசுகுந்தனிருப்படையனைத்து
மொல்லெனவுடைந்தனவுடைந்திடலுமேங்கித்
தொல்லைநெடுவானவர்துளங்கினர்தளர்ந்தார். (௧0௧

வேறு.

பார்த்தனனனையதன்மைபொன்முகில்பனித்தாலன்ன
வேர்த்தனனுரித்தியிற்கறுத்தனன்விழிசிவந்தா
னார்த்தபோரவுணவெள்ளமமர்புரமங்கியூட்டுந்
தீர்த்தனேயென்னமன்னன்சிறுநகைசிறிதுசெய்தான். (௧0௨

நடைதருவரையிற்செல்லுநாகிளஞ்சிங்கமென்ன
விடுபரிவிசயத்தின்டேர்வெய்தெனவினைவினூர்ந்து
சுடுபொறிதூண்டுஞ்செங்கட்டுண்டவெண்பிறையெயிற்று
நெடியவாளவுணன்றன்னைக்குறுகினனிருதர்கோமான். (௧0௩

நெடுந்தகைகுறுகும்பான்மைநேரலனேரநோக்கிப்
படர்ந்தெழுகரியநஞ்சம்பரமன்பாற்படர்ந்ததென்னக்
கடுஞ்சினந்திருகிவல்லேகவினமான்றேரினோடு
மடங்கெதிர்கொண்டானுள்ளத்தமரர்களச்சங்கொண்டார். (

வேறு.

ஏற்றெதிர்ந்ததோரொல்லையிலெரியுமிழ்செங்கட்
கூற்றைவாட்டியகாலினன்கொடியமுப்புரத்து
மாற்றலார்படவெடுத்ததோர்வரிநெடுஞ்சிலைபோற்
சீற்றமாகளிற்றிறைவனோர்செஞ்சிலையெடுத்தான். (௧0௫

கரியவார்கழல்கல்லெனக்கறங்கியதனது
சரணமாமலர்ச்செவ்விதழ்த்தாமரைதன்னில்
விரவலார்முடிவளைதல்போல்வேந்தர்வேந்தெடுத்த
வரிகொள்வார்சிலைவளைந்திடவளைத்தனன்மாதோ. (௧0௬)

சுருதிதன்மனுநீதிமாமுனிவர்தந்தொகுதி
புரியுமாதவம்பொங்கழல்வேள்விபொன்பொலிந்த
விரியகற்பகநாடுநல்லறந்தலையெடுப்ப
விரவிதன்குலத்திறையவனொளியெடுத்தான். (கoஎ)

எடுத்தவெல்லையிலெல்லையிருனவர்க்கிடத்தோ
டுடித்தவானவர்தோள்வலந்துடித்தனவலத்துப்
படைக்கணுடினதானவர்பாவையர்க்கிடத்து
வடுக்கணுடினவானவர்மாதர்க்குமாதோ. (கoஅ)

விண்டுசாய்ந்தனகுலகிரியுறங்கினவேலை
சண்டமாருதமடங்கினநாகங்கள்சலித்த
வண்டகோளகையுடைந்தனவாழிமேலுப்பசைந்த
தெண்டிசாமுகந்துளங்கினவேங்கினகரிகள். (கoகூ)

நிருதர்நூறுநூறுயிரர்வீழ்ந்தனர்நிரந்த
பரிகணூறுநூறுயிரம்பட்டனபனைக்கைக்
கரிகணூறுநூறுயிரமடிந்தனகறங்கு
மிரதநூறுநூறுயிரங்கவிழ்ந்தனவிமைப்பில. (ககo)

நெடியமைப்புயலன்னதோர்நேமியங்கடவுள்
முடிதுளக்கினன்முளரியான்வியந்தனன்முனைவாய்ச்
சுடர்கொள்வச்சிரனற்புதமெய்தினன்றுன்னென்
றுடல்பதைத்தனன்வலனெனுமொன்னலனுருத்து. (ககக)

உருத்துமாற்றலன்மந்தரவரையினுமுயர்ந்த
வரித்தடஞ்சிலைவளைத்தனன்கோடிவானுருமே
றிரைத்தெதிர்ந்தெனநாணிசையெடுத்தனனெரிதீ
விரித்தவெம்முனைக்கொடுங்கணையாயிரம்விடுத்தான். (ககஉ)

விடுத்தகாலையிற்றக்கனன்றுற்றியவேள்வி
முடித்தவீரனின்முசுகுந்தன்முனிந்தனன்றனது
கடைக்கணங்கியிற்சிவந்தவெங்கடுங்கணைநூறு
தொடுத்துமாற்றலன்றொடுத்தவெங்கணையெலாந்தொலைத்தான். ()

தொலைத்தவெல்லையிற்றுன்னலன்சுடுசரமயுத
முலைக்கொழுங்கனற்கொழுந்தெனவுய்த்தனனுருத்துக்
கலித்தவார்கழற்காவலனுயிரங்கணைதூய்
விலக்கினன்கடுங்காலழல்விலக்கியதென்ன. (கக

விலக்குமேல்வையில்விசிகநூறுயிரம்விண்ணு
டலேக்கும்வெய்யவன்விடுத்தனனுண்டகையயுதங்
கொலேக்கொடுஞ்சரந்தொடுத்தவைகுறைத்தனன்கொடியோ
னிலக்கமாயிரங்கணேயிறையிலக்கமாவெய்தான். (ககரு)

எய்தவெல்லேயிவிறையவனிலக்கவெங்கணேதூய்
மொய்தின்மாற்றினன்மாற்பலனுதிக்சணேயனந்தம்
பெய்துமாரியில்வானேயுந்திசையையும்பெருநீர்
மைதருங்கடலுலகையுமறைத்தனன்மாதோ. (ககசு)

ஆயவெல்லேயிலரசர்கோனுயிரமிலக்கஞ்
சேயசெஞ்சரஞ்செலுத்தியேதீயவன்செலுத்தும்
பாய்கடுங்கணேப்படலிகைமாற்றினன்பருதி
மாயிருங்கதிர்படரிருண்மாற்றியமரபின். (ககஎ)

வேறு.

நங்கோன்முறையிற்செலுத்தும்புகழ்நாமவன்கோல்
பொங்காரழல்கான்றகட்பூரியன்றன்செலுத்தும்
வெங்கோலவையாவையும்வீட்டினமேன்மைசான்ற
செங்கோல்கொடுங்கோலினேமாய்ப்பதுதிண்ணமன்றே. (ககஅ)

செறியுங்கணேயாவையுமாற்றியசெய்கைநோக்கி
யுறுசெஞ்சிகையூழிநெருப்பிலுருத்துவெய்யோன்
மறவெங்கொலேக்கூற்றுறழ்கூர்முனேவாளிநூறங்
கிறைவன்புயத்தெய்தனன்வானவர்யாருமேங்க. (ககசு)

முடிபட்டுழுதகழற்காவிறைமொய்ம்புபட்ட
வடிபட்டவாளிவயிரத்தடமால்வரைகக
ணிடிபட்டமேகம்பொழிகன்மழையென்னவல்லே
பொடிபட்டனவார்த்தனர்நின்றுபுலவர்யாரும். (கஉ0)

வேறு.

ஆர்த்தவெல்லேயிலார்த்தவெலகழற்
சூர்த்தநோக்கினன்றொல்லேநான்முகத்
தீர்த்தனுதியோர்தெய்வமாப்படை
வேர்ததுவீசினன்வேந்தர்வேந்தன்மேல். (கஉக)

கடவுண்மாப்படைக்கணங்களுழியின்
முடிவிலங்கிகாலுததிமொய்த்தெனப்
படியும்வானமுந்திசைகளும்பரந்
திடிகள்கோடியினிடித்தெழுந்தவே. (கஉஉ)

இடித்தெழுந்திடுமெண்ணிறெய்வதப்
படைக்குலத்தையப்படைக்குலத்தினல்
வடித்தவேற்படைமன்னர்மன்னவ
னொடிக்குமெல்லேயினெப்பின்மாற்றினன். (௧௨௩)

வேறு.

மாற்றிவாளிநூறேவியேமாற்றலன்யாக்கை
பாற்றல்சால்கவசத்தைநீறுக்கினனரசன்
போற்றலார்தமக்குறையுளாய்ப்பொருந்தியபுரத்தை
நீற்றுமெய்யுடை நிமலனீறுக்கியதென்ன. (௧௨௪)

பின்னுநூறுகோலசெலுத்தியேபெருந்திறலவுணன்
பொன்னின்மாமுடி சாய்த்தனன்சாய்ந்திடாப்புகழோன்
முன்னமாருபமுதல்வன்வான்முகடுதோய்கனக
மன்னுமால்வரைக்கொடுமுடிபறித்தெனமாதோ. (௧௨௫)

அனையகாலேயிலவுணர்கோனமும்றுபல்கோடி
முனைகொள்வாளிகவேலுமுசுகுந்தன்முனிந்து
கனல்கொள்வாளிகளெண்ணிலதுரந்தவைகளைந்து
துனைவினலவன்றேனைநூறம்பினற்றுலேத்தான். (௧௨௬)

நிருதர்காவலனேறியதேனைநீறுக்கிச்
சரமொராயிரமொல்லேயிற்றூண்டியேதடக்கை
வரையினீட்டியசிலேயினைத்துணித்தனன்மன்னன்
சுரர்கள்யாவருந்துன்னினர்பூமழைசொரிந்தார். (௧௨௭)

சொரிந்தபோழ்தினிற்றுன்னலன்புடையுறச்சூழ்ந்த
நிரந்ததானேயந்தலேவர்நாற்படையொடுநெருங்கி
யெரிந்தமானவெந்தீச்சுடவெதும்பியேயிகல்கொண்
டரங்குறைத்தவேலரசனேச்சூழ்ந்தனரன்றே. (௧௨௮)

ஊழியங்கியையுவரிசூழ்ந்தாலெனச்சூழ்ந்து
பாழிவாய்முகில்கனன்மழைபொழிந்தெனப்பலவாங்
காழிரும்படைசொரிந்தனர்கடுஞ்சமர்புரிந்தா
ராழியம்புவிமுதலியபூதங்களலேந்த. (௧௨௯)

அடையலார்செயனேக்கியேயாங்கெயிலழித்த
கடவுள்போன்முனிந்துகக்கடைநாளெழுங்கமஞ்சூ
லிடிகொள்கார்மழைத்தாரைபோலிடையறுதெரிவாய்
நெடியகூர்முனைவாளிகள்சிதறினனிருபன். (௧௩௦)

பாற்றிருஞ்சிறைபடைத்தனபாழிவெங்கனல்வா
னேற்றினுங்கொலேயிழைப்பனவிடையறாதகிர
மூற்றிருந்தகூன்பிறைமுகமுடையனவூழிக்
காற்றினுங்கடிதெழுவனகாவலன்கணைகள். (கஅக)

பொன்னிறங்கொடுபொலிந்தனசிலசிலபுயல்வாய்
மின்னிறங்கொடுபொலிந்தனசிலசிலவெய்யோன்
செந்நிறங்கொடுபொலிந்தனசிலசிலமணியின்
பன்னிறங்கொடுபொலிந்தனசிலசிலபகழி. (கஅஉ)

வேறு.

கூற்றமொப்பனபுரத்தினூடுதழல்கொளுவுமெங்களிறைகுறு நகைத், தோற்றமொப்பனமுருந்தன்மைந்தனருடோன்றல்வேள் வியடுசேவகன், சீற்றமொப்பனவருந்தவத்தினுயர்தெய்வமாமுனி வர்சாபமா, மாற்றமொப்பனமனுகுலத்தின்வருமன்னர்மன்னன்வி டுவாளியே. (கஅஙு)

ஆலமொப்பனகரும்புகைப்படலையங்கிவாய்நெடியவெம்பணிச் சாலமொப்பனமுறாகுடைந்துவிரிதாமரைக்கடவுடுஞ்சுமக் காலமொப்பனகடுஞ்சினத்தின்மிகுகாலவாரழலுருத்திரன் கோலமொப்பனவிராசராசர்தொழுகோமகன்கடவுவாளியே. ()

பாலையொப்புறு மடங்கலேறுடையபாலைமேவு மொருபாவை கட், சேலையொப்பனவொராணேநெட்டெயிறுதீட்டுகின்றசிலேபூட் டிய, கோலையொப்பனசடற்கண்மேவுமொருகொடியகொக்கினுட ல்கூறுசெய், வேலையொப்பனதனக்கொரொப்பிறுடைமீளியேவு விறல்வாளியே. (கஅரு)

செந்தழற்பரசுகுலிசமொப்பன செழும்புலாலொழுகுசோரி வாய், வெந்திறற்கொடியசூலமொப்பனவிரிந்ததெண்கிரணவெண் ணிலாத், தந்தநெட்டிலேகொள்வாளுலக்கைமுதுதண்டமொப்பன தழற்சிகைக், குந்தமொப்பனசகந்துதிக்குமுசுகுந்தனுய்த்தகொ லேவாளியே. (கஅசு)

இந்திரன்றனதுபடையையொப்பன விலங்குதாமரைபீடத்தி னில்,வந்தவன்றனதுபடையையொப்பனமணித்தலைப்பணியணைத் தலைச், சுந்தரன்றனதுபடையையொப்பனதொடைக்கடுக்கைமுடி சூடிய, வந்திவண்ணனதுபடையையொப்பனவரங்கொல்வேலிறை சரங்களே. (கஅஎ)

வே று.

வேயொப்புறுமென்றேளொடுவெற்புத்தருமெங்க
ளீரயொப்பனவறன்யானையுமளிக்குந்திறலதனுன்
மாயத்திறன்மருவார்வனமாயத்தெறுமரபாற்
றீயொப்பனவொள்வேலியற்செங்கோலிறைகருங்கோல். (கரு௲)

தரையொப்பனதீயோர்தமைத்தாங்காமையிற்றண்கார்
நிரையொப்பனவுலகந்தனினிரந்தேபரந்தெழலாற்
றிரையொப்பனசேரார்படைத்திரைநீரலைத்திடலால்
வரையொப்பனமனுவின்குலமன்னனன்வடிவாளி. (கரு௯)

மலையைத்துளைப்பனசிற்சிலமலையாநிலையண்டத்
தலையைப்பொதுப்பனசிற்சிலதலையாண்மைசெய்நிருதர்
நிலையைக்குலைப்பனசிற்சிலநிலையாநிறைநேமி
யலையைக்குடிப்பனசிற்சிலவலையான்றெருடுசரமே. (கச0)

மதத்தைக்களைவனவாரணமருப்பைக்களைவனவெய்
கதத்தைக்களைவனவால்செவிகல்லெனகுரற்கண்ணடை
விதத்தைக்களைவனதூங்குகைவீழைகளைவனநீள்
பதத்தைக்களைவனபார்த்திபன்பகழிப்பெரும்படையே. (கசக)

தேரைச்சிதைப்பனதேர்விடுசெங்கட்கரும்பாகர்
பேரைச்சிதைப்பனகூம்புவன்பேரச்சுவன்குடுமி
யாரைச்சிதைப்பனவாழியினதிருங்குரலாழித்
தாரைச்சிதைப்பனமாநிலத்தலைவன்றெருடுசரமே. (கச௨)

வே று.

தாரறுப்பனதரமுளைக்
காரறுப்பனகதமிகும்
போரறுப்பனபுரவிமா
வேரறுப்பனவெஞ்சரம். (கச௩)

கரமறுப்பனகதிர்முடிச்
சிரமறுப்பனசெறுனர்த
முரமறுப்பனவுயர்பெரு
வரமறுப்பனவாளியே. (கச௪)

தோளறுப்பனசூழ்கழற்
றாளறுப்பனதரியலர்
நாளறுப்பனநகுசுடர்
வாளறுப்பனவாளியே. (கச௫)

கோடறுப்பனகுடைநெடுங்
காடறுப்பனககனமேற்
கேடறுப்பனகேடகத்
தூடறுப்பனவொண்சரம். (கசசு)

நாத்துணிப்பனநண்ணலா
ரோத்துணிப்பனவெழுமழுத்
தீத்துணிப்பனதியவேற்
பூத்துணிப்பனபொருசரம். (கசஎ)

துடிசிதைப்பனதூரியத்
தடிசிதைப்பனவதிர்முர
சிடிசிதைப்பனவெண்ணிலாக்
கொடிசிதைப்பனகோலகளே. (கசஅ)

வேறு.

இன்னபான்மையினிடையறு தீண்டியேயாண்டுந்
துன்னிவாளிகளடுதலும்பரியெலாந்தொலைந்த
பொன்னினேடைமால்யானையின்குலமெலாம்புரண்ட
மின்னுமாமணித்தேர்த்தொகைமுழுவதூஉம்விளிந்த. (கசகூ)

மானவெந்திறற்பதாதியங்கடலெலாம்வறந்த
சேனைகாவலர்யாவருஞ்சிந்தினர்சிதைந்தார்
மேன்மைசான்றபோர்வீரனன்றழித்ததீவேள்வித்
தானமேயெனக்கிடந்ததச்சமர்க்களமம்மா. (கரு0)

குருதிவெள்ளநீர்கொழித்தலைபுரட்டியோரேழு
பரவையென்னவேபரந்ததப்பரவையின்பாங்கர்
வரைகள்போலவேசெறிந்தனமலிபிணக்குப்பை
விரவிமாடெலாமிடைந்தனவெய்யபேய்க்கணங்கள். (கருக)

புடைபரந்தெழுமுதிரநீராடியேபொழியூன்
படிவமெங்கணும்பூசியேபடுதசைமிசைந்து
கடியதானவர்செஞ்சிகைக்கருந்தலைக்கலன்கள்
குடரின்மாலையோடணிந்துகூத்தாடினகூளி. (கருஉ)

மடலவிழ்ந்தசெந்தாமரையிருப்பவண்மார்பி
னிடமிருப்பதுபோலநம்மிறையவன்றேளிற்
குடியிருப்பவள்காணநீள்கூளிகைகொட்ட
வடுகளத்தரங்காடினவளவறுகவந்தம். (கருங)

## யோகராஜச்சருக்கம்.

அண்ணலாடல்செயடுகளத்தாடல்செய்கவந்த
மெண்ணிலாவெளிலெண்ணலரோறுவில்லுமிழ்ந்த
விண்ணவாளியின்றொகுதியான்மற்றவண்மாய்ந்த
நண்ணலார்படைத்தொகுதியினளவையார்நவில்வார். (கருச)

புரந்தராதியர்தம்மைவெம்போர்முனைப்புறத்துத்
துரந்துவானகஞ்சூறைசெய்தழித்ததுன்னலர்தம்
வரம்பில்சேனையையொருவனேமாய்த்தனனென்றுந்
திருந்துசெஞ்சிலைச்சேவகன்வலியையாரறிப்பார். (கருரு)

அரத்தைமாய்த்தவேலரசையோசிலையையோவழல்வாய்ச்
சரத்தையோவலன்கற்றதோர்தனுவிஞ்சைதனையோ
கரத்தையோவலன்றிறலையோகண்ணுதலளித்த
வரத்தையோபுகழ்கிற்பதுமற்றியாம்வகுத்தே. (கருசு)

உடல்குளிர்ந்தனள்படிமகளொப்பிலாவீரக்
கொடிமருங்குலாள்புதுமணம்பொருந்தினள்கொடியோ
ரடலழிந்ததங்கறந்தலையெடுத்ததுபொன்னாட்
டிடர்தொலைந்ததுமகிழ்ந்தனர்முனிவரோடிமையோர். (கருஎ)

காலையாங்கதிலமைச்சருஞ்சுற்றமுங்கதக்கட்
சாலும்வென்றியந்தானைமாத்தலைவருந்தானே
வேலையுந்தொலைவெய்திடவீழலாந்தொலைந்த
வாலமேயெனநின்றனனவுணர்கட்கரசன். (கருஅ)

சிலையுமெண்ணிலாத்தெய்வதப்படைகளுஞ்சிதையா
வலியமெய்புகுகருவியும்வையமும்பிறவும்
தொலைதலாவிருஞ்சிறைமருப்பெயிறிவைதொலைந்த
மலையும்வேழமுநாகமும்போன்றனன்வலியோன். (கருகூ)

இன்னபான்மையினடுகளத்தெதிருறநின்ற
வொன்னலானுயிரொழித்திடாதும்பர்நாடளிக்கு
மன்னன்மாட்டுறுபழியினைமாற்றுவான்மதித்துப்
பொன்னனிலாவியமாலைவேற்புரவலனின்றான். (கசுo)

நின்றவேலையின்முனிநுகர்வேலையினின்ற
துன்றுமூழிவெந்தீயெனநின்றதுன்னலனைப்
பொன்றவீட்டினன்வச்சிரப்பொருபடையெறிந்து
குன்றினீள்சிறைவீட்டியவானவர்கோமான். (கசுக)

வேறு.

துன்னலன்மடிந்தபின்னர்த்தொல்படைக்களத்தைநீங்கி
மின்னிவர்கவரிவீசவெண்கரிமிசையிலேற்றி
மன்னியவென்றிநூழிலாற்றியமன்னற்கொண்டு
பொன்னவிர்விமானமீதிற்புரந்தரன்போந்தானன்றே. (கசுஉ)

போந்திடுமெல்லைதன்னிற்பொன்னுலகாளுஞ்செல்வ
வேந்தனதேவலாலேவிச்சுவகருமனென்பா
னேய்ந்ததொல்வளத்தின்மிக்கவிந்திரபுரியெனும்பேர்
வாய்ந்தமாநகரமூதூர்வனப்பணிசெய்தான்மன்னோ. (சுகங)

வனப்பணிசெய்தலோடுமாமலர்மாரிதூவப்
பனிக்கடன்முழங்குமார்ப்பிற்பல்லியமுழங்கியார்ப்பச்
சினக்களிற்றெருத்தமீதிற்செல்வனைக்கொண்டுதேவ
ரினத்தொடுநகர்வலங்கொண்டிந்திரனினிதுசென்றான். (கசுச)

செல்வதோர்போழ்திற்செங்கோற்செல்வனைக்காண்டல்வேஃகிப்
பல்பெருஞ்சிகரந்தெற்றிசாளரம்பசும்பொன்மாட
மல்லலந்திருமலிந்தமாமணிவீதியாதி
யெல்லையிலிடங்கடோறுமரம்பையரீண்டினாரே. (கசுரு)

நாவலம்பசும்பொன்கான்றநகையொளிபரந்தமாட
மேவியமெல்லென்சாயல்விரிகுழன்மகளிர்பொன்னம்
பூவலர்தமனியத்திற்பொலிதளிர்க்கற்பகத்தண்
காவின்மேற்செறிந்துதோன்றுங்காமர்பூங்கொடியையொத்தார். ()

விரிதருபளிங்கின்மாடம்விரவியவேற்கணல்லார்
பரவைவெண்பாலின்வேலைப்பைந்துகிர்வல்லியொத்தார்
புரைதவிர்பவளச்சோதிபொலிந்தசாளரத்திற்றோன்று
மரிவையரருணமேகத்தலங்கொளிமின்னையொத்தார். (கசுஎ)

அருணமாமணியெறித்தசிகரமீதமர்ந்தமாத
ரொரிதளிர்நெடியசூதத்திளமடக்குயிலையொத்தார்
திரைமணிக்கோபுரத்தினெடுநிலைக்கோபுரத்து
மருவியமாதர்பைங்கார்மருதிளங்கிள்ளையொத்தார். (கசுஅ)

புனைதருவயிரமொய்த்தபொங்கொளியரமியத்தி
னினமொடுசெறிந்துதோன்றுமிளமுலையமுதஞ்சாயற்
கனிநறும்பவளச்செவ்வாய்க்கருங்கயற்றடங்கணல்லார்
புனிமலையகன்பரப்பிற்பயிலிளந்தோகையொத்தார். (கசுகூ)

பயில்கடர்பாங்தெறித்தபஃறெருகைத்தாளமொய்த்த
வியனெடுங்கெற்றிப்பாங்கர்விரவியேமிடைந்துதோன்று
மயில்விழியாடமைத்தோளரம்பையராருவிசெற்றிக்
கயிலையஞ்சிலம்பின்சாரற்கன்னியம்பிணையையொத்தார். (௧௭0)

அவிர்தருமாடகப்பொனுசுறுவெயிலும்தெய்வ
நவமணிநிலவுபூத்தநலங்கெழுமறுகுமொய்த்த
பவளவாய்மகளிர்பைம்பொற்பங்கயமாதியாய
கவினுறுமலர்சேரோடைக்களிமடவனமொத்தார். (௧௭௧)

இன்னணம்பேதைமுன்றுமேழ்வகைபபருவம்வாய்ந்த
பன்னருங்காமர்தெய்வப்பாவையர்பலருமீண்டி
முன்னர்வெஞ்சூரைமாய்த்துமுருகவேள்போந்ததென்னப்
பொன்னவிரோடைவெற்பிற்போந்தபுண்ணியனைக்கண்டார். ()

பாங்தெழுமமரரொன்னும்பரவையினடுவிற்றோன்றிப்
புரந்தரன்றொழுமெனென்னும்பொங்கிளம்பரிதிப்புத்தேள்
விரிந்தபேரொளிபரப்பிவிண்மிசைபோதக்கண்ட
வரம்பையர்முகங்களென்னுமம்புயமலர்ந்தவன்றே. (௧௭௩)

முரசதிர்தானைவீரர்மொய்த்திடவமைச்சர்வேந்த
ரரசிளங்குமரர்சூழவரசுவாவுகைத்துச்செம்பொற்
றிருமணிமறுகிற்போந்தசெல்வனைமகிழ்ந்துநோக்குஞ்
சுரர்மடமாதரார்தஞ்செயன்முறைசிறிதுசொல்வாம். (௧௭௪)

வேறு.

தண்ணங்குங்குமஞ்சந்தமான்மதஞ்
சுண்ணம்வீசினார்சுரும்புதோய்ந்திடாக்
கண்ணிவாய்ந்ததேங்கற்பகப்புது
வண்ணமாமலர்மாரிவீசினர். (௧௭௫)

சிறந்தசெம்பொனஞ்சிவிறியேந்திவான்
கறங்குதெண்டிரைக்கங்கையாநதிப்
பிறங்குதெய்வநீர்பெய்துவீசினார்
நறும்பனிப்புனலரம்வீசினர். (௧௭௬)

அகில்விரைப்புகையாதியாயபூம்
புகையெடுத்தனர்புனிதமங்கல
வகைநிரைத்தனர்வரம்பின்மாநிதித்
தொகைநிறைத்தனர்சுடர்களேந்தினர். (௧௭௭)

ஆழிஞாலமேழன்றிவானக
மேழுமோம்பியவிறைவனெண்ணிலா
வூழியூழியெவ்வுலகுமோம்பியே
வாழிவாழியென்றேத்திவாழ்த்தினர். (கஎஅ)

வேறு.

இத்திருவின்னுடுபொலிவெய்தவருமிந்த
வுத்தமனுதித்திடவுலப்பறுதவத்தின்
மைத்தவிர்சிறப்புடையமாமனுகுலத்தோ
ரொத்தவமிழைத்தனர்கொலென்றினிதிசைப்பார். (கஎசு)

அண்ணலணிமார்பமுமலங்கல்புனைதோளு
நண்ணமலர்மாதுமகன்ஞாலமடமாதும்
வண்ணவடிவேன்மதர்மழைக்கண்வயமாதும்
புண்ணியமியாதுகொல்புரிந்தனர்களென்பார். (சஅ0)

தெவ்வரைமுருக்கியுயர்தேவுலகுகாத்த
மைவிரிகடற்புவனிமன்னர்பெருமானைச்
செவ்விதினெதிர்ந்துதெரிசித்தல்செயமுன்ன
மெவ்வறமிழைத்தனமியாமெனவிசைப்பார். (சஅக)

சாற்றுமனுநூலின்முறைதாங்கியருள்செங்கோ
லாற்றலுடையான்கைடையணிக்குடைநிழற்கீழ்
மாற்றில்வளனோடுறையமன்பதையினீட்ட
நோற்றருளுநோன்பெவைகொலென்றுநுவல்கிற்பார். (கஅஉ)

தானவர்கடானையணிசாய்ந்திடமலைந்து
தானிலைதாங்கவொர்தனிச்சிலையொடெய்துந்
தானமுகிறன்னைமிசைதாங்கமுனமிந்தத்
தானமலைதானுதவுதானமெவையென்பார். (கஅங)

வேறு.

அண்ணல்வெங்களிற்றிற்போந்தவரும்பெறலரசரோறு
மண்ணவர்யாருஞ்செய்தமாதவப்பயனோவென்பார்
விண்ணவர்யாரும்பன்னுண்மேலைநாள்விரும்பிச்செய்த
புண்ணியகோடிநல்கும்புனிதநற்பயன்காணென்பார். (கஅச)

பாய்திரையுலகமூடும்படர்தருகலியாந்தொல்லை
மாயிருள்விடியவந்தமழவிளங்கதிரோவென்பார்
தூயவிண்ணுலகைமூடுந்தொலைவிலாவவுணரொன்னுந்
தீயிருள்விடியவந்தசெங்கதிர்காணுமென்பார். (கஅரு)

......லாவேனிலென்னுமிருந்தழற்கோடைநீக்கி
மண்ணெலாங்குளிரவந்தமல்லலம்புயலோவென்பார்
கண்ணிலாநிருதரொன்னுங்கருந்தழற்கோடைநீக்கி
விண்ணெலாங்குளிரவந்தமேகமேகாணுமென்பார். (கஅசு)

தேனுடைந்தொழுகுஞ்செவ்விச்சிரிதழலங்கன்மௌலி
மேன்மைசால்சிறப்பினங்கள்விண்ணவர்க்கிறையோவென்பார்
தானவர்தொகையைவீட்டிநம்பெருந்தலைவன்றன்னை
வானரசாளவைத்தமன்னவர்க்கிறைகாணென்பார். (கஅஎ)

நேமிநீருலகங்காக்குநெடியவன்காணுமென்பார்
தாமமார்திகிரிசங்குதடக்கையிற்காணுமென்பார்
காமருவடிவின்மிக்ககாமவேள்காணுமென்பார்
பூமலர்வாளிகன்னற்பொருசிலைகாணுமென்பார். (கஅஅ)

வெம்பொறிவடவைநாக்கின்விரிதளிர்மாவெறிந்த
செம்புலவுமிழும்வைவேற்சேவகன்காணுமென்பார்
வம்பவிழ்நீபத்தண்டார்மணிகிளைக்கடகமேந்து
மொய்ம்புபன்னிரண்டோடாறுமுகமலர்காணுமென்பார். ()

வேறு.

இனையபோல்வனவிசைத்தனரிடையறவெங்கும்
வனிதைமார்செறிந்தீண்டியமறுகெலாங்கடந்து
புனிதமன்னவன்றனைக்கொடுபுலவர்கோன்றனது
கனகமாமணிக்கோயிலின்கடைத்தலையிறுத்தான். (கசுo)

இறுத்துமற்றவண்மன்னனோடேர்தியாங்கிழிந்து
புறத்துநாற்பெருந்தானையம்பொருதிரைக்கடலை
நிறுத்திவானவரமைச்சரோடேனையர்நெருங்கச்
சிறப்புமேதகுகோயிலுளிந்திரன்சென்றான். (கசுக)

கோயிலெய்தியேசுதன்மையாங்கோலமண்டபத்து
மாயிருந்திறன்மடங்கலந்தவிசின்மேன்மகவான்
றாயமன்னனோடிருந்தனன்சூழவேனையர்க்குஞ்
சேயபன்மணியாதனமீந்தனன்சிறப்பால். (கசுஉ)

இருந்தகாலையிலிந்திரனேவலினெண்ணி
லரம்பைமாதராரவிர்மணியாடகச்செம்பொ
னெரிந்தபூஞ்சுடர்த்தட்டங்கள்சுற்றினரோங்கி
விரந்துசாமரைவீசினர்கிருபர்கோன்முன்னர். (கசுங)

மறநூமமண்ணிலாவரிசைகள்வழங்கியேமகவான்
கொற்றவன்றனைநோக்கியிவ்வரகுகீகொடுத்தா
யிற்றைநாளெனக்குனக்கியானிழைப்பதோர்கைம்மா
றுற்றுநோக்கின்மூவுலகத்திலில்லையாலுரவோய். (கசுச)

வேறு.

எனப்பலமுகமன்கூறியிறையையாங்கிருத்தியேகிப்
புனற்படிந்தம்பொனுடைபுதியனபுனைந்துதூய
மனத்திலஞ்செழுத்துமுன்னிமாசிலாநீறணிந்து
தனக்கிணையில்லான்றன்னையருச்சனைபுரிவான்சார்ந்தான். (கசுரு)

தேனுவினறியதீம்பால்செழுஞ்சுவையமுதந்தெய்வத்
தூநறுங்கனிகொள்சாரங்குங்குமந்துமடூர்சந்தக்
கானறுங்குழம்புவானிற்கடிகமழ்கங்கைநன்னீ
ரேனையபிறவுநூலினியல்பினுலாட்டினுனல். (கசுசு)

மருக்கமழ்கழுநீர்மாலைமலர்ந்தசெவ்வந்திமாலை
விரைத்தகற்பகப்பூமாலைவியன்மணிக்கலையின்வர்க்கங்
கருப்புரமாதிசெம்பொற்கலனணிபிறவுஞ்சாத்தி
விருப்புடனமுதமூட்டியேனையவிதியுஞ்செய்தான். (கசுஎ)

பூசனையினையவாற்றுற்புரிந்துமைமாதினேடுந்
தேசுறுகுமரனேடுஞ்செம்பொற்சிங்காதனத்து
நேசமோடினிதுவைகுநிமலநாயகனையன்பால
வாசவன்வலங்கொண்டாங்குவணங்கிநின்றேத்தும்வேலை. (கசுஅ)

தான்புரிகடன்கண்முற்றித்தராபதியாங்குப்போந்து
வான்புவியறங்கமௌண்ணின்மன்னுயிர்முழுதுமீன்ற
தேன்பொலிசொல்லியோடுஞ்சேயொடுஞ்சிறந்துவைகுங்
கான்பொலிகொன்றைமௌலிக்கடவுளைதொழுதுநின்றுன். ()

வேறு.

நின்றவெல்லையினேமியம்படையுடைநெடியோ
னின்றுந்தேடியவிணையிலாத்திருவடியிடத்துப்
பொன்றயங்கியவரவகிண்கிணிபொலந்தோட்டு
முன்றனுறுபூந்தாமனைவண்டெனமிழற்ற. (உ00)

திருமருங்கில்வெண்பட்டுடைதிருந்தெழில்செய்யப்
புரிகொணூலொடுமதாணிபொன்மார்பினிற்பொலிய
வருணமாமறிவெயின்மழுவரதமோடபய
மருவுகின்றபொற்கரசரோருகமெழின்மலர. (உ0க)

## இலக்கோர்ஜச்சருக்கம்.

அம்பொன்மால்வரையிளங்கதிர்போன்றணிகாதிற்
செம்பொன்மாமணிக்குண்டலந்தோளிடைத்துவள
வும்பர்போற்றனக்கிறிலாநிலையுணர்த்துதல்போற்
பைம்பொன்மாமணிமிடற்றுநீலத்தொளிபரப்ப. (௨௦௨)

பொலிந்தகுண்டலப்பருதிகள்புடையுறநடுவண்
மலர்ந்ததாமரைபோலருட்டிருமுகம்வயங்க
விலங்குமுச்சுடர்நயனங்களெண்டிசைமுகத்துக
கலந்தநெட்டிருளநாதியிற்கங்குல்வேர்களைய. (௨௦௩)

பவளவாய்நகையிளமதிப்பனிநிலாக்கிரணங்
கவினுமாடகப்பொன்முடிச்சிறுமதிநான்ற
வவிரும்வானிலவுடன்கலந்தலர்முழுமதிபோற்
புவனகோடியிற்சராசரந்தழைதரப்பொலிய. (௨௦௪)

அரியமாமணித்தெய்வவாடகத்திருமேனிந
கிரணமூதண்டகோளகைகடந்துமேற்கிளரப்
பிரமனாதியாமுயிர்த்தொகைமுழுவதூஉம்பெற்ற
வுரியகன்னிதன்சேயொடுமருங்கினிதுறைய. (௨௦௫)

முதியபல்கணநாதர்கண்மொய்த்தனர்சூழ
வெதிரிலாததோர்கயிலையிலிருசகுமாரரென்னக
கதிர்செய்மாமணிக்கனகசிங்காதனத்திடையே
விதியுமாயனுந்தேடுதற்கரியதோர்விமலன். (௨௦௬)

இனிதுவீற்றிருந்திந்திரன்றெரிந்திடாவனைன
மனகமன்னவன்றெரிந்திடக்காட்சியாங்களித்துப்
புனிதநல்லருள்புரிந்தனன்புரிதலுமுன்னை
நினைவுயாவையுமுணர்ந்தனனிருபர்தம்பெருமான். (௨௦௭)

உருகினான்பணிந்தெழுந்தனனுவகையாரமுதம்
பருகினானுடல்பொடித்தனன்பழயவெம்பவநோ
யருகினான்றனைமறந்தனன்புலன்களொன்றனான்
பெருகினான்றனிப்பேரின்பவெள்ளநீர்ப்பெருக்கு. (௨௦௮)

உரைதளர்ந்தனனுபயதாமரைவிழிமுத்த
நிரைசொரிந்தனனாடினான்பாடினானீங்கி
யருகணைந்தநற்றாயைநேர்குழவிபோலானான்
புரவலன்றனியன்பினதியல்பையார்புகல்வார். (௨௦௯)

வண்ணமின்னணமெய்தியமாமுசுகுந்த
னுண்ணிறைந்தெழுகாதலோடுச்சிகைகூப்பி
யெண்ணரும்புகழ்பன்முறையினிதெடுத்தேத்திப்
புண்ணியன்றிருமுன்னுறநின்றதோர்பொழுதில். (உகo)

வேறு.

வாசவன்கேளாவண்ணமன்னவன்றன்னைநோக்கித்
தேசுறுசெல்வவாரூர்த்திருநகர்கொடுபோயெம்மைப்
பூசனைபுரிதியென்றான்புகழ்மறைதந்தாயாயா
வீசனெம்பெருமானுள்ளதெண்ணிலாவுயிர்களுய்ய. (உகக)

ஏசிலாவளங்கொள்பொன்னாட்டிந்திரபுரியிலெண்ணில்
பூசைகொண்டமர்ந்தமூர்த்திபுரம்பராசத்தியெல்லே
வாசஞ்செய்வதற்குவேட்கைவைத்தனமனமெனெண்ணிலம்மா
காசறுசிறப்பினாரூர்ப்பெருமையாராகமுறற்பாலார். (உகஉ)

எண்ணிலாவுலகின்மிக்கவெண்ணிலாப்பதியிருப்ப
வண்ணவேன்மைந்தனோடுமரகதவல்லியோடு
நண்ணிவீற்றிருப்பதானநாயகன்விழைந்தானெனெண்ணி
லண்ணலாரூர்முன்செய்ததவத்தையாரளப்பரம்மா. (உகங)

கண்ணகன்புவனங்காக்குங்கடவுளுங்கடவுளோர்த
மண்ணலும்பூசைசெய்தவமலனெம்மைப்பூசை
பண்ணுதிகொடுபோயென்றுபகர்ந்தனனெனெண்ணிலந்தப்
புண்ணியவேந்தன்செய்தபுண்ணியம்புகலற்பாற்றோ. (உகச)

அம்புவியரசற்கிவ்வாறருள்செய்துமுன்போலந்தப்
பைம்பொனங்தெய்வச்சோதிப்படிவத்திற்கரந்துறைந்தா
னும்பர்கோனறியாவண்ணமுமையொடுங்குமரனோடு
மெம்பிரானவன்செய்மாயம்யாவரேயறியுநீரார். (உகரு)

இந்திரனிந்தவேலையினிதுபூசனைமுடித்துச்
சந்திரமௌலிதன்னைவிடைகொடுதணந்தோர்செம்பொன்
மந்திரமெய்தியாங்குத்தேனுவைவரவழைத்து
வெந்திறல்வேலினாற்குமேதகுவிருந்தளித்தான். (உகசு)

அரும்பெறல்விருந்துநல்கியரசனதம்பொன்மேனி
பொருந்தியவணிகணிக்கிப்புதியநல்லணியின்வர்க்கந்
திருத்தவேதனதுகையாற்புனைந்துபூந்தெய்வச்சந்தம்
மிக்கினிதணிந்தானென்பபைம்பொனாடுடையகோமான். (உகஎ)

## நியோகராஜச்சருக்கம்.

மற்றதன்பின்னர்த்தெய்வமாமணித்தொகுதிவர்க்கம்
பொற்கலனணியின்வர்க்கம்பூந்துகில்வர்க்கமேனைப்
பற்பலபொருளின்வர்க்கம்பரிந்தினிதளித்தானென்ப
கற்பகங்கடவுட்சிந்தாமணிக்கருள்காட்சித்தென்ன. (உ௪அ)

வம்பவிழ்மாலைமொய்ம்பின்வானோர்வேந்தன்மன்னர்மன்னனைம்பெருஞ்சுற்றத்தோர்க்குமைம்பெருங்குழுவினோர்க்கு
மும்பர்கோன்வேறுவேறாங்குலப்பெயரவாரிசை பல்கி
யெம்பெருஞ்சுற்றநீவிரென்றுயினிதிசைத்தானன்றே. (உ௪௯)

ஆண்டகைபரசைநோக்கியமரர்கோன்முகமன்கூறிப்
பூண்டகுதோள்களாரப்புல்லியென்னுயிர்க்குநண்ப
வேண்டியதின்னும்யாதுவிளம்புதியென்றவேலை
சேண்டொடுசீர்த்தியார்ந்தசெய்தவமன்னன்செப்பும். (உ௫௦)

ஐயநீபூசையாற்றுமமலனைத்தருதியென்னத்
துய்யசீர்மகவான்வாசத்தொடைத்துழாய்முகுந்தன்பூசை
செய்துளமூர்த்தியிந்தத்தெய்வமாமூர்த்தியன்னன்
மெய்யுறையிசைவுபெற்றுற்றருகுவன்வேந்தவென்றான். (உ௫௧)

புரந்தரன்யாற்றங்கேட்டுப்பொங்குபாற்கடலிற்போந்து
வரந்தருமாயற்போற்றிமற்றவனிசைவுகொண்டு
விரைந்துமீண்டடைந்தானென்பவெய்யதானவரைவீட்டிப்
பரிந்துவிண்ணுலகங்காத்தபார்த்திபர்திலகமன்னன். (உ௫உ)

வேறு.

மாயவனிசைவுகொண்டுவேலரசன்வந்துழிவாசவன்றன்முன், றாயபூசனைசெய்மூர்த்தியிறாறுதூயமா மூர்த்திநால்விதியிற், சேயவான்பச்சைப்பனைக்கொடுதந்துமுறைமுறைமொணர்ந்துநற்செங்கோற், காயுமால்யானைக் காவலன்றனக்குக் காட்டினன்காட்டியகாலை. (உ௫௩)

சிவனருளதனுற்றேவர்கோன்செய்கை தெரிந்துசெங்கோலுடைச்செம்ம, லிவரலொன்னனாரணன்மார்பினினிதசைந்தாடிவீற்றிருந்து, வுவமைதீர்சுருதியரவ கிண்கிணிக்காலொருதிரு மூர்த்தியைக்காட்ட, வவன்முகநோக்கிநீ விருப்புற்றமூர்த்தியாமென்றனனையன். (உ௫௪)

எந்தைவானிறைவனறிந்திடாதிசைப்பவிந்தமாமூர்த்தியைத்தருகென், றந்தமில்புகழான்கேட்டனனுடனுங்களித்துமற்றறுவர்

தம்மையுமீந், இந்திரன்விடுப்பவரசரோடமைச்சரொறிகடற்றுனை
சூழ்போத, வந்தனனுலகமென்னுயிர்தழைப்பமன்னனரூர்நகர்ம
ருங்கு. (௨௨௫)

வேறு.

வந்துவானவர்தச்சனைவல்லையில்விளித்துக்
கந்தனம்பிகையுடனுறைகடவுளைத்தாபித்
தந்தமில்லதோர்பெருஞ்சிறப்பணிவிழாவெடுப்ப
விந்தமாநகரணியமைத்தேனவுமிழைத்தே. (௨௨௬)

கனகவீரசிங்காதனத்தொருபெருங்கடவு
ளினியசேயொடுமுமையொடுமென்றும்வீற்றிருப்பப்
பனகமாமணியிழைத்தொருபைம்பொனின்கோயில்
புனைதியாலெனவிடுத்தனன்புரவலர்பெருமான். (௨௨௭)

புனைதியாலெனவிடுத்துழிவல்லையிற்போந்து
கனகவெள்ளிவெண்கவரிகண்ணுடிபூங்கதலி
வனநறுந்துகில்பொற்குடமணித்தொகைபிறவா
லனகமாநகர்வீதியேனவுமணியமைத்தான். (௨௨௮)

நூலொழுக்கமார்வீதியின்மருங்கெலாநுண்மைக்
கோலமிக்கபொற்சாளரமோவியங்குயிற்றி
நால்வகைப்படும்வீதிமற்றவைநடுவெங்கும்
பாலொளிக்கதிர்பரப்பியபளிங்கினுற்படுத்தான். (௨௨௯)

தண்ணிலாவொளிதழைத்தமாமறுகெலாந்தயங்க
வெண்ணிலாவொளிவெள்ளிவெண்கால்பலநிரைத்து
வண்ணமாமரகதத்திழைவனைந்தபொற்கயிற்றி
னெண்ணில்கோடிநற்றோரணமெழில்பெறவணிந்தான். (௨௩௦)

பனிமலைக்கொடிதன்னொடும்பாலகனோடும்
புனிதன்முப்புவனந்தொழத்திருவுலாப்போதக்
கனகசித்திரத்தேரொடுகதிர்மணிவிமான
மினிதிழைத்துநூல்விதிமுறையேனவுமிழைத்தான். (௨௩௧)

அளவில்கோடிபொற்கோயின்மாமண்டபமரங்க
மொளிகொள்வெண்ணிலாவரமியமாதியவுதவி
வினைபெருந்திருவிழாவிற்குவேண்டுவபிறவும்
வளமைசான்றபொன்னுலகினிற்கம்மியன்வகுத்தான். (௨௩௨)

வேறு.

வகுத்தபின்விதியிற் புற்றிடங்கொண்ட வானவன்கோயிலின் மென்பா, னகைக்கதிர்மணியானுவலம்பொன்னுனலங்கெழுசிகரி ன்கோயில், சகத்துயிர்தழைப்பத்தமனியச்சிங்காதனப்பெருங்கட வுள்வீற்றிருப்பப், புகழ்ப்பெருந்தசைசால்விச்சுவகன்மன்புரிந்த னன்புரிந்ததோரெல்லை. (௨௱௫)

நகர்வலஞ்செய்வித்தமரர்சேரன்றனதுநண்பருநாமவேலிறைவ
னிகர்தவிர்சிறப்பிற்பொலிந்தவைவசுதனீடுகெழ்பத்தினீராழி
யகிலமுய்ந்தருளமாசிநற்றிங்களத்தநாளாகமவிதியிற்
புகழ்வளர்சுருதியரவகிண்கிணிக்கரற்புனிதனைத்தாபனம்புரிந்தான்.

காமிகமாதியாகமந்தெரிந்தசாசறுசைவவேதியராற்
றுமமாமணிப்பூந்தமனியச்சிங்காதனத்துறைதம்பிரான்றன்னை
நாமநீருலகம்புகழ்திருவாரூர்நகரிடைத்தாபனம்புரிவித்
தேமநூல்விதியிலெண்ணரும்பூசையினிதுசெய்வித்தனனிறைவன்.

இப்பெருங்காதையியம்பினோர்கேட்டோர்யாவருமெழிலொடு மிம்மை, யொப்பருஞ்செல்வமுயரறஞ்சீர்த்தியொண்மகவாதியோ டுவந்து, முப்பெரும்புவனமன்னவராகிமுறையுளியமரர்நாடளித் தே, மைப்பொலிகண்டன்மருவுமாகயிலைமலையினின்மன்னிவீற்றி ருப்பார். (௨௱௬)

தியாகராஜச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௭௱௬

---

திருவிழாச்சருக்கம்.

சீர்பொலிந்தோங்குஞ்செல்வ வாரூரிற்செம்பொனந்திகிரியந் தடக்கை, நாரணன்மகவான்பூசனைபுரிந்தநாதனைத்தாபனஞ்செய் த, வீரமால்யானைவேந்தர்கோனந்தவீரசிங்காதனவிமலற், கேர் திகழ்சிறப்பிற்றிருவிழாவெடுத்த வியன்முறையெடுத்தினி திசைப் பாம். (௧)

ஆதிநாயகனைத்தாபனம்புரிந்தவத்தநாளாகமவிதிபி, னேதமி ல்சிறப்பினேற்றிருந்துவசமேற்றுவித்தருத்திரரிமையோர், மாதவ

ரெண்ணில்சிவாலயத்தேவர்மன்னரும்பிறரும்வந்தெய்தத், தீதில்ச ண்டேசன்றிருமுகம்விடுத்தான்செய்யகோலிறைசிவனருளால். ()

விடுத்ததோர்வேலேவிரிந்தபால்வேலேமிசைத்துயினுரணன்று ன்முன், கடிப்புதுமலர்தூய்ப்பூசனைபுரிந்த கடவுடன்றிருவிழாத் தொழுவான், மடற்செழுங்கமலமடந்தையோடெழுந்துவரம்பறு பரிசனஞ்சூழப், படித்தலம்பொலிந்தசற்பகம்போலும்பைம்பொ னூரில்வந்தடைந்தான். (ஙு)

ஈன்றருடாதைபூசைசெய்தேத்துமிறையவன்றிருவிழாத்தொ ழுவா, னென்றதோர்விருப்பி னன்முகக்கடவுளரும் பெறல்வாணி யோடெழுந்து, வான்றிகழ்சிறப்பின்மாதவர்முனிவர்வரம்பில்பல் லாயிரர்சூழத், தேன்றிகழ்பொதும்பர்த்தென்றிருவாரூர்த்திருநக ரெல்லேவந்திறுத்தான். (ச)

முன்னரும்பூசைதான்புரிந்தேத்து முடிவிலாமுக்கணுயகற்கு த், தன்னெருதோழ னுலகெலாந்தழைப்பத் தந்தருணல்விழாத் தொழுவான், பொன்னுலகாளும்புரந்தரக்கடவுள்புலோமசைதன் னெடுமெழுந்து, மன்னுபல்கோடிவானவர்சூழ மல்லலாரூர்நகர ணைந்தான். (ரு)

பற்றலர்படையைப்படுத்துவின்னுட்டிற்றங்களேப்பரிவுறவை த்த, வெற்றிவார்சிலேயான்வீரகிண்கிணிக்கால்வீரசிங்காதனப்பெ ருமாள், பொற்றடந்தேர்மேன்மறுகுலாப்போதப்புரிதருதிருவிழா த்தொழுவான், மற்றவானவரும்வானவர்மகளிரனைவரும் வந்தன ராரூர். (சு)

கலிகெழுதரங்கக்கடல்புடையுடுத்த கண்ணகன்ஞாலமேலு ள்ள, வலகில்பல்கோடிசிவாலயத்தேவ ரளவறுபரிசனர்சிறப்பிற், பொலிதருஞ்சைவர்திருக்குழாந்தெய்வப் புகழ்த்திருத்தொண்டர் மற்றேனோர், பலரும்வந்தடைந்தார்சராசரமுழுதும்பயந்தருள்சத் திதன்பதியில். (எ)

இந்திரனெழிந்தவெண்டிசைக்கிழவரிரவிவானவன்மதிமுதற்கோ ளந்தரவுடுக்கண்மருத்துவர்வசுக்களனந்தனையாதிமாநாகர் விந்தைமாகாளிகன்னியர்நதிகள்வேதமாமுனிவரர்பிறரும் அந்தணர்பசும்பொன்மாடநீள்வீதிவயங்குமாரூர்நகர்மருங்கு. (அ)

## திருவிழாச்சருக்கம்.

**எண்ணறுகோடியுருத்திரகணங்களிருங்கொடிமயமேலெழுது**
**மண்ணலந்தமிழ்நாட்டரசர்மற்றுள்ளவரசர்பல்லாயிராழி**
**மண்ணிடைமலிந்தமறையவராதிமாந்தர்மாமங்கையர்பலரு**
**நண்ணினர்றமீன்றெடுத்ததோர்தெய்வநாயகிதவஞ்செய்நன்னகரில்.**

பைம்பொன்மாலிமயத்துமைமணத்தடைந்த பான்மையின்னவர்பலரும், தம்பரிசனத்தோடெய்தியவேலைத்தானையோடெதிர்கொடுபோற்றி, யம்புயனனையவிச்சுவகன்மன் வேறுவேறவரவர்க்கமைத்த, செம்பொனங்கோயிறொறுந்தொறுமமரச்செய்தனன்செய்தவத்துயர்ந்தோன். (௧0)

அவரவரமர்ந்தவம்பொனங்கோயிறொறுந்தொறும்வேண்டியவளிப்பா, னவநிதியவற்றைப்பணித்தனன்செங்கோனரபதியுலகெலாமுடைய, தவலருஞ்சிறப்பிற்றமனியச்சிங்கா தனத்துறைதம்பிரானருளா, முவமைதீர்நிதியம்பெற்றவர்தமக்கு முற்றிடாச்செய்கையுமுளதோ, (௧௧)

அனைவருமகிழப்பெருஞ்சிறப்பளித்தாங் காகமவிதியெலாமமைத்துக், கனகவொண்சிங்காதனத்துவீற்றிருக்குங் கடவுளைக்கந்தனையுமையை, யினிதுபூசனைசெய்தேனையபிறவு மிழைத்திடப்பணித்தணிவீதி, தனைவலஞ்செய்வித்தருளுவான்முரசந் தனையறைவித்தனன்றலைவன். (௧௨)

வேறு.

முரசொலிகேட்டலுமுகுந்தனாதிய
சுரர்கணமுருத்திரர்முனிவர்தந்தொகை
யரசர்மற்றேனையராருங்கோபுரத்
திருமணிவாயிலிற்சிறந்துநண்ணினர். (௧௩)

நண்ணியகாலையின்ஞாலமுய்ந்திட
வெண்ணிலாவிருங்கணநாதரோத்திடக
கண்ணுதன்மும்மதக்களிற்றுமாமுகப்
பண்ணவன்முன்னுறப்படர்தன்மேயினான். (௧௪)

முன்னவனமுன்னுறப்படரமூரிவேற்
பின்னவனேழிரண்டுலகம்பெற்றவ
டன்னொடும்வீரசிங்காதனத்துமே
லென்னையாளுடையவனினிதெழுந்தனன். (௧௫)

ஏழுந்தருளெல்லையிலெழுந்தசங்கொலி
யெழுந்தனகுடமுழாவாதியேங்கொலி
யெழுந்தனகுழலொலிநரம்பினின்றொலி
யெழுந்தனவேனையவொலியுமென்பவே. (கசு)

வேறு.

படங்கொள்பாழிவாய்ப்பணிவடமந்தரம்பிணித்து
மிடைந்தவானவர்கடைந்துநாள்விரிதிரைவேலை
யிடங்கொள்பேரொலியெனவெழுமோசைபோயெண்டிக்
கடைந்ததெந்தையுங்கோபுரத்திருப்புறத்தடைந்தான். (கஎ)

கனககோபுரவாயிலினெய்தலுஞ்சரியோன்
புனிதநான்முகனிந்திரனேனையபுலவர்
முனிவர்நாகரோடுருத்திரர்முடிசெழுவேந்த
ரனைவருந்தொழுதுளங்களிந்தேத்தினராங்கு. (கஅ)

நிழல்கொண்மாமணிக்கோபுரவாயிலினின்றும்
தழையுமாரருளுமையொடுந்தனிமகனோடும்
வழிநறாவிரிமலர்க்கழுநீர்மணமாலை
யழகன்வீதிவாய்ப்போந்தருளணிசிறிதுரைப்பாம். (ககூ)

முன்னரெய்திடமுன்னவன்முதுலகெங்கு
மன்னுகோடிபலசிவாலயத்தேவர்கள்வரம்பில
பன்னரும்பலபரிசனரொடுஞ்சனும்பரவப்
பின்னரெய்திடவாதிசண்டேசனும்பெரியோன். (உ0)

ஏத்திநாரணன்கமலையோடொருபுடையெய்த
வேத்திநான்முகன்வாணியோடொருபுடையேக
வேத்தியிந்திரன்சசியுடனொருபுடையிசைய
வேத்தியேனையவானவரொருபுடையீண்ட (உக)

போற்றியெண்ணிலாவுருத்திரரொருபுடைபொலியப்
போற்றியெண்ணிலாயோகர்தாமொருபுடைசெறியப்
போற்றியெண்ணிலாநாகர்தாமொருபுடைபொருந்தப்
போற்றியெண்ணிலாக்கணங்கண்மற்றொருபுடைபோத. உஉ)

வீரபத்திரன்பானுகம்பன்றழலவிரிந்த
சோரிகக்கியசூலவேல்வயிரவர்தொகுதி
சாரிமிக்ககுண்டோதரன்முதலினோர்கலந்து
சீர்பெறப்புகழ்க்தொருபுடைதொழுதுசேவிப்ப. (உங)

வெதிரிதண்டகையிசமாதியாய்விளம்பு
மெதிரிலாதமாதவவனத்தினிதுவீற்றிருக்கு
முதியநான்மறைத்தொல்லைநூன்முழுதுணர்கேள்வித்
துதிகொண்மாதவரெண்ணிலரொருபுடைதுன்ன.

மதியஞாயிறுமற்றையகோள்களின்வருக்க
விதமுமெண்வகைவசுக்களுமொருபுடை விரவக்
கதிர்செய்வாளுடுக்கணங்களேழ்கன்னியர்தெய்வ
நதிகளெண்ணிலாச்சத்திகளொருபுடை நண்ண. (உரு)

கனகமன்றுகல்லானிழற்கண்ணருள்பெற்ற
நினைவரும்புகழ்ப்புலிமுனிபதஞ்சலிநிலைசால்
சனகன்மேதகுசனந்தனன்பவத்துயர்சனாதனன்
புனிதமாசனற்குமரன்மற்றொருபுடைபொலிய. (உசா)

மூதுரைத்தமிழ்நாடுடைமுடிகெழுவேந்த
ராதரத்தொடுபோற்றிமற்றொருபுடையமரப்
பூதலத்துமற்றேனையபுரவலர்கோடி
காதலிற்றொழுதேத்திமற்றொருபுடைசூழ. (உஎ)

ஏமவெற்பினையாதியவெண்ணிலாவெற்புக்
காமர்பெற்றதேவுருவுடனொருபுடைகலப்ப
மாமறைத்திருவந்தணர்முதலியமாந்தர்
தாம்விருப்பொடுவழுத்திமற்றொருபுடைதழுவ. (உஅ)

சித்தராதியர்சாரணரியக்கர்கின்கருடர்
முத்தராயநற்றிருத்தொண்டரொருபுடைமொய்ப்பச்
சுத்தகாமிகமுதற்கலைதுணிந்தமாசைவர்
பத்தியோடினிதிறைஞ்சியேயொருபுடை பரவ. (உகூ)

கொந்துலாவியபுதுமுகைக்கொழுமலர்வாளி
சந்தவின்னிசைவண்டுநாண்வரிசிலைதரித்த
சுந்தரன்படைமாதராரெண்ணிலர்சுற்றக்
கந்தவார்குழலிரதியோடொருபுடைகவின. (ஙo)

கயங்கொள்காவியங்கண்மலர்க்கதிர்நிலாமுறுவல்
வியன்கொள்பேரொழிற்புலோமசைவெம்முலையுழுத
நயங்கொள்பொன்மணிமார்புடைநாயகனல்குஞ்
சயந்தனெண்ணிலாக்குமரரோடொருபுடைசார. (ஙக)

தாமவாரிசன்சதமகன்றுமனைக்கண்ணு
ஞமமாநகர்மாதராரொருபுடைநண்ணப்
பூமிமாதராரொண்ணிலாரொருபுடைபொருந்தக்
காமர்பாதலமாதராரொருபுடை கவின. (௩௨)

கற்றைவார்சிகைத்தழற்பிரானிருதிகால்கால
னெற்றுதெண்டிரையிறையவனிதிபதியீசன்
பொற்புமேதகுவளனுப்பொன்னகர்வாழும்
வெற்றிவேல்விழிமங்கையரொருபுடைவிரவ. (௩௩)

வானுலாவுதேர்க்கதிரவன்மாமதிகடவு
ளேனையோர்பதத்தரிவையரொருபுடையியங்கக்
கானவிஞ்சையர்கின்னரரியக்கர்மாகருடர்
தானமங்கையரொண்ணிலரொருபுடைதயங்க. (௩௪)

கனைநெடுங்கடலடக்கியகையினுனுதி
முனிவர்மங்கையரொண்ணிலரொருபுடைமொய்ப்பப்
புனிதவின்பமார்புகழ்ச்சிவலோகமேற்பொலிந்த
வனசமங்கையரொண்ணிலாரொருபுடையணைய. (௩௫)

தக்கவின்னிசையமுதமல்கியநகைசான்ற
தொக்கவாயிரநரம்புடைத்துணையில்யாழேந்தி
மைக்கருஞ்சிலைகனைந்திடமரங்களுங்கனிய
மிக்கதும்புருநாரதர்விதிமுறைபாட. (௩௬)

பாணிசைக்குரன்மாடகமுறுக்கியபசும்பொன்
வீணைபற்பலகின்னரர்விரவினரிசைப்பச்
சேணுடைப்பொலியுருப்பசிதிலோத்தமைமுதலோர்
பாணர்பெற்றுளநாடகம்விதிமுறையிழைப்ப. (௩௭)

சுரர்நெருங்கியேசொரிதரும்புதுமுகைதூய
மருவிறைந்தவொண்மாமலராலியாவீசும்
விரைகொள்சுந்தரப்பொடிமிகுசோனையாவிரவப்
பரவுபல்வகைக்குருஉப்புகைமுகிலெனப்படர. (௩௮)

மரகதத்தொகைவயிரமாணிக்கம்வண்டரள
நிரைகுயிற்றியவிலையிலாப்பவளநீள்காம்பின்
திருகிழற்பொலஞ்செழுங்குடையிடையறச்செறிந்து
விரவிமொய்த்துமூதண்டநீள்வெளிமுகடடைப்ப. (௩௯)

## திருவிழாச்சருக்கம்.

இந்திரற்குமேயெய்திடாவிலைவரம்பிகந்த
வைகுதெனப்படும்வண்ணத்தினமைந்தவொண்பட்டின்
அந்தரக்கொடியெண்ணறுகோடிகடுதைந்தாங்
கந்தரத்தினுமெண்டிசைப்புறத்தினுமளாவ. (௪0)

பரந்தபாற்கடன்மிசையெழூபஃறிரைப்பரப்பின்
விரிந்தசாமரைத்தொகுதிகடுளங்கவவ்வேலை
நிரந்தகோடிசெங்கதிரொளிநிறங்கொளாடகத்திற்
புரிந்தவாலவட்டத்தொகையசைந்திடைபொலிய. (௪௧)

வண்ணமாமணிவெள்ளிசெம்பொன்னினுல்வயங்கு
மெண்ணில்கோடிபூஞ்சுடரிருந்திவிகையின்றி
மண்ணுமெண்டிசைவட்டமுமிமையவர்வாழும்
விண்ணுமப்புறத்தண்டமும்விளங்கொளிவிரிப்ப. (௪௨)

பன்னுமாமறையந்தணர்பாவலர்முதலாத்
துன்னுமாந்தர்கள்யாவருமகிழ்வுறச்சுடர்வேன்
மன்னர்போற்றியமுசுகுந்தவள்ளல்மாமேகம்
பொன்னின்மாமழையிடையறப்பொழிந்துபின்போத. (௪௩)

அந்தமின்றியாங்கிடையறநெருங்கியேயடர்ந்து
வந்துளார்தமைநிரைநிரையாய்வரவகுத்து
நந்திநாயகன்பொற்பிரம்பேந்திமுன்னண்ண
விந்துசேகரன்கோபுரவாயினினெழுந்தான். (௪௪)

வேறு.

எழுந்தனசங்கினோசையேங்கினதுடியினீட்ட
முழங்கினதூரியஞ்சண்முழவொடுபடகம்பேரி
தழங்கினமுரசம்பம்பைதன்னுமைதடாரிதக்கை
செழுங்கடலதிர்ந்ததென்னச்சிலைத்தனதாரைசின்னம். (௪௫)

செழுந்திருவீதியெங்குந்தெளித்தமான்மதத்தின்சேறு
பொழிந்தபூவர்க்கம்வீதிப்புடைதொறுந்தூங்கநாற்று
மழுந்தரியலங்கல்சுண்ணமரும்புகையாதிவாச
மெழுந்துவானகடுவிம்மியெண்டிசைபரந்ததன்றே. (௪௬)

நந்தனதூர்தியார்ப்புநான்முகனூர்தியார்ப்பு
மிந்திரனூர்தியார்ப்புமேனையரூர்தியார்ப்பு
மந்திரமறையினார்ப்பும்வரம்பிலாகமநூலார்ப்பு
மந்தமிலார்ப்புமிக்கவாழிவாயடைத்ததம்மா. (௪௭)

மல்லலந்தேவரார்ப்புமாதவக்கடலினார்ப்பும்
பல்லியவிசையினார்ப்பும்பல்பெரும்புரவியார்ப்புங்
கல்லெனுங்கணங்களார்ப்புங்காவலரார்ப்புமன்று
சொல்லையில்களிற்றினார்ப்புமென்னடிசைபிறத்ததன்றே. (சஅ)

சூடகமலர்ந்தசெங்கைச்சுந்தரமடந்தைமாத
ராடலினார்ப்புமன்னாடிமலர்ச்சிலம்பினார்ப்பும்
பாடலினார்ப்புநல்யாழ்ப்பண்ணிசையார்ப்புமொன்றாய்
நீடெழுதண்டகூடங்கடந்துமேனிமிர்ந்ததன்றே. (சகூ)

கன்னிமாநகரவீதிப்புடைதொறுங்கலந்துநாற்றும்
பொன்னரிமாலையென்னிற்புதுமணிதொடுத்தமாலை
மின்னொளிவெயிலுந்தேவர்வியன்முடிவெயிலுமொன்றாய்ப்
பன்னிருகோடிவெய்யோர்பரந்தெனப்பரந்ததெங்கும். (ருo)

ஏர்கெழுவீதிமுற்றுமிழைத்தபல்வயிரந்தெய்வச்
சீர்கெழுபடிகமைந்தர்செழுந்தொடைமதாணிமுத்தந்
தோரணவீதிமாடச்சுதையொளிநிலவுமொன்றா
யீரவெண்டிங்கள்கோடியெழுந்தெனவெழுந்ததெங்கும். (ருக)

சுடர்கெழுவெள்ளிவண்காற்றோரணமணிந்தபொன்ஞாண்
முடியுடையரசரூர்திமும்மதம்பொழியுநால்வா
யடல்கொள்வெங்களிற்றுநெற்றியாடகச்செம்பொனோடை
விடுகதிர்விரவிமின்னுக்கொடியெனவிரிந்ததெங்கும். (ருஉ)

வேறு.

நெடியநாரணனதியோர்நீணிலவேந்தர்
முடிகளோடுமொழுடிநிரையுரிஞ்சிவீழ்மணிகள்
சுடர்கொளிந்திரவில்லெனத்துளயகவாங்குதிர்பொற்
பொடிபரந்துவான்போர்த்ததும்பொன்முடிமேலவை. (ருஙூ)

ஆறுபட்டெழுபணிப்புனல்சந்தனமளாவிச்
சேறுபட்டடனெண்ணிலர்செறிதலாற்புலர்ந்து
நீறுபட்டெழுந்தரப்பரப்பெலாநிறைந்து
வேறுபட்டுளவண்டத்தும்விரவியதன்றே. (ருச)

ஏகம்பயந்தருளுமையொடுஞ்சேயொடுந்தலைவன்
புகழ்ந்ததோரணவீதிவாய்ச்செல்லுமவ்வேலை
திகழ்ந்தபல்வகைச்சிறப்பெலாநிகழ்த்துவான்புகுதி
முக்கணூறனாருயிரஞ்செல்லினுமுலவா. (ருரு)

# திருவிழாச்சருக்கம்.

வேறு.

இன்னணநிகழவரவகிண்கிணிக்காலிறையவனிறைவிதன்னோ
டும், பொன்னிளங்குமரன்றன்னொடுந்தெய்வப் பொலங்கொள்சிங்
காதனமீதின், மின்னவிர்மணிப்பொற்குடநிரைகவரிவெயின்மணி
யாடிபொன்விளக்குக், கன்னியங்கமுகுகதலியாற்பொலிந்த காமரு
வீதிவாய்ப்போந்தான். (௫௬)

அமரர்கம்மியனுங்கணிபுனைந்தமைத்தவாடகத்தெற்றியொண்
சிகரஞ், சிமயமாமாடஞ்சாளரஞ்செம்பொற்றோரணஞ்செறிந்தொ
ளிதிகழும், விமலநீள்வீதிபலகடந்தாதி விண்ணவன்விண்ணவர்
போற்றக், குமரியம்புரிசைசூழ்தருநெடுங்குடுமிக் கோபுரவாயில்
வந்திறுத்தான். (௫௭)

காசறுபசும்பொன்மால்வரையனையகனககோபுரந்தலைகடந்து
மாசறுநாவற்பொலந்தகட்டணிந்தவண்ணமார்விதானமேல்வயங்க
வீசியகிரணநவமணிக்கால்கள்கோடியாயிரநிரைவிரவும்
தேசுறுசிறப்பின்வானுயர்தேவாசிரயமாங்காவணஞ்சேர்ந்தான். ()

மற்றவன்சிறப்புவழங்கியைங்கரத்தோன் மாலயன்மகபதிவா
னோர், கொற்றவருரகர்நற்றிருத்தொண்டர் கோதில்சீருருத்திரர்
முனிவ, ரற்றமிலெண்ணில்சிவாலயத்தேவராதிசண்டேசனாதியர்
க்கு, வெற்றிவெள்விடையோன்விடையுசங்களித்து விளங்குபொற்
கோயின்மேவினனே. (௫௯)

இப்படிமுறையிலேனையநாளு மெந்தையைநகர்வலஞ்செய்வி
த், தொப்பிலாயிலியத்தொளிமணித்தேரி னுலாவரச்செய்துமற்றி
டைநாட், செப்புநூல்விதியிற்கடன்களுஞ்செய்வித் தரசர்கோன்
சிறந்தவுத்திரநாண், மைப்பெருங்கண்டற்காகமவிதியின் மஞ்சன
மாட்டுவித்தனனால். (௬௦)

ஆகமவிதியின்மஞ்சனமாட்டியம்பிகைகந்தனோடெங்க
ளேகநாயகனையிலங்குபொற்சிங்காதனத்தின்மேலிருத்தியவெல்லை
பாகசாதனன்மாமலரினான்றிருமால்பண்ணவருருத்திரர்முனிவர்
வாகைவேலரசர்நாகர்கந்திருவர்மறையவர்மற்றுளார்யாரும். (௬௧)

விதிமுறைதேவதீர்த்தநீர்படிந்துவிமலவெண்ணீறணிந்தொ
ப்பு, மதிகழுமகன்றவஞ்செழுத்தோதியம்பொனாலயம்வலங்கொ,

ண்டு, புதுமலரிறைத்துவணங்கினர்நந்திமுறைமுறைவிடுத்திடப் போந்து, கதிர்மணிச்செம்பொனரவகிண்கிணிக்கால் கண்டுகை தொழுதனர்களிப்பால். (௯௨)

மாலயன்மகவான்வானவர்வசுக்கள் மருத்துவர்கதிர்மதிநதிக ள், சீலமாமுனிவருருத்திரரியக்கர் சித்தர்பாதலத்தினரேனோர், ஞாலமாமறையோர் மன்னவரொருங்கு நண்ணலாலுயகனுறைந்த, கோலமார்சிகரப்பொன்மணிக்கோயில கயிலையங்கோயில்போன்ற துவே. (௯௩)

விண்ணவரரசர்முடிநிரையுரிஞ்சிவீழ்ந்தசெங்கனகநுண்டுக ளு, மெண்ணில்பல்கோடிவயிரமுமணியுமிற்றுவீழ்ந்தித்திலத்தொ டையும், பண்ணிசைமறையோர்முனிவரர்சிதறுமலர்களும்பரந்த பான்மையினும், புண்ணியன்கோயில்வண்ணமீன்பூத்தபொன்னுல கொத்ததுபொலிந்தே (௯௪)

மிடைதருமமரரரவமுமுனிவர்வேதியரரவமுங்கணங்க
ளடலுடையரசரரவமுமடவாரரவமுமிமையவர்வயிர
முடிமிசையறையுநந்திபொற்பிரம்பின்முழங்கொலியரவமுமூழிக்
கடலெழுமரவஞ்சிறிதெனவெழுந்துககனசோளகைகடந்ததுவே.

பொன்றிகழ்சுருதியரவகிணகிணிக்காலனைவருந்தரிசனம்புரி ந்த, வன்றவணிகழ்ந்தகாட்சியின்சிறப்பையாயிரம்வாயினுலனந்த, னென்றொருகோடி யுகமொருகணமு மொழிவுறுதுணைப்பினுமுல வா, தென்றுணைசெய்யில்யான் கொலோவிசைப்பல் யாவர்க்குமி சைப்பரிதம்மா. (௯௬)

வீரபத்திரனையாதிபல்கோடியுருத்திரர்விரிஞ்சன்மால்வெள் ளை, வீரவெங்களிற்றுவேந்தனைமுதலோர் வேந்தர்மாதவர்பிறர்யா ரும், வீரவேற்குமரன்றேவியோடுறைந்தவீரசிங்காதனவேந்தன், வீரகிண்கிணிக்கால்கண்டு கைதொழுதுவிடைகொடு முறைமுறை மீண்டார். (௯௭)

என்ணில்பல்கோடியினியநல்வரம்பெற்றெந்தைபால்விடை கொடுமீண்டாங், கெண்ணில்பல்கோடியுருத்திரர்முனிவரிந்திரன் விரிஞ்சன்மாலிமையோ, ரெண்ணில்பல்லுலக முய்ந்திடவுதித்த விறைமுகசுகுந்தனைப்புல்லி, யெண்ணில்பல்லூழிவாழ்கெனவாழ்த் தியேகினர்தத்தமதெல்லை. (௯௮)

ஏகியபின்னரெண்ணில்பல்கோடிசிவாலயத்துள்ளவரெண்ணில்
வாகைவேலரசர்மறையவர்யார்க்கும்வரம்பிலாவிருந்தினிதளித்து
நாகமாமணியுந்தரளமுந்துகிலுங்கவரியுநலங்கொள்பொற்கலனு
மேகமேயென்னவழங்கியேசிறப்பின்விடுத்தனன்மனுகுலவேந்தன்.

வயங்கொள்வேலரசன் மற்றவண்மயிலூர் மைந்தனைமன்னுயி
ரனைத்தும், பயந்தருளுமையைவீரசிங்கணிக்காற் பகவனைமுறை
யினிற்போற்றி, யியம்புநூல்விதியிற்செயத்தகுபூசைபிறவெலாமிய
ல்பினிலிழைப்பித், துயர்ந்தவொன்சிறந்தியிலைடக்கொடியிறங்கப்
புரிந்தனனுலகெலாமுய்ய. (௭௦)

மன்னவர்மன்ன னாகமமறைநூல் வகுத்துளவிதிமுறையனைத்
தும், பின்னரும்புரிவித்தியன் முறைவழாதுபிரான் றிருவாலயஞ்
சூழ்ந்து, முன்னுறவணங்கிநின்றுகண்பனிப்பமுடிமிசைக்கரமலர்
கூப்பி, யென்னையாளிறைவனென்னருஞ்சீர்த்தியினிதெடுத்தேத்
துதலுற்றான். (௭௧)

(வேறு.)

ஆதியுமுடிவுமில்லாவமலனேபோற்றிபோற்றி
வேதமும்விளக்கலாகாவிமலனேபோற்றிபோற்றி
சீதரன்மலர்விரிஞ்சன்றேடரும்பொருளேபோற்றி
நாதனேபோற்றியாரூர்நம்பனேபோற்றிபோற்றி. (௭௨)

அந்தமில்சிறப்பினாரூரணிநகரகம்விரும்பிக
கந்தவேள்கவுரியோடுகனகசிங்காதனத்தி
லிந்தமூதுலகமுய்யவினிதுவீற்றிருந்துவாழுந்
தந்தையேபோற்றிபோற்றிதாணுவேபோற்றிபோற்றி. (௭௩)

முன்னையிலுணர்வுகாட்டிமுழுதருளினிதுநல்கி
யென்னையாட்கொண்டவெண்டோளிறைவனேபோற்றிபோற்றி
மின்னவிர்செம்பொற்றெய்வவீரசிங்காதனத்து
மன்னிவீற்றிருக்குமாரூர்மாசிலாமணியேபோற்றி. (௭௪)

அளவறுபதியிருப்பவணிதிகழந்தணாரூர்
வளநகர்விரும்பிப்போந்தவரதனேபோற்றிபோற்றி
தளிரியன்மடந்தையோடுந்தனியிளங்குமரனோடு
மொளிகொள்சிங்காதனத்திலுறைந்தநாயகனேபோற்றி. (௭௫)

வினைப்பவக்கடலினூடுவீழ்ந்துணர்வழிந்துசால
மனத்துயருறுதுசெம்பொன்மலரடித்தோணிநல்கி
யெனைத்தடுத்தாண்டுகொண்டவீசனேபோற்றிபோற்றி
புனற்றடம்பழனவாரூர்ப்புனிதனேபோற்றிபோற்றி. (எசு)

வெள்ளிமால்வரையின்முன்னம்விளம்பியமொழிவழாம
லுள்ளமேலுணர்வுநல்கியணர்விமேன்றனையாட்கொண்ட
வள்ளலேபோற்றியாரூர்மாநகர்விரும்பிவாழுங்
கள்ளுலாங்கழுநீர்மாலைக்கடவுளேபோற்றிபோற்றி. (எஎ)

அலைவிரிபயோததிக்கணாயிரமணிவிளக்கிற்
பொலிதருமரவப்பாயற்புரிவெடுதுயிலுமபுத்தே
ளிலகுபொன்மார்பரங்கிலினிதசைந்தாடியுற்ற
தலைவனேபோற்றிபோற்றிசங்கராபோற்றிபோற்றி. (எஅ)

மாயவன்மார்பமென்னுமரகதமாமணிப்பூங்
கோயிலுமாயிரங்கட்கோமகன்செல்வமூதூர்
மேயதோர்தெய்வச்செம்பொற்கோயிலுமவெறுத்துநீத்துத்
தூயவாரூரில்வாழ்ந்ததூயனேபோற்றிபோற்றி. (எகூ)

பரிவுகூர்மனத்தினேடும்பங்குனியுத்திரத்தி
லரவவொண்கிண்கிணிக்காலம்புயச்செம்பொற்போது
தெரிசனம்புரிவோர்க்கெல்லாந்தீதிர்தெய்வமுத்தி
வரமருள்புரியுமாரூர்மாநகர்க்கரசேபோற்றி. (அ0)

வேறு.

என்னவிம்முறையிலெண்ணைதன்சீர்த்தியினிதெடுத்தேத்தியே முறையின், மன்னவன்விடைகொண்டெம்பிரான்றிருத்தாண் மரபினிற்பூசனைபுரிந்த, பன்னருமறையோர்பரிசனர்யார்க்கும் பன்முறைவிருந்தினிதளித்துப், பொன்னொடுமணிப்பூண்பூந்துகில்பூமி முதலியவளம்பலபுரிந்தான். (அக)

புரிந்தவிம்முறையினொடாறும்விழாவும் பூசையும்புரிவொடுபுரிவித், தரும்பெறன்மணியால்வெள்ளியாற்பொன்னா லளவறுசிகரகோபுரங்கள், விரிந்தநீள்புரிசைமண்டபமாதி விதித்துவேண்டுவபிறவமைத்துக், கரந்தையஞ்சடையானரவகிண்கிணிக்கால் காவலன்கைதொழுதமர்ந்தான். (அஉ)

நாகைகாருயல்கோளிலிநகரநலங்கெழுமறைவனநள்ளா
றீகைவான்புரிசையினியவாய்மூராமிப்பதியாறினுந்தொல்லை
யாகமம்பகர்ந்தவிதிவழிமற்றையறுவகைமூர்த்திகடமையும்
வாகைவேலரசன்றுபனம்புரிந்துமலிவிழாவெடுத்தனன்மாதோ. ()

அளவில்பல்கோடிபரிசனைமணிப்பூணுடையாதியபிறவமைத் தாங், களவறுவிருப்பினரவகின்கிணிக்காலையனைப்புற்றிடங்கொண்ட, வளவில்பேரொளியைவிதிமுறைபோற்றியாழிருமூலகெலாம்புரந்தே, யளவிலபல்கோடிலிலையாரூரிலரசுவைசாய் தமர்ந்தனனரசன். (அ௪)

அரசர்தந்தொகுதிதிறையளந்தேத்த வளவிலாவைகலாரூரி, லரசுசெய்தமர்ந்தவரசர்சோனெண்ணிலருச்சனையணிவிழாவெடுத் தாய், கரவகின்கிணிக்காலமனாயானை யாதியம்புற்றிடங்கொண்ட, வரனைநாடோறும்விதிமுறைவழிபட் டடைந்திடற்கரியவீட டைந்தான். (அரு)

வேறு.

செங்கதிர்ப்பொலன்வீரசிங்காதனச்செலவன்
பங்குனித்திருவிழாத்தொழும்பன்பிறேறொப்பதும்
பொங்குநற்பலன்முழுவதூஉம்புகலுமாறரிதா
லிங்கிசைக்குதுஞ்சிறிதியாமிருந்தவமுனிவீர். (அசா)

இனையபங்குனிவிழாத்தொழவேண்டுமென்றிதய
நினைவுசெய்திடிற்கோடிவெம்பாதகநீங்கு
முனிவிர்நாவினுமொழிந்திடிலாயிரங்கோடி
வினைகொண்மாபவம்விளிந்திடுமற்றிதுமெய்ம்மை. (அஎ)

வேறு.

பங்குனிவிழவுதொழநினைந்தொருகா லூறடிபடர்ந்தவர்பின் னர், வெங்கண்மால்யானைவேந்தராயுதித்து மேதினிமுழுவதூஉம் புரந்து, பொங்கொளிவிமானமூர்ந்துபொன்னுலகிற் புகுந்துதண் பூந்தருநிழலிற், றிங்கள்வாள்வதனத்தரம்பையர்சூழத் திருவொடு மினைத்துவீற்றிருப்பார். (அஅ)

அடைந்திடற்கரும்பேறடைந்தவவ்வரச னமைத்தருள்பங்கு னிவிழவி, னடைந்திடிலொருநாளருந்தவமுனிவீரளவறுகோடிமா பாவ, மடைந்தபுன்றொழிலினிழிந்துளோரேனு மமலராயுருத்திர, வடிவ, மடைத்துவீற்றிருப்பரழிவிலாவளம்பெற் றரியதோர்சிவப தத்தம்மா. (அகூ)

பரிவொடுதேவதீர்த்தரோடிப் பங்குனியுத்திரநாளி, லருமணிச்சிங்காதனத்துவீற்றிருக்குநாயகனரவகிண்கிணிக்கா, லொருமுறைதொழுவோரொழிவிலாப் பவந்தோறுற்றபாதகமெலாமொருவி, விரிதருமநாதியிருளினைவிட்டிவீடுறுவீடுபெற்றுய்வார். ()

பனகநாயகனும்புகழருஞ்சிறப்பிற்பங்குனியுத்திரந்தன்னி லனகவாடரவக்கிண்கிணிக்காலனைடன்பினுற்றொழுதவரநாதி வினையெலாம்விட்டிவீடுறுவகண்டவிளங்கொளிவிமலவானந்தத் தனிமைசாலின்பவீடுபேறடைதல்சத்தியஞ்சத்தியமுனிவீர். (௬௧)

அருமறைமுனிவீர்பங்குனிவிழாவி லமலனுககன்புசான்றுள்ள, புனாதவீர்தெய்வச்சைவமாதவர்க்குப்போனகம்பூம்புனலாதி, பரிவுகூர்ந்தளிப்போர் பொன்புவியாடை பசுமுதற்றனமீந்தருள்வோர்,வரைவிலாவூழிசிவபதமருவிமன்னுவீடடைவர்பின்மாதோ.

பொங்குபேரன்பிற்பொருள்பலவழங்கிப்போற்றியேபுனிதமாதவரைப், பங்குனிவிழவுதொழுதிடவிடுகெகும்பண்பினோர்பார்த்திபராகி, வங்கநீள்வாரிவையகம்புரந்து வானகத்தரசராய்வைகித், துங்கமாதவத்தீர் கற்பமோர் கோடி தொலைவிலாச் சிவபதத்திருப்பார். (௬௩)

உரைதருமிந்தவிழாவினுக்கிடையூ றுற்றிடாதளிப்பவரொப்பில், பரிமகமுதலாமகமெலாம்புரிந்தபலன்முழுதெய்தியேவாழ்வ, ரிருடிகாளிந்த விழாவினுக்கிடையூறிழைப்பவ ரெண்ணில்பல்கோடி, சுரபிமாமறையோர்க்கொன்றவெம்பாவந்துன்னிவெந்நரகிடைச்சுழல்வார். (௬௪)

விளம்புறிப்புனிதப்பங்குனிவிழாவைவிதிமுறைநடத்திடுமேலோ, ரிளங்கதிரொறிக்கும்பொலன்மணிமௌலியிறைமுசுகுந்தனேயென்ன, வளங்கெழுதிருவின்மல்கியேழ்கடல்சூழ்மாநிலமுழுவதும்புரந்தாங், களந்திடமுடியாவகண்டவானந்தவழிவில்பேரின்பவாழ்வடைவார். (௬௫)

இருடிகாள் செங்கோலிறை முசுகுந்தனினிது தாபித்ததோர் தெய்வ, வரியமாமணிச்சிங்காதனத்துறையுமமலனைநினைபவரொருகாற், றெரிசனஞ்செய்வோர்துதிப்பவர்கோடி தீயவெம்பிறப்பினிற்சேர்ந்த, மருளுறுபாவமொழிந்துமாசெல்வவானகத்தரசராய் வாழ்வார். (௬௬)

மனுகுலத்துதித்தமாமுசுகுந்த மன்னவன்றன்னையாட்கொண்
ட, புனைமணிச்சிங்காதனத்துவீற்றிருக்கும் புனிதனுக்குரியபூமா
லை, கனகமாமணிப்பூண்கருப்புரஞ்சாந்தங் காமர்பூந்துகிலிவைபெ
றவு, மினிதளித்திடுவோரிந்திரபீடத் திருந்துவீடடைவர்பின்னொ
ளிதில். (௩௭)

இந்தவாரூரினெழிலுறங்கழுமெங்கைதியாகேசனல்விழாவி
னுந்துசீருனைக்குமான்மியம்புகல்வோரோதுநல்லன்பொடுகேட்
தந்தைதாய்மனைவிபுத்திரரோடுந்தராபதியாகிவீற்றிருந்து [போர்
பந்தமதகற்றுஞ்சிந்தனைமேவிப்பரமனூர்கயிலைமேவுவரால். (௩௮)

திருவாரூர்ச்சருக்கமுற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௪௱௭

---

## மகாலெக்குமிச்சருக்கம்.

---

அல்லியங்கோதைதன்னோடாதியங்கடவுள்வாழு
மெல்லையில்புகழாரூரிற்றிருமகடவமிழைத்து
மல்லலந்தடந்தோண்மாலைமணவாளனாகப்பெற்ற
தொல்லிருந்தெய்வக்காதைசூதமாமுனிவன்சொல்வான். (௧)

வேதமாமுனிவீர் விண்ணோர்வேலைமுன்கடைந்தவேலைச்
சீதவாரமுதினோடுந்தோன்றினடிருவெனும்பேர்
மாதவடனையெடுத்துமகிழ்வளர்த்தானென்ப
பாய்திரையலம்புமாழிப்பௌவவரசனென்பான். (௨)

பனிமலையனையன்றன்பாற்பராபரைவளர்ந்ததென்னக்
கனைகடலனையன்றன்பாற்கமலைதான்வளருங்காலை
வனைகழல்வல்லரக்கர்மதுகயிடவரென்றோதும் [ர்.
வினைகொள்வேல்வீரர்விண்ணோர்ப்பொருதுவின்னாடுகொண்டா

விண்ணரசிழந்துவிண்ணோர்தம்மொடும்விண்ணோர்வேந்த
னெண்ணினான்முகற்குரைப்பமற்றவனண்ணலாரோ
டெண்ணரும்வைகல்வெம்போரிழைத்தனனிரிந்துபோகி
யண்ணலந்திருமான்முன்னரறைந்தனனறைந்தகாலை. (௪)

கதுமெனவெழுந்துவெய்யகடுஞ்சினந்திருகிச்சால
முதுவலிநெடுமால்யாண்டோராயிரமுரட்போர்மூண்டு
மதுகயிடவ்வென்றேருதும்வஞ்சனைவாட்டிவாகைப்
புதியதார்புனைந்தான்முக்கட்புங்கவனருணைதன்னால். (௫)

கனற்சிகைகதுவுஞ்செங்கட்காய்சினத்தவர்கடம்மை
வினைச்சமர்முருக்கிமாயன்வென்றதோர்வென்றிகேளாத்
தனித்திருமங்கையந்தத்தலைவற்குத்தலைவியாவ
னெனப்பெரிதார்வமெய்திதந்தைதாயுடனிசைத்தாள். (௬)

மதுகயிடவரைவென்றமாயற்குமனைவியாக
வதிகமாந்தவமிழைப்பனென்றவராருளுடனேபோந்
தெதிரிலாவீசனருசொரிதியேதன்னையீன்ற
வுததிபோல்விளங்குந்தேவதீர்த்தத்தினூடுதோய்ந்தாள். (௭)

தோய்ந்துதன்னுடன்பிறந்தவமிழ்தினுஞ்சுவைபடைத்த
வாய்ந்தவத்திருநீர்பெய்துமலர்க்கையாற்குழைத்துவெண்ணீ
றேய்ந்தபேரன்பின்மேனியினிதணிந்தீசன்பொற்றாட்
சேர்ந்ததாமரைதன்னுள்ளச்செய்யதாமரையிற்சேர்த்தி. (௮)

மந்திரப்பகுதியோடுவரன்முறைநியமமுற்றி
யைந்தெழுத்தடைவிலெண்ணியாயிடைநீங்கியேகிச்
சுந்தரக்கோயிலெய்தித்தொல்லைநாட்செம்பொற்புற்றில்
வந்துதித்தெழுந்தமூலச்சிவலிங்கமணியைக்கண்டாள். (௯)

மாமணிதன்னைத்தன்கண்மலர்மணிகுளிரநோக்கித்
தூமணிநறுநீராட்டித்துகிலணிசந்தஞ்சாத்தித்
தேமலர்மாலைசூட்டித்தெள்ளமுதருத்திநின்ற
காமுறுகடன்களெல்லாங்கடவுணூல்விதியிற்செய்தாள். (௧௦)

கடவுணூல்விதிவழாமற்காசறுபூசையாற்றி
யடியவருள்ளநீங்காவடிகளினடிகளாங்கு
முடிகொடுதாழ்ந்தெழுந்துமும்முறைசூழ்ந்துமுன்ன
ரொடிவுறுஞானச்செம்பொனேவியமென்னநின்றாள். (௧௧)

ஓவியமென்னநின்றேயுள்ளநெக்குருகிக்கஞ்சப்
பூவினைப்பிடிக்குஞ்செய்யபூவினையுச்சிகூப்பி
நாவினுவினிதுபோற்றிநகுமணிப்புற்றினுற்ற
தேவர்கோன்கோயின்மேல்பாற்றிருந்தருநற்றவம்புரிந்தாள். (௧௨)

# மகாலெக்குமிச்சருக்கம்.

தவறாவிரதத்தோடுந்தவநெறிபூண்டுசால
வுவமைதீரஞ்செழுத்துவிதிமுறையுரைத்தாளுஞ்
சிவபிரான்றனைமுப்போதும்பூசனைசெய்துசெல்வி
யவனியாருயிர்தழைப்பவமர்ந்தனளாரூர்தன்னில்.
கருமேனிநேமிமாலைக்கணவனுமெய்தச்செம்பொன்
திருமேனிமூலட்டானச்சிவலிங்கந்தனைப்பூசித்
தருமேனியமுதிற்செய்தவோவியமன்னதெய்வத்
திருமேனிவருந்தப்பன்னாட்டிருமாட வத்திற்சேர்ந்தாள் (கச)
சேர்ந்தினிதுறையுநாளிற்றிருமூலட்டானமூர்த்தி
யேய்ந்தபூங்கோயின்மேல்பாலிடத்துமோரிலிங்கந்தாபித்
தாய்ந்தநூல்விதியிற்பூசையாற்றினளிலமுப்பாய்ப்
பாய்ந்தெழுதரங்கமாலைப்பாற்கடல்பயந்தபாவை. (கரு)
பொன்போலும்புனிதயாகசைப்பொன்பூசைபுரிந்துபோற்றி
யன்போடுவிரதங்குன்றாதருந்தவம்புரிநாளி
லென்போலும்பேதையோர்க்குமெளிவருங்கருணைவள்ளன்
மின்போலுமிடையாளோடும்விடையின்மேற்றோன்றினனே. ()
முன்கண்டநஞ்சையுண்டுமுகுந்தனைமுதலோருய்யத்
தன்கண்டங்கறுத்தமுக்கட்டலைவனைத்தலைவியோடு
மின்கண்டமருங்குற்பைம்பூண்வெண்ணகைக்கருங்கட்செவ்வாய்ப்
பொன்கண்டுமகிழ்ச்சிபூத்தாள்புயல்கண்டதோகைபோன்றாள். ()
பூத்தனளுவகையாக்கைபோர்த்தனள்பொடிப்பின்போர்வை
காய்த்தனள்வினைகளுள்ளங்கனிந்தனளுள்ளககமுருன்
மாய்த்தனள்பரமானந்தமருவினண்மழைக்கண்மாரி
யீத்தனளங்கைகூப்பியிறைஞ்சினளேத்துகின்றாள். (கஅ)

வேறு.

ஒன்றாகியொன்றன்றாபலவாகியுலகாகியுயிராயுயிர்க்கொருயிராய்
நின்றாய்முகுந்தனயனமரேசன்முனிவோர்கணிலமாதிபூதமவைநா
ளென்றாதிகோள்வர்க்கமாமந்திரத்தொகுதியிசைவேதமாதிகலைக
ளென்றாதிநல்கும்பராசத்திமயமாகுமாரூரமர்ந்தவரசே. (க௯)
ஞாலத்தொடுயர்வொப்புநன்றோடுதீதின்ப துன்பங்கள்கருவி
தொழில்பேர், மூலத்தொடிடையந்தமிகல்பற்றுவடிவாகிமுழுதுங்
கடந்தமுதலே, வேலைத்தலைப்பொங்கிவிசைகொண்டவிடமுண்டு
விண்ணுடர்மகளிர்க்கெலாந், தாலித்தனிப்பிச்சைதந்தாய்விரிஞ்ச
ன்றலைப்பிச்சைகொண்டதலைவா. (உ௦)

பொன்னைத்திலங்குந்துணர்க்கொன்றைதிங்கட்புதுப்பூங்கொழுந்துபொலியு, மின்னைத்தவேணிக்கண்வேணிக்கணுறைகங்கை மின்னைத்தரித்தவிமலா, வன்னிப்பொறிச்சிந்துசிறுகட்பெருந்தாணமலைபொன்றுரித்துமதுகைக், கன்னற்சிலைக்காமனுடனீறெழக்கண்ட கண்ணார்நுதற்கடவுளே. (உக)

செங்கட்கருங்காலவெங்கோட்டுமாவொன்று தேடுஞ்சிவந்தவடியாய், வங்கக்கடற்பார்வகுக்கின்றபுள்ளொன்று காணாதவண்ணமுடியா, யங்கட்பசுஞ்செவ்வியழியாததாமரையகங்கைப்பொலிந்ததுடியாய், சங்கக்கொழுங்கிரணநிலவிற்பொலிந்திலகு தனியேறுயர்த்தகொடியாய். (உஉ)

வேறு.

மேலைத்திருவிண்ணுலகந்தொருவேந்தனுதி
மாலைப்பொலன்மாமுடிவானவருய்யவந்து
மூலப்பொருளாயொருபுற்றின்முளைத்தெழுந்த
கோலச்சுடரோவலன்மாமழுங்கொண்டகோவே. (உ௩)

எந்தாய்நமவெம்பெருமானமவீரநெஞ்சில்
வந்தாய்நமமாமணியேநமமல்லன்ஞாலந்
தந்தாய்நமவென்றெதிர்போற்றுபுதாழ்ந்தெழுந்தான்
செந்தாமரைமாமலர்மாளிகைத்தெய்வவல்லி. (உச)

வேறு.

அலைமடந்தையாங்கேத்துபுவணங்கலுமவடனைமுகநோக்கிக்
கலைமடந்தையையாதிவான்மடந்தையர்கைதொழநயல்சூழ
மலைமடந்தையைமருங்கினில்வைத்துளான்மருவியபுனற்கங்கைத்
தலைமடந்தையைத்தலைமிசைவைத்ததோர்தலைவன்மற்றிதுசாற்றும்

விரதமாதவம்பூண்டுவேதாகமவிதிவழாதெமையன்பா
லரியபூசைநீயாற்றியதிறத்தினுலகமகிழ்ந்தனமம்ம
கரியவாள்விழிவெண்ணகைப்பைங்குழற்செய்யவாய்க்கடன்மங்கை
வரமியாதுநீவேட்டனையென்றனன்மாசிலாத்தனிவள்ளல். (உரு)

வள்ளல்கேட்டுழிவணங்கிநின்றிருவடிமலர்ந்ததாமரைமீதி
லுள்ளமுறுதபேரன்பினுற்கன்மலரொப்பிறுமனைசாத்தும்
புள்ளிநாகணைச்செல்வனென்கணவனைப்புரிதியென்றனள்பூவை
துன்னுமான்மறிக்கரத்தினனவ்வரந்தந்துபின்னருஞ்சொல்வான். ()

இன்னும்வேண்டியகல்வரங்கேட்டியென்றிசைத்தலுமெதிர்தாழ்ந்து, பொன்னுறழ்ந்தபூஞ்சுணங்கவிர்பூண்முலைப்பொன்னிருகரங்கூப்பிப், பின்னல்வார்சடைப்பெருமவித்திருநகரொன்றுபேர்பெற்றோங்க, மன்னுமாரருள்புரிந்தருளென்றனள்வள்ளலுமருள்செய்தான். (உ௯)

வரமளித்தரன்மறைந்தனன்றுமனைவலவியுமாயோனை
யுரியநற்பெருங்கணவனைப்பெற்றினிதுவந்துவாழ்வுடனுற்று
ளரியநற்றவமுனிவிர்காளன்றுதொட்டந்நருவொன்னும்
புரமதற்குவண்பூங்கமலாலயமெனும்பெயர்பொலிந்தன்றே. (உ௰)

இவ்விலக்குமிதன்னுயர்மான்மியமின்புறக்கேட்டோர்கள்
செவ்வியோடுரைசெய்தவர்சீருறுசெல்வமாண்பினராகித்
திவ்வியாகமநூன்முதற்கலையெலாந்தெளிவுறத்தெரிந்தாய்ந்து
நவ்வியங்கையானருளினலமுறநாகநாடடைவாரே. (௩௰)

மகாலக்குமிச்சருக்கமுற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௫௱௫

---

## தேவதீர்த்தச்சருக்கம்.

சிவனுவந்துறையுந்தெய்வத்திருவாரூரொன்னுந்தொல்பே
ருவமையில்பதியிலுள்ளதீர்த்தமெண்ணிலவுவற்றுள்
பவமுழுதகற்றுந்தேவதீர்த்தத்தின்பான்மைசொல்வன்
றவநெறிநிலைமைசான்றதாபதர்தலைவர்கேண்மின். (க)

பகர்தருசிறப்பின்மிக்கபாதாளகங்கைமுன்னாட்
புகழ்வளர்செல்வவாரூர்ப்பொலிதருபுற்றினூடு
துகளறுமூலலிங்கந்தோன்றியவழியேதோன்றித்
திகழ்தருமனையமூலச்சிவலிங்கந்தனக்குமேல்பால். (உ)

சிலையளவொருபானேழிற்கப்புறந்திகழ்ந்துசேர்ந்தே
யுலகினிலுயிர்கள்பாவத்துகள்கழீஇயொளிபெற்றுய்ய
நிலவுறைபவளமேனிவிமலனதாணைதன்னா
லலகிலாவருந்தவத்தீராதியிலமர்ந்ததன்றே (௩)

அன்னதேதேவதீர்த்தமாகுமற்றனையதீர்த்த
முன்னமாரூரில்வந்தமுறையிதுமாதவத்தீர்
மன்னியவனையதீர்த்தத்தளவுமற்றதன்சிறப்பும்
பன்னுவன்கேண்மின்முக்கட்பரமனதருளினாலே. (௪)

குடக்கொடுகுணக்குத்தண்டங்கொண்டிடுமளவையைம்பான்
வடக்கொடுதெற்குமஃதேமாதவமுனிவீர்பாவத்
தொடக்கறுத்தருள்வழங்குந்தூயவித்தேவதீர்த்தத்
தெடுத்தமான்மியமனந்தம்யாஞ்சிறிதிசைத்துமன்றே. (௫)

சிவனிடமுவந்துசெல்விதிருவருள்போற்குளிர்ந்து
சிவனடியன்பர்தங்கள்சிந்தைபோற்புனிதஞ்சேர்ந்து
சிவனொளிஞானமென்னப்பவவிருள்சிந்தநீக்கிச்
சிவனெனவுலகமேத்தச்சிறந்ததுதேவதீர்த்தம். (௬)

தாமரைகழுநீர்நெய்தறளையவிழ்குமுதமாதித்
தூமலர்மணங்கொழிக்குந்துறைபலதுதைந்துமல்கிக்
காமர்வெண்டூவியன்னகுழாத்தினாற்கவினிறைந்து
பூமகள்விழையும்பொற்பிற்பொலியுமத்தெய்வப்பொய்கை. (௭)

தெண்ணிலாவரும்புபூத்தசெஞ்சடைக்காட்டினூடு
விண்ணுலாந்தெய்வகங்கைமெல்லியன்மானைவைத்த
வண்ணல்வானவனுமெங்களன்னையுமகிலத்துள்ளா
வெண்ணிலாவுயிருமுய்யவிருப்பரித்தடத்திலென்றும். (௮)

செப்புமித்தீர்த்தமொப்பாந்திருத்தகுதீர்த்தமிந்த
முப்பெரும்புவனத்தில்லைமுனிவிரித்தடத்தின்பாங்கர்
மைப்புயல்வண்ணன்வேதன்வச்சிரத்தடக்கைவேந்த
னைப்பருந்தேவர்போற்றிவைகலுமுறைவரன்றே. (௯)

கருடர்கந்தருவர்சித்தர்விஞ்சையர்கணங்களுகர்
பொருவில்சாத்தியரியக்கர்சாரணர்பொற்பின்மிக்க
திருவளர்கன்னிமாதரெழுவர்சேணுலகத்துள்ள
வரிவையர்யாருஞ்சேவித்தமர்ந்தினிதுறைவரென்றும். (௧௦)

காவிரிபொருனைவாணிகம்பைகாளிந்திதண்கோ
தாவிரிசரயுநன்னீர்ச்சந்திரபாகைசிந்து
நாவலர்புகழும்பம்பைநருமதையம்பையாதி
பூவிரிநதிகளெல்லாம்வணங்கியேபுடையின்மன்னும். (௧௧)

தெண்டிரையலம்புநன்னீர்த்தேவதீர்த்தத்தைநெஞ்சிற்
கொண்டிடிலயுதகோடிபாதகங்குலையுநாவால்
விண்டிடிலதற்கிரட்டிபாதகம்விளியுஞ்சேணிற்
கண்டிடிலதற்கிரட்டிபாதகங்கழிந்துநீங்கும். (௧௨)

இட்டிடிலதற்கிரட்டிபாதகக்கிளைகண்மாயு
மட்டலர்பாய்குமிந்தமணிப்புனலளைந்தமெய்யுற்
பட்டிடிலதற்கிரட்டிபாதகம்பாறுமந்நீர்
தொட்டிடிலதற்கிரட்டிபாதகந்தொடர்ந்துநீங்கும். (௧௩)

தெண்புனலிதனைமன்பிற்றீண்டியாங்களைந்துசெய்கை
மொண்டிடிலதற்கிரட்டிபாதகமுழுதுமாயுந்
துண்டிடிலதற்கிரட்டிபாதகமொழியுமூழ்கில்
விண்டிடுமதற்கிரட்டிபாதகமெய்த்தவத்திர். (௧௪)

இருபொழுதாடினோர்களிந்திரனுலகஞ்சேர்வார்
மரபொடுமூன்றுபோதுபடிந்தவர்மலரில்வாழுஞ்
சுருதியானுலகஞ்சேர்வர்தொல்லைமாமுனிவீர்நாற்போ
தருமறைவிதியிற்றோய்ந்தோராழியானுலகஞ்சேர்வார். (௧௫)

ஐந்துபோதாடினோர்களரனுலகடைவர்மற்றி
ரைந்துபோதாடினோர்களரனுருவடைவரோர்நான்
கைந்துபோதாடினோர்களரன்வடிவடைவரோரா
றைந்துபோதாடினோர்களழிவில்வீடடைவரன்றே. (௧௬)

பாவமெண்ணிலவிழைத்தோராயினும்பங்கயப்பொற்
பூவலர்வாசநாறும்புதுநறுந்தேவதீர்த்த
வாவிநீர்த்திவலையொன்றுவந்துமேற்படில்வானங்குந்
தேவுருவெய்திமானமூர்ந்துசேணுலகஞ்சேர்வார். (௧௭)

செந்திருவிரும்புமாரூர்த்திருநகர்க்கணியாய்வைகு
மந்தநீர்த்தேவதீர்த்தத்தொருமுறையாடிலாங்கே
வெந்திறலலகைபூதமுயலகன்வெருவிநீங்கு
மந்திரமணிமருந்தான்மாறிடாப்பிணியுமாறும். (௧௮)

வேறு.

கோடிநன்பசுக்கோடிமாமங்கையர்கோடி
பாடல்சான்மறையந்தணர்க்கொன்றமாபவமுந்
தேடருந்திருத்தேவதீர்த்தத்தடத்தொருபோ
தாடநீங்கிடுமையமற்றில்லையாலறவீர். (௧௯)

தொடர்ந்ததொல்லைநூல்சொல்லியதானங்கள்புரியா
திடங்கொண்முத்தழற்குண்டவேள்விகள்பலவிழையா
தடர்ந்துகூற்றமெதர்விழியரம்பையர்கொங்கைத்
தடம்படிந்திடவிரும்பினோர்படிவரித்தடத்தில். (உ0)

மைத்தவழ்ந்திடுமேலைமுழையிருந்துகால்சருகு
துய்த்தரும்புலனடக்கியைந்தழலிடைத்துன்னி
யெய்த்துமந்திரமெண்ணியேவருந்திடாதுட்ட
சித்திபெற்றிடவேண்டினோர்படிவரித்திருநீர். (உக)

வேதவாகமமுதலியவிரிபெருங்கலைக
ளோதிடாதுயர்சிவலிங்கபூசனையுஞற்று
தாதிநாயகனம்புயத்திருவடிஞானப்
போதமெய்திடவிரும்பினோர்படிவரிப்புனலில். (உஉ)

செல்வம்வேண்டிடிற்செல்வமதீந்திடுந்தெய்வக
கல்விவேண்டிடிற்கல்வியதளித்திடுங்காம
னல்லபேரெழில்வேண்டிடினவ்வெழினல்கு
மல்லறீர்கதிவேண்டிடிற்கதியினிதருளும். (உந)

மகவுவேண்டிடின்மலரின்மேன்மங்கையின்வனப்புத்
திகழுமங்கையர்வேண்டிடிற்சேணுலகாளும்
புகழ்செய்வேந்தராவேண்டிடிற்பொருகடலாடை
யகிலமன்னராவேண்டிடில்வேண்டியாங்களிக்கும். (உச)

அழுகுநோயொடுகுட்டநோயடைந்துருவழிந்து
வழுவிவாலெயிறுக்கைகூன்சிலையெனவளைந்து
விழிமறைந்துகைகால்குறைவிருத்தமாந்தரும்போய்
முழுகவித்தடமாரனிற்பொலிவராண்முனிவீர். (உரு)

நரைமுதிர்ந்துகண்செவிமுலைநாசிபோய்க்கோல்கொண்
டுரைதளர்ந்தொழுகூன்புழுமுடைப்பிணியுழந்த
புரைகொள்புன்றொழில்விழிகுலப்பெண்டிரும்போந்து
மருவிமூழ்கிடிவிரதியில்வயங்குவர்மாதோ. (உசா)

மிடியெனுங்கொடுநெருப்பினில்வெந்துடல்வெதும்பி
யடகருந்தவும்விதியிலாதரும்பசியடைந்து
முடிவில்வெந்துயர்மூழ்கினோரொருமுறைமூழ்கிற்
புடவிவான்புகழிருநிதிவேந்தனிற்பொலிவார். (உஎ)

## தேவதீர்த்தச்சருக்கம்.

பருதிமாமதிவாரத்திலபரபக்கத்தின்
மருவுமட்டமிவயங்குமாநவமியில்வந்து
பொருவிலித்தடமூழ்கியேபுற்றிடங்கொண்ட
வரனையேத்துவோரமரராய்த்தருநிழலமர்வார். (உ௯)

வேறு.

வாய்த்தபூரணைவயங்கமாவாசியின்மலர்மணங்கமழ்தேவ
தீர்த்தமூழ்கிநீறணிந்துசெய்கடன்முறைசெய்தியன்றுளதான
மீத்திறைஞ்சியேபுற்றிடங்கொண்டருளீசனைத்தரிசித்தோர்
நீத்தமாதவிர்பாக்கையோடிமையவர்நீடுவான்பதஞ்சேர்வார். ()

திகழ்ந்தபங்குனியுத்திரநாளினிற்றேவதீர்த்தப்பொய்கை
மகிழ்ந்துமூழ்கியேயாடையாடைசம்பகமாநிலமுதற்றானம்
புகழ்ந்தநான்முறைவஞ்சமின்றுதவியேபுற்றிடங்கொண்டோனை
யகங்கொளான்பெருபேற்றிஞோர்முத்தியாங்கடைதல்சத்தியமம்மா.

வேறு.

தீதில்சித்திரையைப்பசித்திங்களுற்பவத்தி
லோதுதற்கருமயனத்திலுமைத்தவிப்பொய்கைப்
பூதநீரிடைமூழ்கியேபுற்றிடங்கொண்ட
வாதிநாயகற்றொழுதவரயன்பதமடைவார். (௩௧)

மாகமாதமிப்பொய்கையின்மூழ்கிவன்மீகத்
தேகநாதனையொருபொழுதேனுமேத்திடுவோர்
பாகசாதனனுடனமரர்ந்தரம்பையர்பணைத்தோட்
போகமார்ந்துபினழிவிலாவீட்டினிற்புகுவார். (௩௨)

மகரமான்பெயர்த்திங்களம்பிறப்பிலிவ்வாவித்
திகழுநீர்படிந்தாதியஞ்செழுமணிப்புற்றின்
மகிழ்வுகூர்ந்துறைவானவற்றொழுதவர்வானோர்
புகழுவானநாடனைத்திற்குமரசியல்புரிவார். (௩௩)

சுடரிரண்டையும்பாழிவாய்த்துளைகொண்முள்ளெயிற்றுக்
கொடியவெம்பணிகவருநாளிப்புனல்குடைந்து
படர்கொழுஞ்சடைப்புற்றிடங்கொண்டவற்பணிவோர்
முடிவிள்முத்திபெற்றுய்வதுவாய்மையேமுனிவீர். (௩௪)

மார்கழித்திருவாதிரைவயங்குமிவ்வாவி
நீரிடைப்படிந்தாதியம்புற்றில்வாழ்நிமலன்
சீர்கொள்பொற்பதந்தொழுதவர்முனிவிர்பின்சென்ம
வாரியிற்படியாரிதுவாய்மையேவாய்மை. (௩௫)

வேறு.

அருத்தவுதயமாவுதயத்தாரூர்த்தேவதீர்த்தத்தில்
விருப்பின்மூழ்கிவன்மீகவிமலமூர்த்திதனைத்தொழுவோர்
கருப்பமடையார்சிவபதத்திலயுதகோடிகற்பமுவங்
திருப்பாபின்னரீறில்லாமுத்தியின்பத்திசைந்தமர்வார். (௩௬)

இணைதீர்மாண்பின்விதிபாதத்திலங்குந்தேவதீர்த்தமெனு
மணமாமலர்ப்பூந்தடம்படிந்துவன்மீகத்தின்மாமணியைத் [ம்
தணவாவன்பின்வலங்கொண்டுதொழுந்துதொழுதோர்பிறப்பென்
பிணியால்வருந்தார்பேரின்பம்பிறங்கும்வாழ்க்கைபெறுவாரால். ()

வேறு.

இந்தமாண்பொய்கைக்கூலத்தெம்பிரான்கன்புசான்ற
வந்தணர்க்கன்னதானமறுசுவையோடுமன்பாற்
றந்தவரவிழொன்றிற்குச்சதகோடிகற்பமாக
நந்துருச்சிவபதத்தினண்ணிவீற்றிருப்பரன்றே. (௩௮)

கடிகமழ்தேவதீர்த்தவாவியின்கரையின்பாங்கர்
மடிவழிந்தொழுகுதீம்பால்வண்பசுத்தானமீந்தோ
ரடர்தருமுரோமமொன்றிற்காயிரகோடிகற்பம்
விடையவன்சிவபதத்தின்மேவிவீற்றிருப்பர்மாதோ. (௩௯)

மன்னியதேவதீர்த்தவாவியின்கரைமருங்கின்
மின்னவிர்மணிப்பூண்வர்க்கம்வெள்ளிபொன்பூமியாடை
கன்னிதானம்புரிந்தோர்கடவுளர்யாரும்போற்றப்
பொன்னிவர்வானநாடுபுரவுபூண்டுறைவரன்றே. (௪0)

போதலர்தேவதீர்த்தப்பொய்கையங்கூலத்தின்க
ணுதியங்கடவுளீசற்கன்புசாலந்தணர்க்குத்
தீதில்கண்டிகைசிறந்தசிவலிங்கதானமீந்தோர்
மேதகுபரமமுத்திமேவுவரீதுமெய்ம்மை. (௪௧)

சீறிதழ்மலர்கொள்வாசத்தேவதீர்த்தத்தின்பாங்க
ராறணிசடிலத்தண்ணலஞ்செழுத்திசைக்குமன்ப
ரேறுயர்கொடியினன்றனிணையடிக்கமலநீழன்
மாறுறுவின்பவாழ்க்கைமன்னுவரிஃதுவாய்மை. (௪௨)

இந்தமாநிலமுமற்றவெண்ணிலாவுலகனைத்து
மூய்ந்திடவிளங்குந்தேவதீர்த்தத்தின்பாங்கரோப்பில்
செந்தழல்வேள்விசெய்தோர்செய்வித்தோர்சிவபதத்தி
லந்தமில்கற்பமேவியடைவர்பின்முத்தியாங்கே. (௪௩)

சிறந்தவிப்பொய்கைப்பாங்கர்த்தென்புலத்தவர்கடங்க
ளறைந்தநூல்விதியிற்செய்யுமவர்வழிப்பிதிர்க்கள்யாரு
நிறைந்தவெந்துயரனைத்துநீங்கியேநிமலன்பாதத்
துறைந்தினிதுவந்துவாழ்வருண்மையீதுயர்தவத்தீர். (சச)

வேறு.

பாரிழைத்தமாதவத்தினற்பாதலநின்றும்
வார்சடைச்சிவனருளினலாதியில்வந்த
சீர்படைத்தநற்றேவதீர்த்தம்வலஞ்செய்வோ
ரோரடிக்குநூறிவுளிமேதப்பலனுறுவார். (சரு)

எண்ணரும்பகல்காசியாதியதலத்திருந்து
மெண்ணருந்தவம்வேள்விகளிழைத்துமாண்செய்து
மெண்ணரும்பயன்றேவதீர்த்தத்தினையிதயத்
தெண்ணவெய்துமென்றாலிதன்பெருமையாரிசைப்பார். (சசா)

வேறு.

தேவதீர்த்தச்செழுந்தடமாடிடப்
போவனென்றொருநூறடிபோந்தவன்
றாவில்புங்கவர்தம்முலகெய்துவான்
மேவுமாதவரிம்மொழிமெய்ம்மையே. (சஎ)

வேறு.

கோரமாகோரங்கோரரூபமேகும்பிபாக
மார்தருபிராணரோதந்தமமந்ததமங்சராளை
சாரமேசண்டகோலாகலம்பிரசண்டந்தாழ்ந்த
சோரிவெங்கிணறுசண்டைசூசிமாமுகமேசூர்மி. (சஅ)

துச்சகந்துர்க்கமந்துக்கதநிகரதநிகும்பம்
வச்சிராவிதாரகங்கூர்வச்சிரகண்டமேவி
பச்சங்குச்சிதநிதாகம்பயோற்படைபயானகத்தோ
டச்சுறுரவுரவம்மாரவுரவமந்தகூபம். (சகூ)

கூடசான்மலிசுகோரமதிகோரமதோமுகத்தி
னோடுவாட்படைதளிர்க்காடுறுகாலசூத்திரந்தீ
நீடுவைதரணியாதிநிரயமோரிருபத்தெட்டுக்
கோடிமற்றுளவென்றாதிநூல்பலகூறுமன்றே. (ருo)

புழுமலங்கோழையுப்புப்புனல்கறைசுக்கிலஞ்சீ
யொழுகுதியதனிற்காய்ந்தவுலோகமற்றலற்றிற்செய்த
முழுநெடுந்தண்டந்தூணமுசலம்வேலூசிமுள்வா
ளழல்கொள்வெந்தயிலம்பாறையயிர்மணல்வட்டுப்பாவை. (௫௧)

செக்குரல்சகடந்தீக்கால்சலாகையேசிலைவெஞ்சூலஞ்
சக்கரம்பிறைவாயம்புவச்சிரந்தழன்மரங்கள்
குக்குடங்கழுகுகாகங்கூகையேகொடுவெம்பூனை
மைக்கரிசிங்கம்வேங்கைமயிடமூடிகந்தேள்பாம்பு. (௫௨)

கீரிமூஞ்சூறுஞெண்டுகிளைபடுமுதலைபேனீ
யோரிநாய்மற்றவற்றுளுறநிறைபந்தாழ்ந்துசன்று
சார்வழியஃகிநீண்டுபெருவருந்தன்மைத்தாகி
யார்துயர்க்கிடமாய்வைகுமனையவெந்நிரயமெல்லாம். (௫௩)

அந்தணர்பசுக்கண்மாதர்குழவியையாவிகொன்று
ரிந்துவார்சடையாற்கன்பர்புண்ணியர்தமையிகழ்ந்தோர்
முந்தையாகமபுராணமுதுமறைநிந்தைசெய்தோர்
தந்தைதாய்குரவர்மூத்தோர்சாற்றியமொழிதணந்தோர். (௫௪)

மனுமுறைபிறழ்ந்தோர்நன்றிமறந்தவரறமழித்தோர்
பனவர்தம்பொருள்கவர்ந்தோர்பிறர்மனைப்பற்றுவைத்தோர்
தனையர்தந்தையர்தாய்மாதரதிதியர்தாவில்சுற்றம்
புனிதமாதவத்தின்மிக்கபுண்ணியர்பசிப்பவுண்போர். (௫௫)

விரதநன்னியமம்விட்டோர்வெண்டிருநீறிடாதோ
ரருளிலர்வஞ்சர்பொய்யராலயப்பொருள்விழைந்தோர்
இருடுவோர்திருடுவிப்போர்சிதைத்துயிர்புலாலூன்றின்போர்
மருவியதோழன்கோமான்மன்னுயிர்க்கீறுசெய்தோர். (௫௬)

இல்லெரியூட்டுந்தீயோரெளியவர்க்கிடரிழைத்தோர்
நல்லவர்க்கின்னல்செய்தோர்நடுநிலைவிடுத்தோரீன
மெல்லியரிதழ்த்தேனுண்டோர்மதுவுண்டோர்மெய்யில்சான்று
சொல்லியகொடியோரீசன்றுணையடிதொழுதிடாதோர். (௫௭)

மன்னுசீர்க்கணவன்மாற்றமறுத்திடுங்கற்பிலாதோ
ரின்னவர்முதலோர்யாருமியமதூதுவர்கைப்பாசந்
துன்னியேபிணித்துவீழ்த்தச்சோர்ந்துவீழ்ந்தாற்றினாரு
மன்னவெந்நிரயமெல்லாமலமந்துதுயருழப்பார். (௫௮)

இன்னவெங்கொடியோர்யாருமெம்பிரானருளொய்தி
யிந்நிலம்புகழுந்தேவதீர்த்தமாங்கினிதுமூழ்கி
யின்னவெந்நிரயஞ்சேராரிடருழந்திரங்கிச்சோரா
ரின்னதோர்மாற்றம்வாய்மையெண்ணிலாவிருந்தவத்தீர். (௫௯)

வேறு.

பூந்தாமரையாசனம்புரியும்புரிக்கும்புற்றிற்போலிஞானத்
தீந்தேன்றனக்கும்புகழ்த்தேவதீர்த்தந்தனக்குமிந்தீர்த்தந் [னக்கு
தோய்ந்தோர்தமக்குந்தோய்ந்தவராங்கடையுந்தொலையாப்பயன்ற
மாய்ந்தாரணநான்முழுதுணர்ந்திருவமையிம்முலகிலத்தில். (௬௦)

இந்தவாவிதனிற்படிந்தாலேகாப்பவமுமிசைசான்ற
விந்தவாவிதனிற்படிந்தாலீறுறுதகொடும்பிணியு
மிந்தவாவிதனிற்படிந்தாலெய்திடாதவரும்பொருளு
மிந்தவுலகம்பதினான்கிலின்றூலயாந்தவிருந்தவத்தீர். (௬௧)

வேறு.

ஆயிரமுகத்துவானியாறலம்புமந்துகிரணையாவார்சடிலத்
தாயிரந்திருப்பேரமலனருளிற்றேவதீர்த்தத்தரும்பெருமை
யாயிரம்பகுவாயரவநாயகனாலுயிரங்கற்பமோதுகினு
மாயிரங்கோடிபங்கிலோர்பங்குமுடிபுறாதளப்பருந்தவத்தீர். (௬௨)

இத்திருத்தேவதீர்த்தநன்மகிமை யிருசெவியினிதுறக்கேட்
போர், சுத்தமுற்றயருஞ்சுபவசனத்தாற் சொல்லுவோர்தொல்லை
நாடொடங்கிக், குத்திரமதனுலொத்திருந்துமுக்குங்கொடும்பழிய
னைத்தையுங்குலைத்துச், சித்திரமருவும்பொற்றருநாட்டிற்சென்றர
சாளுவர்சிறப்பால். (௬௩)

தேவதீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௬௦௦

## திரிசங்குச்சருக்கம்.

தேவதீர்த்தச்சிறப்புரைத்ததெய்வச்சூதத்திருமுனிவன்
றேவதீர்த்தத்தடம்படிந்தோர்வேந்தன்றீயபுலைநீங்கித்
தேவவுருவாம்யாக்கையொடுசெம்பொன்மானந்தனையூர்ந்து
தேவருலகந்தனையடைந்தானென்னமுனிவர்செப்புவரால். (௧)

வேந்தன்மரபுமவன்பெயரும்வேந்தன்றனக்குவெய்யபுலே
யேய்ந்தமரபுமவனூர்த்தேவதீர்த்தமெனுந்தடத்திற்
றோய்ந்தமர்பும்புலேநீங்கிமானமூர்ந்துதுறக்கத்திற்
போந்தமரபும்புகலென்றூர்பௌராணிகனும்புகல்கின்றான். (௨)

வேறு.

நிதியினாற்பொலிவெய்தியவளகைநீடாரூர்ப்
பதியினாற்பொலிவெய்தியவளவர்மண்டலம்பான்
மதியினாற்பொலிவுற்றவாமென்னவன்சரயு
நதியினாற்பொலிவுற்றதுகோசலநாடு. (௩)

கருவிவான்முகில்கனேகுரற்சுருங்கடன்முகந்து
பருவமாறிடாதுதவமான்பல்வளமபழுத்த
சரயுநாடெனுந்தமனியமதாணியினடுவ
ணரியமாமணிபோன்றுளதயோத்திமாநகரம். (௪)

வேறு.

பேரினிற்சிறந்ததுசிவனெனும்பெயா
நீரினிற்சிறந்ததுதேவதீர்த்தநீ
ரூரினிற்சிறந்துளதொப்பின்மாண்புக
ழேரினிற்சிறந்தசீரயோத்தியென்பவே. (௫)

அன்னதொன்மாநகரரிவையா ...ப்
பொன்னிவர்மங்கலமபோற்பொலிந்துளா
ஞென்னலராவியுண்டுதிரநீருமிழ்
மின்னவிர்கொடுஞ்சுடர்விரவேலினான் (௬)

உவர்படுகடலுடைத்தொழுகுநீரென
கவுண்மடைதிறந்திழிகடாகளிற்றினான்
குவிதிமிலேறுயர்கொற்றமாகொடிச்
சிவனடிவாரிசமலர்ந்தசிந்தையான். (௭)

வெண்டிருநீற்றொளிவிளங்குநெற்றியா
ணெண்கலையாவையுமுணர்ந்தவோதியான்
றண்குடைநீழலிற்றாழ்கருங்கடன்
மண்குளிர்செய்தருண்மன்னர்தம்பிரான். (௮)

மாறிலாநாவலர்வறுமைவெந்தழ
லாறமாரிதிமழைபொழியுமங்கையான்
கூறுசீரிரவிதன்குலத்திற்றோன்றினான்
சீறுமாமதகையஞ்சிங்கவேறனான். (௯)

கலினவாய்க்கடும்பரிகறங்குதேரினன்
சிலைமுதற்படையெலாம்வடித்தசெய்கையா
னொலிகடற்றானையானேதுநூன்முறை
மலிதழற்பல்வகைமகங்களாற்றினான். (௧௦)

சரணெனவந்தவர்தம்மைத்தாங்கியாங்
கருள்புரிந்தோம்பியேயளிக்குமன்பினான்
வரிதருபுலியொடுமானினத்தினை
யொருதுறைதன்னினீரூட்டுமாலையான். (௧௧)

திகழ்தருமிருநிதிச்செல்வவேந்தனின்
மிகுபெருந்திருவொடுவிளையகுராசியான்
சகமுதலுலகெலாந்தாவிமாண்புசால
புகழெனுங்கஞ்சுகம்போர்த்தபொற்பினான். (௧௨)

வேறு.

பூமகளும்வாகைகெழுபொங்குமரிமாதூர்
மாமகளும்வெண்ணிறமடற்கமலம்வாழு
நாமகளுமேவுதிரிசங்குவெனுநாமக்
கோமகன்மறம்படுகொடுங்கலிகடிந்தோன். (௧௩)

அந்தணராயாதிவருணத்தரறனோடு
தந்தமரபின்முறைதவாதுபொலிந்தோங்கச்
செந்திகிரியெண்டொகையதிக்களவுசெல்ல
விந்திரனெனத்தனியிமைத்தரசிருந்தான். (௧௪)

அறந்தலையெடுப்பமிகுபாவமழிவெய்த
மறம்படுகளிற்றுவயமன்னர்திறையுய்ப்ப
நிறைந்தமுனிவோர்தவநெடும்பயிர்தழைப்பச்
சிறந்தபுகழாளரசுசெய்துறையுநாளில். (௧௫)

அருந்தகையகற்புடையருந்ததியெனும்பேர்
மருந்தினைமணந்தருள்வசிட்டனெனுநாமத்
திருந்துதவமாண்பினுயர்தேசிகன்முனெய்தி
யிரும்புவனிமன்னவனிறைஞ்சியிதிசைப்பான். (௧௬)

வேறு.

எந்தைநின்றிருவருளினாலியாவருமெய்தா
கந்துருவளனியாவையுநண்ணினனவைதீர்
சந்தநான்மறைக்குரவயானிவ்வுடறன்னோ
டந்தவானுலகடைந்திடவேணவாவடைந்தேன். (௧௭)

அடைந்தவென்னவா முற்றிடவரியதோர் வேள்வி
தொடங்கியாற்றிட வேண்டுமென்றிறைஞ்சியே தொழலு
மடங்கலேறனுன் மலர்முகநோக்கியே மறையுட்
கிடந்தநுண்பொருளுணர் முனிவகைத்திவை கிளப்பான். (கஅ)

ஈசனோதிய மறைகளிலிறைவ நீயின்று
பேசுமாமகங் கண்டிலமென்றனன் பெரியோன்
வீசுசெஞ்சுடரிரவிதன் குலத்தினில் வேந்தன்
தேசிகன்றனை வணங்கியே பின்னருஞ் செப்பும். (கக)

ஐயநீயறியாததொன்றில்லை நீயனைத்தில்
செய்யவேண்டிடின் முடிந்திடாச் செய்கையொன்றில்லை
மையில்காட்சியாய் நின்னுடை மாதவத்திறத்தாற்
றுய்யவேள்வியொன்றிழைத்தருளென்றெதிர் சொற்றான். (உ0)

அரசன் வேண்டியாங்கறைதலும் பின்னருமறுத்தாங்
குரிய தேசிகனுரைத்தனனுரைத்தலுமிந்தக்
கிருதுவேறொருருவற் கொடுசெய்திடக் கேடில்
கருணை கூர்ந்தினி திசைத்தருள் கருதருந்தவத்தோய். (உக)

என்றிசைத்தலு முனிவரனினிதெனவிசைந்தான்
வென்றிவேந்தனும் விடைகொடு நீங்கியம் முனிவன்
றுன்றுமாதவ மைந்தர் நூற்றுவரொடிர்துன்னி
நின்றுபோற்றியாங் கெண்ணியநிகழ்த்தினனன்றே. (உஉ)

நிருபரோறஞ்ன் மகத்தொழினிகழ்த்திடக் கேட்ட
வரியமைந்தருந் தந்தைபோலறைந்தனராங்குத்
தரணிவேந்துமத் தந்தையோடுரைத்தவை சாற்ற
வெரியில் வெஞ்சினமெய்தியே புலையனுகென்றான். (உங)

என்றகாலையி லெரிதருமிருந்தழல்கதுவ
மன்றனாறுசெஞ் சந்தனவடிவெலாங் கருகி
நின்றவாறுபோற் கரும்புலைவடிவொடு நின்றான்
வென்றிமாற்றலர் குருதிகொப்பளித்திடும் வேலான். (உச)

இரவிதன்வழித் தோன்றியே மகம்பலவிழைத்து
விரதமெண்ணிலவாற்றிமாமனுமுறை விளக்கித்
தரைபுரந்த செங்கோலினன் புலையுருச்சார்ந்தா
னரணதாணையின் றன்மையையாவரோயறிவார். (உரு)

வேறு.

கலைநிறைமதியின்மாட்டுக்களங்கம்வந்துற்றதென்னப்
புலனிறைபுனிதவேந்தன்புன்புலைபுணர்ந்தகாலை
நலனிறைகற்பினாளைநாணிலானீத்ததன்றாலென்ன
மலர்தருதெய்வத்தேசுமன்னனைப்பிரிந்ததன்றே. (௨௬)

திருந்தியதேசுநீங்கித்திப்புலைசேர்தலோடும்
வருந்திவெய்துயிர்த்திரங்கிவாய்புலர்ந்தறிவுமாழ்கி
யெரிந்தகொல்லுலைவெந்தீயிலிடுமெழுகென்னயாக்கை
கரைந்தனன்கரையிலாதகவலையாங்கடலுட்பட்டான். (௨௭)

கவலையாங்கடலுட்பட்டகடாமுகக்களிற்றுவேந்தன்
றவலருஞ்சிறப்புத்துப்பிற்பவளவொள்வாய்நாகம்வௌவ
நவைதவிரொளிபோய்ச்சோர்ந்தஞாயிறுபோலச்சோர்ந்தாங்
கிவையிவைதனதுநெஞ்சத்தெண்ணியேயிரங்கலுற்றான். (௨௮)

மறகுறுமன்னரொன்னார்பட்டியால்வளமைசான்ற
வறப்பயிரழிந்திடாமலாணையாம்வேலிகோலிச்
சிறைக்கொடும்பாவமென்னுந்தீயவெங்களைகளைந்து
பொறைப்பெருந்தண்ணீர்தேக்கியாரினிப்புரப்பரொன்னும். (௨௯)

கருணையாமழைபொழிந்துகருங்கலிவெம்மையாற்றிப்
பொருவருமனுநூல்வாய்மைபோற்றுவார்யாவரொன்னு
மிருளிலாமுனிவர்தங்கடவத்தினுக்கிடையூறெய்தா
தருளினாலினிதுகாத்தியசளிப்பவர்யாவரொன்னும். (௩௰)

செப்பரும்பிரமமாதிதிருத்தகுவருணநான்கி
னொப்பருமொழுக்கங்குன்றாதோம்புவார்யாவரொன்னு
மைப்படிகண்டர்பூசையாகமவழிநடாத்தி
மெய்ப்படுமன்பிற்போற்றவிருப்பினர்யாவரொன்னும். (௩௧)

செய்தழல்வேள்விதன்னாற்றேவரைமகிழ்வுசெய்தாங்
கெய்தியதிங்கடோறுமீர்ம்புயன்மூன்றுமாரி
பொய்தவிர்வளங்கள்பூப்பப்பொழிவிப்பார்யாவரொன்னும்
வைதிகசைவநீதிவளர்ப்பவர்யாவரொன்னும். (௩௨)

எம்பெருஞ்சுற்றமேங்கியிரங்குமேயெனவிரங்கும்
வெம்பகைவேந்தர்யாருநகைப்பரோயெனவெதும்பு
நம்பியநகரமாக்கணைவரோயென்றுளையுஞ்
செம்பொருணவலோர்கடிகைப்பரோயெனத்திகைக்கும். (௩௩)

வேறு.

என்றிரங்கியேயிறையவன்றன்மனையெய்தி
யொன்றுசுற்றமற்றவர்க்கெலாநிகழ்ந்தவாறுரைப்பத்
துன்றுதீப்படுதெளிரொனவாடினர்சோர்ந்தார்
மன்றவெந்துயருழந்தனரிரங்கினர்மாதோ. (௩௪)

இரங்கியெய்தியபுரோகிதரமைச்சரீறில்லா
நெருங்குசுற்றமற்றவர்தமைநோக்கியேநீவிர்
வருந்தலீரொனத்தேற்றியேமற்றவர்தம்மோ
டரங்கொல்வேலினனின்னலோடின்னணமறைவான். (௩௫)

ஊனவெம்புலியுருவமதடைந்தயானுவரி
மாநிலம்புரந்துறைவதுமரபுமற்றன்றால்
யானுகந்தருளொழிலரிச்சந்திரனென்னு
மேன்மைசான்றமாமைந்தனைமணிமுடிமிலேச்சி. (௩௬)

ஞாலமங்கைதன்றுயரொழித்தறநெறிநடாத்திச்
சாலமன்பதைதாங்குமினென்றருள்சான்ற
சீலமார்தருகட்டுரைசெப்பிமற்றவரை
மாலைவேலினனிறுவியேநீங்கினன்வனத்தில். (௩௭

வேறு.

வனத்தினின்மன்னனேகமாசிலாவடமீனன்ன
தனிப்பெருங்கற்பின்மிக்கமனைவியர்தனையர்தாவா
வினத்தவரமைச்சர்மற்றோரியாவருமாயைநீங்கும்
புனிற்றிளங்கன்றுபோலப்புலம்புகொண்டிரங்கிச்சோர்ந்தார். ()

போர்மகளிதயஞ்சாலப்புழுங்கினள்பொருநீராடைப்
பார்மகடனதுநெஞ்சம்பதைத்தனள்செய்யதோட்டு
வேரியங்கமலையாகம்வெதும்பினள்வெள்ளைக்கஞ்ச
வார்குழன்மாமடந்தைமனமிகமெலிந்தாண்மாதோ. (௩௯)

காவலன்வனத்தினேகக்கடிமதிலயோத்திமூதூர்
பூவலரலங்கன்மொய்ம்பிற்பொருசிலைமதுகைவாகைத்
தாவறுபுகழின்மிக்கதசரதன்மதலைகாணின்
மேவியநாளிற்சாலவெந்துயருழந்ததன்றே. (௪0)

துயரிருங்கடலிலாழ்ந்தவமைச்சருந்தொன்மைசான்ற
வுயர்பெருஞ்சுற்றத்தோருமொருவகைதேறியோவாப்
புயலுறழ்தடக்கைவாய்மைபுகலரிச்சந்திரப்பேர்
வயமிகுவேலினற்குமணிமுடிபுனைந்தார்மாதோ. (௪௧)

மாலைதாழ்முடிபுனைந்தமாமருந்தனையமைந்த
னூலின்விழாலைத்தாங்குமுறையெனவரசுதாங்கிக்
கோலினாலறந்திருத்திக்குடையினாற்குளிர்ச்சிசெய்து
வேலினாற்பகைதுரந்துமேதினிபுரந்தானன்றே. (௪௨)

தருமமோர்வடிவந்தாங்கித்தமனியமுடிபுனைந்தாங்
கரியணைமேவிச்செங்கோலரசுசெய்தமர்ந்தானென்னப்
பொருகடலாடைவையம்புரவுபூண்டினிதிருந்தான்
றிருமகனவனைத்தந்தோன்செயன்முறைசெப்பலுற்றான். (௪௩)

வேறு.

கொடிநுடங்கியபுரிசைமாநகர்நீங்கியேகியகொற்றவ
னெடியகுன்றுபல்கானியாறுநெருங்குகல்லதரத்தநீ
ளடவிபல்லவளங்கொடேயமகன்றுபோகியகன்றுறைக்
கடிநறும்புனலலைமுழங்கியகங்கையாறுகடந்தனன். (௪௪)

கங்கையாறுகடந்துபோகியகாவலன்கதுவும்புகை
பொங்குதீயழனிலமங்கைதனுடல்பிளந்துபுகுந்துகீழ்ச்
செங்கணாகருடம்புவெந்துகரிந்திடத்திருகிச்சுடும்
வெங்கடும்பரல்வேனில்வன்சுரவிந்தநீள்வனமேயினான். (௪௫)

விந்தநீள்வனமேவிவெந்துயரவேனிலாழுடல்வெம்பியே
யிந்தமாநிலமுழுதுமன்னிழலிட்டவெண்குடைமன்னர்கோன்
வெந்துகாலிணைநொந்துநாவுமுலர்ந்துசாலமெலிந்தனன்
சிந்தைசெய்வர்கொலுலகவாழ்வினைநிலையெனுவுயர்சீரியோர். ()

கருதினுஞ்சுடுவேனில்வெஞ்சுரவிந்தவெல்லைகடந்துசீர்
மருவுமத்திமநாடகன்றுவயற்புறத்தலர்வனசமேய்
குருகுறங்குமிலாடநாடுதணந்துகோசலநாடர்கோ
னிளைகொள்வண்டினைசோலைமாளவதேயங்ளிடைநீங்கினான். ()

மாளவப்பெயர்நாடுநீங்கிவயங்குகுச்சரநாடுதிண்
தாளரிக்கிணைதந்தமொய்ம்பினலங்கல்வெஞ்சுடர்வேலினு
னீள்வளத்துயர்கருநடப்பெயர்நாடுநீங்குபுநீர்வயற்
றூளுடைக்கமலங்கணூறுதெலுங்கநாடுதணந்தனன். (௪௮)

தெலுங்கநாடுதணந்துசெய்யசெழுங்கதிர்க்குலமேவுசீ
ரலங்கன்மாலையலங்குமார்பனலம்புபாற்கடலஞ்சுவை
மலிந்ததெள்ளமுதம்பயந்தெனமதுரமூறியவண்டமிழ்
நலங்கொளின்சுவைதந்ததென்றிருநாட்டினெல்லையைநண்ணினான்.

றியதண்டமிழ்நாட்டினெல்லையைநண்ணுபுண்ணியநன்மையாற்
றுறைகொளாயிரமுகமுடைச்சுரநதிநெடுஞ்சுரிதிரையின்மேற்
லிறைதவழ்ந்துலவுஞ்சடைப்பெருமானுகந்துறைபீடுசான்
மறைவனந்தனில்வந்தனன்கதிர்வானவன்குலம்வந்தவன். (ருo)

மறைவனந்தனில்வந்தடைந்துமதிக்கொழுந்தணிவள்ளறூ
ணறைமலர்ந்தசரோருகத்துணைநன்மனத்திலிருத்தியே
நிறைபெருந்தவமாற்றிநாடொறுநீடுகோசிகன்மேவுசீ
ரறமலிந்துளபன்னசாலையினயலடைந்தனனரசர்கோன். (ருக)

வேறு.

அடைந்துதன்பெயருமடைந்ததன்குறையுமறைந்துதாழ்ந்தெ ழுந்துகைகூப்பி, யிடைந்துநைந்தடைந்தேனென்றனைக்காக்கவெ ண்ணம்வைத்திடுமெனவறையப், படர்ந்தமின்சடையான்கௌசிக னருள்கூர்பார்ந்திபன்முகமலர்நோக்கிக், கடந்தமாமறைநூலுணர் ந்தநின்குரவர்கருதியேயளித்திடுஞ்சாபம். (ருஉ)

அஞ்சலென்றருள்கூர்ந் தருந்தவமுனிவ னரசனைநோக்கி யிச் சாப, வெஞ்சிறைப்பிணிநோயுலகின் மேலுள்ளமேதகுதீர்த்தங்கள் பாவு, நெஞ்சுறு விருப்பாற் படிந்திடல் விண்டு நீங்கிடுநீங்கிய பின் றை, யெஞ்சலில் வளத்தின் வானநாட்டென்னை யாக்கையோ டேற்று துமிறையோய். (ருந)

என்றினிதுரைத்தாங்கிரும்புனற்றீர்த்த யாத்திரைச்கேகெனப் பணிப்ப, நன்றெனவணங்கிஞானமாமுனியைவிடைகொடுநரபதி நீங்கிச், சென்றுதின்புவிமேலியாவருமேத்தத்தேவுசால்சிறப்பொ டுந்திகழ்ந்து, துன்றிசைபடைத்ததுகளறுதீர்த்தம்யாவையுந்தோய் ந்தனன்பன்னாள். (ருச)

கங்கைகாளிந்தி நன்மதைவாணி கௌதமை தடம்பிரயாகை, துங்கபத்திரிதண்சோணைதென்சேதுத் துறைத்தனுக்கோடியேமு தலாம், பொங்குநற்றீர்த்தம்யாவையும்படிந்தும்புலையுருவகன்றிடா த்திறத்தாற், செங்கைவேலரச னின்னலுற்றழுங்கிச் சென்றனன் கோசிகன்றிருமுன். (ருரு)

சென்றெதிரிறைஞ்சிச்செயன்முறைசெப்பத்திருமுனிசிவனடி யுளத்தி, ஞென்றுறவிருத்தியிருந்துசில்பொழுதிவ்வூர்வடமேற்றி சையாரு, நென்றுருநகருண்டங்நகர்ப்புற்றினிடத்தெழுமெய்ம்மி

ராஜுகந்த, பொன்றிகழ்கோயிற்குடபுலத்துளதோர்புதுமதுப்பூம்
புனற்பொய்கை. (௩௯)

வேறு.

உலகெலாமதனைத்தேவதீர்த்தமென்றுரைக்குமந்த
மலர்கொணீர்வாவிமூழ்கின்மாசிதுகழியுமென்னப்
புலமைசான்முனிவன்கூறிவிடுத்திடப்பொருவேன்மன்னர்
திலகமேயனையான்செலவத்திருவாரூர்மாலைசேர்ந்தான். (௩௭)

திருவளராரூர்மெய்திச்செழுமலர்த்தேவதீர்த்தம்
பரிவொடுபடிந்துவேந்தன்பரிசனவேதிநன்றும்
கருநிறவிரும்புசெம்பொனுகியகாட்சியென்னப்
பொருவருங்காமர்தெய்வப்பொங்கொளிவடிவம்பெற்றான். (௩௮)

அலகிலாவைகலாழியகன்கடலுடுத்தவிந்த
நிலமிசைநிறைந்ததீர்த்தமுழுவதுமூழ்கினீங்காப்
புலைவடிவொருகான்மூழ்கப்பொருங்கெனப்போயிற்றென்றான்
மலர்கமழ்தேவதீர்த்தப்பெருமையார்வகுக்கவல்லார். (௩௯)

பொன்பொலிகாமர்தெய்வப்பொருவருமுருவம்பெற்ற
மின்பொலிமதுகைவாகைவீரவெள்ளிலைவேல்வேந்தன்
கொன்பொலிசூலபாணிகோதிலஞ்செழுத்துக்கூறி
நன்பொலிநீறணிந்துநவைதவிர்நியமமுற்றி. (௪0)

வாவியைவலஞ்செய்தேத்திவணங்கியேமலர்க்கைகூப்பிப்
பூவுறைகடவுளாதிப்புங்கவர்பூசைசெய்த
தேவர்கடேவன்செல்வதிருவாரூர்ச்செம்பொற்புற்றின்
மேவியவிமலமூர்த்திவியன்மணிக்கோயில்புக்கான் (௪௧)

வியன்மணிக்கோயில்புக்குவெயில்பரந்திமைக்கும்வைவேற்
புயலுறழ்தடக்கைவேந்தன்பொன்புணர்மார்பப்புத்தே
ளுயிரொடுதலைபெற்றுய்வானொருபெரும்புற்றிற்றோன்றும்
வயமிகுமழுவலத்துமாசிலாமணியைக்கண்டான். (௪௨)

வேறு.

கண்டான்விழிகுளிர்ந்தானகங்களித்தான்வினையனைத்தும்
விண்டான்புலனென்றுயினனின்பத்தெளிவேரி
யுண்டானுணர்விழந்தான்செயலொழிந்தானுடல்புளகங்
கொண்டான்குழறுற்றான்மொழியுவகைக்கடல்குளித்தான். (௪௩)

ஆழ்ந்தானுவகைத்தண்கடலழல்வாய்மெழுகானான்
சூழ்ந்தானிருடொலைத்தானிறைதொலையாவளனெய்தி
வாழ்ந்தான்றனியானந்தமழைத்தாரைபொழிந்தான்
றாழ்ந்தானினிதெழுந்தான்கரமுகிழ்த்தானுடறழைத்தான். (சுச)

இத்தன்மையின்வழிபாடுசெய்தீறுமுதலில்லா
முத்தன்பசுபதிநின்மலன்முன்னைப்பழம்பொருளாஞ்
சுத்தன்சிவனெனமாமறைதுதிகருந்திருவாரூர்
நித்தன்புகழெடுத்தேத்துதலுற்றானறிநிருபன். (சுரு)

மூலச்சுடரொளியேவிரிமுந்நீரொழுமுதுதீ
யாலத்தைமுனமுதாக்கியவாராவருளமுதே
மாலைப்பிறைமுடியாய்நெடுவடிமூவிலைவாகைச்
சூலப்படையானேமருடோற்றம்படையானே. (சுசு)

அலைமாகடலிடைதுஞ்சியவாழிப்படையுடையான்
றலையாருயிர்தந்தேமுனந்தலையாரருடந்தாய்
கலிவாகையதெய்தாத்திருக்கமலாலயநகராய்
மலைமாமகள்பாகாதனிமழமாலவிடைப்பாகா. (சுஎ)

மடலிற்பொலிகொன்றைப்புதுமாலைத்தொடைவனைதோட்
பொடியிற்பொலிதழற்குன்றெனப்புகழுந்திருவுருவாய்
கடலிற்செழுபூதப்படையுடையாயகடசகலுழி
யடல்வெற்புரியானேதொழுமன்பர்கசுரியானே. (சுஅ)

வடிவச்சிரப்படையான்புரிமணிப்புற்றகமருவுஞ்
சுடரிற்சுடரொளியேதனித்தொலலைப்பழம்பொருளே
கடிமட்டவிழ்மலர்தூய்த்தொழுமன்பர்மனக்கவலை
யடையப்பணியானேபடவரவப்பணியானே. (சுகூ)

முதுமாதவர்பல்லோரொடுமுனிவன்சனற்குமரன்
கதிநூன்மரபிற்பூசனைபுரியுந்துணக்கடலே
புதுமாமணங்கமழுந்துளவணியும்புகழ்ப்புத்தேள்
விதிதேடுதற்கெய்தாய்மலைவில்லாறபுரமெய்தாய். (எ0)

வேறு.

என்றினிதேத்திமுக்கணெந்தைதன்விடைபெற்றேகிச்
சென்றுயர்மறைவனத்திற்கௌசிகன்றிருமுனெய்தி
நின்றிருவருளாற்சாபநீங்கியிங்குய்ந்தேனென்று
மன்றவுண்மகிழ்ச்சிபொங்கவணங்கினான்மன்னர்மன்னன். (எக)

வணங்கியேநின்றகாலைமனமிகமகிழ்ச்சியெய்திக்
கணங்கொண்மாமுனிவர்மேலோன்காவலர்திலகனோடும்
பணங்கொள்வாளரவமார்த்தபரமனூரிற்போந்து
நிணங்கொள்வேற்கடலந்தானைநிருபனோடினையசொல்வான். (எஉ)

வேந்தநீயாக்கையோடும்விண்ணவருலகந்தன்னிற்
போந்திடவேள்வியொன்றுபுரிகுதுமதற்குவேண்டும்
வாய்ந்தமாண்பொருளனைத்தும்வருவிப்பாயெனவகுத்துச்
சேந்தபூங்கமலக்கோயிற்றிசைமுகன்முன்னன்றுசென்றான். (எங)

சென்றுயர்மகத்தின்செய்கைசெப்பியான்செய்மகத்தி
லொன்றவியென்கைவாங்கியுப்பரோ[illegible]ய்தியுண்டு
மின்றிகழ்யாக்கையோடுதிரிசங்குவிண்ணிலெய்த
வின்றருள்புரிதியென்னநான்முகனிசைக்கலுற்றான். (எச)

அழன்முகத்தன்றிவேள்வியவியுணவிமையோர்செங்
ணெழிலுடைத்தேவரோடுமியாமடைந்துண்பதின்றுஞ்
செழுநிறச்செம்பொனாட்டிலுடலொடுசேர்ந்தாரில்லை
பழையநற்றவத்தோயென்னாப்பகர்ந்தனன்பங்கயத்தோன். (எரு)

பங்கயன்மாற்றங்கேட்டப்படியறுதவத்தின்மிக்கோன்
பொங்கியசீற்றமெய்திப்பொருக்கெனவாரூர்போந்து
வெங்கண்மால்யானைவேந்தன்வேண்டியவிருப்பினுய்ப்பச்
செங்கனல்வேள்வியாங்குச்செய்தனன்செய்தகாலை (எசா)

பூவினனமரரோடும்பொங்கவிவாங்கிநுங்க
மேவிலனதனாற்சாலவெள்கிமாமுனிவெகுண்டு
தேவதீர்த்தத்தினின்றுந்தேவாதிதேவனாரூர்த்
தாவுநீர்ப்புகழினானைநோக்கியேதவம்புரிந்தான். (எஎ)

தவம்புரிந்துறையுங்காலைத்தனிமணிப்புற்றின்மேவுஞ்
சிவன்மழவிடைமேற்றோன்றததிருமுனிபணிந்தெழுந்தாங்
குவந்துளமுருகிப்போற்றிநின்றனனுவனைநோக்கி
நிவந்தெழுகருணையோடுவேண்டுவநிகழ்த்துகென்றான். (எஅ)

வேண்டியநிகழ்த்துகென்னவிதித்தொழிலளித்தியென்று
மாண்டகுமுனிவன்சொற்றான்வரமதுமகிழ்ந்துநல்கிச்
சேண்டொடுபுரிசையாரூர்ச்சிவபிரான்மறைந்தானங்குக்
காண்டகுபடைப்புச்செய்தான்கருதருந்தவத்தின்மிக்கான். (எகூ)

சுடர்விடுஞாயிறுதித்தொல்பெருங்கோளின்சூழ
லுடுகணமகவானாதியும்பர்கள்பிறவுஞ்செங்கேழ்
மடலருமலரோன்வெள்கமாமுனிபடைத்தானென்றோன்
முடிவிலானருள்பெற்றோர்க்குமுடிவுறுஞ்செயலுமுண்டோ. (௮0)

இம்முறைமுனிவன்வேறுவிதித்தொழிலிழைக்குமெல்லை
மைம்முகிலூர்தியாதிவானவர்பிறருமீண்டிச்
செம்மலர்விரிஞ்சன்முன்போய்வரன்முறைசெப்பவன்னோர்
தம்மொடுஞ்சதுமுகத்தோன்கோசிகன்முன்னர்ச்சார்ந்தான். (௮௧)

வாசவன்முதலோரோடும்வந்தமாமலரோன்சாலக்
கோசிகமுனியைவேண்டிவிதித்தொழிறவிர்த்துக்கொற்ற
வேசிலாவேந்தன்றன்னையிணைதவிர்தேவதீர்த்த
மாசறுதெய்வப்பொய்கைமரபினின்மூழ்கச்செய்தே. (௮௨)

புற்றிடங்கொண்டான்றன்னைப்பூசனைபுரிந்துபோற்றி
மற்றவனருளினாலேமன்னவர்மன்னன்றன்னைப்
பொற்றிணிவிமானமீதிற்கொண்டுபொன்னுலகிற்போந்தாங்
கற்றமில்சிறப்பின்வைத்தானம்புயனமரரோடும். (௮௩)

மலர்த்தடந்தேவதீர்த்தமணிப்புனன்மூழ்கியாரூ
ரிலைத்தனிச்சூலத்தெண்டோளீசனைத்தொழுதுதெய்வப்
பலத்தினால்யாக்கையோடுபைம்பொன்வானுலகமெய்தி
நலத்திசைவாழ்வுபெற்றானைகையொளிநாமவேலான். (௮௪)

கோசிகமுனியுமாரூர்க்குணப்பெருங்குன்றையெண்டோ
ளீசனையெம்மையாளுமிறைவனைப்புற்றிலேய்ந்த
வாசிலாவமலன்றன்னையல்லியங்கோதையோடும்
பூசனைபுரிந்துநாளும்போற்றிவீற்றிருந்தானன்றே. (௮௫)

இதமுறுதிரிசங்குப்பேரிறையவன்காதைபெறப்
பதமுறுசெவிகொடுத்தோர்பண்ணையமுறப்படித்தோர்
கதமுறுசாபமாதிக்கடியதீவினையினீங்கித்
திதமுறுயாக்கையோடுசேணிடைத்திகழ்வாரன்றே (௮௬)

திரிசங்குச்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-௧௮௬.

## இந்திரச்சருக்கம்.

சூதமாமுனிவன்பின்னருமுனிவர்தொகையினைநோக்கியித்
தடத்தை, மேதகுமகவான்றூர்த்துந்தூர்வைமீட்டுமாங்கெடுத்
ததுமிந்தச், சீதநீர்மூழ்கிப்பிரமகொலைநோய்தீர்ந்தவனுயர்க்
ததும்விரித்திங், கோதுவன்புலமையோடின்றியேகேண்மினென்றினி
தோதுதலுற்றான். (க)

வென்றிவேற்றடக்கைப்புகழ்த்திரிசங்குவேந்தர்கோனித்தட
மூழ்கிப், பொற்றிகழ்மானமூர்ந்துடலோடுமொருவரும்பொன்
னுலகடைந்த, வன்றுமுதலாயிலோயதுத்திடைமூழ்கியனைவருமடைந்துவானிடமர், நின்றிடவிருப்பதாலேயதடந்தூர்த்தான்காவினு
லிந்திரனென்பான். (உ)

வேறு.

தூயவித்தடத்தைக்காலாற்றூர்ப்பித்துமகவான்சினான்
மேயினான்மேவுமாளிலயிர்க்குலவகன்பாற்றேவி
சேயிழையிரமையென்பாடயிப்பிரீர்குலகிற்சேர்ந்தா
ளாயிரம்யாண்டுநோற்றானமாபபொருட்டானைநோக்கி (ங)

மாதொருபாகன்றோன்றமாதவமாதைநோக்கி
யாதுநீவேட்டதென்னவிறைமுநிகோன்மறையுந்தேர்ந்து
மேதகுமகங்களாற்றிவெம்படைகலத்திலவீயா
தோதுமூவுலகையாளுமொருமகற்றருதியென்றாள். (ச)

வரமதுநல்கியெங்கமறைந்தனன்மறைந்தகாலைப்
பரிவொடும்போற்றிமுக்கட்பரமனைமனத்துட்கொண்டு
தெரியிழைதனதில்லப்திச்சிலபகலபோயபின்னை
யொருபெருமகனைத்தந்தாடயிந்தியர்குலங்களுய்ய. (ரு)

பெருமகனுதித்தவேலைப்பெருங்கிளைமுதலோர்யாரும்
விரவினர்மகிழ்ச்சிபொங்கிவிருத்திராசுரனெனும்பேர்
மரபொடுபுனைந்தார்மைந்தன்வளர்மதிபோல்வளர்ந்து
பரிதியினொளிதழைத்துப்பன்னிருபருவமுற்றான். (சு)

பருவமற்றதனின்முன்னூன்முதலியபான்மையெல்லா
கிருதர்தங்குரவன்செய்தாணின்மலன்வரத்தான்மைந்த
னருமறைமுழுதுமாய்ந்தாங்கடைபடைவிஞ்சையாவும்
புரையறத்தெரிந்துவீரம்வலியினாற்பொலிந்தானன்றே. (எ)

வலியொடுவீரம்பூத்துமகம்பலவாற்றிமைந்த
னிலவுறுநாளிலெண்ணினிருதர்வந்தடைந்தாரன்னோர்
பலரொடுமெழுந்துவெம்போர்பயின்றடன்முருக்கிஞாலத்
திலகுவேற்றானைமன்னரியானையுமிமைப்பில்வென்றான். (அ)

வென்றுயர்வாகைசூடிமேதினிமுழுதுங்கைக்கொண்
டொன்றியதானையோடுமொல்லைவெழுந்துபோகித்
துன்றுபாதலத்திலுள்ளோராயானையுந்துரந்துவாட்டி
மன்றவேவெற்றிகொண்டுவானவருலகிற்போந்தான். (கூ)

வானநாடதனிற்கொற்றவலம்படுதானைசுற்றத்
தானவர்தலைவனுற்றகாலையிற்றவளயானைக
கோனடலமரரோடுங்கொடுஞ்சினந்திருகிநேர்ந்து
மீனெறிகடல்போலார்த்துவெஞ்சமர்விளைத்தானம்மா. (கo)

அஞ்செனுமாயிரம்யாண்டஞ்சனமேகவூர்தி
வெஞ்சினந்திருகிநேர்ந்துவிருத்திரனுடன்போராற்றி
யெஞ்சியேவலியிழந்தாங்கிரிந்துசிலமரரோடுங்
கஞ்சமாமலரிருக்கைக்கடவுடனுலகிற்போந்தான். (கக)

தன்பெரும்பதியும்விட்டுத்தனியரசிழந்துதாவா
வின்புறுதிருவுநீங்கியின்னலங்கடலுளாழ்ந்தான்
கொன்பெருங்குலிசவேந்தன்குளிர்தடந்தூர்த்துளோர்க்கு
வன்பெருந்துன்பம்வந்துசூழ்ந்திடலவழகேயன்றே. (கஉ)

போர்வலியழிந்துசாய்ந்துபுரந்தரன்போயபின்னை
சீர்கெழுதிருவின்மிக்கசெம்பொனூடனைத்துங்கைக்கொண்
டார்கலியடக்குஞ்சும்மையவுணர்தந்தானைசூழ
வீரவேலவுணனுங்குவீற்றினிதிருந்தானன்றே. (கங)

வேறு.

விண்ணொடுபாதலம்வேலைசூழ்தரு
மண்ணகமூன்றிற்குமன்னனாகியே
யண்ணலந்திருவொடுமவுணர்நாயக
னெண்ணரும்பல்பகலரசிருந்தனன். (கச)

மறைமுறையெண்ணிலாமகங்களாற்றியே
யிறைமுறையுலகெலாஞ்செலுத்தியீறிலா
நிறைபலவளத்தொடுநிகரில்வென்றிசா
லறைகழல்விருத்திரனமருநாளினில். (கரு)

புகரெனுங்குரவன்முன்போந்திறைஞ்சியான்
மிகுபுகழயன்பதிமேவியாங்குறை
மகபதிதனதுயிர்மாற்றிடும்வகை
நிகரிலாய்நிகழ்த்தெனநிகழ்த்துவானரோ. (கசு)

சுருதியானுலகினிற்றன்னுமாறனைக்
கரிதுகாணென்றனனமரர்கோனவண்
மருவுமாறெவனெனமன்னன்கேட்டனன்
குரவனுங்கவற்கெதிர்கூறல்மேயினன் (கஎ)

வாசவனைமிசவனத்தின்பாங்கரி
லாசிலாமாதவமாண்டொராயிர
மீசனைநோக்கியாங்கியற்றியெய்திய
தேசுறுவரத்தினல்யாண்டுஞ்செல்வனால். (கஅ)

அம்முறைநீதவமாற்றியெய்தனு
மிம்மெனவேகிடப்பெறுவையென்றனன்
மெய்ம்மொழிவினையதற்கிசைந்துவேந்தர்கோன்
கொம்மெனநல்விடைகொண்டுநீங்கினன். (கக)

நீங்கியேநைமிசப்பெயர்கொணீள்வனப்
பாங்கரினெய்தியேபனிநிலாமதி
தாங்கியசடையினன்றன்னையுன்னியே
யோங்கருமாதவமுஞற்றினனரோ. (உ0)

வேறு.

மாதவம்புரிந்துறையுநாள்வாசவன்முதலோர்
போதினன்றனையடைந்துமற்றித்திறம்புகன்றார்
வேதன்மற்றவர்தம்மொடுவிண்டுவையெய்தி
யோதினன்விருத்திரன்செயலோதியகாலை. (உக)

மாயனேதுவான்மற்றவன்படையினன்மாயா
னாயகன்புரிவரத்தினனற்றவத்ததீசன்
றாயவென்பினைக்குலிசமாச்செய்துமேற்றாண்டிற்
றீயதானவன்வாழுநாளக்கணந்தீரும். (உஉ)

ஐம்பதிற்றுநான்முழமுளதன்னவனென்ப
தும்பர்தம்பொருட்டளிப்பனென்றுரைத்தனனும்பர்
தம்பெருந்தனிக்காவலன்விடைகொடுதனிபோய்ச்
செம்பொருட்டிருமறையுணர்ததீசன்முன்சென்றான். (உங)

சென்றுபோற்றலுஞ்சிவபிரானன்பரிற்சிறந்த
குன்றமன்னமாதவமுனிகுளிர்முகமலர்ந்து
மன்றலந்தொடைமகபதிவந்தவாறெவன்கொ
லென்றகாலையிலெய்தியகாரியமிசைத்தான். (௨௪)

வேறு.

மின்செய்முகிலூர்வேந்தனுரைவினவிமுனிவன்மிகமகிழ்ந்து
பொன்செய்தெய்வத்திருமேனிபுணர்ந்தவென்புபுரிந்தளித்தே
யன்பிலாதாரெல்லாருந்தமக்கேயுரியரன்புடையா
ரென்புமுரியர்பிறர்க்கென்னுமிசைநூலவாய்மையிசைநிறுத்தான்.

வேறு.

விடலருந்தவத்தின்மிக்கமெய்யுணர்முனிவர்மேலோன்
படிமுதலுலகிலுள்ளபல்வகைப்பொருள்களன்றி
யுடலொடுபுணர்ந்தவென்பையுகந்தினிதளித்தானம்மா
கொடைமடம்பட்டுளோர்கள்கொடுத்திடற்கரியதுண்டோ. (௨௬)

அன்புருக்கொண்டதெய்வவருந்தவமுனிவனீந்த
வென்பினைக்குலிசமாகவிழைத்துவானிமையோர்செம்மல்
புன்புலப்பகைகடந்துபுரைதவிர்தவத்தில்வைகு
மின்படைத்திலங்கும்பைம்பூண்விருத்திரன்மேல்விடுத்தான். ()

நெஞ்சுறுமுணர்ச்சிநீங்கித்தவத்துறைநின்றான்மீது
வஞ்சமாப்பின்னரேகிமறைந்துவானவர்கோனென்பி
னெஞ்சலில்குலிசந்தன்னையெறிதலுமிமைப்பிலாவி
துஞ்சினனிமையோர்தங்கடுயரெலாந்துஞ்சமாதோ. (௨௮)

துஞ்சியதறியான்காலத்துண்ணெனத்துளங்கியேங்கி
நெஞ்சகம்பதைபதைப்பநெட்டுடலவெயர்வுபொங்க
வஞ்சியேயலமந்தோடியாழியினடுவணங்கோர்
மஞ்சிவர்மலைமுழைககண்வாசவன்மறைந்துறைந்தான். (௨௯)

உறைந்திடுகாலைமேகவூர்திபான்மறைநூலோதி
யறங்கெழுமெண்ணில்வேள்வியாற்றியவவுணன்றன்னைச்
சிறந்தநோன்பியற்றுமெல்லைவஞ்சித்துக்கொன்றதீங்கான்
மறங்கெழுபிரமகத்திவல்விரைந்தணைந்ததன்றே. (௩௦)

பிரமவெங்கொலைப்பேய்சார்ந்துபிடித்ததோர்காலைமேனி
கருகியேபொலிவுமாழ்கிக்கறங்கெனநெஞ்சங்கொட்புற்
றிருணுறுமுழைக்கணுற்றானிந்திரனந்தோவஞ்சித்
தொருவருக்கூறுசெய்தோர்க்கூறுவந்துற்றிடாதோ. (௩௧)

இன்னல்கொண்டிமையோரேந்தலிருண்முழையிருந்தவெல்லை
பொன்னிவர்கமலமேலோன்புங்கவரோடும்போந்தா
னன்னவன்றனைக்கண்டஞ்சியணைந்திடாதகலநின்றான்
மின்னவிர்குலிசவேந்தன்விரிஞ்சனைநோக்கிச்சொல்வான். (கஉ)

அணைந்திடாதகலநின்றதென்னெனவருந்தவத்தி
னணைந்துறைவிருத்திரப்பேரவுணனைக்கொன்றதீங்கா
லணைந்ததுபிரமகத்திநினதுபாலதனுனின்னை
யணைந்திடாதகலநின்றேமென்றனனம்புயத்தோன். (கங)

விருத்திரனிறந்தானென்றுவிளம்பியமாற்றங்கேட்டுக்
கருத்திருளச்சநீங்கிக்கடவுளர்தலைவன்றேறிச்
செருக்களத்தெண்ணிலாதவவுணரைச்செகுத்தேன்முன்னாள்
வருத்துறுபிரமகத்திவந்தெனைத்தொடர்ந்ததின்றால். (கச)

இன்றிவன்றனைவதைத்தேற்கிப்பழிவந்ததென்கொன்
மன்றலங்கமலத்தண்ணல்வகுத்துரைசெய்வாயென்றுப்
பொன்றிகழ்நாடர்கோமான்புகன்றனன்புகலக்கேட்டு
மின்றிகழ்மருங்குல்வாணிகொழுநன்மற்றிவைவிளம்பும். (கரு)

முன்னநீயமரிலேற்றுமுருக்கியவவுணர்போல
வுன்னலையிவனைவேதமுழுவதூஉமுணர்ந்தமேலோன்
பன்னருந்தவத்தின்மிக்கோன்வேள்விகள்பலபுரிந்தோன்
மன்னுமஞ்செழுத்துமுன்னுமனுவெலாம்பயின்றநாவான். (கசா)

இப்பெருந்தன்மைசான்றவிவன்றனையமரிலன்றி
மெய்ப்பெருந்தவத்தில்வைகும்வேலையின்மறைந்துகொன்று
யப்பெருந்தீங்காலுன்னையடைந்ததுபிரமகத்தி
மைப்பெரும்புயலூர்மன்னுவென்றனன்மலரின்மேலோன். (கஎ)

மறையவன்மாற்றங்கேட்டுமனமருண்டிதனைமாற்று
முறைபகரென்றபோதுமூதுசாலுலகிலுள்ள
நிறைபுனலனைத்துமூழ்கநீங்குமென்றுரைப்பவாங்கே
யிறையவன்விடைபெற்றேகியிரும்புனல்யாவுந்தோய்ந்தான். (கஅ)

இரும்புனல்யாவும்பன்னுண்மூழ்கியுமிமையோரேந்தல்
பெரும்பவமகன்றிடாததன்மையாற்பீடையெய்தி
வருந்தியோர்மலையிலேறிமண்ணில்வீழ்ந்தாவிமாய்ப்பான்
றெரிந்துளந்துணிந்தவெல்லை சிவபிரானருளினாலே. (ககூ)

இந்திரகேட்டிநீமுன் றூர்ப்பித்தவினையிலாரூர்ச்
செந்திருவிரும்புந்தேவதீர்த்தத்தைவெளிசெய்தந்தப்
பைந்தடப்புனலின்மூழ்கிற்பழியிதுநீங்குமென்று
வந்தரவாணிகூறக்கேட்டனனமரர்கோமான். (௪௦)

கேட்டலுமுவகைபொங்கிக்கிம்புரிக்கோட்டுவெள்ளை
மோட்டுயர்களிற்றுவேந்தன்முகமலர்ந்தெறிநீர்ப்பொன்னி
நாட்டினுக்கணியாய்வைகுநம்பனூரினையண்ணித்
தோட்டலர்கமழுந்தேவதீர்த்தவாவியினைத்தொட்டான். (௪௧)

தொட்டெழிறிருத்தியந்தத்தூயநீர்தோய்ந்தவெல்லை
கிட்டியபிரமகத்திகெட்டதுகெட்டகாலைக்
கட்டழல்கதுவும்பேழ்வாயக்கரியமாநாகநகவ்வி
விட்டதோர்பருதிபோலவிளங்கினன்விண்ணின்வேந்தன். (௪௨)

வேந்தனுங்ககமகிழ்ந்துவிமலவெண்ணீறணிந்து
வாய்ந்தநன்னியமமுற்றிவாவியைவலஞ்செய்தேத்திப்
பூந்தடம்பொழில்சூழாரூர்ப்புற்றிடங்கொண்டுவைகு
மேந்திளந்திங்கண்மௌலியிறையவன்கோயில்புக்கான். (௪௩)

கோயிலினெல்லையெய்திக்குருமணிப்புற்றின்மேவு
நாயகன்றன்னையன்னாவின்றநூல்விதிவழாமற்
றூயமாண்பூசையாற்றித்தொழுதுளமுருகிச்சூழ்ந்து
நேயமோடங்கைகூப்பிநின்றெதிர்போற்றலுற்றான். (௪௪)

வேறு.

அமுதூணமரர்க்கருளும்மழியா
நிமலாகலிவந்தடராநிலைசால்
கமலாலயம்வாழ்கருணைக்கடலே
தமியோர்துணையேசரணஞ்சரணம். (௪௫)

பொன்னைத்திலகும்புரைதீருருவாய்
சென்னிப்பிறையாய்தேவாசிரய
மென்னப்புகலுமிசைமாநகரந்
தன்னிற்பொலியுந்தலைவாசரணம். (௪௬)

பண்ணார்குதலைப்பவளத்துவர்வாய்ப்
பெண்ணாயகிபங்குறையும்பெருமாள்
கண்ணார்நுதலாய்களிவண்டறையுந்
தண்ணாரிதழித்தாராய்சரணம். (௪௭)

## இந்திரச்சருக்கம்

விடையாய்சரணம்விரியுந்திசையா
முடையாய்சரணமொலிநீருலவுஞ்
சடையாய்சரணந்தழல்வீரமழுப்
படையாய்சரணம்பரமாசரணம். (௪௮)

வேறு.

எனமுறைதொழுதுபோற்றியெம்பிரான்கருணையெய்திப்
புனிதநல்விரதம்பூண்டுபொன்னுலகுடையகோமான்
மனமகிழ்ந்தாருர்தன்னிலவைகினான்வைகுநாளி
னனையவிற்கமலமேலோனுகரோடடைந்தானன்றே. (௪௯)

விண்ணவரோடுந்தொல்லைமேதகுதேவார்த்தா
கண்ணகன்பொய்கைமூழ்கிக்கவுணீறணிந்துபுற்று
னண்ணலைப்பூசையாற்றியகமகிழ்ந்தேத்தியாங்கு
நண்ணியமகவான்றன்னைநான்முகக்கடவுள்கண்டான். (௫௰)

கண்டுளமகிழ்ச்சியெய்திக்கடவுளைவிடைகொண்டேகி
விண்டலம்புரப்பான்வேந்தைவிண்ணவரோடும்வைத்துப்
பண்டைநாள்முகத்துவேதபன்னவன்றனதூர்புக்கா
னண்டரோடம்பொனாட்டிலமர்ந்தனனமரர்கோமான். (௫௧)

பொற்புறுந்தேவதீர்த்தபொய்கையின்மூழ்கிப்புற்றிற்
சிற்பரன்றன்னைப்பூசைசெய்தருட்டிறத்தினாலே
நற்பெருந்திருவின்மல்கிமசபதிநாகநாட்டி
லற்புடையமரர்சூழவரசுசெய்தமர்ந்தானன்றே. (௫௨)

இந்தவானரசன்சீர்த்தியியம்பினோர்கேட்டோரியாரு
நந்துறுக்கொலைமுன்னானவையெலாநீங்கிப்பார்மேற்
சந்தமாமகப்பேறுதிதனமெலாம்பெற்றுவந்து
விந்தைவாழ்புயத்தினோடுவியனுலகாள்வரன்றே. (௫௩)

இந்திரச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௦௫௯.

---

## கேமசருமச் சருக்கம்.

முன்னருமறைவிரித்தமுதுக்குறைவியாதனென்பான்
மன்னுமாணுக்கன்றெல்லைமாதவர்வதனநோக்கி
யின்னுமிவ்வாவிக்காதையொன்றுளததனையீங்குப்
பன்னுவன்பரிந்துகேண்மினென்றினைவபகர்தலுற்றான். (க)

வேறு.

அண்டர்பெருமானுக்கியபுற்றமர்ந்தபெருமானாரூரிற்
பண்டைமறையோர்குலதிலசன்பாரத்துவாசகோத்திரத்துச்
சண்டதருமன்றந்ததனிக்கேமசருமனெனுந்தனையன்
வண்டுவரிநாண்வில்லேந்துமாரனென்னவயங்குவான். (உ)

இளமைப்பருவத்தவன்பல்லமலர்வாய்நறவமினிதுண்டு
களியிற்சிறந்தாங்கினத்தினொடுதிரியுங்காமர்சுரும்பென்ன
வளைவிற்புருவமழைநெடுங்கட் கணிகைமாதர்வாயூறுந்
தெளிமட்டருந்திவிட ரினத்திற்செறிந்துநாளுந்திரிதந்தான். (ங)

திரியுநாளிலவனொருநாட்டெண்ணீர்வேட்டுத்தன்றடந்தோண்
மருவுமாதோர்கணிகைதனைமணிநீர்கேட் பப்புனலென்று
கருதிமதுவைக்கலசத்திலிருளிற்கொடுத்தாள்கைப்பற்றிப்
பருகிமதுவென்றறிந்தயர்ந்தான்விதியைவிலக்கும்பரிசினர்யார். ()

துடித்துநெஞ்சமுகம்புலர்ந்துதோகையனையாண்முகநோக்கிக்
கெடுத்தாயெனதுகுலநிலையையென்றுகிளத்திக்கிளர்நீயி
லடுத்ததளிர்போலுடல்வாடியந்தோவென்னுவாங்ககன்று
படித்தமறையோரவையத்திற்படர்ந்துபணிந்திப்பரிசுரைத்தான்.

உரைத்தீங்கிதற்குப்பரிகாரமுரைமினென்றானவர்கேட்டு
விரித்தகலைநூல்விதிநோக்கிவெண்ணெய்தனைமிகக்கொதிப்ப
நெருப்பிலுருக்கிக்குடித்தமதுநேரப்பருகிலிப்பாவம்
பொருக்கென்றேகுமெனமுதியோர்புகன்றாரவனப்படிபுரிவான்.()

தொடங்குங்காலையதுகேட்டுத்துண்ணென்றிரங்கியவற்பயந்தோர்
புடர்ந்துமுதியோர்ப்பணிந்திந்தப்பரிசன்றுரைமின்வேறுபரி
கிடங்கொள்கலையாவையுமுணர்ந்தீரென்னவவர்மற்றிஃதன்றிக்
கிடக்கதில்லைவேறுவிதிநூற்பாலென்றுகிளத்தினர். (எ)

அனையமாற்றங்கேட்டமூங்கியளித்தோர்மைந்தன்றனைநோக்கி
யினையபரிசுதவிர்ந்தெமதுபொருள்கள்யாவுமிசைமறைதேர்
பனைவர்தங்கட்கினிதளித்துப்பரவைஞாலந்தனிலுள்ள
புனல்கள்யாவும்படிகென்றுபுகன்றார்மறுத்தான்புதல்வன்றான். ()

மறுத்துமறையோர்வகுத்தபடிபுரிவேனென்றுமனந்துணிந்த
சிறப்பின்மைந்தன்றனைநோக்கிச்சிந்தைநைந்துதெருமந்திங்
கிறத்தல்புரிவோம்யாமுமெனவின்றோர்துணிந்தாரிதுகாலை
யறத்தின்மிக்கோன்சங்கமுனிதாதையடைந்தானருளால். (கூ)

அடைந்தமுனிவனிகழ்ந்தமுறையனைத்துங்கேட்டாங்ககம்வெ
தும்பி, மிடைந்தமறையோர்பெருங்குழுவைநோக்கியிந்தவிதிப்ப
ரிசு, தொடங்குமாறுபுரிந்திங்ஙனோராவிதொலைப்பான்றொடங்கினி
ரென், றுடைந்துமதனம்படைசாயவென்றோன்வெகுண்டங்குரை
செய்வான். (க0)

வேறு.

கறைத்திருமிடற்றுநெற்றிக்கண்ணினுன்றானிருப்பப்
பிறப்பெனும்பரவைநீந்தப்பெரும்புணைபிறிதுதேடுஞ்
சிறப்பிலர்போலநீவிர்தீங்கிதுதிப்பவிந்த
நறைப்புனற்றேவதீர்த்தமிருப்பமற்றிதுநவின்றீர். (கக)

நறுஞ்சுவைக்கரும்புபெற்றோனுணலைநாடுங்கொல்லோ
கறங்குபாற்பரவைபெற்றோன்கள்ளிப்பால்கருதுங்கொல்லோ
நிறைந்தகற்பகத்தைச்சேர்ந்தோன்காஞ்சிரநேடுங்கொல்லோ
சிறந்தசீர்ப்பெரியோர்ச்சேர்ந்தோன்சிறியர்பாற்செல்லுங்கொல்லோ,

தீதெலாமகற்றுந்தேவதீர்த்தமீங்கிருப்பவேறிங்
கோதியதென்கொலந்தோவுயர்மறைமுதியீரொன்று
மாதொருபாகன்செந்தாமரையடிநினைந்துமுனிங்கா
மேதகுமுனிவர்கோமான்பின்னரும்விளம்பலுற்றான். (கஈ)

அஞ்செழுத்தோதிநீங்காப்பவமுமற்றலங்குசோதி
விஞ்சுநற்பூதிபூசிவிளிந்திடாப்பவமும்வேரிக்
கஞ்சமொய்த்தலர்ந்ததேவதீர்த்தத்லைதக்காதலன்பா
னெஞ்சகத்தொருகாலெண்ணிநீங்கிடாப்பவமுமின்றால். (கச)

சைவநற்சமயமொத்தசமயமும்பரசுதாங்குங்
கையுடைக்கடவுளொத்தகடவுளுங்கடவுளாரூர்த்
தெய்வநற்பதியையொத்தபதியுநற்றேவதீர்த்தப்
பொய்கைமற்றிதனையொத்தபொய்கையும்புவனத்தின்றால். (க௫)

என்றுரைசெய்துதிமையாவையுமிமைப்பினீக்குந்
துன்றுசீர்த்தேவதீர்த்தந்தோய்ந்திடிவினையதிமை
பொன்றுமிக்கணத்திலென்றுப்புகன்றுமற்றவனையந்த
மன்றலம்பொய்கைமூழ்கப்பணித்தனன்மாதவத்தோன். (௧௬)

மாதவன்பணித்தகாலேமலர்கமழ்தேவதீர்த்தச்
சீதநீர்மூழ்கியேறுமெல்லேயிற்சேணிலவாணி
வேதியன்புதல்வநின்பாலவெம்பவம்விளிந்ததென்றே
யோதியதெவருங்கேட்டாங்குளத்திறும்பூதுகொண்டார். (௧௭)

ஆயதோர்காலேவெண்ணீறஞ்செழுத்தாலணிந்து
தூயநன்னியமஞ்செய்துபுற்றிடங்கொண்டதொல்லே
நாயகன்றன்னைப்போற்றிநலவிடைகொண்டுமீண்டு
சேயவன்றனைப்பயந்தோர்சிந்தைநோயதீர்த்தானன்றே. (௧௮)

பூம்புனற்றேவதீர்த்தப்பொய்கையின்மூழ்கிப்புற்றிற்
பாம்பணிபரமன்பொற்றாள்பணிந்தநற்பலத்தினாலே
தீம்பவநீங்கிநீங்காத்திருவொடுசிறப்பின்மேவி
மேம்படுமறையோன்பின்னர்ச்சிவபதமேவினானே. (௧௯)

இந்தமாகேமசன்மனினியநற்கதைகேட்போர்
புந்தியிலின்பமாரப்புகலபவர்பூமிதன்னி
னிந்தையார்சுரையுண்முன்னிகழுமாபாதகங்க
ளெந்தையுமகன்றுமேலையரனுலகடைவரன்றே. (௨௦)

தேவதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௦௯௧

## சாரஸ்வதிதீர்த்தச் சருக்கம்.

ஆதிநாயகனிலாவரும்புபுனையந்துகிர்ச்சடிலசேகரன்
பாததாமரையிலிதயவண்டதுபடிந்திடும்படிபுரிந்திசைச்
சூதமாமுனிவனைம்புலப்பகைதுரந்துஞானவரசானநால
வேதமாமுனிவர்வதனபுண்டரிகநோக்கிமற்றிவைவிளம்புவான். (௧)

சீதவாரமுதவாரிபோனிலவுதேவதீர்த்தமலர்வாவியின்
காதையின்னமுமனந்தமுண்டுமுதுகணபணுடவியனந்தனு
மூதாவிறைவனூறுகோடியுகமொழிதல்செய்திடினுமுடிவுறு
தர்தலாலனையவாவியின்பெருமையீசனேயறிவனந்தணீர். (௨)

வேறுமற்றினையதீர்த்தமான்மியம்விளம்புவன்சுருதிமெய்ம்மைதே
ருறிலாமுனிவிரொப்பிலாதசரசுவதிதீர்த்தமெனவுலகெலாங்
கூறுதீர்த்தமொன்றுண்டதன்பெருமைகூறுதற்கரிதுமற்றித
னீறிலாதபுகழ்மேன்மையிற்சிலவியம்புவாமெனவியம்புவான். (௩)

திலமடந்தையுயிராயதெள்கமலைநீணகர்க்கழகுநிலவுபொற்
றிலகமன்னகலைமங்கைவண்புனெறிந்தகண்மலரிரண்டினோர்
மலர்செய்தாமரையொராயிரங்களுடைமன்னராவரதுமாந்துவோ
ரலருநாவினிரண்டெனுயிரமலங்குநாவரசராவரால். (௪)

வேறு.

அனகமாதவிர்வாணிநற்றீர்த்தமற்றதனை
மனநினைந்திடில்வாயினுலுரைத்திடிற்கண்ணா
லினிதுநோக்கிடிலெண்ணில்பல்கோடிமாபாவந்
தினகரன்கதிர்கண்டிடுமிருளெனச்சிதையும். (௫)

ஒருபகற்பொழுதாடினோரயனுலகுறைவ
ரிருபகற்பொழுதாடினோர்மாலுலகெய்வ
ரருமறைத்திருமாதவிர்முப்பொழுதாடும்
பெரியர்நற்சிவலோகமேற்பெருவளம்பெறுவார். (௬)

இந்தமாண்புசாலிலங்கெழிற்கலைமகளிலஞ்சி
வந்தவாறுரைசெய்குவன்மாபெருந்தவத்தீர்
சிந்தைசாலவும்விமலமாய்ப்படிதவஞ்செய்வான்
முந்துநான்முகப்பண்ணவன்முன்னினன்முன்னு. (௭)

எத்தலத்தினும்புற்றிடத்திறையவனு
ருத்தமப்பதியெனத்துணிந்துகந்துதானுறைந்த
சித்திரச்சிலைப்பீடமற்றதனைநீள்சேணின்
றித்தலத்திடைவீழ்த்தினனிரவிவீழ்ந்தென்ன. (௮)

இரவிவீழ்ந்தெனவீழ்ந்தசெஞ்சிலையெழிலாரூர்
மருவியெய்ந்ததுமற்றதுகாலையிற்றன்னு
ரொருவியந்நகரடைந்தகன்சிலையின்மேலுறைந்தான்
பருதிமண்டலத்துறைந்தருள்பரமனேபோல. (௯)

வேறு.

அந்நான்முகத்தவன்பாதலத்தமருஞ்சரசுவதி
யென்னுவுலகேத்தும்புகழ்த்தீர்த்தம்மனத்தெண்ணப்
பன்னகமணிந்தோனருளாற்பாதலகங்கை
முன்னுளெழுந்ததுபோலெழுந்ததுமூதுலகுய்ய. (௰)

உலகுய்ந்திடமிசைவந்தெழுந்தொலிநீர்ப்புனல்வாணி
யலையங்கைகுவித்தேதொழுதணைதந்ததொரளவின்
மலர்பங்கயமணிமாளிகைமகிழ்தந்துறைவேதக்
குலவந்தணர்கோமானந்தக்குளிர்தண்புனல்குடைந்தான். (௧௧)

விதியாலறல்குடைந்தேதிருவெண்ணீறுபுனைந்தே
முதுநூன்முறைநியமத்துறைமுற்றிச்செழுங்கிரணக்
கதிரார்தருமணிச்சித்திரச்சிலைமீமிசைகமழ்பூம்
பதுமாதனத்துறைகின்றதொர்பழையோனினிதிருந்தான். (௧௨)

இருந்தெந்தைதனிருதாண்மலரிதயக்கமலத்திற்
பொருந்தும்படிபுரிந்தீசனைப்புகழுஞ்செழுத்தோதிப்
பெருந்தண்புதுச்செந்தாமரைப்பீடத்துறைபெரியோன்
றிருந்துஞ்சிவயோகத்தினிற்றிளைத்துற்றனன்சின்னாள் (௧௩)
பேற.

நிமலனதருளினாலேநிரையிநம்மலரோனெஞ்சம்
விமலமதடைந்துசெம்பொன்விரைமலரிதழிவேய்ந்த
விமையவர்பெருமானூரிறையவன்புற்றிடங்கொ
ளமலனையருச்சித்தேத்தியருள்விடைகொண்டானன்றே. (௧௪)

அருள்விடைகொண்டவேதனமலனதருளால்வாணித்
திருவளர்தீர்த்தமூழ்கிச்சித்திரச்சிலையின்மீது
புரிவுடனிருந்துஞானப்புனிதவஞ்செழுத்துக்கூறு
மிருளிலார்நினைந்தவெல்லாமெய்துகவெந்தஞான்றும். (௧௫)

புத்தலர்வாணிதீர்த்தம்பொலிந்துமூவுலகிற்சால
வுத்தமதீர்த்தமாகியோங்குகவெனவுரைத்துச்
சித்திரச்சிலையையந்தச்செழுமலர்வாவிப்பாங்கர்
வைத்துநான்முகந்துவள்ளன்மனோவதியடைந்தான்மன்னோ. (௧௬)

அன்றுதொட்டகிலத்தோங்கியமலமாம்வாணிதீர்த்த
மன்றநற்பொலிவுபெற்றதப்பெருவாவிதன்னைச்
சென்றடுத்திடினுங்கோடிதீயவெய்பாவந்தீருங்
குன்றமொத்தோங்குந்தொல்லைக்குன்றுறுத்தவத்தின்மிக்கீர். (௧௭)

பேசுமிவ்வாணிதீர்த்தப்பெருமையைமகிழ்ந்துகேட்போர்
மாசறவுரைப்போர்யாருமானுறுங்கல்விசெல்வந்
தேசுறுமகப்பேறெய்தித்திண்புவிக்கரசராகி
வாசவன்முதலோர்போற்றவானுலகடைவர்மன்னோ. (௧௮)

சரஸ்வதிதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௦௭௭.

## பராசத்திச்சருக்கம்.

அத்தனுதியமலனென்றோனுடை
முத்தன்பாதமுளரிவழுத்தியே
சுத்தமாதலச்சூதன்றனிப்பரா
சத்திமான்மியஞ்சாற்றுதன்மேயினன். (க)

வேறு.

சித்திரம்பழுத்ததெய்வத்திருந்தெழில்வாணிதீர்த்தத்
துத்தரதிசையின்பாங்கரநாதிடாயுலகமுய்ய
வத்தனுருரவொண்டோனாதிதனமலஞானா
சத்திதானூழியூழிதவம்புரிந்துறையுமன்றே. (உ)

சாற்றுமட்டமியிஞேடுசதுர்த்தசிதன்னில்வாணி
மாற்றருந்தீர்த்தமூழ்கிமற்றதன்வடபால்வைகு
மேற்றிருஞ்சொடியுயர்த்தவிறைபராசத்திதன்னைப்
போற்றினோர்செல்வங்கல்விப்பொருளொடுபொலிந்துவாழ்வார். ()

வாணிதன்றீர்த்தமூழ்கிமாபராசத்திசெம்பொற்
றுண்மலர்போற்றியன்னாள்சந்நிதிதன்னிலானடை
நீணிதிசுரபிகன்னிநிலமுதற்றனமீந்தோர்
சேணுயரமரர்நாட்டிற்றிருந்தரசாள்வரம்மா. (ச)

செறிமலர்கமழும்வாணிதீர்த்தநல்விதியின்மூழ்கி
யிறையவன்சத்திபொற்றுளெதிர்தொழுதேத்தியன்னாள்
குறைவறுசந்நிதிக்கட்கோதுதீர்மறையிசைப்போர்
மறுவறுபுரவிமேதமாண்பயன்பெறுவர்மன்னோ. (ரு)

பாரதிதீர்த்தமூழ்கிப்பராசத்திபைம்பொற்பாத
வாரிசம்போற்றியன்னாள்வளங்கெழுசந்நிதிக்க
ணோர்தருசிவபுராணமெழுதியபுத்தகங்கள்
சீர்பெறத்தானஞ்செய்தோர்சிவபிரானுலகஞ்சேர்வார். (சு)

கலைமகடீர்த்தமூழ்கிப்பராசத்திகமலப்பொற்றுண்
மலர்பணிந்தினிதுபோற்றிமற்றவள்சந்நிதிக்க
ணலகுதீர்சிவபுராணமன்பினிற்படிப்போர்கேட்போர்
நிலவுறைசென்னிமுக்கணின்மலனருகிருப்பார். (எ)

வெள்ளிவாரத்தில்வாணிவியன்றடமூழ்கியெண்டோள்
வள்ளறன்சத்திபொற்றாள்வணங்கிமற்றனையவல்லி
யெள்ளருசந்நிதிக்கணஞ்செழுத்தினிதிசைப்போர்
தெள்ளுநீர்முடித்தவேணிச்சிவபிரானுருவமாவார். (அ)

உரைத்தமாநவமிதன்னில்வாணிதனுதகமூழ்கி
யருட்டிருஞானசத்திக்கபிடேகம்விதியினட்டிக்
கருப்புரஞ்சந்தஞ்சாத்திக்கடிநறுந்தீம்பாலன்னம்
விருப்புடனருத்தினோர்கள்விமலமாமுத்திசேர்வார். (கூ)

எழுத்தியலறியாதோருமொருமுறைமூழ்கியின்பம்
பழுத்தருள்கருணைஞானப்பராசத்திபாதம்போற்றிற்
கொழுத்தமாமதுரமூறுங்கொழுஞ்சுவையமுதம்பில்கும்
விழுத்தகுகவிதைவிஞ்சைமேலவராவரன்றே. (கo)

ஊமருமொருகான்மூழ்கியுயர்பராசத்திபாத
தாமரைபோற்றில்வானோர்தம்பெருங்குரவனுக்குந்
தோமறுகுரவராவர்துகளிலாவிரதஞ்சான்ற
நாமமார்தவத்துயர்ந்தநான்மறைமுழுதுணர்ந்தீர். (கக)

மாசறுவாணிதீர்த்தமூழ்கியேமன்னுஞானந்
தேசுறுசத்திதன்னைத்தெரிசித்ததிறத்தினாலே
பூசல்வேன்மன்னர்போற்றும்புரவலனொருவன்முன்னங்
காசறுவரம்பெற்றுய்ந்தகாதையொன்றறைதுமன்றே. (கஉ)

வேறு.

தேவலங்கொளித்தினகரன்பரி
மாவலங்கொளுமதிலயோத்தியர்
காவலன்விறற்கன்னிகாமுறும்
பூவலர்ந்ததார்ப்பொன்னந்தோளினன். (கஙு)

பிறப்பிலூமனெண்பிடுசான்மனுத்
துறைப்பசும்பயிர்தழைப்பத்தோன்றிய
வறப்பசும்புயலாழிஞாலமேன்
மறக்கொடுங்கலிகடிந்தவாகையான். (கச)

சாற்றரும்புகழ்த்தசரதன்வழித்
தோற்றினன்பகைமன்னர்சோரிநீ
ரூற்றிருந்தறுதொழுகும்வேலினன்
மாற்றமில்லதோர்மாரனேயனன். (கரு)

கயல்படைத்தகட்கலைமடந்தைசீ
ரியல்விளக்கினோர்மிடியிருட்கெட
வியனிலத்தினில்விளங்கும்வெய்யவன்
றயரதப்பெயர்த்தலைவனென்பவே. (கசு)

அந்தமன்னவனுழிசூழ்தரு
முந்தைமாநிலமுழுதும்வெண்குடைப்
பைந்தண்மாநிழல்பரப்பிப்பாலகசால
செந்தண்கோன்முறைசெலுத்திவைகினான். (கஎ)

வேறு.

தோட்டுணையினுப்புவிசுமந்துறையுநாளின்
மோட்டுமதமாவிவுளிதேர்வயவர்போயப்பத்
தீட்டுகதிர்வேற்குரிசிறகணைதிசைபபால
வேட்டவினைவேட்டுமிருவெவ்வனமடைந்தான். (கஅ)

வேறு.

கொடுஞ்சிலைகுழைத்துநாரிகொளுவியாஞ்செவியின்காறும்
தடம்படுதோளால்வாங்கித்தழலவிழ்துறுசட்பேழ்வாய்
முடங்குளைமடங்கலாதிமுரணைகழுவிலங்கினோட்ட
மடிந்திடவரங்கொடீவாய்வடிக்கணைசொரிந்தான்மாதோ. (ககூ)

அரியயன்முதலோர்யாருமவிந்திடாதாலமுண்ட
வொருவனேகடவுளென்றேயுணர்ந்திடாருள்ளம்போல
விருள்படுவனத்திலவேந்தனிருந்தடற்றானையோடும்
பொருதிறன்மிருகவேட்டைபுரிதருமெல்லைதன்னில். (உ0)

மேவினனுச்சிவெய்யோன்வேனிலாலவெதுமபியெயாவ்வேற்
காவலன்றானையோடுங்கடிநறுந்தெண்ணீர்வேட்டுத்
தாவிநுன்டிவலைவீசுந்தடந்திரைககங்கைவேணித்
தேவனதருளினாலேதென்றிசைநோக்கிச்சென்றான். (உக)

சென்றிடுமெல்லையெங்கள்சிவனருள்போற்குளிர்ந்த
மன்றலம்போதுநாறுமாசிலாவாணிதீர்த்த
மென்றுலகேத்துந்தெய்வவிரும்புனற்றடத்தைமுன்செய்
நன்றுயர்தவத்தாற்கண்டானுமகீர்ஞாலமன்னன். (உஉ)

கண்டதோரளவிலந்தக்கயம்படிந்தமுதத்தெண்ணீ
ருண்டனனுண்டகாலையுறுதழல்வேனில்வெம்மை
மண்டியவிளைப்பினோடுமாறிடாப்பவவிளைப்பும்
விண்டனனுத்திருந்திவிளம்பினன்மதுரமாற்றம். (உங)

மேதகுவாணிதீர்த்தவிரிபுனற்படிந்தவேந்தன்
வாதவூராளிசெய்யவதனதாமரைகொழிக்குஞ்
சீதமாகருணைவெள்ளந்திளைத்திடுமூங்கையென்னப்
போதமாமதுரச்செந்தேன்பொழிகவியலமொழிந்தான். (உச)

அறிந்திடாமூகனோர்காற்றோய்ந்தனனருந்தியந்தே
னிறைந்துவார்ந்தொழுகும்பா லவிதிமுறைநிகழ்த்திநின்றான்
சிறந்தசீர்வாணிதீர்த்தச்சிறப்பறிந்தாடிப்பலகா
னறும்புனன்மிசைந்தோர்பாடறசிறப்பையார்நவிற்றவல்லார். ()

பாடல்சாலரசன்கீதப்பாடலபாடியதோர்காலை
யாடலந்தானைவேந்தரமைச்சராதியர்தாமகேட்டு
நீடியவுவகைபொங்கியற்புதநெஞ்சிற்கொண்டா
ரேடலர்தாரோன்றானுமிதயதிவிறம்பூதுற்றான் (உரு)

உளத்திறம்பூதுகொண்டாங்குரவுநீர்குாலமன்னன்
வளத்தியன்மலிந்தகானமருங்கெலாநோக்குங்காலை
களிச்சுரும்புலவும்பூந்தண்கடிகமழ்வாணிதீர்த்தக
குளத்தினுத்தரதிசைப்பாற்பராசத்திகோயில்கண்டான் (உஎ)

பூவுலகேத்துஞ்சத்திபூங்கோயில்காணடலோடு
மூவகையாயகாலச்செய்கையுமூவசைத்தாங்
தாவறுபுவனத்துள்ளபுதுமையுந்தவறிலவேத
மோவறுபுராணமாதிகலைகளுமுணர்ந்தானுலலை (உஅ)

செம்பொனங்கோயிலெய்திந்திருமணித்தெய்வப்பீடந்
தம்புவியாதிபூதமருந்தவருரகரோரை
பைம்புயல்வண்ணன்வேதன்பாகசாதனன்கோள்வர்கக
மும்பருய்ந்துறையயோகத்துறைந்தநாயகிமுனூற்றான். (உகூ)

பரிபுரச்செம்பொற்றாளும்பங்கயம்பிடித்தகையும்
குருமணிக்கொங்கைவெற்புங்குமுதவாய்நகையுங்காதும்
திருமணிக்குழையுநெற்றித்திலகமுமபுருவவிலலும்
கரியகட்கயலுஞானக்கருணைமாமுகமுங்கண்டான். (௩0)

வேறு.

கண்டகாலையிற்காரொதிர்மஞ்ஞையிற்களித்தான்
விண்டுநீங்கினன்மூலவல்லிருளொடுவினையும்
தண்டலில்லதோர்புளகமேற்போர்த்தனன்றணவா
மண்டுபேரின்பவாரியிலாடினன்மாதோ. (௩க)

குழைந்துநெஞ்சகமுருகியேவிதிமுறைகொழுந்தேன்
வழிந்தபோதினலருச்சனைசெய்துமாமன்னன்
றழைந்தகாதலில்வலங்கொண்டுதாழ்ந்தினிதெழுந்து
பொழிந்தபேரருளம்மையைப்போற்றுதல்புரிந்தான். (௧௨

பிறப்பரும்பிணிமாற்றியபொற்கருமருந்தே
யிறப்பெனுங்கடலேற்றியவேமாப்புணையே
யறப்பசும்பயிர்போற்றியவமுதமாமழையே
மறப்புலக்கழன்மாற்றியமாசிலாமதியே. (௧௩

தெண்ணிலாவிளம்பிறைதவழ்சிகரநீள்பவள
வண்ணமால்வரையிடம்படர்மரகதக்கொடியே
கண்ணுலாவருட்கடலெழுதிவலையாற்களைதீர்த்
தெண்ணிலாவுயிர்வளர்த்தருளின்பமாகடலே. (௧௪

கருகுதீக்கலியிருள்பொருகாலையங்கதிரோ
யரியபாவலர்பெற்றதோரழிவிலாநிதியே
சுருதிநூற்பெருங்குன்றத்திலேற்றியசுடரோ
வரையின்மேலுதித்தருளியநீலமாமணியே. (௧௫

பொய்த்தபூதலவாழ்க்கையாம்புன்கருவேம்பு
கைத்தமாதவர்விரும்பியகருணையங்கரும்பே
பத்தியாலெதிர்பரவுவார்பவமுறுதகற்றிப்
புத்தியோடுயர்முத்திநல்கியபழம்பொருளே. (௧௬

செங்கைவேலிளஞ்சிங்கமுந்திரண்டநாற்றடந்தோ
ளைங்கையானையுமுகந்தினிதாரமுதருந்துங்
கொங்கைமெல்லிளஞ்சோமனார்குலப்பசும்பிடியே
யெங்குமாய்நிறைந்தோங்கியாவீறிலாமுதலே. (௧௭

மேகமேனியன்பீடமும்விளங்கொளிச்செம்பொ
னாகநான்முகன்பீடமுமமரர்நாடளிக்கும்
பாகசாதனன்பீடமுநிலைபெறப்பரம
யோகபீடமேலுறைந்தருண்ஞானவோவியமே. (௧௮

வேறு.

பாலுறவனந்தகோடிசத்திகள்பரவிப்போற்ற
மாலயன்மகவான்வானோர்முனிவரர்வணங்கியேத்த
ஞாலமன்னுயிர்களுய்யநற்கமலாலயத்தின்
மூலகாரணமாய்வைகுமுதல்வியேபோற்றிபோற்றி. (௧௯

ஓதியேயன்பேயில்லாலுமனேன்றனையாட்கொண்ட
வாதியேயந்தமில்லாவமலையேபோற்றியீசன்
பாதியேபோற்றியின்பப்பராசத்தியாயஞானச்
சோதியேபோற்றிபோற்றிதொல்லைநூற்றுணிவேபோற்றி. (௪0)

புத்தலர்தூவிப்பூசைபுரிந்துமுத்தேவர்போற்ற
முத்தொழிலளித்துவேதமுனிவர்செய்தவங்கண்டெண்ணில
சித்திதந்துலகஞ்செய்ததவத்தினாற்றிருவாரூரி
லுத்தமதவத்திலவைகும்யோகநாயகியேபோற்றி. (௪க)

வீழிவாய்மலராள்வாணிமோகினிவிசையைகாளி
யாழியந்தானைமங்கையபிராணிபரம்பைமாதர்
வாழியென்றினிதுவாழ்த்திவணங்கியேவழிபட்டேத்த
வூழிதோறூழியாரூருறைந்தருளுமையேபோற்றி. (௪உ)

வெள்ளிமால்வரைமேலென்றும்விமலனோடண்டகோடி
யுள்ளவாருயிர்களுய்யவநாதியாயுறைவதேபோற்
புள்ளருவயலாரூரிற்புற்றிடங்கொண்டவெண்டோள்
வள்ளலோடுகந்தெந்நாளும்வாழுநாயகியேபோற்றி. (௪ங)

பேய்த்தொழிலிழைத்துவைகும்பேதைமானுடரைப்பாடி
நாத்தழும்பேறுதுன்றுணர்வினேமோரொருகாலேனு
மேத்துநற்பாவலோர்களெண்ணியவளிப்பாய்போற்றி
பூத்துலகனைத்துங்காக்கும்புண்ணியவடிவேபோற்றி. (௪௪)

என்றுலகீன்றசெல்வியிசைக்கருப்புரமிசைத்தேங்
குன்றுறுப்பனுவறசந்தில்விரவியேகுளிர்ந்தகீத
மன்றலம்பனிநீர்வெள்ளத்தளாவியெண்டிசையுமவானுஞ்
சென்றுநுண்டிவலைசிந்தநாவினாற்சிதறினாளே. (௪ரு)

சிதறியவேலைவேலைதனின்புவிதிகருவானஞ்
சதமகனயன்மாலவானோர்கன்னியர்தங்களாக
மதிகதிர்முதற்கோள்விண்மீன்மற்றுளசராசரங்கண்
முதுமறைமுனிவருள்ளமுழுவதுங்குளிர்ந்தவன்றே. (௪௬)

ஒடுங்கினபுள்ளுமாவுமுறங்கினமுகிற்குழாங்கள்
படர்ந்தெழுகாலினீட்டம்படர்ந்திலபரந்துவீசுந்
தடந்திரைக்கொத்துமொய்த்ததழங்கொலிமுழக்குமின்றி
யடங்கினகடல்கள்வாணிற்கங்கையுமமைந்ததம்மா. (௪எ)

## பாசத்திச்சருக்கம்.

தும்புருநாரதப்பேர்முனிமுதலாயதொல்லோர்
தம்பெருவீணையாதிதயங்குதீங்குரலினீட்டுஞ்
செம்புரிமுறுக்குலைந்துகின்னரர்தங்கள்செங்கை
வம்பவிழலங்கல்யாழ்வாய்மட்டகமெகிழ்ந்தமாதோ (சஅ)

அரனடியன்பின்யாக்கையாணையரிசைக்குகித்த
இருள்படுவனத்துலர்ந்தமரந்தழைந்திளகிக்கல்லு
முருகியதன்மையென்னவுயிரிலாவரங்களிந்த
வரைகளுங்கரைந்தவன்னமதுரகீதத்தின்மன்றே. (சகூ)

இத்தகைசாற்றவொப்பிலிறையமர்பலருமற்றீதுந்
தத்துவகோடிக்கப்பாற்பரங்குருபேரின்பருள
மைத்தவிசொளியாய்ந்தாமலேமைக்குமெட்டாதுநின்ற
வுத்தமயோகச்செல்விதிருச்செவியுற்பமன்றே. (ருo)

ஆறுமொருருப்பமாலைதலுமருகுநின்று
பாரதிவிதியிற்பாடுஞ்சோபயாய்ப்பனிரம்பி
னேரிசையினிதுலாவுமிலங்கொளியணிப்பொற்றோட்டு
வார்செவிமிகமகுளிர்ந்துமகிழ்ந்தனள்யோகவல்லி. (ருக)

அரசனதகத்தினன்பின்வெள்ளம்போலணைந்துமிகுந்
துருகியுண்மகிழ்ச்சிபொங்கிப்பொன்சிறுகன்றுகண்ட
சொரிதருமறியாப்பாற்சுரபியிற்பெரிதுசாலக்
கருணைசெய்தரியபாட்டியளித்தனள்யோகக்கன்னி. (ருஉ)

வேறு.

பாரெலாம்பாதந்திசையெலாந்தானை வரையெலாம்பச்சிளங்கொங்கை, காரெலாமளகந்தடமெலா நயனமுடுவெலாமாரமேழ்கடல்கொ, ளீரெலாங்கருணையைமையெலாங்குதலை நிறையொளிஞானவானந்த, மேனியெலாஞ்சோபவமேனியாய்நின்றாள் வேந்தன்முன்னின்றனள்விருப்பால. (ருங)

திருமறுமார்பன்சென்னிமேலலங்கற் றேன்றுழாய்ப்பாசடைதழைத்துப், பரமனுஞ்சேரளவிலாவரும்பேய்ந்து பங்கயனிந்திரன்முடிமே, லரியகற்பகப்பூமலர்ந்து மாமுனிவரகத்தடந்தமர்ந்ததாட்கமலம், பொருவருஞ்சுருதிநூபுரகீதப் பொங்கிசைவண்டொடுபொலிய. (ருச)

கோடிகமாலவட்டமாடரவின் கொழுமணிப்படமிருக்தேர்த்
டோடுதெண்டிரையுமாகடல் பழித்தவொப்பிலாப்பொற்புக

லல்கு, லாடகச்செம்பொற்பஃறுகிற் காஞ்சியணிவடநிரைமணித் தொகுதி, நீகடில்வான்கணமீனிரையொழுங் கென்னக்கிடந்துவா ளொளிபரந்திமைப்ப (ருரு)

தளிர்கொள்கற்பகஞ்சேர்கொடியொடு செம்பொற்றயங்கிய வஞ்சியங்கொம்பின், வளரெழிற்பழித்துநாயகன்றிருக்கைவயங்கிய வண்டுடிபுரைந்து, யொளிவிரிந்நெறித்ததோய்ந்திடாநறும்பூவொ ண்டுகினீவுநுண்ணுசுப்பத், தெளிசுடர்மென்பூஞ்செம்முகிலபொ திந்ததெய்வமாமின்னெனத்திகழ. (ருசா)

ஞாலமேமுதலதத்துவத்தொகுதிநாள்பலகோளொடுபிறவு
மாலயன்மகவான்வானவர்முனிவர்மற்றையவுயிரெலாப் பயந்த
வாலிலைவாய்ந்தநுண்மயிரொழுக்கமலையிழிந்தகன்கடற்பரந்த
நீலநீராற்றினொழுக்கமேயென்னநிறையெழில்சிறந்தொளிநிலாவ.

கடிகமழ்செஞ்சாந்தக்குழம்பாடிக் கண்ணுதலவண்ணமார்பு ழுது, தொடைசெய்பூங்கொன்றைமுகைமுறுகருடைத்துத்தூங்கு தண்டுளிமதுத்தோய்ந்து, பொடிநறுந்தாதுதுதைந்தினிதலைந்து பொறிசுணங்கேந்தியபொற்பின், வடமணிசுமந்தகொங்கைபொன் பூத்தமரகதமலையெனவயங்க. (ருஅ)

முப்பெருந்தலைவர்தேவிமார்சமுத்தின் முழுமணிமங்கலமிரு ப்பத், துப்புறழ்சடையோன்சூடிமணிச்சமுத்திற்றுருடிகடனஞ் சையன்றமைத்த, பொற்பமைசிறப்பிற்கைபுனைந்தியற்றுபபொலங் தொடிபொலிந்தசைப்போதி, லொப்புரைபெறுதுபறித்தபோதெ ன்னவொல்மலர்த்தாமரையொளிர. (ருசு)

நாமநீர்வேலிவையகங்காக்குநாரணக்கடவுளேமுதலாந்
தாமவானமரராவருமழியுங்கடவுள்தடநெடுங்குடுமி [ணர்த்தும்
யேமமால்வரைவிற்கடவுளேயழியாக்கடவுளெம்பெருவர்க்குநன்று
காமர்மங்கலநாண்கருங்கமுகன்னதிருமணிக்கழுத்தினிற்கவின.

தாழ்தருபசும்பொனூசலையலைத்ததயங்குழைபொலிந்தவார் காதிற், சூழொளிமதியமண்டலமிரண்டிற் றுளங்கியவயிரவண் டோடு, வாழுமுத்தண்டத்திருட்படாங்கிழித்துவரம்பிலர்மன்னுயி ரகத்துக், காழிருட்பிழம்பினடியறுத்தோவாக்கதிர்நிலாக்கான்றுநி ன்றிமைப்ப. (சூக)

குமுதமொண்பவளம்வீழிசெங்கோவைக் கொழுங்கனியிலவு தெங்கோப, முமிழ்நறுமதுரக்கவிரிதழ்ச்செம்மையழகெலாமொ

ருங்குசேர்ந்தன்ன, வழுதவாயரும்புமிளமணிமுறுவலலளவறுசராசரந்தழைப்ப, விமலவண்சீதநிறைதருபுதியவிளங்கொளிவெண்ணிலாவெறிப்ப. (சுஉ)

சிவபிரான்வதனத்திங்கள்கண்டலருந்திருமுகத்தாமரைப்போது, தவறுறுவிரதமுனிச்சுரும்பிடைந்தாமுகந்துண்டுளங்களிப்ப, வுவமைதிர்ஞானப் புதுமணமுகவை யுலாத்தலத்தாமரைக் குமிழ்ப்போ, தவனிமூதண்டநிலைபடைத்துய்யவானருஞ்சிறுதென்றலாங்களிப்ப. (சுங)

தண்டுழாய்நெடியோன்செல்வமுமலரோன் றன்பெருவாழ்வும்வச்சிரக்கை, யண்டர்கோனரசும்பொன்ற சோபரு மளவிலாவாருயிரனைத்தும், பண்டைமாமுனிவர்வேள்வியுந்தவமுந் தருமமும்பபூதுருதளிக்கும், வணடுவீழ்மாதுகண்மலர்க்குவளைவளரருள்வெள்ளத்துமலர. (சுச)

சுரும்பிமிர்கொன்றைத்தொடை யமு மெருகித்த தோளுடைத்துணைவனெஞ்சுருக்கும், கருங்கொடிப்புருவத்தரியபேரழகுங்கதிர்மணிமரகதநிலவு, பொருந்தியபிறையிற்பொலிந்தபொற்றிலகப் பொங்கொளிவாணுதலழகு, மரும்பெறமுகிழ்ப்பிறந்தபோர்மாரனங்கைவில்லழகழித்திலங்ச. (சுரு)

இருண்முகில்வெளிறவிருண்டுநெய்ந்நறவிரி னெறிவில்சிதைத்தெம்பிரான்றனது, திருமணிமிடற்றிற்பொலிதருந்தெய்வத் திருக்குழலியற்கைநல்வாசம், பரவைநீர்வையமாதிரம்பருதி பதமுதற்பதங்களுமமர, ரரசனைமுகன்மாலுலகமுநிறைந்தாங் கண்டகோளகைமிசைநிலாவ. (சுசு)

காளிவெண்கொற்றக்கவிகைநப்பற்றுக் கமலினியனிந்திதைமுதலோர், நாளலர்மாலைசாந்துபூஞ்சுண்ண நாவலம்பொலனணிநிறைந்த, வாளொளிமணிப்பொற்கோடிகஞ்செப்பு வகைவகையேந்தவண்கனக, நீள்பிரம்பேந்திச்சிவகணநாதர் நெடும்புகழ்நின்றுரேர்துதிப்ப. (சுஎ)

நந்தினிவிசையைசண்டினிமாயைமுதலினோர்நனிபுறங்காப்ப
மந்திரகோடியாகமத்தொகுதிவரம்பிலாமாமறைவழுத்த
விந்திரனயன்மாலுருத்திரர்போற்றவிரவியாமதிவிளக்கெடுப்பக்
கந்தவேண்முன்னோனந்திமாகாளர்முதலினோர்கைதொழுதிறைஞ்ச

மருமலர்மடந்தை கவரிநின்றிரட்டப் பாரதிமங்கலமியம்பத், தரைமக ளாசல வட்டமாங் கசைப்பச் சயமகள் விசயவா ளேந்தச், சுரர்பதிமனைவி யடைப்பைகொண்டடையச் சுந்தரியுருப்பசியரம் பை, விரைநறுங்கூந்தற்றிலோத்தமைமுதலாமெல்லியர்விளைமலர் சிதற. (௬௯)

தும்புருமுதலோர் கின்னராதியர்திவ்விதாளை நரம்புறழ்ந்தமு தூறுஞ், செம்பொன்மாமகரவீணைநன்கிசைப்பச்சிறப்பினேழ்கன்னியர்வாழ்த்த, வம்பரெண்வசுக்கருடக்கணைநதிரருரகரோடியக் கர்வான்கருடர், கும்பமாமுனிவன்முதலியவனந்தகோடிமாமுனி வர்நின்றேத்த. (௭௦)

குறளினர்சிறந்ததாளினர்நெடியர்பொருங்கநிர்மேனியர்திங்க, ணிறனுடைமெய்யர் பொன்னெனத்திகழ்வோர் நீலமாமுகிலினைநி கர்வோர், பிறைபுரையெயிற்றர்பல்படைபரந்தோர்பெருங்கனன் மலர்ந்தனசடையோ, ரறைகடன்முரலமாதிபூதங்களனைத்தையுமழி த்துமீண்டமைப்போர். (௭௧)

ஆயிரங்கோடிமாமுடிதடக்கையாயிரங்கோடிவாய்பழுத்தா லாயிரங்கோடிவதனமால்வரைத்தோளாயிரங்கோடிக்கண்க ளாயிரங்கோடிநாத்தொகைபருவாய்படைத்தவராழிவிலாவரத்தோ ராயிரங்கோடிவெள்ளமாபூதரார்கலியெனப்பரந்தார்ப்ப. (௭௨)

பத்துடனொருநூறாயிரமயுதமிலக்கமேமுதற்பலவாய [வி கொத்துறுசிரங்கள்கால்கரமுகங்கள்கொண்டுளோர்கேடகம்வாள் லத்திரம்பிண்டிபாலம்வேல்குலிசமங்குசமலப்படையாழி முத்தலைச்சூலம்பரசுநீண்முசலமுதலியமுரர்படைதரித்தோர். ()

மின்பொலிதெய்வ மேனியர்செந்தீ விடுசிகைமாலிகையணிந் தோர், பொன்புனைசடையோர்குழலினோர்செய்யபூணினோர்பொ லந்துகிலுடையோர், வன்புலியாளிவாளரிகலைமாமதகரியாதிவாக னத்தோ, ரொன்பதுகோடிசத்திகளீண்டிப்புடைதொறுமுவந்து சேவிப்ப. (௭௪)

வேறு.

துன்றுவெண்சுடர்ப்படிகமால்வரையொருதோகை
யொன்றொராயிரங்கோடிபச்சிளங்கதிரொப்ப
மன்றமூதண்டமெங்குமாமணியொளிபரப்பி
நின்றவாறுபோல்விடையின்மேற்றோன்றினளணிமலை. (௭௫)

எம்மான்மகிழத்தவஞ்செய்யுமெம்மையாளும்பராசத்தி
பிம்மான்மியத்தைமெய்யன்போடியம்பினோருங்கேட்டோரு
மம்மால்பிரமன்முதற்றேவரடைதற்கரியபதவியினிற்
செம்மாந்தின்புற்றிருக்கவருள்செய்வாளென்னுநான்மறையே. ()

பராசத்திச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-ககளுக.

---

## சங்கதீர்த்தச்சருக்கம்.

போதவிழ்ந்தபொற்கொன்றையம்புங்கவன்
பாதபங்கயம்போற்றிப்படிமைசால்
சூதனென்னுமுனிவரன்றொல்புகழ்
வேதமாதவர்கேட்கவிளம்புவான். (க)

வேறு.

கங்கையாற்றுப்புனல்வேணிக்கடவுளாரூர்நகரொன்னு
மங்கையாற்றும்புண்ணியம்போன்மல்கியுலகம்புகழ்ந்தேத்தச்
சங்கதீர்த்தமெனும்பெயரிற்றயங்குதீர்த்தமொன்றுளதப்
பொங்குதீர்த்தப்பெருமைமலர்ப்புலவனுக்கும்புகலரிதால். (உ)

அமுததீர்த்தமென்றறைவாராதிப்பேர்மற்றப்பொய்கை
யுமைமணாளர்புற்றிடங்கொண்டுறைவோர்கோயின்முன்பொலியுங்
கமலவாசப்புதுவேரிகமழுமந்தத்தடம்படிந்தோர்
சமரவேற்கணரம்பையர்பூஞ்சந்தக்கொங்கைத்தடம்படிவார். (ங)

தண்டாமரையான்முதலிமையோர்தணவாதினிதுதாம்போற்றி
வண்டார்மலர்சூழத்தடத்தின்மருங்குவாழ்வாரத்தீர்த்த
முண்டார்தாயர்முலையமுதமுண்ணார்கண்ணாலொருபோது
கண்டார்கடியவெங்கிரயங்காணார்கயிலைகாண்பாரே. (ச)

வேறு.

ஒருவிசைமற்றதன்பேருரைப்பினுங்
கருதினுங்கோடிவெம்பாவங்காய்கதி
ரிரவிமுன்னிருளெனவிரியுமன்னதன்
பெருமையையாவரோபேசவல்லரே. (ரு)

எப்பொருளேனுமந்தவிரும்பொருளுடையோர்க்காணு
தப்பொருள்கவர்ந்தாற்சோரமாற்றியகுற்றமெய்து
மெய்ப்பெருவேதவாய்மையின்மொழியெனவிளம்பி
யொப்பருந்தவத்தின்முன்னோனுளமிகவெதும்பினானால். (கச)

முன்னவன்மாற்றஞ்சங்கமுனிவரன்கேட்டுமுன்னோன்
றன்னடிதொழுதித்தீமைதணந்திடப்புரிதியென்று
வின்னலுற்றிசைத்தலெல்லையிருங்கரமரிந்தான்வீரன்
வன்னிசெய்தவறுதீர்ப்பான்வண்கரமரிந்ததேபோல். (கரு)

செங்கைமாமலரரிந்துமுன்னவன்றிருத்தாள்போற்றிச்
சங்கமாமுனிவனென்போன்விடைகொடுத்தணைந்துபோகிப்
பங்கயாசனமடந்தைபதிதருமுன்றலையளித்த
வெங்கணாபகனூரிலெய்தினனெய்தியாங்கு. (கசு)

தெண்புனலமுதநீர்த்தச்செழுமலர்ப்பொய்கைப்பாங்கர்
வண்புனன்மிலைந்தசென்னிவன்மீகநாதற்போற்றி
யொண்பெருந்தவம்புரிந்தங்குறைந்தனனுறைந்தவேலை
கண்பெறுநெற்றிஞானநாடகனருள்செய்தினனோ (கஎ)

எய்தியேயுயிர்கடோறுமநாதியாய்ப்பிணித்துறைந்த
மைதவழ்கண்டன்வேண்டும்வரம்புகலென்றபோது
பொய்தவிர்முனிவன்றாழ்ந்துபுகழ்முறைபோற்றியார்க்குங்
கைதருங்கருணைவள்ளலேகைதரவேண்டுமென்றான். (கஅ)

கைதரவேண்டுமென்றுகாலிணைதொழுதகாலைப்
பொய்தருமருங்குற்பச்சைப்பூங்கொடிபாகன்சொல்வான்
மைதவிர்சித்திரைப்பேர்மாபெருந்திங்கடன்னி
லெய்துசித்திரைப்பேர்நாளிலிபம்புநாள்விதிவழாமல். (ககூ)

பாணிமற்றதனின்மூழ்கிப்பாணிவந்தெய்துமென்று
வேணியிற்பாணிவைத்தோன்விளம்பலுமுனிமகிழ்ந்து
தாணுவைப்போற்றியிந்தத்தனித்தடமெனதுபேரா
னீணிலத்தோங்கவெந்தாய்நிறையருள்புரிதியென்றான். (உo)

ஆணையதோர்வரமுநல்கிமறைந்தனனமலனங்கீர்
முனிவர்கோனஞ்ஞான்மூழ்கமுகையிலாமுளரித்தாளி
னிணையவிழ்தெய்வச்செம்பொனுண்மலர்மலர்ந்தாலென்னப்
புனிதனதருளினாலேபூங்கரம்வளர்ந்ததன்றே. (உக)

பெரும்புகழ்த்தக்கனுர்க்குமனையவர்ப்பெற்றசெங்கேழ்த்
திருந்தியமலரினுர்க்குமவர்ப்பெறுந்தேவனுர்க்கு
மிருஞ்சிரமளித்தவெங்களீசனுர்கருணைபெற்றோர்க்
கரிந்தகைவளர்வதம்மவற்புதமாகுங்கொல்லோ. (௨௨)

அற்றமிலருந்தவத்தோனமுதகிரத்தம்படிந்து
புற்றிடங்கொண்டஞானப்புனிதனையருளிஞலே
யிற்றதன்கரமுமெய்திப்பெய்துதற்கரியபேறும்
பெற்றனனவன்பேரந்தத்திர்த்தமும்பெற்றதன்றே. (௨௩)

விளங்குமிச்சங்கதீர்த்தவிசேடமுமறிந்துசொலவோ
ருளங்களிகூரக்கேட்போரொருகுறோய்முடவரேனுங்
களங்கமில்வடிவம்பெற்றுக்கடலுலகாண்டுபின்னை
ரிளங்கலையணிந்தவேணியிறையவன்பதத்தினேய்வார். (௨௪)

சங்கதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-௧௧௮௯

---

## சமற்காரச்சருக்கம்.

சங்கபாணிகலையுருத்தரித்தவாரணாயணன்
சரணபங்கயந்தலைத்தரித்தகுருதமாதவன்
சங்கமாயமுனிவர்தம்மைநோக்கியிங்கதலைமைசால்
சைவவைதிகத்தொழுங்குதவறுமுத்தன்மையான்
சங்கனென்னுமுனிவர்கோன்றனக்குமுன்குறைப்படுந்
தடக்கையம்பொன்வாரிசத்தயங்குபோதுதந்ததோர்
சங்கதீர்த்தவன்பெயர்த்ததும்புநீர்கொள்வாவியின்
றுவில்காதைபின்னுமொன்றுதானெடுத்தியம்புவான். (௧)

ஊனருத்தியலகைவெங்கணத்தினுக்குருத்தெழு
மொன்னலார்தமுதிரமுண்டவொளிறுதாரைவாளினுன்
றேனருத்தியஞ்சிறைச்சுரும்பினுக்குநறுமணந்
தேனினத்தினுக்களித்தசெய்யதாரலங்கலான்
மீனருத்திமென்பெடைக்குவெண்குருகுதாமரையின்
மிசையிலங்குதுறையிலஞ்சிவிரியுநீரகன்பணை
யானருத்ததேசமன்னனவனிமன்னர்தம்பிரா
னண்டகோடிமண்டியேறுமளவிலாதபுகழினுன் (௨)

மருவிருந்தசெய்யகஞ்சமயிலிருந்தமார்பினன்
வண்டிருந்தவெண்மலைக்கண்மானிருந்தநாவினு
னருவிருந்தசிறுமருங்குலமுதிருந்தகுமுதவா
யவனிமங்கைவிசயமங்கையன்பிருந்ததோளினன்
றருவிருந்தவண்கொடைத்தடக்கைவாரிசத்தினன்
சங்கிருந்தவேலையிற்றழங்குமும்முரசினு
னுருவிருந்ததருணமாரனைப்பிருந்தபொற்பினு
னுமையிருந்தபங்கனின்பவெளியிருந்தநெஞ்சினன். (ங)

நூறுகோடிவண்டினத்துமொய்த்துவீழ்ந்தெழுந்துசூழ்
நுண்டுளித்தரங்கம்வீசுநுரைவிரிந்தகரியசா
ரூறுகோடியொத்திழிந்ததானமாலியானையா
னரசர்கோடிமகுடகோடியுழுதபாதனுளிமா
வேறுகோடிபோலுமொய்ம்பினிவுளிகோடிகோடிசூ
ழிரவிகோடியெனநிலாவுமிரதகோடியொருபிரான்
பாறுகோடிகோடிமீதுபந்தரிட்டுலாவுவேற்
படைவிசாகனனையமீளிபரவைநேர்பதாதியான். (ச)

கோதுதீரறப்பசுங்கொடிபடர்ந்தகோலினன்
கொடியபாவவேனிலாறநீழல்செய்தகுடையினன்
வேதநூலின்விதிவழாமல்வேள்விகோடிசெய்துளான்
விமலநீறெறிந்தவெண்ணிலாநிலாவுநுதலினு
னாதியீசனஞ்செழுத்தினுண்மைகொண்டவறிவினு
னரியசைவவைதிகத்தமைந்தநலமெலாமுகசமா
நீதியோம்புநிலைமையானிலைபடைத்தவாய்மையா
னிதியினீடுமளகைவேந்துநிகருறுதிருவினன். (ரு)

மனுமுறைப்பசும்பயிர்க்குவேலியாயமாட்சியான்
வன்புலிக்குழாத்தினோடுமானினத்தையொருதுறைப்
புனலருத்துமாணையான்புகன்றவாகமப்படி
புனிதவீசனாலயங்கள்பொலிவுசெய்துபூசனை
யினிதமைத்தகுரிசில்கல்விவாரிநீந்தியேறினே
னிருள்சுருக்கிவெயில்விரித்தவிரவிவானவன்குலத்
தனகன்மிக்கதுலையையாதிதானமெண்ணிலாதன
வந்தணர்க்களித்தசெம்மலவனிகாக்குமாழியான். (சு)

வேறு.

படைகுடிகூழமைச்சுநட்பரண்படைத்தமன்ன
னடலுடையரசரேறென்றறைந்தநூற்பொருள்விளங்கப்
புடவிமேல்விளங்குந்தோன்றல்பொங்கொளிவயிரம்வேய்ந்த
தடமணிமகுடவேந்தன்சமற்காரனென்னும்பேரோன். (எ)

அன்னதோர்மன்னனின்றவனியலவனியோம்ப
மன்னிவீற்றிருக்குநாளின்மற்றவனொருநாள்வையம்
பொன்னவிரோடையானைபொருபரிவயவர்சூழ
மின்னிவர்முகிறேய்கானின்வேட்டைமேற்கொண்டுபுக்கான். (அ)

வேறு.

மிடைந்திருள்படப்பொதுளிமேகமிசைமொய்த்துக்
கடங்கொள்வயமாமுதல்விலங்குசெறிகான
மிடைந்தகரிமீன்முதலமீனமகலாத
நெடுந்திரையலம்புகருநீருவரியொக்கும். (கூ)

அரியொலிகருங்கைவிறலாளியொலியாமும்
கரியொலிகருங்கடமையென்குகருமேதி
வரியொலிமலிந்தபலபுள்ளொலிமதுத்தேன்
விரியொலியவ்வேலையெழுமிக்கவொலியொக்கும். (க0)

பரவியபசும்புயல்படர்ந்துமிசைமொய்த்து
விரிதருகருந்தழைமிடைந்துவெளியின்றி
யிருள்படுவனத்திடையிடைப்பருவட்டுச்
கரியவரையக்கடல்கடைந்தவரையொக்கும். (கக)

திரண்டொழுகுவேரின்முதல்சேடனசிரத்திற்
பொருந்தமிசைநீண்டசைகருந்தழையபொய்சார்
நெருங்கியமரத்தொகுதிநெட்டரவினோடு
மரம்பொருமிலங்குசுடராழிமுகில்போலும். (கஉ)

வரைத்தலைவரைத்தொகுதிவான்பொருதுநிற்றல்
சுருட்குழலரம்பையர்சுனைப்புனல்குளிப்பான்
பொருப்பிடையிறங்கமணியாற்புனையுமேணி
நிரைத்திமரர்கம்மியனிறுத்தியதுபோலும் (கங)

மாசறுவிசும்புழுதமால்வரையினுச்சி
வீசுசிறுநுண்டிவலைவெள்ளருவிவீழ்த
லாசறுதவம்புரியுமண்ணலொருவற்கா
வீசன்முடிநின்றினிதிறங்குநதிபோலும். (கச)

வேறு.

செறிந்தசந்தனச்சாரலஞ்செழுஞ்சுனைச்சிலம்பிற்
குறும்புழைப்படமிருவிடைக்கோடுகொண்டுழுது
நறுந்துளிக்கொடுவார்ந்ததேனேற்றுநன்கருத்தி
மறங்கொள்போதகம்பிடியொடுவதிவனவொருபால். (கரு)

வெங்கண்வாரணக்கோட்டடிவெண்குருத்தகழ்ந்து
பொங்குதிங்களங்குறுமுளைபோலளித்தளியா
லங்கணூடநீர்த்தன்புசெய்தலங்குளைநெற்றிச்
சிங்கவேறிளந்துணையொடுதிரிவனவொருபால். (கசு)

கூனல்விற்கொலைவேட்டுவராக்கியகொழுந்தா
ளேனனற்குறும்பசுங்குரலினிதுசந்தீந்து
கானியாற்றகன்றுறைப்புனலூட்டியேகலைமா
மான்மடச்சிறுபிணையொடுமேவிவனவொருபால். (கஎ)

நீர்செய்வாய்ச்சிறுசிதலையாக்கியநிறைசோறு
வார்செய்புற்றடிவயிறகழ்ந்தெடுத்துடன்வழங்கிக்
கூர்செய்வானுதிக்கோடுகொக்குடாவடியுளியங்
கார்செய்கல்லளைப்பிணவொடுகலப்பனவொருபால். (கஅ)

துகல்விசும்புதோய்துகிலுடங்கருவிதாழ்நெற்றித்
திகழ்சிலம்பிருஞ்சாரலந்தீம்பலாககனியி
னகநறுஞ்சுளையளித்திளமந்தியோடணைந்து
மிகமகிழ்ந்துபல்கவியினம்விரவினவொருபால். (கக)

மல்லலீர்ந்துளிமழைதவழ்வனமலைச்சாரற்
பல்லமாமணிவரன்றிவீழ்பகறலையருவிக்
கல்லெனோசையமிழுல்பொதிசணங்கொள்வண்டொலிக்கு
மொல்லெனோசையுஞ்சருவியேமயங்கிடுமொருபால. (உ0)

விரித்தஞாயிறுவிடுகதிர்நுழைந்திடாவனத்து
வரைத்தடங்குளிர்சாரல்வாய்ச்சூன்முதிர்மழைவா
யிரைத்தவோசையும்பூணுதலினம்பிறைமெயிற்றி
னெருத்தல்யானையினோசையுமயங்கிடுமொருபால். (உக)

காந்தளங்குலைப்பாந்தள்வாய்கான்றசெம்மணிக
ளேய்ந்தவேய்படுதீயொடுதீயமாமரங்க
ளேந்துசெந்துணரிலவொடுபலாசமின்கனிகள்
வாய்ந்ததொன்மரமற்றிவைமயங்கிடுமொருபால். (உஉ)

வேறு.

இன்னபல்லவண்மைசாலுமிருள்வனத்திலிருவில
மன்னனெய்துமன்னவெல்லைமற்றவன்றனாணையாற்
கொன்னுனையபகழிவிற்குறிஞ்சியர்குறிச்சிவாய்த்
துன்னுவேடரொடியெறிந்துசூழ்ந்துவாரொழுக்கினார். (௨௩)

வாரொழுக்கிவலைபிணித்துவளையமுந்தவனமெலா
மூரிநெட்டலைக்கடன்முழக்கொனத்துடிமுழக்குமத்
தூரியத்தொடிரலைபம்பைதுன்னவெனத்துவைப்பநீள்
காருடற்கருங்கைவேடர்கைவிளியெடுத்தனர். (௨௪)

கைவிளியெடுத்துவேடர்கானமாவெழுப்பலுஞ்
செய்யபொன்முடியினான்சிலைத்தலைவனார்கவே
வெய்யகொல்லுலையழல்வெந்துசோரிதோய்ந்தகூர்
நெய்யொழுகுமொள்ளிலைநெடுஞ்சரங்கடூவினான். (௨௫)

மானவேந்தனேவுபல்லவாளியின்பரப்புமைம
கானமெங்குமிடையறாதுமொய்த்துவீழ்ந்தபான்மையால்
கூன்முதிர்ந்தகொண்டல்விண்டுசொரியுமாரிவிரியுநீர்
மீனறாதநீலவேலைமீதுவீழ்தல்போலுமே. (௨௬)

மொய்த்தவாளிமும்மதமுகக்கரும்பனைக்கைமா
மத்தகத்தினூழ்கவிண்டுவார்ந்தசோரிமாமணி
நித்திலத்தொடொழுகிவீழுநீர்மையாலியோடுங்கன்
மைத்தகார்சிவந்ததாரைமாரிதூவல்போலுமே. (௨௭)

சிங்கவேற்றினக்குழாஞ்செறிந்திடும்பரப்பினி
லங்கிவாய்நெடுஞ்சரமணைந்தகாலையங்கெழும்
பொங்குசோரியிடையிடைப்பொலிந்தவண்ணம்பாற்கட
லெங்குமந்துகிர்க்கொழுந்திலங்குவண்ணமொக்குமே. (௨௮)

பொறிபரந்தமுரணுடற்புலிபரந்தசூழலி
னிறைசரங்கண்மொய்த்தலுநிவந்தசோரியவ்வனஞ்
செறியும்வேங்கைமலர்விரிந்தபாறையூடுசெம்மணி
யுறைகொள்வெள்ளெயிற்றராவுமிழ்ந்தவண்ணமொக்குமே. (௨௯)

கருமயிர்க்கொள்காருடற்கருங்கைபெண்கினம்பல
பரவிடும்பரப்பில்வாளிமொய்த்திடப்பரந்தெழுங்
குருதிவண்ணமிடையறக்குழீஇயசைவலக்குளத்
தருணவண்ணவம்புயமலர்ந்தவண்ணமொக்குமே. (௩௰)

வேறு.

செங்கட்கருங்கோட்டுக்கவையடித்தியசிற்றத்
துங்கப்பகட்டினினச்சூழலில்வாளிதுன்னப்
பொங்கிப்பொழிசோரிதண்கார்வரையூத்தகாந்தட்
பைங்கட்குலைக்காடுவிரிந்தலர்பான்மைபோலும். (௩௧)

வளைவெள்ளெயிற்றுக்கரும்பன்றிமலிந்தசூழ
லொளிவைநுதிவெங்கணைமொய்த்திடவூனெழுந்த
மிளிர்செய்யசோரிவரைவேய்படுவெய்யதீயத்
தளிர்செய்கருங்காட்டிற்படர்ந்தெரிதன்மைபோலும். (௩௨)

இவ்வண்ணநிகழ்ந்திடவெஞ்சமரூறுமீண்டியேந்தல்
கைவண்ணவில்லுமிழுங்கணையாக்கைபோழ
மைவண்ணவேழமரிமாமுதன்மாக்கண்மாண்ட
செவ்வண்ணவானில்வனமெங்குஞ்சிவந்ததன்றே. (௩௩)

வேறு.

பாறொடுகோகநிரந்தனபாய்தருசோரிநெடும்புன
லாறொருகோடியெழுந்தனவாளியையாதியடுந்திறன்
மாறுடைமாவினிரும்பிணம்வானளவாகவளர்ந்தன
வீறுயர்மாமகிழ்சந்தகில்வேய்படுகானகமெங்குமே. (௩௪)

வேறு.

பூவினுக்கூறுபுரிந்தகருங்கை
மாவினுக்கீறுவழங்குபுசோரி
யேவினுக்கூட்டிடுமெல்லையினுங்குக
கோவினுக்குற்றதுகூறுதுமன்றே. (௩௫)

வேறு.

கொய்யுளைவிசயமான்றேர்குருதிகொப்பளிக்குங்கூர்வாய்
வெய்யவேற்செங்கோன்மாலைவெண்குடைவேந்தன்வேட்டை
செய்யுமவ்வேலையாங்குச்செழுந்தளிர்செறிந்துமொய்த்த
மைதவழ்சினைசூழ்வாசமலர்வனநீழறன்னில். (௩௬)

விரிமணலூற்றிற்சாலமிகச்சுரந்தூறுந்தீம்பால்
வரியிளங்கன்றிற்கூட்டிவைகுமோர்மானின்மீது
தருமநூலுணர்ந்தவேந்தன்றனிச்சரந்துரப்பத்தைத்தாங்
குருவியதந்தோதொல்லையூழினையாவர்வெல்வார். (௩௭)

பொருசிலையுருவக்கோலிப்போக்கியபுங்கவாளி
யுருவியகாலையேங்கியொல்லெனவரற்றிமாழ்கி
வருதருகண்ணீர்மாரிவார்ந்திடப்பதைத்துமன்னன்
திருமுகநோக்கியாங்குத்தெருமந்துமடமான்செப்பும். (௩௮)

காவலகேட்டிநின்கைக்கணையினுமையானிறந்து
போவதுதனக்காவந்தோபுலப்பலன்பொழியும்பால்வாய்த்
தாவிளஞ்சிறியகன்றின்றனிமைமேதுளாகின்றே
னுவிதுபுரிந்ததன்மையறம்பொலோமரசவேறே. (௩௯)

சிற்றிளங்கன்றிற்கீர்ம்பாலூட்டியமெய்வினைச்செற்றாய்
கொற்றவநின்மேல்வெய்யதூட்டநோய்படுகவென்று
சொற்றதுகேட்டுவேட்டைதுமொழிமுறைபுரிவதம்ம
குற்றமன்றரசர்க்கென்னச்சொல்கூறனைகொடியசாபம். (௪௰)

என்றவனிசைப்பவேட்டையிழைத்திடுமறனேவேந்தர்க்
கொன்றியபுணர்ச்சிதன்னிருண்டிடப்பொண்பாலூட்ட
னன்றினிதுறங்கல்செய்யும்விலங்கைநோய்நனிகொள்சூலான்
மன்றமேவவருந்துமாவைவதைப்பதுதருமமன்றால். (௪௧)

எனமொழிந்திறந்ததம்மான்பிணையாக்கையெங்கு
நனிபடர்ந்ததுவெண்குட்டநரபதிபதைத்துவெய்யி
னினைவழிந்தமைச்சராதியிறைபெருங்குழுவைநோக்கிக்
கனவிடுமெழுகேயென்னநைந்திவைகளைதலுற்றான். (௪௨)

கோவியன்முறைபிழைத்துக்கொடுந்தொழில்புரிந்தவாற்றாற்
பாவியேற்கிந்தத்தீமைபலித்ததிப்பழிகொள்வெந்நோய்
போவதுபுரிந்திடாதுபொருநானடையையங்
காவல்பூண்டுறைதலசெங்கோற்காவலர்கடமைத்தன்றால். (௪௩)

ஆதலால்விரதம்பூண்டிங்கருந்தவமிழைப்பனின்னே
போதுவனீவிர்போகிப்புதல்வனைமௌலிசூட்டி
நீதியினெறிவழாதுநிலைமைசாலறந்திருத்தி
யோதநீருலகங்காவல்செய்மினென்றோதினனே. (௪௪)

ஓதியமாற்றந்தீக்காய்ந்தொழுகியசலாகையென்னக்
காதிடைமடுத்தலோடுங்கதுமெனப்பதைத்துமாழ்கி
யாதகாதந்தோவந்தோவையநிற்பிரிதலாற்றேம்
போதுதும்யாமுமென்னாப்புகன்றனரமைச்சர்முன்னோர். (௪௫)

மற்றவர்தம்மைத்தேற்றியெனதுபாணிவிர்வைத்த
பற்றினையான்பயந்தபாலகன்றன்பால்வைத்துக்
குற்றமிலறத்தினோடுங்குவலயம்புரப்பியென்னாச்
சுற்றியசுற்றத்தோடுமமைச்சரைத்தூண்டினானே. (சசு)

அன்னவராணையநீங்குஞ்சிறுவரினழுதுதேம்பி
யின்னலுற்றிரங்கிநீங்கியேகினாரிதுதேறிப்
பொன்னிளம்பரிதிபோலும்புதல்வற்குமுடிபுனைந்தாங்
கிந்நிலம்புரந்தாரிப்பாலிறையவன்செய்கைசொல்வாம். (சஎ)

வேறு.

தாமானறைந்தசாபத்தாற்சார்ந்தபழிவெம்பிணிதீர்ப்பான்
கோமான்றவங்கள்பலபரிந்துங்குன்றாவிரதம்பலவிழைத்தும்
பூமான்றன்னைவலஞ்செய்தும்புனிதநதிகள்பலபடிந்தும்
வாமான்மருவுங்கரத்தெம்மான்வாழும்பதிகள்பலதொழுதும். ()

பன்னாள்வருந்தியுடறளர்ந்துபருதிகுலத்தோனமற்றந்த
வெந்நோயகலாத்தன்மையினால்வெம்பியுள்ளமிகவாடி
யன்னோவென்னாவலமருநாளொருநான்முன்னாளறப்பயனா
லென்னையகனேழுலகேத்துமீசன்மறைக்காடெய்தினனால். (சகூ)

வேறு.

மறைவனமெய்தியமன்னன்வானதி
நிறைசடைநிமலனைநெஞ்சிருத்தியே
குறைதவிர்தவம்புரிகோசிகன்றன
தறமலியாச்சிரமத்தடைந்தனன். (ரு0)

வேறு.

ஆயதொர்காலையறங்கரைநாவினர்
தூயவெண்ணீறுதுதைந்தொளிர்நெற்றியர்
காய்புலன்வென்றவர்கண்டிகைமெய்யினர்
மாயைகடந்தவர்வஞ்சமகன்றோர். (ருக)

சடையினர்கருணைதழைத்தமுகத்தினர்
குடையினர்கோதில்குணத்தினர்வற்கலை
யுடையினர்வைதிகசைவவொழுங்குடை
நடையினராகமநான்மறைவல்லோர். (ருஉ)

கோலினரொண்கரகத்தினர்கோலமு
நூலினர்வேள்படைநூறியஞானவை
வேலினர்வேதம்விளம்பியமிக்ககல
லாலினராலயமாயவகத்தோர். (௩௩)

மோகமுதற்பலகுற்றமுருககினர்
யாகவலத்தினர்சித்தியொரொ டினர்
யோகநிலைக்கணுயர்ந்தவரொப்பில
ராகியமிக்கவருந்தவர்பல்லோர். (௩௪)

வேறு.

தடந்திரைக்கங்கைநீர்முதலதண்புனல்
குடைந்தனர்பூவலங்கொண்டுவந்தவ
ணடைந்தினிதுறைந்தனரவரைச்சண்டனன்
கடங்கலுழ்யானையான்கழலவணங்கினன். (௩௫)

தன்குறைதன்குலந்தனதுபேருரை
தென்குறையகலுமாறியமபுமின்னிவ
ணன்குறைமனத்தினீரொனநவின்றபோ
துன்குறையொழியுமாறுரைப்பககேட்டியால். (௩௬)

புண்ணியன்புற்றிடங்கொண்டபுங்கவ
னண்ணுமாறுரொனுநகரிடத்தினிற்
றண்ணிறைமலர்கமழ்சங்கதீரத்தப்பே
ரொண்ணறும்புனற்றடமொன்றுவைகுமால். (௩௭)

மற்றதின்மூழ்கியேமதியுலாஞ்சடைப்
புற்றிடங்கொண்டவற்பேற்றினின்புடை
யுற்றவெண்குட்டநோயொழிந்துநீங்குமென்
றற்றமிலருந்தவரறைந்தகாலையில். (௩௮)

வேறு.

இறையவன்மகிழ்ந்துபோற்றியெளியனேனுய்யுமாற்று
லறநெறிமுனிவீர்நீவிரனைவருமுடனபோந்தந்த
நறைகமழ்சங்கதீர்த்தநற்புனலபடிவித்தென்னை
நிறையருள்புரிவீரென்னநிகழ்த்தினனிகழ்ந்ததலோடும். ()

மாதவர்கருணைகூர்ந்துமற்றவறகொடுபோயந்தச்
சீதளவமுதவாவிமூழ்கிடச்செய்தவெல்லை
பூதநீரதுபடிந்துபொருதிரையமுதவேலை
யாதவனெழுந்தாலென்னவரசர்கோனெழுந்தானம்மா. (௪௦)

வேறு.

பொய்கொளிபெற்றெழுமெல்லையிலொல்லையில்புகழ்மன்ன
னுங்கடமக்கேயீந்தனனென்றானுலகெல்லா
மங்கிதுகேட்டினிதாசிபகர்ந்தேயறவோர்கள்
வெங்களியானையவ்வேந்தனைநோக்கிவிளம்புற்றார். (சுக)

வேந்தர்முடிக்கேவேய்ந்தகழற்கால்விறலோய்நீ
யீந்தகடற்பாரியாவுமுனக்கேயீந்தோம்யாம்
வாய்ந்தமணிப்பொற்புற்றினகத்தேவாழ்வார்தம்
பூந்தண்மலர்த்தாள்போற்றுபுநாளும்புகழாரூர். (சுஉ)

மேவியருந்தவநோன்பினிதாற்றிவிருப்போடுந்
தாவில்வளத்தினியாங்களிருப்பத்தாபித்தே
காவலநாளுங்காத்தருளென்றேகழறக்கேட்
டோவறுபேருவகைக்கடலாடினனொளிவேலான். (சுந)

உள்ளமகிழ்ந்தேயம்முறையாற்றுவனெனவோதி
யெள்ளருநீறுபுனைந்துகடன்களியற்றிப்போய்த்
தெள்ளியநான்மறைமாதவரோடுந்திருவாரூர்
வள்ளலுகந்துறைகோயிலடைந்தான்மழைவள்ளல். (சுச)

வேறு.

வள்ளலாலயமெய்தினான்வலங்கொடுபணிந்தா
னுள்ளமென்புநெக்குருகினானுடலெலாம்புளகப்
புள்ளிபோர்த்தனன்விழிமழைபொழிந்தனன்பொங்கும்
வெள்ளவானந்தவேலையின்மூழ்கினான்வேந்தன். (சுரு)

இன்னதன்மைசாலிறைமகனீறிலாவாரூர்
மன்னுபுற்றிடங்கொண்டதோர்மாணிக்கமணியைத்
தன்னிரண்டுகண்மாமணிகுளிர்ந்திடத்தான்கண்
டுன்னருந்தனியன்பினாலேத்துதலுற்றான். (சுசு)

வேறு.

தவளநீறுதயங்கிய
பவளமேனியம்பரமனே
கௌரிகாமுறுகாமர்தோட்
புவனநாயகபோற்றியே. (சுஎ)

வினைகொள்வெம்பிணிவீட்டியே
யெனையளித்தருளெந்தையே
சனகராதியர்தாந்தொழும்
புனிதநாயகபோற்றியே. (சுஅ)

நீண்டகார்புரைநேமியான்
மாண்டவாவிவழங்கியே
யாண்டநாயகவாடராப்
பூண்டநாயகபோற்றியே. (சுகூ)

சாற்றருஞ்சதமாமக
மாற்றுமிந்திரனுற்றிய
மாற்றரும்பவமாற்றிடப்
போற்றுநாயகபோற்றியே. (எ0)

பகைவர்வாழ்புரம்பாழ்பட
நகையினாலடுநம்பனே
யகிலமுய்ந்திடவாரணம்
புகலுநாயகபோற்றியே. (எக)

நீதில்பூசனைசெய்ததோர்
வேதனார்க்குவிதித்தொழி
லாதிநாளிலளித்தருள்
பூதநாயகபோற்றியே. (எஉ)

வேறு.

என்றுபோற்றியிறைவனையைம்புலம்
வென்றமாதவவேதியர்தம்மொடு
மன்றவன்பின்வணங்கிவிடைகொடு
குன்றவில்லிதன்கோயிலைநீங்கினான். (எஙு)

நீங்கியேநெடுவிசும்பூடறுத்
தோங்குகோபுரவாய்தலினுற்றுளோர்
தீங்குதீர்க்குந்திருந்தருண்மாதவர்
பாங்கர்சூழவிருந்தனன்பார்த்திபன். (எச)

விரவுமாதவர்தம்மொடுமேவிய
வரசனெல்லையமைச்சரருங்கிளை
யுரியமைந்தன்மற்றுள்ளவர்யாரையும்
வரவழைத்தனன்மற்றவனென்பவே. (எரு)

வேறு.

அழைத்தபின்னரசர்கோமானமரர்கம்மியனுமொவ்வாப்
பழிப்பில்கம்மியரைக்கூவிப்பதியிதுதன்னிலிந்தத்
தழைத்தமாதவர்கள்வைகத்தமனியச்சிகரமாட
மிழைத்தினிதமைத்தியென்றிசைத்தனனிசைத்தவெல்லை. ()

நூன்முறைவீதிபோககிருண்வினைவாய்ந்தசெம்பொன்
வானுயர்சிகரமாடம்வரம்பிலவகுத்தமைத்தாங்
கேனையபிறவுமெல்லாமினிதிழைத்திமையோர்தங்கள்
கோனுறைநகருநாணக்குலவணிதிருத்தினானே. (எஎ)

வேறு.

மற்றதுகாலைமன்னவனந்தமறையவர்தம்மையாரூரி
லற்றமில்சிறப்போடமர்ந்திடத்தாபித்தருளினான்றில்லைமூதூரி
னற்றவம்பழுத்தவேதவந்தணரைநலம்பெறவினிதுதாபித்த
விற்றிடாப்புகழினிரவிதன்குலத்தினிரணியவருமனேயென்ன. ()

அருமறைமுதியோர்தங்களைத் தாபித்தருளியவரசர்தம்பெருமான், றனைபுகழ்ந்தேத்தும்பதியிதுதன்னைத்தண்ணளிபுரிந்துகாத்திடுவோர், புரவிமாமேதமுதலியவேள்விபுரைதவிர்சாந்திராயணப்பேர், விரதமேயாதிவேறுபலவிரதம்விதியொடுபுரிந்தநற்பயனும்()

கங்கைகாளிந்திமுதனதிபடிந்த கருதரும்புண்ணியப்பயனுந், திங்களஞ்சடையான் றெரிசனப்பயனும் பெறுகவித்திருநகர்ப் பதியைத், தங்களின்னுயிர்போலொடாறுங்காத்துத்தண்ணளிபுரிந்திடாரைந்து, வெங்கொடும்பாவமவிளைத்ததீப்பேறுமேவுகவெனவிளம்பினனே. (அ0)

அதுதிறமவிளம்பி யமைச்சராதியரை யரும்பெறன்மைந்தனை நோக்கி, யித்திருநகரையினிதுகாத்தருண்மியென்றிசைத்தரசதுறந்து, நித்தனையாரூர்ப்புற்றிடங்கொண்டநிமலனைநித்தலும்வழிபட், டுத்தமவிதியிற்றுறவறம்பூண்டாங்குறைந்தனன்முனிவரோடுரவோன். (அக)

திருவளர்சங்க தீர்த்தநீர்படிந்த திறத்தில்வெண் குட்டநோயொழிந்தாங், கிரவிபோலொளிபெற்றிருந்தவநெறிபூண்டெம்பிரானின்னருள்படைத்த, வரசனந்தணரைநன்குதாபித்தவன்றுதொட்டணிதிகழாரூர், புரைதவிர்சிறப்பிற் புகழ்ச்சமற்கார புரமெனப்பொலிந்ததுபுவிமேல். (அஉ)

வேறு.

பன்னருஞ்சங்கதீர்த்தப்பைம்புனற்றடம்படிந்து
துன்னியபிணிவெஞ்சாபந்தொலைவுறுப்பவந்தொலைத்து
மன்னியதிருவின்மல்கிவான்கதிபெற்றோர்காதை
பின்னருமனந்தமுண்டாலீறிலாவிருந்தவத்திர். (அரு)

எம்பிரானருள்பெற்றோங்குமிச்சமற்காரன்காதை
நம்பிநன்குரைப்போர்கேட்போர்நலியும்வெங்குட்டமாதி
வெம்பிணியுறாதுவாழ்ந்துவிளம்பருந்துறவறம்பூண்
டும்பர்கள்புகழவீசனுலகிலின்புறுவாரன்றே. (அச)

சமற்காரச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஉசுக

---

## அசலேசச்சருக்கம்.

திருமறைமுனிவர்தம்மைச்செல்வவாரூரிற்றாபித்
தருளியவரசர்கோமானசலேசன்றனைத்தாபித்த
தனைபுகழ்தருமிக்காதைசவுனகமுனிவனாதி
யிருளறுமுனிவர்கேட்பச்சூதனுங்கிசைக்கலுற்றான். (க)

வேறு.

அரசுதுறந்துதுறவறம்பூண்டாரூரமர்ந்தசமற்கார
நிருபர்கோமான்புற்றிடங்கொணிமலமூர்த்திதுணைமலர்த்தாள்
கருதியைந்துபுலப்பகைவர்க்கடந்துவிரதநெறிகடவா
திருளிலாவஞ்செழுத்தெண்ணியெண்ணவரியதவமிழைத்தான். ()

வருடநூறுகாய்கனியின்வருக்கவுணவுமிசைந்துற்றான்
வருடநூறுதனையுதிர்ந்தவாடற்சருகங்கருந்தினான்
வருடநூறுவிதிமரபின்மணிநீர்பருகிவைகினான்
வருடநூறுமாருதமுண்டிருந்தானரசமாமுனிவன். (ங)

இன்னமுறையினிவையருந்தியாண்டுநானூற்றெல்லையள
வுன்னவரியபெருமானையொப்பிலாரூருகந்தானை
மன்னுமணிப்புற்றுறைவானைமனத்திலிருத்திப்புலன்வாட்டிப்
பன்னவரியதவநிலையிற்பயின்றான்பருதிகுலவேந்தன். (௪)

வேறு.

அவனிபுகழரசர்பிரானரியதவநிலைகண்டு
பவளமலர்கமலமலர்பச்சொளிமின்னெடுபடிகத்
தவளமலைத்தோன்றியசெந்தனிமேகமெனவாரூர்ச்
சிவபெருமான்கௌரியொடுந்திகழ்விடைமேற்றேன்றினனே. (ரு)

வார்பூத்தவன்கொங்கைமயிலபூத்தபசும்புறமுந்
தார்பூத்ததடந்தோளுந்தழல்பூத்தநுதற்கண்ணு
நீர்பூத்தசடைமுடியுநிழல்பூத்தபொன்னுருவுங்
கார்பூத்தமணிமிடறுங்கண்டரசன்களிபூத்தான். (சு)

களிகொண்டான்றாழ்ந்தெழுந்தான்கைமுகிழ்த்தான்கண்மலர்நீர்த், துளிகொண்டான் புலனைந்தாய்த் தொல்லையிருள் போய் நெஞ்ச, மொளி கொண்டான் பெரும்புளக முடல் கொண்டான் றனையொழிந்தான், றெளிகொண்டவானந்தவெள்ளத்திற்றிளைத்தனனல். (எ)

ஆனந்தவெள்ளத்தினமிழ்ந்தியெழுந்தரசர்பிரான்
பானந்துதவழ்ந்தேறும்பழனஞ்சூழ்திருவாரூர்த்
தேனந்தண்மலர்க்கொன்றைச்செஞ்சடை யோன்பெருஞ்சீர்த்தி
தானந்தமில்லாததனியன்பிற்போற்றினனல. (அ)

போற்றியுளநெகிழ்ந்துருகிநின்றதனிப்புரவலனை
யேற்றிலுமையுடன்போந்தவெங்கள்பிரானெதிர்நோக்கி
மாற்றரியநின்றவத்தான்மகிழ்ந்தனம்வேண்டியதென்கொல்
சாற்றுகெனத்தாழ்ந்தெழுந்துதார்வேந்தன்சாற்றுவான். (கூ)

இத்தலத்தோர்சிவலிங்கந்தாபிக்கயான்காதல்
வைத்தனனச்சிவலிங்கமாமணியிலுலகுய்ய
முத்திதரும்பெருங்கருணைமுதல்வநீமுதல்வியொடு
நித்தலுநீங்காதுறையவேண்டுமெனநிகழ்த்தினனே. (கo)

கரங்கொடுத்துச்சங்கருக்குக்கனைகடல்வாய்த்துயில்வோர்க்குச்
சிரங்கொடுத்தபெருஞ்செலவத்திருவாரூர்ச்சிவபெருமா
னரங்கெடுத்தவேலரசனன்பினில்வேண்டியவந்த
வரங்கொடுத்துமலைகொடுத்தவல்லியொடுமறைந்தனனே. (கக)

வல்லியொடுமறைந்ததிருமறைப்பொருளைப்போற்றிசைத்துச்
சொல்லரியமகிழ்வெய்தித்தொலையாதபுகழ்வேந்த
னெல்லையிலாப்பெருந்தவத்தினிசைமறைமாமுனிவரொடு
நல்லிசையாகமவேதவிதிதெரிந்துநன்னளில், (கஉ)

மூவுலகுந்தொழுதுய்வான்புற்றிடத்துமுளைத்தெழுந்த
தேவர்பிரான்கோயிற்குத்தென்பெருங்கீழ்த்திசைதன்னி
லோவியமாமணிச்சிகரப்பொற்கோயிலுகந்தமைத்துத்
தாவில்சராசரந்தழைப்பச்சிவலிங்கந்தாபித்தான். (கக)

வேறு.

விதியின்மஞ்சனமாட்டியேவிரைகமழ்சாந்தம்
புதியமென்றுகில்பூந்தொடைபூண்வகைபுனைந்து
மதுரவாரமுதருத்தியேமற்றுளகடன்கள்
கதிவழாதினிதமைத்தனன்காசினிவேந்தன். (கச)

வணங்கிமும்முறைமரபினில்வலங்கொடுமகிழ்கூர்ந்
திணங்குகாதலினுள்ளமுமென்புநெக்குருகி
நிணங்கொள்வேலினனுச்சிகைகுவித்துநேர்நின்று
குணங்கடந்தபேரொளியினைப்போற்றினன்குறித்து. (கரு)

குறித்துமன்னவன்போற்றலும்புற்றிடங்கொண்ட
கறைக்களத்தொருசெஞ்சுடர்காவன்மன்னவநீ
நிறுத்ததோர்சிவலிங்கமாமணியினைநீங்கா
தறத்தையாக்கியபச்சொளிதன்னொடுமணைந்து. (கசு)

எந்தஞான்றுமேயுலகமுய்ந்திடவிருங்கருணை
தந்துறைந்திடுமெதற்கொருகுறிதனிஞான
வந்தலிங்கநன்னிழல்குணதிசையினிலன்றி
வந்திடாதொருதிசையினுமிம்மொழிவாய்மை. (கஎ)

ஆறுதிங்களிலிறப்பவர்நோக்கினுலைந்த
வீறிலாநிழல்காணுறுதென்றிருவிசும்பிற்
கூறுவாணிகேட்டருந்தவர்புறாத்தொடுங்கோமான்
மாறுறுதபேருவகையின்மலர்ந்தனன்மாதோ. (கஅ)

வேறு.

மாதவரோடுமன்னன்மகிழ்ந்துவான்வாணிவாய்மை
சோதனைபுரிந்தேயந்தச்சுடரொளியிலிங்கநீழ
றீதுதீர்குணபாலன்றிவேறுளதிசையிற்செல்லா
மேதகுபுதுமைநோக்கிவெருவிவிம்மிதத்தினின்றான். (கக)

வெருவிவிம்மிதத்தினின்றுவீழ்ந்தெதிரிறைஞ்சியுள்ள
முருகியேயுளாதள்ளாடியுபயசெந்தாமரைக்க
ணருவிநீராடியைந்துபுலன்களுமறிவுமொன்றாய்
மருவியேதனைமறந்தான்மன்னவர்மன்னன்மன்னோ. (உ0)

தனைமறந்துவகைவாரிதனிற்படிந்தெழுந்துசெங்கை
வனசமாமலர்கள்கூப்பிமாசிலாமணியையெண்டோ
ளனகனையன்பர்தங்கட்கன்பனையகண்டஞானப்
புனிதனைமறைக்குமெட்டாப்புராணனைப்போற்றலுற்றான். (உக)

வேறு.

அந்திப்பிறையும்மறுகும்பொறிவாளரவும்விரவும்மவிர்செஞ்
சடையாய், தந்தக்கரியும்மரியும்மெரியுந்தழல்பொங்கியகட்புலியும்
விசயஞ், சிந்தச்சினவுந்திறலாய் கனகச்சிலையாய் கயிலைமலையாய்
தொலையா, முந்தைப்பொருளாமொளியேவெளியேமுடியேயடியே
யிலதோர்முதலே. (உஉ)

மூவாவமுதேமுழுமாமணியேமுதுவாளரவின்மிசையேதுயில்
கூ, ரேவாலடையார்புரம்வெந்தழியவெய்தாய்கொடியார்க்கெய்தா
விறவாத், தேவாசிமையத்திமயக்கிரியிற்றிருமான் மருவும் பெரு
மான்முளரிப், பூவாழ்வுறுபொற்கொடிமாதவமுன்புரியுங்கமலாபுரி
நாயகனே. (உங)

வேறு.

கையர்க்குட்கையனுயகடியவந்தகனைக்காதி
யையர்க்கன்றருள்புரிந்தவையனேபோற்றிபோற்றி
பொய்யர்க்குப்பொய்யாய்நின்றபொய்யனேபோற்றிபோற்றி
மெய்யர்க்குமெய்யாய்நின்றமெய்யனேபோற்றிபோற்றி. (உச)

மாயனேயாதியாயவானவர்தொகைக்குந்தொலைத்
தூயமாமறைக்குமெய்தாத்துணையடித்தெய்வக்காட்சி
நேயமேயறமேவாய்மைநிலைமையேயறிவேயில்லாத்
தீயனேற்களித்தசெங்கைத்தீயனேபோற்றிபோற்றி. (உரு)

என்னையோர்பொருளாவெண்ணியெண்ணியவரமளித்து
மன்னியகருணையென்பால்வைத்ததோர்வள்ளல்போற்றி
பொன்னிசூழ்செல்வவாரூர்ப்புங்கவபோற்றிபோற்றி
சென்னியாறுடையாற்பெற்றசென்னியாறுடையாய்போற்றி. ()

என்றிசையிசைத்துப்போற்றியெதிர்பணிந்தெழுந்துசூழ்ந்து
நின்றுசெங்கரங்கள்கூப்பிநெஞ்சகங்கனிந்துசாலக்
குன்றுருவன்பினெண்டோட்குழகனைவிடைகொண்டாரு
ரொன்றுணர்முனிவரோடுமுறைந்தனனுலகமன்னன். (உஎ)

மன்னவன்றவம்புரிந்துவேண்டியவரத்தால்வள்ள
லின்னருளோடுநீங்காதென்றும்வீற்றிருத்தலாலே
யன்னதோரிலிங்கமூர்த்திக்கசலேசனென்னுநாம
முன்னருந்தவத்தின்மிக்கீருலகினிற்பொலிந்ததன்றே. (உஅ)

அம்புவிபுகழுமிந்தவசலேசன்றன்னையந்த
வம்பவிழ்மாலைமன்னனுடொறும்வழிபாடாற்றி
வெம்பவவினைத்தரங்கவேலைவாய்நீந்தியேறி
யும்பர்கண்டறியாவின்பமுத்தியங்கரையிலுற்றான். (உகூ)

வேறு.

புந்திசான்றநற்புங்கவிர்புகழ்ச்சமற்கார
னுந்துவாழ்வுறவொப்பிலாவருளுகந்தளித்த
விந்தமூர்த்தியைக்காணினுமெண்ணினுமயுத
மைந்துபாதகமக்கணத்தழிந்திடுமம்மா. (கூ0)

தனைபுகழ்ந்திடுமாசியிற்சதுர்த்தசிதன்னி
லரியதொல்லைநூல்விதிவழியசலநாயகற்குக்
கிருதகம்பளஞ்சாத்தினோர்கேடிலாச்செல்வ
மருவியாயிரங்கற்பமாசிவபதம்வாழ்வார். (கூக)

அகிலமேத்தியேவணங்கிடுமசலநாயகற்குத்
துகினறும்புகைதீபமொண்சந்தனந்தொடையலை
மகிழ்வினீந்தவர்மாநிலத்தரசராய்மன்னிப்
புகழ்செயிந்திரராகிவிண்ணுடெலாம்புரப்பார். (கூஉ)

அந்தண்மாமலர்ச்சங்கதீர்த்தப்புனலாடிப்
புந்தியன்பெர்டுமசலநாயகன்றனைப்போற்றின்
மந்திரம்மணிமருந்தினுன்மாய்ந்திடாப்பிணிகள்
சிந்திவெங்கனற்சேர்ந்தநுண்பஞ்சியிற்சிதையும். (கூங)

அசலநாயகனென்றொருக்காலினிதறையில்
வசையின்மாதவிரயுதமாம்பிறப்பினில்வந்தாங்
கிசையுமாபெரும்பாதகத்தொகுதிகள்யாவும்
விசயவான்கதிர்கண்டகூரிருளெனவிளியும். (கூச)

சீர்த்திமேதகுதிருந்தசலேசனுந்திருப்பேர்
மூர்த்திசேவடிபூசனையாற்றியேமுன்னர்ப்
போர்த்ததீவினைவெஞ்சிறைமுழுவதூஉம்போக்கி
யார்த்தபாசமற்றழிவில்வீடெய்தினரனேகர். (கூரு)

இறைவனிவ்வசலேசன்மான்மியமியம்பிடுவோர்
முறையிலன்பொடுகேட்குநர்மூதுலகாண்டு
நிறைபசுந்தளிர்க்கற்பகநீழலின்புற்றுக்
கறைகொள்மாமணிகண்டன்வாழ்கயிலையையடைவார். (கூசு)

அசலேசச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅ௦ரு

## சித்திச்சுரச்சருக்கம்.

அகிலமுய்ந்திடவரந்தருகண்ணுதலசலநாயகன்றன்னைத்
திகழுநெஞ்சினிலிருத்தியேசூதனைத்திருமுனிவரைநோக்கிப்
புகலுமிப்பெரும்புகழ்ச்சமற்காரமாபுரத்தினிற்பொலிந்தோங்கி
மகிழ்வுதந்தசிததீச்சுரமூர்த்திதன்மான்மியம்வகுக்கின்றான். (க)

பவளவார்சடைக்கற்றையிற்பானிலாப்பனிநறும்பிறைவேய்ந்த
சிவபிரான்றிருக்கோயிலாஞ்சிந்தையான்வேள்விகள்பலசெய்தோன்
றவளநீற்றொளிநுதலினனறநெறிதாங்கியதனிச்செங்கோ
லவனிகாவலனருசனென்றறைபெயரரசன்வானரசன்னான். (உ)

வேறு.

முத்தியாகும்பெரும்பயிர்க்குவித்தாய்மறையின்முடிவாகி
நித்தமாகியநாதியாய்நின்றதிருவஞ்செழுத்துண்மை
யத்தனுதிபேரருளாலாய்ந்துயோகம்பலபுரிந்து
சித்தியாவும்படைத்ததனாற்சித்தீச்சுரனும்பேர்படைத்தான். (௩)

அன்னோன்புதல்வற்பெறவேண்டியரியதவங்கள்பலநோன்பு
முன்னான்மறையின்விதிமுறையின்முடிக்கும்வேள்விபலபுரிந்து
பன்னாள்வருந்தியாங்கொருநாட்பரமனருளாற்சுரர்குருவின்
பொன்னார்கமலத்தாளிறைஞ்சிப்போற்றிநின்றுபுகலுவனால். (ச)

வேறு.

உத்தமவறிவின்மேலோயுனதுபேரருளாலெண்ணில்
சித்தியுமளவிலாததிருவொடுசிறப்பும்பெற்றேன்
புத்திரன்வேண்டிவேள்விபுரிந்துமாதவங்களாற்றி
யெய்த்தனன்சாலவெந்தாயாதினிச்செய்வதென்றான். (ரு)

அவ்வுரைவினவியாசாருரூாற்புற்றகத்துத்
தெய்வமாமணியைப்போற்றிச்சிவலிங்கந்தாபித்தாங்குச்,
சைவநூல்விதியிற்பூசைதந்திடின்மகப்பேறெய்து
மிவ்வுரைசரதமென்னவெய்தினூறுரைசொல்லே. (சு)

எய்தியேதேவதீர்த்தத்தினிதுதோய்ந்தஞ்செழுத்தாற்
பொய்தவிர்நீறணிந்துபுற்றிடங்கொண்டோற்போற்றி
மைதவிர்விதியினென்னுங்கோயிற்குவடகீழ்ப்பாங்கர்
மெய்தருகாதலன்பாற்சிவலிங்கம்விதித்தானன்றே. (எ)

விதிவழிதாபித்தாங்குவிரதமாநெறியிற்சித்தி
யதிபதிமூன்றுபோதுமாயிரம்யாண்டினெல்லே
கதிவழாதினிதுபூசைகாதலிற்புரிந்துபோற்ற
மதிபொதிபவளவேணிவானவன்றோன்றினானே. (அ)

வேறு.

ஒருபுறஞ்செவ்வொளிகாட்டவோர்புற
மரகதவாளொளிவழங்கமான்மழுக்
கரமலர்பொலிதரக்கண்ணுதற்பிரா
னருளொடுவிடையின்மேலணைந்தகாலையில். (சு)

துண்ணெனவிறைஞ்சினன்றுணைக்கைகூப்பினா
னுண்ணெகிழ்ந்துருகினன்புலனொன்றுயினான்
கண்ணறல்பொழிந்தனன்களிசிறந்தனன்
புண்ணியன்றிருப்புகழ்போற்றன்மேயினான். (க0)

வேறு.

வேதநான்முகத்தனும்விண்டுவும்மயங்கமுன்
சோதிவீசுசெந்தழற்றூணமாகினின்றதோ
ராதியம்பகவபோற்றியண்ணல்போற்றியாளவிலாப்
பூதநாதபோற்றியெண்ணில்புவனநாதபோற்றியே. (கக)

சாதல்வெம்பிறப்புநோய்தவிர்த்தெமைப்புரப்பதோர்
மாதுமேவுபங்கினெங்கள்வள்ளல்போற்றிபோற்றிநீண்
மூதெயின்முருக்கியமுதல்வபோற்றிபோற்றிவெண்
பூதியாடுமேனியெம்புராணபோற்றிபோற்றியே. (கஉ)

முந்துபாரிடந்ததோர்முதியபன்றிவெண்மருப்
பந்திவான்பிறையெனவவிருமம்பொன்மார்புடை
யெந்தைபோற்றியிறைவபோற்றியீசபோற்றியாவையுந்
தந்துவைத்தழித்திடுந்தலைவபோற்றிபோற்றியே. (கங)

வேறு.

என்றேத்தியசித்தீசனையிறையோனெதிர்நோக்கிக்
குன்றாத்திருவருள்கூர்ந்துகுணக்குன்றனையாய்நீ
நன்றாற்றியமாபூசையினனியுள்ளமகிழ்ந்தேம்
பொன்றாப்புகழாய்வேண்டியவரமென்புகலென்றான். (கச)

உயிர்தோறுமுறைந்தோன்றனதுரைகேட்டனதடியிற்
பயில்காதன்மனத்தின்னொருபழுதும்படையாத
நயமார்தருமொருமைந்தனைநம்பாவருளென்று
னயில்வாய்மழுப்படையானுமவ்வரமாங்கினிதளித்தான். (கரு)

அந்தத்தனிவரநல்கியவமலன்றனையரச
னிந்தச்சிவலிங்கத்தினிலென்றும்மினிதமர்ந்தே
வந்திப்பவர்தாம்வேண்டியவரந்தந்தருளென்ன
முந்தைப்பழம்பொருளவ்வரந்தந்தோமெனமொழிந்தான். (கசு)

வேறு.

வரமிவைநல்கியெந்தைமறைந்தனனவ்விலிங்கத்
தரசனுங்கண்பிற்போற்றியருள்விடைபெற்றுந்தன்னூர்
மருவியொப்பிகந்ததெய்வமைந்தனைப்பெற்றுமாறாத்
திருவொடுந்திளைத்துப்பின்னர்ச்சிவனடிநீழல்சேர்ந்தான். (கஎ)

இருளறுகேள்விசான்றவிருடிகாளெறிநீர்வேலைத்
திருநிலம்புகழுமந்தச்சித்தீசன்பூசைசெய்த
வொருபெருங்காரணத்தாலொப்பிலசித்தீசனென்னும்
புரைதவிர்நாமமிந்தமூர்த்திக்குப்பொருந்திற்றன்றே. (கஅ)

வேறு.

ஈறிலித்திருமூர்த்திதன்கோயிலின்றென்றிசையிருந்தீச
னாறெழுத்துமாமந்திரமெண்ணிடிலட்டசித்தியுமன்றி
வேறுளத்தினில்வேண்டியவரங்களும்வேண்டியபடியெய்துங்
கூறுதற்கருமாதவமுனிவிர்காள்கூறுமிம்மொழிவாய்மை. (கசு)

இந்தமூர்த்திதன்னிலங்கொளிமந்திரத்திந்தமந்திரமெண்ணி
முந்துசித்திகள்பெற்றவர்கதையெலாமொழிந்திடமுடியாதா
லந்தமற்றவக்கதைகளிலொருகதையறைகுவனயல்வேறு
பந்திவைத்திடாதன்பினிற்கேண்மினேம்புலக்கொடும்பகைவென்றீர்.

# சித்தீச்சரச்சருக்கம்.

பண்டைநாளிலிம்மூர்த்திதன்விழாவினிலொருபெரும்பகலிந்த
வண்டர்நாயகனுலையமுன்றில்வாயளவின்மாதவரீண்டி
மண்டுகாதலினிருந்துழியொருசிறுமறைமகன்களிகெஞ்சங்
கொண்டுளான்புனற்பாம்பினையவர்கடங்குழாத்திடைவிடுத்தானல்.

வேறு.

விடுத்தபாம்பொருயோகியேல்வீழ்ந்ததாங்கதுகண்
டடுத்தமாதவனரவுநீயாகெனச்சாபங்
கொடுத்தவெல்லையிலவ்வுருவாயினன்கொடியோன்
கெடுப்பருந்தவப்பெரியவர்ப்பிழைத்தவர்கெடாரோ. (உஉ)

அந்தவெல்லையில்யோகொழிந்தவன்சொலுஞ்சாபந்
தந்தமைந்தனைவெகுண்டனன்பதைத்தனன்றளர்ந்தான்
சிந்தைநொந்தனனிரங்கினன்பற்றிகதீர்ந்த
முந்தைமாதவர்கருணையின்றன்மையார்மொழிவார். (உ௩)

இரங்கிமாமுனியீசனுறெழுத்துமந்திரத்தைப்
பரிந்துபாம்புருவாகியபனவனுக்குரைத்து
வரங்கொளிந்தமாமந்திரந்தனைமறவாது
விரிந்தநீரிடையெண்ணியேமேவுதிமேவில். (உ௪)

மாண்புசான்றுளமுதுக்குறைவற்சமாமுனியைக்
காண்டைகாண்டலுமரவுருக்கதுமெனநீங்கும்
சேண்கொள்பொன்மலையெழுதியசெம்மலேகண்டா
பாண்கொள்வண்டுசூழ்துளவினன்பாம்புருவெனவே. (உ௫)

என்றுகூறியேவிடுத்தனனிறைஞ்சியேயேகி
மன்றனீரிலம்மந்திரமெண்ணியேவதிந்தா
னன்றுபாம்புருவாயினோனன்னதோர்சாபம்
பின்றைநீங்கியபெற்றிமைபேசுதுமன்றே. (உ௬)

மாவுலாவுபூங்காமிகமெனும்பெயர்வனத்திற்
பூவுருதோர்திம்புனற்பொய்கையங்கரையிற்
பாவைபாகனஞ்செழுத்தினைவிதிமுறைபண்ணித்
தேவராகனுந்திருமுனிமாதவஞ்செய்தான். (உ௭)

செய்யுநாளினிலொருபகற்றெய்வமேனகையா
மையறுநெடுமெதர்விழிமயில்புரைசாயற்
றையலாயிடையெய்தியத்தடம்புனற்படிந்தாள்
பொய்யின்மாதவன்கண்டனன்கண்டதோர்போழ்தில். (உ௮)

விண்ணிழிந்திவண்மேவியமின்கொலித்தடத்து
வண்ணவோதிமப்பெடைகொலென்றையுறுமனத்தி
லெண்ணிமாதெனத்தெளிந்தனன்மையலெய்தினனாற்
பெண்ணெனும்வலைப்படாதவருண்டோசொல்பேசில். (உகூ)

மையலெய்தியமாதவன்வழுவியவீரந்
செய்யதாமரைச்செழுந்தடம்வீழ்தலுமதனை
துய்யநீருணவாங்கொருசுந்தரமடமா
னெய்திநீரொடுதுயத்ததுதுய்த்ததோரெல்லை. (௩0)

கருப்பமுற்றவணீன்றதோர்கன்னியையந்த்
திருத்தகுஞ்சிறுமகடனைச்சென்றினிதெடுத்து
வருத்தமெய்திடாதன்பினிலவளர்த்தனனவட்குத்
தரித்தனன்மிருகாவதியெனும்பெயர்தாதை. (௩க)

அந்தநற்சிறுகன்னிதெள்ளமுதவானிலவு
தந்தசிற்றிளந்திங்களில்வளர்ந்தனள்சமைந்து
சுந்தரத்தனித்தோற்றமதெய்தினளாங்குப்
பைந்தொடிக்குவந்தடுத்ததுமங்கையம்பருவம். (௩௨)

மங்கைமற்றவடாதைசெய்மகத்தொழிற்கீசன்
பங்கயப்பதத்தருச்சனைக்கேற்றபல்சமிதை
கொங்கவிழ்ந்ததேம்புதுமலர்கொணர்ந்தனளுதவி
யங்கணுற்றினிதமர்ந்தனளமர்தருநாளில. (௩௩)

வேறு.

ஒருபகலெழுந்துகாதிலொளிகொள்பொன்னோலைமின்னப்
பெருமுலைபெருதுநின்றுசிற்றிடைதளரப்பிலகுங்
குருதிவேற்கண்கண்மாலைக்கொண்டலூடுலாவிமீளப்
பரிபுரகமலஞ்சேப்பப்பனிமலர்கொய்யப்போந்தாள். (௩௪)

வனப்பிடியென்னப்பைம்பூவனத்திடைப்போந்துகோங்கு
நனைப்புதுமுல்லைவாசநறியசெண்பகப்பூமாவின்
பனித்தளிர்கொய்தாள்கொங்கைபானிலாமுறுவனுசி
யினைக்குறுந்தொடிகொளங்கையிரும்பகைகளைவாளென்ன! (௩௫)

அனையதோர்காலைதன்னிலவ்வனத்தடைந்தான்வேதப்
பனவர்தந்திலகமன்னுன்பதினறுபருவமுற்றான்
புனிதமாதவத்தின்மேலானெழுதரும்பொற்பின்மிக்கான்
முனிவரிலுயர்ந்தோன்வற்சமுனிவரன்முன்னையூழால். (௩௬)

முன்னைபூழுய்ப்பவந்தமுனிவரன்மலர்வனத்து
வன்னமென்கிளியோகோலவரிமடக்குயிலோதோகை
யின்னிளமயிலோமானோபூவையோவெனநின்ற
வன்னநன்னடைவேலுண்கணிழையவளைக்கண்டான். (கஎ)

விண்ணவரமுதன்னாளை விரைமலர்க்காவிற்கண்டு
தண்ணெகிழ்குமுதமுல்லைதாமரைகுமிழ்பைங்காவி
யொண்ணறுங்கோங்குகாந்தளொளிபெறமலர்ந்தசெம்பொன்
வண்ணமென்கொடிகொலென்றுமனத்தினிலையமுற்றான். (கஅ)

மனத்தினிலையமெய்திமன்றலந்தாதுசிந்து
நனைப்புதுமலர்வனத்துநாகிளந்தூவியன்னத்
தனிப்பெடையெனவொதுங்குந்தன்மைமற்றதனுமையை
லெனத்துணிந்தனனுமவேதத்திரும்பொருடுணிந்தமேலோன். ()

மடவரலெனத்துணிந்தமாதவமுனிவர்கோமான்
படைமதனிரதிகொல்லோபங்கயப்பாவைசொல்லோ
கொடியிடையரம்பைகொல்லோவுருப்பசிகொல்லோகோலப்
பிடிநடையிவண்மற்றென்னுப்பின்னருமையமுற்றான். (உ0)

பின்னருமையமுற்றபெருந்தவமுனிவன்முந்நீர்
நன்னிலமடந்தைமுன்செய்நற்பெருந்தவத்தினாலே
செந்நிறமுளரிமென்பூந்திருவடிதீண்டப்பெற்ற
வன்னதோர்தன்மைநன்னுலணங்கலளெனத்துணிந்தான். (உக)

துணிந்ததோர்முனிவன்மாரன்றொடுகணைபொருதழுங்கிக்
கணங்கொள்வண்டாற்றுங்கூந்தற்கருஞ்சொடிப்புருவச்செவ்வாய்
வணங்கியமருங்குல்வாட்கண்மதிமுகமயிலஞ்சாயற்
சுணங்கவிரிளங்குரும்பைத்துணைமுலையவண்முன்சென்றான். (உஉ)

முன்னுறவெய்திமுல்லைமுகைநிரையன்னமூரன்
மின்னிடைமடமானேக்கின்மெல்லியனின்னைப்பெற்ற
பன்னருந்தவத்தோர்யாவர்பகருநின்பேரியாது
பின்னருந்திரைப்பால்வேலைப்பிறந்தபெண்ணமுதேயென்றான். ()

அவ்வுரைபகர்ந்தோன்றன்னையணிவளையாடமைத்தோட்
செவ்வியநெய்யிற்றோய்த்தசெழுந்தளிரன்னமேனி
மைவிழிநோக்கலோடுமற்றவன்பெருவனப்பாம்
வெவ்வியகதிராலுள்ளமெழுகுடைந்துருகினின்றாள். (உ[illegible])

நின்றவடன்னைநோக்கிநிறைமலர்பறிப்பப்போந்தே
யென்றனதுயிர்பறித்தவிளமுலையெறிவேலுண்கண்
மன்றலங்குழலாய்நின்வாய்மருந்தினாற்றலைக்கொண்டேறிச்
சென்றவெங்காமநஞ்சந்தீர்த்தருள்செய்தியென்றான். (௪௫)

அணியிழையாசைவெள்ளத்தழுந்தியேநாணமென்னும்
புணையதுதுணையாநின்றுபொற்புறுமிளமைசான்ற
பிணைதவிர்முனியைநோக்கியெனையளித்தவற்கியம்பி
மணவினைமரபிற்செய்துமற்றெனைச்சேர்தியென்றாள். (௪௬)

வடபெருமீனமன்னமங்கைதன்மாற்றங்கேளா
நடைதருமறையுணர்ந்தநற்றவனனிமகிழ்ந்து
பிடிநடைமயிலஞ்சாயற்பெய்வளைத்தோளிதாதை
யடைதருபன்னசாலையடைந்துதாழ்ந்திவையறைந்தான். (௪௭)

அறைதலுமகிழ்ந்துசாலவணியிழையவளைத்தாதை
குறைதவிர்வதுவைநீராற்கொடுத்தனன்கொடுத்தவெல்லை
நிறையருண்மாமன்றன்னைவிடைகொடுநீங்கியேகி
மறைமுனிமங்கையோடுந்தானுறைமருங்குசேர்ந்தான். (௪௮)

தானுறைசாலையெய்தித்தண்மலர்ப்பாயன்மேவி
மானருள்புரிந்தகன்னிமானொடுமகிழ்ந்துகூடி
மீனுயர்கொடியோனெய்தவெவ்வியபுண்களாற
வானவரமுதமன்னாள்வனமுலைவேதுகொண்டான். (௪௯)

வனமுலைவேதுகொண்டுமதுரமென்கனிவாயூறு
மினியதெள்ளமுதமாந்தியெழுமபற்பசிநோயதீர்ந்தான்
முனிவன்மற்றனையோன்மார்பாமொய்ம்மலர்வாவிமூழ்கி
யனலுறுகாமவெந்தீயாற்றினளணங்குமம்மா. (௫0)

திருமலரணங்குநேமிச்செல்வனுமென்னச்சேர்ந்தாங்
கிருவருந்விழைந்துதம்மிலெண்ணிலாவின்பமுற்றா
ருருவமுமனமுமன்புமொத்துளோருருகியொன்றாய்
மருவினுலெய்துமின்பம்வனசற்கும்வகுக்கவற்றே. (௫௧)

யாக்கையுமுயிருமென்னவிருவருமருவியின்ப
மாக்கடலிடையின்மூழ்கிவைகினர்வைகுநாளிற்
றூக்கணங்கனையாள்கேள்வன்சங்கரன்பூசைசெய்வான்
நோக்கமழ்போதுகொய்யச்சென்றனன்செழும்பூங்காவில். (௫௨)

காவினிற்போதுகொய்யுங்காலையிற்காலனன்ன
தீவிழிக்கரியநாகந்தீண்டலும்வெருவியேங்கி
யாவெனப்பதைத்துவீழ்ந்தாங்கறிவழிந்தயர்ந்துசோர்ந்து
பாவைமற்றிறந்தாளூட்டும்பழவினையாவர்வெல்வார். (௫௧)

பாவையங்கிறந்தவண்ணம்படிமையோன்கேளாவந்துக்
காவினிலெய்திக்கண்டுகலங்கியேகலுழ்ந்தரற்றி
நாவுலர்ந்தறிவுசோர்ந்துநடுங்கிவெய்துயிர்த்துத்துன்பத்
தீவிடந்தலைக்கொண்டாங்குத்தெருமந்துமயங்கிவீழ்ந்தான். (௫௨)

வீழ்தலுமெடுத்தணைத்துவிரைநறும்பனிநீரொடுதண்ணீர்
சூழ்கிளைதெளித்தளிப்பத்துறந்துயிருடலைநீங்கு
மூழ்வினையின்மையாலேயுய்ந்தனனுயிர்த்திரங்கி
யாழ்தருகவலைவேலையலையிடைப்பட்டானம்மா. (௫௩)

துன்பமேயுலகவாழ்க்கைத்தொடர்பெனச்சொல்லுநூல்க
ணன்குதேர்ந்துணர்ந்தயோகஞானமாமுனியுமான்ற
மின்கொணேர்மருங்குனங்கைக்கிரங்கியேமெலியாநின்று
னன்புளார்பிரிவினின்னலழலையாராற்றுகிற்பார். (௫௪)

முடிவறுகவலைவேலைமூழ்கியேமுனிவனுக
விடவெயிறழுந்தமாய்ந்தவென்னனைக்கருங்கட்செவ்வாய்
மடநடைமயிலஞ்சாயன்மங்கைமற்றவட்குச்செய்யுங்
கடன்முறைசெய்தான்யாக்கைகனன்மெழுகெனக்கரைந்தான். ()

கரைந்துடல்வெம்பிவாடிக்கருத்தழிந்தரற்றிச்சால
வருந்தைநோயுழந்துபின்னரொருவகையரிதுதேறி
விரிந்தவெம்புகைவாய்ப்பாம்பின்குலத்தைவேரறுப்பனென்று
வரங்கொண்மாதவத்தின்மிக்கான்வருசினம்பிடித்தான்மாதோ. ()

வன்னியிற்சீற்றமெய்திவஞ்சினம்பிடித்துவெய்ய
பன்னகக்குலத்தைவாட்டும்பருவத்திலரவமாகி
முன்னிசைத்திடுசாபத்தாற்கிடப்பவன்முனியைக்கண்டா
னந்நிலைக்கொடியசாபமகன்றுதேவுருவமானான். (௫௭)

வானவர்வடிவிற்றோன்றிவரன்முறைமுழுதுஞ்செப்பி
யூனமில்சீர்த்திவாய்மையுதிட்டிரற்கண்டுபோந்த
வீனமாமுருவநீங்கிநின்றதோரிறைவனென்னத்
தானினிதிறைஞ்சிநின்றானந்தவமுனியிறும்பூதுற்றான். (௫௮)

டனியிறும்பூதுகொண்டுநின்றதோர்ஞானயோக
முனிவனைநோக்கிநின்றுலுய்ந்தனன்முடிவிலாத
வனகநின்றனக்குக்கைம்மாறுற்றுவதென்கொலென்றுப்
புனிதவாறெழுத்தினுண்மைபுலப்படப்புகன்றானன்றே. (சுக)

புலப்படப்புகன்றேயிந்தப்புனிதமந்திரத்தையாரூர்த்
தலத்தினில்வாழ்சித்தீசன்சந்நிதிதன்னிலெண்ணி
னலத்தகுமட்டசித்தியண்ணுமென்றுரைத்தேயன்னான்
மலர்க்கழல்வணங்கிப்போற்றிவிடைகொடுவானிற்புக்கான். (சுஉ)

கானமர்கொன்றைமோலிக்கண்ணுதல்கடனஞ்சுண்ட
வானவனாறெழுத்துமந்திரவலத்தினாலே
யீனவெஞ்சாபநீங்கியிலங்கொளிவிமானமூர்ந்து
நான்மறையாளனின்பநாகநாடடைந்தபின்னர். (சுங)

வற்சமாமுனிவனொருவந்தனன்றேவதீர்த்த
நற்புனல்வாவிமூழ்கிநானிலம்புகழ்சித்தீசன்
பொற்பதம்போற்றியந்தப்புனிதனாலயத்தின்றென்பா
லற்புடனிருந்துபன்னாளாறெழுத்தெண்ணினால். (சுச)

பௌவநீருலகமெல்லாம்பரவியேதொழுசித்தீசன்
றெய்வமாமணிப்பொற்கோயிற்றென்றிசையிருந்துபன்னாட்
சைவவாறெழுத்துநாவின்விதிமுறைசாற்றியந்த
வெவ்வமின்முனிவனட்டசித்தியாங்கெய்தினனே. (சுரு)

தெரித்தவிம்முனிவன்போலச்சித்தீசன்றிருத்தாள்போற்றி
யுரைத்தருண்மூர்த்திகோயிற்றென்றிசையுவந்துவைகி
விரித்தநூல்விளம்புமிந்தமந்திரம்விதியினெண்ணி
வரத்துயர்சித்திபெற்றோர்வரம்பிலர்மாதவத்தீர். (சுசு)

திருநிறைதருசித்தீசன்கோயிலின்றென்பாற்சேர்ந்தாங்
கொருவிசையேனுமிந்தமந்திரமுரைத்தாற்கோடி
யிருளறுபாவநீங்குமெய்திடுஞ்செல்வங்கல்வி
கருதியவெல்லாங்கூடுங்கருதருந்தவத்தின்மிக்கீர் (சுஎ)

இருடிகாளிந்தமூர்த்திக்கிலகொளிமணிப்பூணுடை
விரைகொள்பூமாலைசாந்தம்விளக்கொடுதூபமாதி
பரிவினாலளித்தோரிந்தப்பாரொலாம்புரந்துவானத்
தரசராயமர்ந்துமுத்தியடைவதுசரதமம்மா. (சுஅ)

வானவர்வணங்குமிந்தமூர்த்தியைவணங்கிலோர்கா
லூனவெம்பிணிகளெல்லாமொழிந்திடுமொழிவிலாத
வானுயர்புகழ்மாசெல்வமருவிடும்வாசிமேதந்
தானொருநூறுசெய்ததனிப்பயனெய்துமம்மா. (௬௯)

இந்தமாமூர்த்திநாமமியம்பிடிலொருகாற்கோடி
மந்திரமறைகளோதுமாபெரும்பயன்வந்தெய்தும்
புந்தியிலொருகாலெண்ணில்வலம்வரிற்புரிந்துநோக்கில்
முந்துமாயிரம்பிறப்பிற்பாதகமுடியுமாதோ. (௭0)

எழில்வளர்சித்தீசன்றனினியமாசரிதங்கேட்போர்
பழுதறவோதினோர்கள்பார்முழுதாண்டுபித்தி
முழுவதுமெய்திமைந்தர்முதலியசெல்வமோங்கி
யழகமர்கயிலையண்ணலடிநிழலமர்வாரன்றே. (௭௧)

சித்தேச்சரச்சருக்கமுற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௩௭௬

---

## குலிசேச்சரச்சருக்கம்.

அணியார்மறுகினூரிலரியகுலிசேச்சரமென்று
மணியாலயமொன்றுளதந்தமணியாலயத்தைவலஞ்செய்வார்
பணிவார்காண்பார்கைதொழுவார்பரவுவார்வெம்பிறப்பென்னும்
பிணிநோய்வருத்தவருத்தமுறார்பேராவின்பம்பெறுவாரால். (௧)

அனையசெம்பொனாலயத்திலறவீர்குலிசேச்சரனென்னும்
புனிதநாமந்தரித்தீசன்பொன்னாரிலிங்கமயமாகி
யினிதுநாளும்பிரிவின்றியிருக்குமந்தமூர்த்திதனைக்
கனியுமனத்தாற்கைதொழுவார்நினைந்தவெல்லாங்கைகூடும். (௨)

அந்தவிலிங்கமாமூர்த்தியாதிநாளில்வாணன்றன்
சிந்தையன்பாற்பூசித்ததெய்வமூர்த்திசெப்பியதோ
ரெந்தைதனக்குக்குலிசேசனென்றுகூறுமிசைநாமம்
வந்தமுறைமைவகுத்துரைப்பன்மரபிற்கேண்மின்மாமுனிவீர். (௩)

வேந்தனொருவன்வேல்வேந்தர்வேய்ந்தசெம்பொன்முடியுழுது
சேந்தகழற்காற்குலிசனெனச்செப்பும்பேரான்கேகயப்பே
ரேய்ந்தசெல்வத்திருநாடரிறைவன்மனுவின்முறைதேர்ந்து
வாய்ந்ததிரைநீர்சூழ்வேலிவையங்காத்துவைகினனால். (௪)

வைகுநாளிலாங்கொருநாள்வந்தானவன்பான்மறைவேள்விச்
செய்கைவிரதமாதவத்திற்சிறந்தோன்றிங்கட்கொழுந்தணியு
மைகொண்மிடற்றோனடிக்கமலமலர்ந்துவயங்குமனவாவி
மெய்கொளறிவிற்றுருவாசமுனிவனுச்சிவேலைதனில். (ஓ)

வேறு.

வார்கழலரசன்வந்தமாமுனிதனைவணங்கிச்
சீர்கெழுதவத்தோய்வந்ததென்னெனச்செப்பலோடும்
பூரணன்விரதமொன்றுபுரிந்தனம்பன்னுளின்று
பாரணஞ்செய்யவேண்டும்பார்த்திபநின்மனைப்பால். (சா)

இருந்திடுமுனடியாவுமீந்தருளெனவுரனேந்த
திருந்துதன்னகத்திலுள்ளசெப்பருமடிசில்வர்க்கந்
தருஞ்சுவைமதுரமூறச்சமைத்தநவூன்வர்க்கமேனே
விரிந்தபல்கறியின்வர்க்கம்பிறவுமீந்தனன்விருப்பால். (எ)

விருப்பினுலீந்தவெல்லாமிசைந்தபின்முனிவெகுண்டே
யருத்தினுய்பாரணத்திலடிசிலோடூனையந்தோ
வுரைத்தநூல்விதியினன்றியூன்மிசைந்திடுதலபாவம்
வருத்தமோடிழைத்தனோன்புமாய்ந்ததுவறிதின்மன்னு. (அ)

இத்திறமிழைத்தபாவத்தின்றுநீபுலியாயூனைத்
துய்த்தனைதிரிதியென்னுச்சொற்றனன்சொற்றவேலை
யுத்தமவேந்தனஞ்சியுளமிசநடுங்கித்தாழ்ந்து
கைத்தலமுச்சிகூப்பிநின்றிவைகழறலுற்றுன். (கூ)

எந்தைநீயில்லத்துள்ளயாவையுமவஞ்சமின்றித்
தந்திடென்றுரைத்தலாலேதந்தனன்றந்தைதாயர்
மைந்தர்பாற்றவறுநாடின்மற்றவர்கருய்வுமுண்டோ
முந்தைமாதவத்தோய்சாபமுடிபுதந்தளிததியென்றுன். (கo)

என்றிவைபுகன்றுபோற்றியிறையவனிறைஞ்சலோடு
நின்றெரிவெகுளிநீங்கிநிருபனைநோக்கிப்பால்வாய்க்
கன்றடைநந்தினிப்பேர்க்கறவையான்காட்டக்காண்பை
தென்றமிழாரூர்வாணன்சிவலிங்கமூர்த்திதன்னை. (கக)

கண்டதோர்காலைவெய்யோற்கண்டபேரிருளிற்சாபம்
விண்டிடுமெனவிளம்பிப்போயினன்முனிவன்வேந்தன்
றிண்டிறலுழுவையாகிச்செறிந்தனன்வனத்திலீசன்
றெண்டர்தாம்புகன்றசாபந்தேவர்க்குந்துடைப்பவற்றோ. (கஉ)

விண்ணகடுழுதகோட்டுவெண்டுகிலருவிநெற்றிக்
கண்ணகன்சாரல்வெற்புக்கலந்தபேரடவிதோறும்
வண்ணமானினங்களாமாமரைமுதலவிலங்குவாட்டிப்
புண்ணுமிழ்குருதிமாந்திப்புலான்மிசைந்துழன்றுன்பன்னுள். ()

வேறு.

புலியினெடுபுல்வாய்மற்றொருதுறையினீரருந்தப்புரிந்தோன் றனே, புலியுருவாய்மறியுழைமான்புலவாயான்பசுவதைத்துப் புலவூனுண்டான், புலியதளின்வரிபபட்டிழமபொலிமருங்குனெற்றி விழிப்புதியவானைப், புலிமெமாலியினறயமைத்தவிதிவரம்புகடந்த வர்தாம்புவனத்துன்மேபா. (கச)

மலையடவிதொறுமடைந்துமாதடித்துதசைமாந்திவாழைவேலான் புலியுருவாயமைருநாட்பனிற்றிளங்பொருவருளாரபுரிந்துகாட்ட நிலவுபொழிதெள்ளமுதவெள்ளருவிவெண்டிங்களிலவுஞ்சென்னி யிலகுதனிச்சிவலிங்கமூர்த்தியைக்கண்டுய்ந்ததிறமிசைத்துமன்றே.

நந்தியருள்வடிவென்னநந்தினியாமபெயர்படைத்தநவையிலா வொன், றந்தமில்பல்லாவினதுதோட்டவியின் மேய்ந்துறைநாளி லாங்கோர்வைகன், முந்துபுரிநல்வினையாற்பராசதியெல்லைதனி ன்முன்னுள்வாணன், கந்தநறுமபுதுமலராலருச்சித்தசிவலிங்கங்க ண்டதன்றே. (கசு)

எந்தைபிரான்றிருமேனியெதிர்கண்டவெல்லைதனிலிருள்போ யகீங்க, வந்தமில்பேரொளிஞானகதிருள்ளக்கடலெழுமரியதே னு, நைந்துருகிநிறைந்தமடிநகுமணிப்பொற்கலசததுநறும்பாலா ட்டிச், சிந்தைகளிகூர்ந்துவலஞ்செய்தினிது வழிபாடுசெய்ததன் றே. (கள)

இந்தமுறைதினம்வழிபாடிழைத்தொழுகுங்காலத்திலொருநா ளிந்த, நந்தினியைமுனிசாபததடுமபுலியாயவனத்துழலுஞாலமன் ன, னுய்ந்தருளுநலவிதியாலெதிர்கண்டான்கண்டிடலுமுருத்தெ ழுந்து, வெந்தழலின்மிகுபசியால்வீட்டியுடலூன்மிசைவான்மேல வோடும். (கஅ)

வேறு.

துண்ணெனவெருவிமாழ்கிச்சோர்ந்துகாறளர்ந்துவீழ்ந்தாங்
குண்ணடுநடுங்கித்தேம்பியொடுங்கிவெய்துயிர்த்திரங்கி
வெண்ணெயூடெரியுற்றென்னவிண்டுடல்கரைந்துவாடிக்
கண்ணிணைபுனல்சொரிப்பக்கலங்கலுற்றதந்தோ. (கக)

கலங்கியேகவன்றரற்றிக்கலுழ்ந்தநந்தினியைநோக்கி
மலிந்தவெம்பசித்தீவாட்டவாடியவெனதுமுன்னர்
மெலிந்தனையிரங்குநின்னைவிடுவன்கொலவாளாநின்று
புலம்பிநீயாவதென்கொலென்றனன்புலியாய்நின்றோன். (௨௰)

வேறு.

என்றசொல் வினவிநந் தினியந்தவிரும்புலி யரசினைநோக்கி, யென்றனதாவிக்கிரங்கலனுன்னமக்கன்றினுக்கின்னமுதூட்டி, யென்றனதுயிராமீசனைப்பூசையிழைத்திடப்பெற்றிலனிற்றைக், கென்றுளநினைந்துதளர்ந்துடல்வாடியேயேங்கியேயினைந்தனளினியாள். ()

வாய்மையொன்றுரைப்பன்கேட்டியாரமுதம் வளர்சிறுகன்றினுக்கூட்டி, யேமவின்னுயிராமிலிங்கமாமூர்த்திக் கினிதபிடேகமுஞ்செய்து, தாமதமின்றிவல்லலையில்வந்துன்றழற்படுபசிதனைத்தணிப்ப, னீமனந்தன்னிலையுறுதென்னை நீக்கெனநிகழ்த்துதலோடும். (௨௨)

வந்துநேரடுத்தநின்றனைவிடுத்து வரும்வழிபார்த்துநின்றம்ம, வெந்துயர்ப்பசியான்மெலிவதற்கிசையேன்விட்டினைவிரும்பினோர்தாமு, மைந்தனருள்ளநடுங்குவரீறுநண்ணுழிவேங்கைமுன்னண்ணச், சிந்தையினினைதலசெய்திடுங்கொலலோ செழுமடியமுதவானினங்கள். (௨௩)

பட்டிமைபகர்வதென்கொனீயெரியும்பசித்தழலவித்திடாதுன்னை
விட்டிடறுணியேனெனப்புலியரசுவிளம்பலுநந்தினிவினவிக்
கட்டிருநெற்றிக்கடவுளைப்பூசைசெய்துபாலகன்றினுக்கூட்டி
யட்டிடுமுனதுபசிப்பெருங்கனலையவித்திடவணைந்திலேனுறல் ()

தேசிகனின்றோர்மூத்தவர்தம்மைச்சிவாகமபுராணமாமறையை
யீசனையீசற்கன்புசால்கலவியிருந்தவத்துயர்ந்தவர்தம்மை
மாசிலஞ்செழுத்துநீறுகண்டிகையைமனத்தொடுவாயினாற்பழிக்கு
மாசுறுகொடியதீவினையாளரடையுமாரவுரவத்தடைவேன். (௨௫)

கொண்டருள்கொழுநனுண்ணுமுனுண்பாள் கூறியகட்டளை மறுப்பாள், கண்டுயின்முன்னர்த்துயில்பவள்பின்ன ரெழுபவளவன்முகங்காணில், வண்டுளர்கமலமென்முகமலராண் மற்றவன்றன்னைவஞ்சிப்பாள், விண்டவன்பழியைவிளம்புவாள்வீழும் வெங்கிரயத்திடைவீழ்வேன். (௨௬)

கொலைகளவிழைப்போர்கன்றி கொன்றிடுவோர்கோளொடுபெடிற்றுறைபகர்வோர், நிலைதருகருமமழிப்பவர் கடுவினீங்கினர்பொய்க்கரிபுகல்வோ, ரிலகுநீற்றன்பர்மனைவியர்பாலரீன்றவர்பசிப்பவுண்டிடுவோர், புலவொடுமதுவூண்மிசைபவரின்னோர்புகுந்திடுநரகிடைப்புகுவேன். (௨௭)

இறைமுறைபிழைப்போர் விரதமதிழப்போர்கம்பினோர்க்கீறிழைத்திடுவோர், குலமறந்தவிர்மறையோர் பொருளினைக்கவர்வோர்கோவினைப்புடைப்பவொளியர்க், குறுதுயர்புரிவோ ருறுநர்பொருட்டுவேட்டையதுமுற்றுவோருண்மையறிஞர்கீழிருப்பவாதனத்திருப்போராழ்ந்திடுநிரயத்திலாழ்வேன். (௨௮)

ஐயமீந்துண்ணார் சிராத்தமேயாதி யளித்திடாரறிஞர்தாம்புகன்ற, மெய்யுரைகடப்போர் பொறையருளில்லோர் நீங்கிடாவெகுளியர்விரும்புந், துய்யதன்மனையைத் தோய்வதுசெய்யாரயன்மனைதோய்வதுசெய்வார், வைபரோடணங்கும் கருத்தினரின்னோர்கவிழ்ந்திடுநரகிடைக் கவிழ்வேன். (௨௯)

அரனதாலயத்தினரும்பொருள்கவர்வோ ரறநெறிமுறையினைலன்றிப், பொருளதுபடைப்போரிவதுதடுப்போர்புரவிகன்னியர்சிவலிங்கந், தருமம்விற்றிடுவோர்நெல்லியால்வில்வந்தண்மடற்றெங்கிவைதடிவோர், பரசிவன்கோயிலகலாமுகைகூப்பார்படிந்திடுநரகிடைப்படிவேன். (௩௦)

வேறு.

என்றிவைபோலப்பல்லகூறுரைபெடுத்தியம்பி
நின்றுகண்கலுழ்ந்திரங்கியேலொட லுநிகழ்ந்தசாப
மன்றகல்விதியால்வேய்மையரசதற்கிசைந்துபோக்கச்
சென்றரன்றனைப்பூசித்துக்கன்றினைச்சேர்ந்ததன்றே. (௩௧)

சேர்ந்துபாலூட்டிப்பின்னர்நிகழ்ந்தனசெப்பலோடும்
வார்ந்துகண்மாரிசிந்திமாழ்கிவாய்விட்டரற்றிச்
சோர்ந்துவீழ்ந்துயிர்த்துவாடித்துடித்துளம்பதைத்தியாக்கை
யீர்ந்திடுமின்னலெய்தியேங்கிநின்றிரங்கிற்றன்றே. (௩௨)

ஏங்கிநின்றிரங்கித்தாயையின்னுயிர்க்கன்றுநோக்கி
வேங்கையின்சீற்றச்செந்தீவெங்குழிவீழ்ந்துமாயா
தீங்கணெந்தென்றனுவியீந்துநீயின்னுமந்தத்
தீங்குசெய்கூற்றின்முன்னஞ்சென்றிடத்துணிந்ததென்னே. (௩௩)

பொறியெரிதவழுஞ்செங்கட்பொருபுலிவைகுமிந்தச்
செறியிருளடவிவைகிற்றீங்குறுந்தீங்குருமு
னிறையினம்மினத்தினோடுமிவ்விடைநீங்கியேக
மறுவறுமன்னையின்பால்வருகெனவிசைத்ததன்றே. (௩௪)

சாற்றியதிறங்கேட்டன்னைசத்தியந்தவறிலம்மா
கூற்றினுங்கொடியவைந்துபாதகங்கோடிகோடி
யாற்றியபாவமெய்துமாதலாலஞ்சிவாய்மை
போற்றுதல்வேண்டுமென்னாப்பின்னரும்புகலுமன்றே. (௩௫)

சத்தியந்தவறினோர்க்குச்சார்ந்திடாப்பழியுமில்லை
சத்தியந்தவறினோர்க்குச்சார்ந்திடாப்பவமுமில்லை
சத்தியந்தவறினோர்க்குச்சார்ந்திடாநரகுமில்லை
சத்தியந்தவறினோர்க்குச்சார்ந்திடாத்துயருமில்லை. (௩௬)

சத்தியந்தவறினோர்கடங்கள்பாற்றருமஞ்சாரா
சத்தியந்தவறினோர்கடங்கள்பாற்செல்வஞ்சாரா
சத்தியந்தவறினோர்கடங்கள்பாற்றெய்வஞ்சாரா
சத்தியமிந்தவாய்மைமனுமுதனூலுஞ்சாற்றும். (௩௭)

ஆதலால்வாய்மைகோடாதடுந்தொழில்வேங்கைமுன்னர்ப்
போதுதல்வேண்டுமென்றுநந்தினிபுகன்றபோது
தீதுசாலுழுவைமுன்னர்த்தீயனேன்செலவெனென்னாக்
காதலங்கன்றுகூறிப்பின்னருங்கழறுமன்றே. (௩௮)

என்னுயிரன்னைகேண்மோவிரும்புலிமுன்போயுன்றன்
மன்னுயிர்மாயில்யானுமாய்வதுசரதமன்றே
யுன்னுயிருய்யவென்னைவிடுத்தியானுய்யவீசன்
பொன்னடிபூசையாற்றிவைகெனப்புகன்றதன்றே (௩௯)

கன்றிவைகழறநற்றாய்காய்சினவேங்கைமுன்ன
ருன்றனைவிடுக்கில்வாய்மைக்கூறுவந்தெய்துமென்னா
மன்றவேமறுதவண்ணம்வகுத்துரைசெய்துபின்னர்
நின்றதன்னினத்துக்கெல்லாநிகழ்ந்தனநிகழ்த்திற்றம்மா. (௪௦)

நிகழ்த்தலுமினங்களெல்லாநெடுந்துயர்க்கடலுண்மூழ்கி
மிகத்தளர்ந்தாற்றித்தேம்பிவெய்துயிர்த்திரங்கிச்சோர்ந்து
பகைக்கொடும்புலியின்முன்னர்ப்படர்வதுதவிர்ந்தேயெங்க
ளகத்துயராற்றியன்னையளித்தியென்றறைந்தவன்றே. (௪௧)

அறைதருமினத்தைநோக்கியரும்பெறலறம்யாதென்னி
லறைதருமெய்ம்மைபொய்ம்மையஃதேவெம்பாவமாவ
தறைதரும்வாய்மையோம்புமவர்களேகதிபெற்றுய்வா
ரறைதரும்வாய்மையோம்பாதவர்களேநிரயத்தாழ்வார். (சஉ)

எனவிவையிசைத்துப்பின்னுமினத்தொகைமறுதவண்ண
முனிவரும்போற்றுஞ்சேதாமூதுரையெடுத்துக்கூறிப்
பனிவருகண்ணீர்மாரிபடிமகளுடனனைப்ப
னனிதுயரறுதகன்றையடைக்கலமாகநல்கி. (சங)

இரங்கியகன்றைத்தேற்றியினிதுமோந்துறவணைத்து
வரங்கொள்கட்டுரைவழங்கிவாட்டமோரிதுநீங்கிச்
சுரந்தபாற்சுரபியீசன்றுணையடிதுணையென்றுன்னி
விரைந்துசென்றடுத்ததம்மாவெம்புலிவேந்தின்முன்னர். (சச)

அடுத்தலும்வேங்கைவேந்தினகவிருளகன்றதெண்டோய்
விடைப்பிரான்கருணையென்னும்விளக்கிருளனையகாலை
துடித்துடலுருகியுள்ளந்துயருழந்திரங்கிக்கண்ணீர்
படித்தலஞ்சிந்தவெம்பிப்பணிந்திவைபகருமன்றே. (சரு)

கன்றுழைபசுக்கண்முன்னுங்கணிப்பிலாவிலங்கினீட்டங்
கொன்றுயிர்குறைத்துச்சோரிகுடித்துவெண்ணிணத்தின்குப்பை
தின்றுதேக்கெறிந்துபன்னாடிரிந்தனன்றீயேனின்று
னுன்றனையெதிர்தலாலேயுள்ளத்திலுணர்ச்சியுற்றேன். (சசு)

பசுவதையாதியாயபல்வதைபுரிந்ததீயேற்
கிசைதருகதியுமுண்டோயானினியுய்யுமாறெ
னசைதருகருணைதன்னாவின்றருள்புரிதியென்னா
வசைதவிர்தெய்வத்தேனுமற்றிவைவழங்குமன்றே. (சஎ)

வேறு.

இந்தவெல்லைமாபராசத்தியெல்லையிவ்வெல்லை
வந்தணைந்திடலநாதியாம்வல்லிருண்மடியு
மைந்துபாதகமுதலியவளவையில்பவங்கள்
சிந்திநீங்கிடுஞ்சிவகதிகிடைத்திடுந்திண்ணம். (சஅ)

இனையவெல்லையில்வாணனன்றருச்சனையிழைத்த
வனகமாசிவலிங்கமொன்றமர்ந்துளதந்தப்
புனிதமூர்த்தியைக்கண்டிடிற்பொங்குவெம்பவங்க
டினகரன்றனைக்கண்டிடுபனியெனச்சிதையும். (சகூ)

என்றுநந்தினியியம்பலும்புலியரசிறைஞ்சிப்
பொன்றயங்கொளிமூர்த்திதன்றெரிசனம்புரிவித்
தின்றளித்தருளென்னைநீயென்றுநின்றிரப்பச்
சென்றுகாட்டியதெம்பிரான்றிருவருள்வடிவம். (௫௦)

சுரபிகாட்டியமூர்த்தியைக்காண்டலுந்தொல்லை
மருள்பொருந்தியகொடுந்தொழில்வன்புலிவடிவம்
பொருவின்மந்திரவாணைகாண்டலும்பொருக்கென
வொருவிநீங்கியவலகையிலொழிந்ததாலொல்லை (௫௧)

வேறு.

இருளுற்றபூதகாயமீறிலாவிறைவன்ஞான
வருளுற்றயோகக்காட்சிவலியினாலகற்றித்தெய்வப்
புனையற்றவடிவம்பெற்றபுனிதர்போலனகவீச
னுருவத்தின்காட்சிதன்னாலொளிகொள்பொன்னுருவம்பெற்றான்.

புலியுருவகன்றுதெய்வப்பொன்னுருவடைந்தகாலை
யொலிகடற்றானைவேந்தனுவகையங்கடலின்மூழ்கி
நிலமுறவணங்கிப்போற்றிநின்றுநந்தினியைநோக்கித்
தலைமைசான்முனிவன்முன்னர்ச்சாற்றியவனைத்துஞ்சொன்னான் ()

சாற்றியவாறுசாற்றித்தாழ்ந்துநின்னருளினாலிப்
பேற்றினையடைந்தேனென்னாப்பேசினன்பேசலோடு
மாற்றிலாமன்னனோரேவாழ்தியென்றினிதுவாழ்த்திப்
போற்றியேயீசன்றன்னைவலங்கொடுபோயிற்றன்றே. (௫௪)

அறைதருவாய்மைகோடாதபுலிமுன்னமெய்தி
யிறுதியையெய்தாதீசனின்னருளெய்திமீண்டு
சிறியதன்கன்றினின்னாநீர்த்துத்தன்னினத்தைச்சேர்ந்த
துறுதிசாலுணையினோர்கட்கூறுவந்துறுவதுண்டோ. (௫௫)

நந்தினிபோயபின்றைநாதனைவலஞ்செய்தேத்திச்
சுந்தரமணிப்பொற்கோயில்சுடர்நெடுஞ்சிகரமாதி
யந்தமில்விதியிற்செய்தாங்கருச்சனைபுரிந்துபன்னா
ளெந்தைதன்னருளான்முத்தியிறையவனெய்தினானே. (௫௬)

சொரிதருதீம்பாலன்பாலாட்டியசுரபிதானும்
பரகதியடைந்ததிந்தப்பரஞ்சுடர்மூர்த்திதன்னை
யுரிமைசால்பூசையாற்றியுய்ந்தவர்காதையின்னு
மிருடிகாளனந்தமுண்டாலிசைத்திடிற்பன்னாள்செல்லும். (௫௭)

புலனோடவென்றகாட்சிப்புலமைசான்முனிவீர்முன்ன
மலர்தூவிவிதிவழாமன்மன்னவன்குலிசனென்பா
னிலைசாலுமன்பிற்பூசைபுரிதலானீடுவையங்
குலிசேசனென்றேயிந்தமூர்த்தியைக்கூறுமன்றே. (கஎ)

மாண்டகும்புகழுற்றோங்குமாகுலிசேசன்சீர்த்தி
காண்டகக்கேட்டோர்சொன்னோர்காசறுமறங்களோடு
சேண்டவழ்முனிவர்சாபஞ்சிதைதுவாரசராகித்
தாண்டவப்பெருமான்வாழுந்தனியுலகடைவரம்மா. (கஅ)

குலிசேச்சுரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசாகு

## வாணாசுரச்சருக்கம்.

கோதறுமின்பஞானக்குலிசேசனென்னுமிந்த
நாதனைவாணன்பூசைசெய்தனனெனநவின்ற
யாதியிலவன்பூசித்தவருங்கதையறைதியென்று
மாதவமுனிவர்கூறச்சூதமாமுனிவகுப்பான் (க)

ஆயிரங்கதிரெறித்தவாடகச்செம்பொன்மேரு
வாயிரஞ்சிகரமென்னவருணமாமணியெறித்து
வாயிரங்கடகமேந்துமாடலங்குவவுத்திண்டோ
ளாயிரம்படைத்தோனொப்பிலாண்டகைவாணனென்பான். (உ)

பலர்புகழ்தேவதீர்த்தப்பைந்தடமூழ்கித்தொன்னு
ளலர்கதிர்நீறணிந்தாங்கஞ்செழுத்தடைவினெண்ணிப்
பொலன்மணியாலயத்திற்புகுந்தவன்மீகநாதன்
மலரடிவலங்கொண்டன்பின்வணங்கியேமரபிற்போற்றி. (௩)

ஆரருளெய்தியன்னோனருளினலமலஞானச்
சீர்திகழ்தெய்வச்சோதிச்சிவலிங்கம்விதியிற்றாபித்
தேர்தருபூசைசெய்தானெண்ணில்பல்கோடிகாலம்
வார்திரைமுந்நீர்நேமிமாநிலத்துயிர்களுய்ய. (௪)

அஞ்செனும்புலனடக்கியறிவுநேர்நிறுத்தியாதி
யஞ்செழுத்தாதியாயமந்திரமெண்ணியானி
னஞ்சகில்சந்தம்பூநீராதியாற்பூசையாற்றி
யஞ்சலிசெய்துபோற்றியன்பினோடொழுகுநாளில். (௫)

கள்ளவிழ்கடுக்கைபூத்தகற்றையஞ்சடைபரப்பித்
துள்ளுநீர்த்தரங்கமாலைத்துறைகொளாயிரமுகத்து
வள்ளுறைவானியாற்றுத்தோணியின்மதியந்தோன்ற
வெள்ளிவெள்விடைமேலெந்தைதோன்றினன்விமலையோடும். (௬)

விமலையோடெந்தைவெள்ளைவிடையின்மேற்றோன்றலோடுங்
கமலமாயிரங்குவிந்தகாட்சியிற்கரங்கள்கூப்பி
யமலமாமுளநிறைந்தவன்பினாற்றாழ்ந்தெழுந்தாங்
இமையவர்பெருமான்சீர்த்தியினிதெடுத்தேத்தலுற்றான். (௭)

வேறு.

ஆயிரங்கதிர்நிரைபரப்பியவாதவன்புடைசூழ்வதோ
ராயிரங்கொடுமுடிபொறுத்துளவம்பொன்மேருவணக்கியே
யாயிரம்பகுவாயவெஞ்சினவரவநாணதுகொளுவியே
யாயிரம்பெயர்நீலவம்புபுரத்திலேவியவத்தனே. (௮)

ஆயிரங்கண்வலாரிவென்றிகொடோணெரித்ததொராடலா
யாயிரம்புதுமடலவிழ்ந்துளவம்புயன்றலைகொண்டுளா
யாயிரம்பலசாகைவேறுளவாசிலாமறைவாசியா
யாயிரந்திருமுகமுடைச்சுரநதிதரித்தருளமலனே (௯)

ஆயிரங்கொலைவெய்யகூற்றிலழன்றெழுந்தமடங்கலோ
ராயிரங்கனல்வடவைபோல்விழியாடலந்திறல்வேங்கைமா
வாயிரம்மிடியேறுபோலதிராற்றல்வாரணமட்டதோ
ராயிரந்திருமொயம்புகொண்டவநாதிவானவரண்ணலே. (௧௰)

ஆயிரம்பதபுண்டரீகமொராயிரங்கரவாரிச
மாயிரந்திருமுகசரோருகமாயிரம்விழியம்புய
மாயிரந்திருமுடிபடைத்துளவாதிநாயகபோற்றியென்
றாயிரங்கைபடைத்தவாணனகங்குழைந்தெதிர்போற்றினான். (௧௧)

வேறு.

இம்முறைதிருப்புகழினிதுபோற்றிய
செம்மைகொள்வாணனைநோக்கிச்செங்கணாற்
றெம்மைபாளுடையவனென்கொல்வேண்டிய
பொய்ம்மைதீரன்பினாய்புகலென்றோதினான். (௧௨)

ஓதியகாலையிலுகந்துதாழ்ந்தெழீஇத்
தீதுதீராயிரஞ்சிவலிங்கந்தினம்
போதினாலருச்சனைபுரியநல்வர
மாதிநாயகவினிதளித்தியென்றனன் (௧௩)

ஏனறமசால்வினவியேயெங்கணுயக
னன்றெனவினிதருள்சுரந்துஞாலமே
லொன்றியவுயிர்த்தொகைமுழுதுமுய்ந்திட
மன்றநல்வரமதுவழங்கினனரோ (கச)

வரமதுநல்கியவானநாயகன்
றிருவடியின்னருஞ்சென்னியாற்பணிந்
தருகுபேரன்பினிலுகந்துபோற்றியே
கரமலர்தொழுதிவைகூறன்மேயினான்.

வேறு.

எந்தையான்பூசைசெய்தவினையதோரிலிங்கத்தென்று
முய்ந்துயிரனைத்தும்வாழவுகந்துவீற்றிருந்திடவெம்மைச்
செந்துகிர்வேணியீசன்றிருவுளமகிழ்ச்சியாதி
யந்தமில்கருணையோடுமனையதோர்வரமுமீந்தான். (கசு)

வரங்கண்மற்றிவையிரண்டும்வழங்கியோரந்தையோடும்
பரந்தநீர்ஞாலத்துள்ளபல்லுயிரனைத்துமுய்யக்
கரந்தனன்கரந்தைசூடுங்கடவுளவ்விலிங்கமன்னி
லருந்தவமுனிவீர்வாணனருச்சித்தமுறைமைகேண்மின். (கஎ)

திருத்தகுவாணனிந்தச்சிவலிங்கமூர்த்திதன்னை
யருச்சனைபுரிந்தவாற்றாலாயிரமிலிங்கபூசை
விரித்தநூல்விதிவழாமற்றினந்தொறும்விருப்பினாற்றும்
வரத்திறம்பெற்றுமேலாமாசிலாவாழ்வும்பெற்றான். (கஅ)

வாணனுநந்தினிப்போர்ச்சுரபியுமாலேயாள்வேற்
பூணிவர்பொன்னந்திண்டோட்குலிசனும்பூசைசெய்து
தாணுவாமினையதெய்வத்தனிச்சிவலிங்கமோர்காற்
காணவோரயுதகோடிபாதகங்கழியுமன்றே. (கசு)

நீணிலம்புகழுமிந்தவிமலமாமூர்த்திதன்னை
மாணுறமன்பிற்றாழ்ந்துவலங்கொடுமலர்க்கைகூப்பி
நாண்மலரிறைத்துநின்றுநாவினாற்றுதிப்போரந்த
வாணனேமுதலோர்பெற்றவாழ்வுபெற்றுய்வர்வாய்மை. (உ0)

ஆயிரங்குவவுத்திண்டோளருந்தவவாணனங்கை
யாயிரம்பெற்றதற்காங்களவில்பேறளித்தவிந்த
வாயிரங்கதிர்ஞ்சோதிவாணேசனரியமேன்மை
யாயிரங்கோடிகற்பமறையினுமுடியாதம்ம. (உக)

இத்தகைவாணலிங்கத்திசைப்பருமகிமைகேட்போர்
பத்தியோடுரைப்போர்யாரும்பாதகமுழுதும்பாற்றிச்
சுத்தமாபோகந்துய்த்துத்தூயமெஞ்ஞானமுற்று
முத்தராயரன்பதத்தின்மூழ்குவரின்பவாரி. (உஉ)

வாணசுரச்சருக்க முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம்-கசருஎ

---

## ஆனந்தேச்சுரச்சருக்கம்.

மன்னுசீர்வாணிதீர்த்தமூழ்கிமற்றதற்கணித்தாய்
முன்னொருமுனிவர்கோமான்முடிவிலாவானந்தேச
னென்னமூவுலகுமேத்துஞ்சிவலிங்கமினிதுதாபித்
துன்னரும்பூசையாற்றிச்சித்திபெற்றுய்ந்தவாறும். (க)

இணைதவிரானந்தேசனெனும்பெயரிந்தமூர்த்திக்
கணைதருமாறுமிந்தமூர்த்தியையருச்சித்தாங்கோர்
வணிகன்மாமனேவியோடும்வாழ்வினிதடைந்தவாறு
முணர்வுசான்முனிவர்கேட்பச்சூதனங்கோதலுற்றான். (உ)

அருமறைமுழுதுணர்ந்தோனலமருமகிலவாழ்க்கை
மருணிலைகடந்ததூயோன்வைதிகசைவமென்னு
மிருளறுமொழுக்கங்குன்றாவியலபினனெவரும்வெல்லாப்
பொருமதன்சாயவென்றபுகழினன்புலத்தின்மேலோன். (ங)

அங்கணம்புயமளித்தோற்காழியதளித்தமெற்றிச்
செங்கணன்றேவர்தேவன்சென்னியாயிரத்துநாக
கங்கணனருள்விளக்காற்கருத்திருள்கடிந்தகாட்சி
மங்கணனென்னும்பேரோன்மாசிலாத்தவத்தின்மிக்கோன். (ச)

வேறு.

அந்தணன்முனிவனுதிநாளாரூரமரர்கோனுக்கியபுற்றின், வந்த
நாயகற்குவடகுடதிசையின்மாபராசத்தியானூன, சுந்தரிதனக்குத்
தென்குணதிசையிற்றுகளறுதேவதீர்த்தப்பேர்ப், பைந்தடந்தனக்
குக்கீழ்ப்பெருந்திசையிற்பாரதிதடத்தினுக்கணித்தாய். (ரு)

சுருதியாகமநூல்வழிமுறைதூக்கிச்சோதியந்தனிச்சிவலிங்கந்,
தனைமுழுதுய்வானினிதுதாபித்து வாணிதன்றடத்திடைமூழ்கித்,

திருவெணீறணிந்தாங்கஞ்செழுத்தோதிச் செய்கடன்மரபினிற்செய்து, புரைதவிரனையமூர்த்தியை யன்பால்விதிமுறைபூசனைபுரிந்தான். (சு)

இம்முறைபுரிந்தாங்குறைந்தனனுறைந்தவெள்ளையி லீசனதருளான், மெய்ம்முனிதனக்குமாபெருஞ்சித்திவிளைந்ததுவிளைந்தருள்களிப்பாற், கொம்மெனவெழுந்துகோதிலானந்தக்கூத்துவந்தாடினனுட, மும்மைவண்புவனங்கடலொடுமலைகண்முழுவதுமுக்துளங்கினமாதோ. (எ)

அன்னதோர்காலையம்புயன்முதலோரஞ்சினர்கயிலையையடைந்து, பொன்னின்மாலனைவிர்புனிதனைப்போற்றிப்புகுந்தவாறுரைத்தனருரைப்ப, மின்னுலாஞ்சடையானினிதெழுந்தனையமேதகுதவத்தின்மாமுனிவன், முன்னராங்கணைந்துகூத்தினைத்தவிர்த்துமுடிவிலாப்பேரருள்புரிந்தான். (அ)

வேறு.

அருள்புரிந்தவனைநோக்கியரியவானந்தக்கூத்துப்
புரிதருஙினதுமுன்யாம்போந்தகாரணத்தினாலே
யிருடிநீபூசைசெய்தவிணைதவிரிலிங்கத்திற்குத்
திருவளரானந்தேசனெனப்பெயர்சிறப்பிறேங்க. (கூ)

அரியவித்திருவாரூர்க்குமானந்தபுரமெனும்பேர்
மருவுகவெனவுரைத்துமற்றுமோர்மாற்றஞ்சொல்வா
னிருளறுமுனிவவிந்தவிலிங்கத்திலெந்தஞான்றும்
பிரிவுறாதுறைதுமென்றேபேசினன்பேசிப்பின்னும். (க0)

முனிவனைநோக்கியிந்தமூர்த்தியையொருகானெஞ்சி
னினைபவர்நாவினாலேநிகழ்த்துவோர்விழியிற்காண்போர்
பனைவர்தங்கொலைமுன்னுபாதகஞ்சோடிசெய்த
வினையினொன்னுமுத்திமேவுவரீதுமெய்ம்மை. (கக)

விடைப்பெருந்திங்கண்மேவும்விசாகநாட்கங்குற்போதின்
மடற்செழுங்கமலப்போதாலருச்சித்தங்குணவுமாந்தா
திடர்ப்புலன்வென்றேயிந்தவிலிங்கத்தைப்போற்றித்துஞ்சா
தடுத்தநாள்விதியிற்பூசித்தரியதானங்களாற்றி. (கஉ)

பாரணமரபிற்செய்தோர்படிமிசைமகவானென்னச்
சீர்வளர்திருவின்மல்கிச்சிறந்துவீற்றிருந்துபின்னர்
நேர்தவிரின்பமுத்திமேவுவரொனநிகழ்த்திக்
கார்ப்பொலிகண்டத்தெண்டோட்கண்ணுதல்கரந்தான்மன்னோ. (க)

ஆனையதோர்காலையந்தவருந்தவன்மகிழ்ந்துபோற்றிப்
பனகர்கோன்சுமந்ததொல்லைப்படியெலாமானத்தேச
னெனவினிதேத்துஞானவிலங்கொளியிலிங்கமூர்த்தி
தனைவழிபாடுசெய்து சிவகதிசார்ந்தானன்றே.

இந்தமாமூர்த்திதன்னையேற்றிருந்தியகடன்னில்
வந்ததோர்விசாகநாளின்மனையொடுவணிகன்பூசித்
துய்ந்தமான்மதைவிரித்தியகோதுதுமுலகமேத்து
கந்துலாம்பழனவேலிவைகிசநகரில்வாழ்வோன். (கரு)

பட்டினசாமிநாயகனொருவன்முற்பாவந்தன்னுள்
மட்டறுவாழ்வுகுன்றிவறுமைவெந்தழலாலவாடிக்
கெட்டவர்தங்கட்குற்றோர்கிளையினுமில்லையென்னுங்
கட்டுரைதேறச்சுற்றந்தணந்திடக்காட்டிற்புக்கான். (கசு)

வேறு.

சுற்றத்தாரிகழ்ந்தகற்றியதுயரமுளமிடியான்
மற்றைத்தீயினுமூண்டிடவெதும்பியேவாடிக்
கற்றைத்தாழ்குழற்கற்புடைமனையொடுங்காட்டி
லுற்றுக்காயடகருந்தியாங்குழிதருநாளில். (கஎ)

முளைம்[illegible]தோர்புண்ணியத்திறத்தினான்முதுதீ
வனம்பிரிந்துதன்மனையொடுவணிகன்மற்றொருநா
ளனம்புரிந்தமென்னடைமயிலனையகனின்னருளாற்
றினம்புரிந்துறைசெல்வவாரூர்நகர்சேர்ந்தான் (கஅ)

சேர்ந்துதியவெம்பசியினாலவருந்தியேசிலநாள்
பாய்ந்தநீரலர்பங்கயமலர்கொய்துபகர்ந்தாங்
கேய்ந்தசிலபொருள்கொண்டுணமிசைந்தனனிருந்தான்
வாய்ந்தகற்புடைமனைவிமற்றவளொடும்வணிகன். (ககூ)

இருக்குநாளின்மற்றோர்பகல்கொய்தவீர்ங்கமல
விரைக்கொண்மாமலர்விலைசெலாதுணவின்றிவெம்பி
வருத்தமெய்தியேமனையொடும்பகலெல்லாம்வதிந்தா
னருக்கன்மேற்றிசையடைந்தனனடைந்ததோரளவில். (உ0)

ஆசிலாதநல்லூழினாலமலவானந்த
னீசனாலயத்தெய்தினனெய்தியவெல்லை
மாசிலாமறையோர்முதன்மாந்தர்மற்றந்தத்
தேசுசால்சிவமூர்த்தியைப்பூசனைசெய்தார். (உக)

அனையர்தங்களிற்சிலர்மனைப்போதுகொண்டாங்கு
மனையொடெய்தியவணிகனைநோக்கிவைகாசிப்
புனிதமாதநல்விசாகமித்தினமின்றுபுதிய
வனசமாமலர்புனைந்துனைத்துயிலொடுமாற்றி. (உஉ)

இந்தமூர்த்தியைப்போற்றிடிலீறிலாத்திருவு
மந்தமில்லதோர்முத்தியுமெய்திடுமெதனைப்
பைந்தண்மாமனைப்போதிதுபகர்தரும்பொருட்குத்
தந்திடென்றவண்சாற்றினர்சாற்றியநாலே. (உங)

யாமுமர்ச்சனைபுரிதுமென்றெண்ணியேயீச
னுமைநல்லருளான்மனையாளொடுநாய்கன்
றேமிலத்திறஞ்சொற்றனன்மனைவியுந்துணிந்தா
டாமவாரிசமாமலர்விற்பதுதவிர்ந்தார். (உச)

தேசுசான்றவச்சிவலிங்கமூர்த்தியையருச்சித்
தேசில்கற்புடைமனையொடுந்துஞ்சலூணின்றி
யாசிலாதவவ்வணிகனன்றிராப்பொழுதமர்ந்தான்
வீசுசெங்கதிர்பரப்பியங்கெழுந்தனன்வெய்யோன். (உரு)

ஆங்கவெல்லையிற்பசிவிடந்தலைக்கொளவாவி
நீங்கல்செய்தனன்வணிகர்கோனெடுங்கணீருகுத்து
தாங்கருந்துயர்த்தழல்சுடத்தன்னுடல்கருகி
யோங்குகற்புடைமனைவியுமுடனுயிரொழிந்தாள். (உசு)

செக்கர்மேனியம்பரமனைப்பூசைசெய்திறத்தாற்
றொக்கபாயிருள்பருகியசுடரவன்குலத்தி
லிக்குவாகுவாமிறையவன்வழியினிவ்வணிகன்
மிக்கபத்திரசேனனும்வேந்தனுவுதித்தான். (உஎ)

முற்பிறப்பினிலுணர்வொடுதோன்றிமூதுலகம்
பொற்புயத்தினிற்றாங்கியேபொன்னுலகாளும்
வெற்பிருஞ்சிறைவிட்டியவேந்தனிற்சிறந்து
கற்பெரும்புகழ்க்காஞ்சிமாநகரினிலமர்ந்தான். (உஅ)

வேறு.

மாரவேள்வனப்பினீதிமாட்சியின்மனுவேன்மைந்தன்
வீரவண்சிறப்பின்மேகமிகுபெருங்கொடையின்முக்கட்
கார்தவழ்கண்டனன்பிற்கண்ணப்பனிதிக்கோன்செல்வத்
தார்தருகல்விதன்னிலனந்தனென்றகிலமேத்த. (உகூ)

கூந்தலம்புரவிசெம்பொற்கொடிநெடுங்கொடிஞ்சித்திண்டேர்
பாய்ந்தழும்மதமால்யானைபதாதியோர்நான்குகோடி
சூழ்ந்திடவெண்ணில்கோடிசுடர்முடியரசர்வந்து
தாழ்ந்தனர்திறையளப்பத்தலைமைசாலரசுசெய்தான். (௩0)

உத்தமவணிகமங்கையொலிகடற்புவிபுரக்குஞ்
சித்திரமணிப்பூண்மார்பிற்சேனாதிபதியெனும்பேர்
மைத்தவிர்புகழான்செல்வமடமகளாகியந்தப
பத்திரசேனனென்னும்பார்த்திபன்மனைவியானாள். (௩௧)

அன்னவளரியகற்பினலங்கொளிவடமீன்செய்ய
பொன்னவிர்தெய்வமேனிப்பூமகள்காமர்பொற்பின்
மன்னியதிருவுறத்தின்மாசிலாமலையின்மங்கை
யென்னவேமுந்நீர்வையமேத்திடப்பொலிந்தாளன்றே. (௩௨)

கமலமாபதியெனும்பேர்க்காரிகையவடனோடுந்
தமரமார்கழற்கால்வேந்தன்றனைபுரந்தினிதுறைந்தா
னிமயமாமங்கைபங்கனிணையடிபூசைசெய்யும்
விமலமாம்பலத்தின்மேன்மையாவரோவிளம்புநீரார். (௩௩)

அந்தநல்வேந்தனின்புற்றமருநாண்முற்பிறப்பின்
[illegible]சைசெய்ததினத்திடைக்கமலைமூதூர்
வந்தணைந்துவமனில்லாவளரொளியானந்தேசன்
செந்தண்மாமலர்த்தாள்பூசைசெய்திடச்சிந்தைசெய்தான். (௩௪)

சிந்தைசெய்தரிமானேந்துஞ்செம்பொனந்தவிசிறங்கி
யைந்துநான்முழநீண்டேழுமுழமுயரரசுவாவூர்ந்
திந்திரனபோந்தென்னவிலங்குபொன்முடிமாமன்னன்
வந்தனன்மதில்சூழ்காஞ்சிமாநகர்நீங்கிமாதோ. (௩௫)

இறையவனீங்குமெல்லையெல்லைதீர்தானைவேந்தர்
மறுவறுமமைச்சரொண்ணில்வயவர்கள்சுற்றமாந்தர்
குறைதவிர்நகரமாக்கள்குழாங்குழாமாகவீண்டி
யிறையொளிமதியஞ்சூழ்ந்தவுடுவெனநெருங்கிச்சூழ்ந்தார். (௩௬)

கடங்கெழுகளிறுபாய்மாகதிர்மணிக்கனகத்திண்டேர்
மிடைந்துறுபதாதிசூழ்ந்துவிரிகடல்போலெழுந்த
விடம்புரிமுரசுகொற்றவலம்புரியிரலையோதை
யடர்த்தெழுமேகராசியார்ப்பெனவெழுந்ததம்மா. (௩௭)

கொடியிருங்காடும்வண்ணக்குடைநிரைக்குழாமுமொய்த்துப்
படர்நெடுவிசும்படைத்தபரந்தெழுபூழிமாலை
விடுபரிவிசயத்திண்டேர்வெய்யவன்விரித்துவீசுஞ்
சுடரொளிவிலக்கிவானிற்கங்குலையுந்தூர்த்தவன்றே. (௩௮)

இன்னணமிறைவனேகவிறைவிபொற்குழைமுகத்துக்
கன்னியர்குழாங்கள்காப்பக்கனகநாட்டரசன்றேவி
பொன்னொளியரம்பைமாதராபுடையுறப்போந்ததென்ன
மின்னொளிவிமானமூர்ந்துமிகும்பெருஞ்சிறப்பிற்போந்தாள். (௩௯)

போந்தருண்மனைவியோடும்பொருகடற்றானைசூழ
வேந்தலஞ்செல்வவாரூரொல்லையின்புறத்தினெய்தி
யூர்ந்தபேரூர்தினீங்கியுவப்பொடுபணிந்துபோற்றி
வாய்ந்தநீர்க்கழனிவேலிமணிமதில்வாயில்வந்தான். (௪௰)

மணிமதில்வாயினீங்கிமாநகரத்துநண்ணி
யணிகெழுசெம்பொன்மாடத்தாவணம்பலகடந்து
பணியுறைபதியினின்றும்பரமனதருளால்வந்த
வினைதவிர்தேவதீர்த்தத்தடமருங்கெய்தினான். (௪௧)

எய்தியவிதிவழாமலிறையவனிறைவியோடு
மொய்தருமலர்நீர்மூழ்கிமுக்கணன்றிருத்தாண்முன்னி
மைதவிர்நீறணிந்துமரபினஞ்செழுத்துக்கூறிச்
செய்தருகடன்கள்யாவுஞ்சிறப்பொடுதிருந்தச்செய்து. (௪௨)

ஆயிரங்கோடிசெம்பொனளவறுமணிப்பூணுடை
தூயவொண்கன்னிமாதர்சுரபிவண்பூமியாதி
மாயிருந்தானவர்க்கம்வழங்கினனமதிதோய்சென்னி
நாயகனன்பின்மிக்கநான்மறைவாணர்க்கெல்லாம். (௪௩)

எல்லைதீர்தானநல்கியிலங்கொளியானந்தேசன்
மல்லலங்கோயிலெய்திவலங்கொடுவணங்கிப்போற்றிப்
பல்லநாளகன்றதாயைப்பரிவினல்வந்தணைந்த
கல்விளங்கன்றிற்சாலநவிலருமகிழ்ச்சிகொண்டான். (௪௪)

மகிழ்ந்தனன்கண்ணீர்மாரிவார்ந்தனன்புளகமேனி
நெகிழ்ந்தனன்றனைமறந்தான்றீவினைத்தொடர்ச்சியெல்லா
மிகந்தனனெல்லையில்லாவின்பவானந்தவெள்ளத்
தகம்புகுந்தினிதுமூழ்கியமிழ்ந்தினனரசர்கோமான். (௪௫)

இன்பவானந்தவெள்ளத்திடைப்படிந்தரிதினேறி
வன்புலவழியடைத்துமனத்தினைநிறுத்திமன்னன்
மின்பொலிசெம்பொன்மேனிவிமலவானந்தவீசற்
கன்பொடுவிதியிற்பல்வேறபிடேகமாட்டினுனல். (௪௬)

ஆட்டினனுடைசந்தங்கருப்புரமாதிசாத்திச்
சூட்டினன்கமலப்போதுதொடையொடுமணிப்பூண்வர்க்கம்
பூட்டினனமுதமாதியருத்தினன்பொங்குதீபங்
காட்டினனின்றவேனைக்கடன்களுமுறையிற்செய்தான். (௪௭)

மரபொடுவலத்திற்சூழ்ந்துவணங்கியாங்கெழுந்துநின்று
கரமலருச்சிகூப்பிக்கனிந்துளமுருகியன்பா
லரசர்கோனுரிமைக்கற்பினரும்பெறற்றேவியோடுந்
திருவளரானந்தேசன்றிருப்புகழ்போற்றலுற்றான். (௪௮)

ஐயனேபோற்றியன்பர்க்கன்பனேபோற்றிஞான
மெய்யனேபோற்றிமெய்யர்நெஞ்சுறைவிளக்கேபோற்றி
துய்யனேபோற்றிதோன்றாதுணைவனேபோற்றிசூலக்
கையனேபோற்றிகாலகாலனேபோற்றிபோற்றி. (௪௯)

வறியனேன்றனையாட்கொண்டுவாழ்வுதந்தளித்தாய்போற்றி
வெறிமிகொன்றைவேய்ந்தவேணியாய்போற்றிமுன்னை
யறிவுதந்தருள்புரிந்தவண்ணலேபோற்றிமல்லற்
சிறைகொணீர்ப்பழனவாரூர்ச்செல்வனேபோற்றிபோற்றி. (௫௦)

சங்கராபோற்றிபோற்றிதமனியக்கிரிவளைத்த
செங்கராம்புயனேபோற்றிதேவாதிதேவேபோற்றி
பொங்கராவணிந்தபொற்றேட்புனிதனேபோற்றிபோற்றி
வெங்கராசலமுரித்தவிமலனேபோற்றிபோற்றி. (௫௧)

சோதியஞ்சுடரேபோற்றிசுருதிநூற்றுணிவேபோற்றி
யாதியுமுடிவுமில்லாவானந்தவீசபோற்றி
தீதுடைவினையேற்கிந்தத்திருவெலாந்தந்தாய்போற்றி
பாதிபச்சொளிபடைத்தபவளமால்வரையேபோற்றி. (௫௨)

எளியவர்க்கெளியாய்போற்றியெண்ணியதளிப்பாய்போற்றி
குளிர்மதிக்கண்ணிசூடுங்குணப்பெருங்குன்றேபோற்றி
வளைகடற்பிறந்தநஞ்சைவானவருய்யவாங்கிக்
களமமைத்தருள்புரிந்தகருணையங்கடலேபோற்றி. (௫௩)

ஏனமகிழ்ந்தேத்தித்துஞ்சாதானொழிந்திரவகற்றித்
தினகரனுதித்தவெல்லைச்செய்கடன்முறையிற்செய்தாங்
கனகவந்தணர்மற்றுள்ளவதிதியர்வேட்கைதீரக்
கனகமாமழைபொழிந்துகண்ணுதல்கருணைபெற்று. (௫௪)

பகருநூல்விதிவழாமற்பாரணமினிதிழைத்துத்
திகழுமாரூரில்வாழுமனைவர்க்குஞ்சிறப்புநல்கி
மகிழ்பெறநிதிபூணாடைவழங்கியேயவரோர்வந்து
புகழுமானந்தவீசனாலயம்பொன்னாற்செய்து. (௫௫)

திருத்தகுவிழாநற்பூசைமுதலியசிறப்புநல்கி
விரித்தவாண்மணிப்பூண்வர்க்கமாதியவிருப்பினீந்து
கருத்துறவணங்கிப்போற்றிவிடைகொடுமன்னன்காஞ்சிப்
புரத்திடைமனையோடெய்திப்பொலிந்துவீற்றிருந்தானன்றே. ()

அப்படியாண்டுதோறுமணைந்தினிதானந்தேசற்
கொப்பரும்பூசையாற்றியொருகுறுநாளிலோர்நா
ளிப்படியாண்டுதோறுமருச்சனையிழைப்பதென்கொல்
செப்பெனமறையோர்கேட்பக்காரணஞ்செப்பலுற்றான். (௫௭)

காரணங்கூறக்கேட்டுக்கருத்தினிலிறும்பூதெய்தி
யாரணமுதியோரெல்லாமகிழ்ந்தனரவனிதாங்குந்
தாரணிதிண்டோண்மன்னன்றயங்கொளியானந்தேசன்
சீரணிதிருத்தாள்போற்றிவிடைகொடுத்தூர்சென்றான். (௫௮)

சென்றருண்மன்னனந்தத்தினத்தினிலாண்டுதோறு
மன்றலம்பொழிலாரூரில்வந்தணைந்தானந்தேசன்
பொன்றிகழ்மலர்த்தாள்பூசைபுரிந்துபூதலம்புரந்து
துன்றியவரசர்தானைசூழவீற்றிருந்தானன்றே, (௫௯)

உருவளர்செம்பொன்மேனியோங்கொளியானந்தேசன்
மருவளர்மலர்த்தாள்பூசைசெய்தமாண்பயனான்மன்னன்
றிருவளர்மனைவியோடுந்திண்புவிபுரந்துபின்னர்ப்
பெருவளம்பிறழாவாழ்க்கைப்பேரின்பமுத்திபெற்றான். (௬0)

இப்பெருமன்னன்போலவெம்பிரானானந்தேச
னொப்பருந்திருத்தாள்பூசித்தொழிவுறாத்திருவினோங்கி
முப்பெரும்புவனம்போற்றமுடிகவித்தரசுசெய்து
மெய்ப்பெருங்கதிபெற்றுய்ந்தோர்தொகையையார்விளம்புவோர் ()

ஆனந்தவீசனென்றேயறைந்திடிலொருகாற்கோடி
யூனங்கொள்பாவநீங்குமென்றிடிலுருகிப்பல்காற்
கானுந்துமலர்கடூவிக்கைதொழூஉப்பரவிப்போற்று
மீனந்திரன்பின்மிக்கோரெய்தும்பேறியம்பவற்றோ. (௬௨)

எம்பிரானானந்தேசற்கினிதபிடேகஞ்செய்து
வம்புலாமலங்கல்சந்தம்வயங்குநுண்டுகிலணிந்து
பைம்பொனாரம்புனைந்துபரிந்தமுதருத்திநோர்க
ளம்பொனாடாண்டுபின்னர்முத்தியாங்கடைவரன்றே. (௬௩)

தயங்கொளியானந்தேசன்சந்நிதிதன்னிற்சைவ
நயங்கொள்வெண்ணீற்றுநெற்றிநான்மறையோர்க்குப்பைம்பூண்
பயங்கெழுசுரபிகன்னிபார்முதற்றானமீந்தோர்
வயங்குபார்புரந்துபின்னர்வானரசாள்வர்மாதோ. (௬௪)

பத்திரசேனன்பூசைபண்ணியேகதிபெற்றுய்ந்த
வத்தினந்தன்னிலாரூரமலவானந்தவீசற்
குத்தமபூசைசெய்வோர்செய்விப்போருழிகால
மித்தரைபுரந்துமுத்தியெய்துவதுண்மைமன்னோ. (௬௫)

சத்தியவானந்தேசன்சாற்றருஞ்சரிதமோது
முத்தமமாகனைக்கேட்குமுயரறவாணர்மும்மை
வித்தகமெய்தித்தீயவெறுமையோடிகலகன்று
பத்திரசேனன்போலப்பரகதிபெறுவர்மாதோ. (௬௬)

ஆனந்தேச்சுரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௫௨௩

---

## கயாதீர்த்தச் சருக்கம்.

வளமலிசெல்வவாரூர்மாநகர்க்குணபாலெல்லை
தெளிபுனற்கயையெனும்பேர்த்தீர்த்தமொன்றுளதத்தீர்த்தத்
தளவறுபெருமைதன்னிலறைகுவன்சிறிதுகேண்மி
னொளியுடைமுனிவீரொன்னுச்சூதனங்கோதலுற்றான். (௧)

வேறு.

புண்ணியவண்பயிர்போற்றிவளர்த்தருள்புயலன்னாள்
கண்ணிறைநல்லருள்போலநிறைந்தகயாதீர்த்த
மெண்ணினுமோர்விசைகாணினுமெண்ணிலிரும்பாவம்
வண்ணமலர்க்கதிர்முன்புகுமென்பனிபோன்மாயும். (௨)

# கயாதீர்த்தச்சருக்கம்.

காவிநறும்புதுவாசநிறைந்தகயாதீர்த்த
வாவியணைந்தெழுமாருதமேற்படின்வரைவில்லாக்
கோவதைமாதர்தமாருயிர்கொன்றகொடும்பாவம்
யாவையுமொல்லையகன்றிடுந்தண்ணிரிதுவாய்மை. (௩)

வேரிததும்பியமாமுகையேடுவிரித்தூதிக்
கார்வரிவண்டுளர்வாரிசநாறுகயாதீர்த்தத்
தோர்விசைமூழ்கிடினம்மறைவேள்வியினுயர்மாந்த
ராருயிர்கொன்றிடுபாதகமாயிரமழிவெய்தும். (௪)

காமுறுநல்வரம்யாவையுநல்குகயாதீர்த்த
மாமலர்வாவிமருங்குசிராத்தம்வழங்குற்றோர்
தோமறுதென்புலவாணர்பெருந்தொகையெல்லாமூழி
யேமநலந்தருமாசிவலோகமிருப்பாரே (௫)

வேறு.

செப்பருந்தவத்தின்மிக்கீர்செய்நன்றிமறந்தபாவ
முப்பெரும்புவனத்துள்ளநதியெலாமூழ்கிவேள்வி
யொப்பருந்தானமாதிபண்ணினுமொழியாதம்மா
விப்புனன்மூழ்கினீங்கும்வேறினியிசைப்பதென்னே. (௬)

இத்தகைசான்றவிந்தவிரும்புனற்கயையெனும்பே
ருத்தமதீர்த்தக்காதையொன்றெடுத்துரைப்பன்வேறு
வைத்திடாதுள்ளஞ்சாலமலர்ந்தபேரன்பிற்கேண்மின்
புத்தலரிதழிவேணிப்புண்ணியற்கன்புபூண்டீர். (௭)

மாகயல்வென்றவாட்கண்மடவளிர்தஞ்சாயற்கொல்கித்
தோகையங்கடவிதுன்னுந்தொல்பெருந்தொலைவில்சீர்த்தி
நாகயலுலவும்பூந்தணறும்புனன்மல்லற்பண்ணைக்
கேகயதேசமன்னன்கேடிலாத்திருவின்மிக்கான். (௮)

வேறு.

நேரலார்தநெஞ்சில்வீழ்
சோரிவாரியூடுதோய்
வீரவாகைவேலினன்
மாரிபோன்றவண்கையான். (௯)

குமிழிபட்டகொழுமதத்
தமர்முருக்குமானையான்
றமரமைக்கடற்றனைச்
சுமைபொறுத்ததோளினன்.

வெற்புவீழினுங்கதிர்
தெற்கெழுந்துசெல்லினுஞ்
சொற்பிறழ்ந்துசொற்றிடாப்
பொற்புமிக்கபுகழினான். (கக)

பிறைச்சடைப்பிரானடி
யுறப்புணருளத்தினன்
மறக்கலியைவாட்டினு
னறப்பயிரையாக்கினான். (கஉ)

வேறு.

அறைகழலாண்டகையண்ணல்வேதநூ
னெறிவழிமகம்பலபுரிந்தநீர்மையான்
மறுவறுமனுமுறைவளர்க்குமாண்புசா
லிறையவன்விரோதனென்னும்பேரினான். (கங)

மற்றவனற்பெருந்தானைமாக்கடல்
சுற்றிடக்கலினவாய்த்துரகமூர்ந்துவெங்
கொற்றமாவேட்டைமேற்கொண்டுகானகத்
துற்றனனயிடையுற்றகாலையில். (கச)

இருள்படுமடவியினெல்லைசூழுறப்
பொருகளையிடையறப்பிணித்துவார்கொளீஇக்
குறைதருபல்லியந்துவைப்பக்கொம்மென
வரிசிலைமறவர்கண்மாவெழுப்பினார். (கரு)

வேறு.

ஆயவெல்லையடற்சிலைகோலினான்
பாயமாரியிற்பல்கணைதூவினான்
காயும்வெங்கட்கடுங்கொலைமாத்தொகை
மாயவாட்டினன்மன்னவர்மன்னனே. (கசா)

மோட்டுயொளிமுரணரியாதிமா
வாட்டுமெல்லைவடிக்கணைதன்னொடுந்
தோட்டுவார்குழற்றோகையர்கண்ணெனக்
காட்டுநீணெறிபோயதொர்கன்னிமான். (கஎ)

போயமானைத்தொடர்ந்துபுரவலன்
போயவெல்லைப்பொருசிலையேந்திப்பின்
போயமாயன்றொடர்ந்துழிபொள்ளெனப்
போயமானெனநீணெறிபோனதே. (கஅ)

வேறு.

சாலநீணெறிமான்றொடர்ந்தேகினன்றலைவன்
காலையாங்கதிற்பின்றொடர்கடற்படைவயவர்
மேலைவான்கதிர்வெயின்முதுவேனிலால்வெம்பி
மாலுழந்துவீழ்ந்தயர்ந்தனர்தனித்தனன்மன்னன். (கூ)

தனிமையுற்றுவெந்தழல்படுவெயில்படத்தளர்ந்து
புனலுமற்றுவாய்புலர்ந்துடல்வியர்ப்பிறுற்றுழங்கி
நினைவுமற்றசைந்தயர்ந்தனனிருபன்மற்றவனூர்
வினையுளைப்பரிவிசைகொடுபோயதுவனத்தில். (உ0)

கொற்றவன்றளர்ந்திளைத்திருங்கைவலிகுறையச்
சற்றுநின்றிடாதடற்பரிவிசையினுற்றுயி
வற்றிநீரழன்மடுத்ததோர்பாலைநீள்வனத்தி
லுற்றவேந்தனைவீழ்த்தியேபோயதாலொல்லை. (உக)

இளைத்தவெல்லையிற்சுரத்திடையிறைவனைவீழ்த்தி
யுளைத்தனிப்பரியொல்லையிற்போயதாங்குறுகை
விளைத்தகைப்பொருளற்றுழிவேறுபட்டேகும்
வளைத்தவின்னுதற்கணிகைமாமாதர்போன்மாதோ. (உஉ)

வேறு.

குற்றமார்கொடுங்கோன்மன்னர்குடையின்கீழ்க்குடிகளென்ன
வற்றன்மாமரவெம்பாலைவன்சுரத்திடையேவாளா
வுற்றுழியுதவிசெய்யாக்கயவர்போலொருவிநீங்க
வெற்றிவார்கழற்காலொள்வேல்விடூரதன்மிகமெலிந்தான். (உ௩)

கொல்லுலையிரும்பிற்சேர்ந்தகூரம்பிற்கொடியபாலை
வல்லழல்வனத்துமன்னன்றமியனாய்வாடிநொந்து
சொல்லுநாவறந்துலர்ந்துசோர்ந்துளந்தளர்ந்துசால
வெல்லையிலின்னலெய்துமன்னதோரெல்லைதன்னில். (உ௪)

கறையுடற்குழிவயிற்றுக்கறங்கெனச்சுழலும்பைங்கட்
பிறையெயிற்றுலரும்பங்கிபிணநிணம்பிலகும்பேழ்வாய்க்
குறளடிக்குருதியாடுங்கூருகிற்கொடுவிரற்கை
வெறிமருட்கொடும்பேய்மூன்றுவெயதெனமேயவன்றே. (உ௫)

மன்னவர்மன்னனுங்குமனமிகமருண்டுநின்று
துன்னியவவற்றைநோக்கிச்சுடுதழற்சுரத்திலுற்ற
வென்னைவந்தடுத்தவண்ணமென்கொலென்றிசைத்தவெல்லை
[illegible]வைமூன்றின்முன்னுமலகைமற்றிவைவிளம்பும். (உ௬)

வேறு.

ஊனுகர்பவத்தானன்றிகொல்பவத்தாற் றெய்வதமில்லையென்
றுரைத்த, வூனவெம்பவத்தாலலகையாயிந்தச் சுரத்திடையுலைந்த
னமவற்று, ளூனுகரலகையானிதுநன்றி கொன்றதோரலகையொப்
பிகந்த, வூனமில்கடவுளில்லையென்றுரைத்த வலகையிதொளியினு
லுயர்ந்தோய். (௨௭)

உலகுசெய்தருமமுருவுகொண்டன்ன வுளதுமாமுகமெனும்
புதிய, வலர்தருமதியிற்பரந்தெழுகருணையமுதவாளொளிநெடுநில
வான், மலிதருமெமதுமயிற்றழலன்ன வன்மிதுமருவியேமறுகுந்,
தொலைவறுதுயர்நோய்தொலைந்ததிச்சுரத்திற் றருவெனத்தோன்றி
யதோன்றல். (௨௮)

என்றசொல்வினவிவறியவிச்சுரத்தி னின்னலுற்றலமருமுமக்
கு, மன்றநல்லுண்டியாதுகொலென்று மன்னவன்கேட்டுழிப்புலவூ
ன், றின்றபேரலகைவிரேதன்செம்பொற் செழுங்கழற்சேவடிதா
ழ்ந்து, நின்றுகைகூப்பிக்கேண்மியாவென்று மற்றவணிவையிவை
நிகழ்த்தும். (௨௯)

நீறிடாரரனைநினைத்திடாரீசனிமலவஞ்செழுத்தினைநாவாற்
கூறிடார்சிவனைப்பூசனைபுரியாருண்டிடுங்கோதுசேருணவு
மாறிடாவதுயற்சிராத்தமேயாதிமாகடன்செய்திடாரொன்று
மாறிடாவெந்தீச்சினத்தினர்முடையூனருந்துவோரருந்திடுமுணவும்.

புனிதவாமயத்தின்மெழுகிடாவகத்திற் பொங்கிருண்மணிவி
ளக்கேற்று, மனையினிலுணவும்பூப்புறுமடந்தைவரிவிழிசண்டிடு
முணவும், பனிகொள்பூங்கூந்தற்பரத்தையர்தம்பாலுண்டிடும்பத
கர்தமுணவுங், கனியுமாகருத்தினிவேதனஞ்செய்யாதுண்டிடுங்க
யவர்தமுணவும். (௩௧)

அதிதியர்பசிப்பவுண்பவருணவுமையமீத்துண்டிடாருணவும்
பதிதர்பாலுணவும்பன்றிநாய்முதலபயின்மனையுணவுநீர்படியா
மதிநுதன்மாதர்சமைத்திடுமுணவும்வனப்பழிமட்கலத்துணவு
முதிர்மயிரணைந்தவுணவுமேயாங்களுண்டிடுமுண்டிமற்றுரவோய்

வேறு.

என்றிவையலகைசெப்பவெப்பவமிழைத்துளோர்கள்
புன்றொழிலலகையாவார்புகலெனமன்னன்கேட்ப
மன்றலங்கொன்றையானைவழிபடார்நீறுபூசார்
நன்றுசெய்நன்றிகொன்றோர்நாதனஞ்செழுத்துக்கூறார். (௩௩)

குரவரையீசற்கன்பாங்கோதறுகுணத்தோர்தம்மைப்
பரசிவபுராணநூலைப்பழிப்பவர்படிறர்கோள
ரருள்புரியன்னைதாதையதிதியரறவோர்சேதா
வுளாவழாமனைசேய்சுற்றமோம்புறார்முடையூனுண்பேயர். (௩௪)

பிறர்மனைவிழைவோர்நாளும்பிறர்தமக்கல்லல்செய்வோர்
மறைநெறிமனுவினீதிவரம்பினையுடைப்போர்வஞ்ச
ரறநிலைகெடுப்போர்தானம்விலக்குவோரருளகன்றோர்
கறைதவிர்புனிதநில்லோர்கடுஞ்சினமுறுதகையர். (௩௫)

கொலைகளவிழைப்போர்செய்நன்றிகொன்றுநரைப்பிழைத்தமாதர்
வலிதுயிர்விடுப்போர்கள்ளுமாந்தினோர்புன்னுமாந்து
நலமிலாவினையின்னார்தங்களைநயப்போரின்றே
ரலகையாயுழல்வாரென்னுமலகையாய்க்களைந்ததன்றே. (௩௬)

மற்றிவைவினவிமன்னன்வானெறிநடத்தல்யாவு
மற்றமிலறங்கள்பாவமாய்ந்தினிதுறையுநன்மை
பெற்றனிராதலாலிப்பேயுருப்பெற்றவாற்றுற்
குற்றம்யாதென்றுகூறப்பின்னுமப்பெரும்பேய்கூறும். (௩௭)

கொழுமலர்த்தடங்கொடென்னீர்குடைந்திடவணையில்வாசச்
செழுமலர்ப்பொதும்பர்நீழல்சேர்ந்திடவெழுந்துசெல்லில்
வழிசுவைக்கனிகனிந்தமரத்தின்பாலணையின்மேலோ
ருழையினிற்குறுகிலீசனொண்மணிக்கோயிலெய்தில். (௩௮)

புண்ணியதலத்திற்பூசைபுரிந்திடுமடத்தில்வேள்வி
நண்ணியவிடத்திற்றீர்த்தநதிகளின்பாங்கரொண்டோட்
கண்ணுதல்விழாவின்மேலாய்கதியினிதளிக்குங்காட்சி
யண்ணலஞ்சிவபுராணமறைந்திடுமெல்லைதன்னில். (௩௯)

அடுத்திடிற்சூலபாணிவயிரவனுணைபோற்றுஞ்
சுடர்த்தழல்சொரியுஞ்செங்கட்டுண்டவெண்பிறையெயிற்றி
னிடிக்குரன்மடித்தபேழ்வாயிருங்கணநாதர்நின்றே
புடைப்பரங்கிருப்புத்தண்டாற்புகழ்நெடும்புலவுவேலோய். (௪௦)

ஆதலாலரசரேறேயலகைவெம்பிறவிதன்னிற்
றீதுறுநிரயநன்றூற்செப்புமித்தீப்பிறப்பின்
மாதுயரகற்றியெம்மைவள்ளலிங்களித்தியென்னப்
பாதமாமலரிறைஞ்சப்பார்த்திபன்பகரலுற்றான். (௪௧)

வேறு.

இன்னதோர்ரறமிழைத்திடிலிப்பவமொழிந்திடுமெனக்கூறி
லன்னதோரறஞ்செய்வலென்றரசர்கோனுணைகூறிடக்கேட்டு
முன்னர்நின்றபேரலகைமாமுதல்வனைவணங்கியேமுகநோக்கி
மன்னர்மன்னவகேட்டியாலிஃதெனவகுத்துமற்றிதுகூறும். (சஉ)

காசியாம்பெயர்த்திருநகரடுத்ததோர்கயையெனுந்தீர்த்தத்திற்
றேசமன்னவெம்பொருட்டுநீமூழ்கியேசிராத்தமுஞ்செய்தாயேல்
மாசுசாலுமிவ்வலகைவெம்பிறவிநோய் மாறிடுமெனக்கேட்டே
யேசில்வேந்தர்கோனிம்முறைபுரிகுவல்வாய்மைமற்றிஃதென்றான்.

வாய்மைசெப்பியேமன்னவன் வேனிலால்வாய்புலர்ந்திளைத்
தேன்வண், டேமலர்ப்புனல்காட்டுமினென்றலுஞ் சேணெறித்திக
ழ்ந்துள்ள, பூமலர்ச்செழும்பொதும்பார்சூழ்தாமரைப் பொய்கை
யொன்றதுகாட்டி, வேமழற்சுரநீய்குறவேந்தனை விடுத்துநீங்கின
வெம்பேய். (சச)

வேறு.

அருளிலாக்கயவர்நெஞ்சினழல்படுவெப்பமாறுக்
கடியவேற்றானையொள்வேற்காவலன்கடிதுநீங்கி
முருகுவாய்ப்பொதிந்ததோட்டுமுள்ளமுளரிவாசத்
திருவினுற்பொலிந்ததெண்ணீர்ச்செழுந்தடமருங்குசென்றான். ()

கஞ்சவண்பொய்கையெய்திக்கடிகமழ்புனலருந்தி
வெஞ்சுரந்தன்னிலுற்றதுயரொலாந்தீர்ந்தான்வேந்தன்
பஞ்சின்மெல்லடியாள்பங்கன்பதத்தினையன்புபூண்டு
தஞ்சமென்றடைந்துதுன்பந்தவிர்ந்தருளடைந்தோரொன்ன. (சசு)

சுரத்திடையுற்றவெய்யதுயரொலாந்தவிர்ந்துமன்னன்
மரைத்தடம்பொய்கைபபாங்கர்வண்பொழினிழலெய்தி
முரட்புலவேடர்தானைமுருக்கியஞானவொள்வாட்
டரித்தருள்சைவவேதசைமினிதன்னைக்கண்டான். (சஎ)

வடகிழற்கடவுளென்னவண்பொழின்மரநிழற்கீழ்ப்
புடைதொறுமுனிவர்சூழப்பொலிந்துவீற்றிருந்ததெய்வச்
சடைமுடிமுனிவன்முன்போய்த்தாளிணைதாழ்ந்துவாழ்த்திச்
சுடருமிழ்குருதிவேலான்றனைக்கரங்குவித்துநின்றான்.

வேறு.

வணங்கினின்றதோர்மன்னனைமாமுனியறிந்தாங்
கிணங்குசீருபசாரமாமரபினிலிழைத்தே
யுணங்கிநீயொருதமியனாயுற்றவாறெவன்கொ
னிணங்கொள்வேலினாய்நிகழ்த்தெனநிகழ்த்தினனிருபன். (௪௯)

நிகழ்ந்தபாவையுநிருபர்கோனிகழ்த்திடக்கேட்டுத்
திகழ்ந்தமாதவனிரங்கியேமன்னனைத்தேற்றி
யகஞ்சுரந்தபேரன்பொடுகனிகிழங்காதி
யுகந்துமன்னவற்கருத்தியேயுவகைசெய்தனனால். (௫௦)

உவகைநல்கியேயொருபெருந்தவிசினிதுதவித்
தவறிலாதுயர்தவமுனிதண்ணளிபுரிய
வவனிகாவலனமர்ந்தனனன்னதோரளவிற்
கவனவாம்பரித்தேருடைக்கதிரவன்மறைந்தான். (௫௧)

வேந்தனுற்றவப்பாலைவெம்புகைமிசைவிரிந்து
சூழ்ந்ததன்மையிற்பரந்ததுகங்குலச்சுரத்திற்
காந்துதீச்சுடக்கணகன்விசும்புடல்கன்றிச்
சேந்ததன்மையிற்றிகழ்ந்ததுமாலையஞ்செக்கர். (௫௨)

மகரவெல்கொடிவரிசிலைத்தடக்கைமாமைந்தன்
புகர்முகங்கொள்கோடொத்ததுபுனிற்றிளந்திங்க
டிகழுமன்னவெண்கோடுகுமுத்தெனச்செறிந்த
மிகுகொழுஞ்சுடர்விரிதருமிடையறுவின்மீன். (௫௩)

அனையவெல்லையிலந்தியிற்செய்கடனமைத்து
முனிவர்தம்மொடுமிருந்தனன்மூரிவேலரசன்
வனசமாமலர்விரிந்ததின்வண்டுபாணிசைப்பத்
தினகரன்கதிர்பரந்ததுகுணப்பெருந்திசையில். (௫௪)

பருதிசெங்கதிர்காண்டலும்படியெலாமடர்ந்த
விருளகன்றதுகண்ணுதலெந்தையெம்பெருமான்
கருணையன்பரைக்காண்டலுங்கதுமெனவிரிந்து
மருள்செய்வெங்கரும்பாவநீங்கியதெனமாதோ. (௫௫)

ஆயகாலையில்வேட்டைசெயடவியில்வீழ்ந்து
காயும்வேனிலால்வெம்பியகடற்படைமள்ளர்
மேயவெம்மைதீர்ந்தெழுந்தனர்வேந்தனைநேடித்
[illegible]னெறிகடந்தனர்சென்றுகண்டனரால். (௫௬)

கண்டகாலையிற்காவலன்களிமகிழ்வெய்தி
மண்டுகாதலின்முனிவனைவணங்கியேவிடைகொண்
டெண்டிசாமுகம்பரங்தெழுதானையோடேகிக்
கொண்டமுழியிலுடுத்ததன்கோனகரடைந்தான். (ருஎ)

அடைந்தபின்னராங்கலைகையோர்மூன்றையுமளிப்பான்
படர்ந்தவார்புனல்வடபெருங்கயையினிற்படிந்து
முடிந்திடாவுயர்புகழினன்மூன்றுநாண்முறையிற்
றிடங்கொணூல்பகர்விதியொடுசிராத்தமுஞ்செய்தான் (ருஅ)

மூன்றுபேய்க்குமோர்மூன்றுநாண்முறைமுறைமூழ்கி
யான்றநூல்வழிசிராத்தமுமமைத்தருஞ்சீர்த்தி
சான்றவேந்தர்கோன்றன்பதியடைந்திராப்போழ்திற்
கான்றதேமலர்ப்பள்ளியிற்கண்டுயில்காலை. (ருகூ)

நன்றிகொன்றதோர்நவைபடுபேயன்றிமற்ற
நின்றவோரிருபேயுமப்பேயுருநீங்கி
மின்றயங்கியபன்மணிவிமானமீதேறிப்
பொன்றயங்கியதேவுருவாகியேபொலிந்து. (சா0)

வனைகருங்கழன்மன்னவர்மன்னநின்னருளால்
வினைகொல்வன்றுயர்விளிந்திடாவெம்பவம்வீட்டி
யனகராகியேயுய்ந்தனமென்றினிதறைந்து
கனகநாட்டினிலடைந்திடக்கண்டனன்கனவில். (சாக)

வேறு.

மற்றதன்பின்னமெய்திக்கனவினின்மருநன்றி
செற்றதோரலகைதோன்றித்தீர்ந்திலதெனதுதீமை
யுற்றனனரணென்றுன்னையுளைவழாதளித்தியென்னச்
சொற்றிடக்கேட்டுவெள்வேற்றெருடுகழலரசன்சொல்வான். (சாஉ)

இசைதருவாய்மைகோடாதிழைத்தனனினியென்செய்வ
திசைமதியென்னலோடுமெறிதிரைப்பொன்னிநாட்டி
லிசைதருதெய்வவாரூரொன்றுலகங்களெல்லா
மிசைதருபதியின்கீழ்பாலிரும்பெயர்க்கயையெனும்பேர். (சாஙு)

தீர்த்தமொன்றுளதாலன்னதீர்த்தத்தின்மூழ்கியந்த
நீர்த்தடமருங்கிலிச்சிநின்றுளதொன்றதன்கீழ்
சேர்த்திநூல்விதிவழாமற்சிராத்தமும்வழங்கிப்புற்றின்
மூர்த்தியைவணங்கிப்போற்றிலென்பவமுடியுமன்றே. (சாச)

என்றிவையிசைத்தலோடுமிறையவன்விழித்துத்தேர்ந்து
மன்றவேயிறும்பூதெய்திவளங்கெழுமாரூர்வைப்பிற்
சென்றுதண்கயையின்மூழ்கிச்சிராத்தமுஞ்செய்துபுற்றி
னின்றதோர்முதலைப்போற்றிநீங்கியேதனதூர்புக்கான். (சுரு)

தன்பதியடைந்துகங்குற்றராபதிதுயிலுங்காலை
யன்புடைநன்றிகொன்றவலகைமுன்வடிவகன்று
பொன்பொலிமானமூர்ந்துபுங்கவருருவிற்றோன்றி
யென்பவந்தொலைந்ததெந்தாயிறைவநின்கருணைதன்னால். (சுசு)

எனமொழிந்தும்பர்நாட்டிலேகிடக்கனவிற்கண்டு
மனமிகமகிழ்ச்சிபெற்றான்மன்னவனன்றிகொன்ற
வினைகொள்வெம்பாவம்வீட்டுமேதகுகயையெனும்பேர்ப்
புனிதமாமலர்ப்பூந்தீர்த்தந்தனக்கிணைபுவனத்துண்டோ. (சுஎ)

எந்நன்றிகொன்றுளார்க்குமுய்வுண்டாமில்லையுய்வு
செய்ந்நன்றிகொன்றார்க்கென்றுசெப்பியநூற்குமாறா
யந்நன்றிகொன்றபாவமகற்றுமித்தீர்த்தமேன்மை
மைந்நின்றமிடற்றோனன்றியாவரோவகுக்கவல்லார். (சுஅ)

அறைதருவாய்மைகோடாதலைகையையளிப்பானந்த
நிறைகயைமூழ்கியாரூர்நிமலனைத்தொழுதவேந்தன் . . .
றறைமுழுதாண்டுபின்னர்ச்சிவபதந்தன்னிற்சார்ந்தான்
பிறர்தமக்குதவிசெய்தோர்க்கெய்திடாப்பேறுமுண்டோ. (சுகூ)

இக்கயாதீர்த்தமேன்மையினிதெடுத்தேத்துவோர்கள்
பொக்கமிலன்பிற்கேட்போர்புரையுறுபைசாசாதி
துக்கமார்பவங்கணீங்கித்தோகைநற்பாகன்பொற்றாள்
புக்கமர்ந்தினிதுவாழ்வார்புலவர்கள்புகழுமம்மா. (எ0)

கயாதீர்த்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கடுகூ.

---

## வாலமண்டனத்தீர்த்தச்சருக்கம்.

ஆலநன்னீழனீங்காவடிகளினடிகள்போற்றி
ஞாலமுந்திசையுமேத்துஞானமாமுனிவன்சூதன்
சீலமாதவரைநோக்கிச்செழுங்கயாதீர்த்தத்தென்பால்
வாலமண்டனப்பேர்த்தீர்த்தமான்மியம்வகுப்பான்மன்னோ. (க)

ஆலகந்தரனூரிலறவிர்காளகிலமெல்லாம்
வாலமண்டனமென்ருேதும்வாவியொன்றுளதாலந்தக்
கோலமாமலர்கொள்வாவிக்குளிர்புனலொருகான்மூழ்கிற்
சாலவுநம்பினேர்க்குத்தவறுசெய்தவறுநீங்கும். (உ)

சிறுவராருயிர்வதைத்ததீமையுந்திருமற்ற
வறைதருபாவமெல்லாமழிந்திடுமனையதீர்த்த
மறுவறுகாதைதம்முட்சிலகதைவகுப்பன்கேண்மின்
குறைதவிர்தவத்தின்மிக்கருணப்பெருங்குன்றமன்னீர். (௩)

தாதைதன்மொழிவழாதுதம்பியுந்தவறில்கற்பிற்
சீதையுந்தொடர்ந்துபின்னர்ச்சென்றிடவனத்திற்சென்ற
மூதுயர்புகழிராமன்முற்பகன்முக்கண்மூர்த்தி
மாதலம்பலவும்போற்றிவந்தனனூரர்வைப்பில். (௪)

வேறு.

ஆவியன்னவரும்பெறற்சீதையாம்
பூவையோடுமயோத்திப்புரவலன்
ருவிலன்புடைத்தம்பியர்தன்னெடுந்
தேவதீர்த்தச்செழும்புனலாடினன். (௫)

ஆடியீசனடிமலர்நெஞ்சகத்
தாடிருத்தியங்கஞ்செழுத்தோதியே
நீடுதெய்வவெண்ணீறுபுனைந்தன
னேடலர்ந்தசெந்தாரவனென்பவே (௬)

வந்துபுற்றிடங்கொண்டமணியினைச்
சிந்தையன்பிற்செழுமபுனலாட்டியே
யந்தண்மாமலராலருச்சித்தன
னெந்தைதன்புகழேத்தியிறைஞ்சினன். (௭)

இறைஞ்சியேத்திவிடைகொண்டெழுந்துபோய்
நிறைந்ததெய்வக்கயையெனுநீர்படிந்
தறந்தவாதசிராத்தமளித்தவ
னுறைந்தனனங்குறைதருங்காலையில். (௮)

வேறு.

மேற்றிசையடைந்ததுவெய்யவான்கதி
ராற்றினனந்தியிற்கடன்கள்யாவையு
மாற்றிலாமனையொடும்வள்ளறுஞ்சினன்
சாற்றருகண்புடைத்தம்பிகாப்பவே. (௯)

உறங்கியமுன்னவனுயிரைவாட்டியே
சிறந்ததோர்கற்புடைச்சீதையைக்கொடு
மறைந்தனனேகுவான்மனத்திலுன்னினு
னிறந்திடாநண்புசாலியாவலெண்பவே. (க0)

ஆயுநூலறிவினுலறந்தெரிந்துணர்
தாயனுமித்திறமனந்துணிந்தனன்
பாயுமால்விடைப்பிரான்பரமசத்திமா
மாயையின்வலியையார்கடக்கவல்லரே. (கக)

இத்திறமெண்ணியாங்கிரவனின்றுழி
மைத்தவிர்கதிரவன்வந்துதோன்றினுன்
பத்தினிதன்னெடும்பச்சைமேனியா
னத்தலையெழுந்துசெய்கடன்களாற்றினுன். (கஉ)

வேறு.

கடன்புரிந்தாங்குநீங்குங்காலையினிளவனெஞ்சிற்
படர்ந்ததோர்மருட்கையீசன்பராசத்தியருளானீங்கக்
கொடுந்தொழினினைந்தவாறுகுறித்தனன்றேர்ந்துணர்ந்தா
னடுங்கினன்யாக்கையுள்ளம்பதைத்தனனுவலர்ந்தான். (கஙு)

ஈட்டுறுமின்னலென்னுமிணரொரிவடவைநின்று
வாட்டிடமயங்கிவீழ்ந்தான்மயக்கமாங்கயிற்றினுலே
காட்டியவுலகமென்னும்பாவையைக்கைவிடாம
லாட்டுவதீசன்சத்தியென்பதிங்காருந்தேற. (கச)

வீழ்ந்தெழுந்தரற்றிச்சாலவெய்துயிர்த்திரங்கிமுன்னேன்
சூழ்ந்தவார்கழன்மிழற்றுந்துணைமலரடியின்முன்னர்த்
தாழ்ந்துதானினைந்தவண்ணஞ்சாற்றியித்தவறுதீரப்
போழ்ந்தெனதுடலைவாளாற்போக்குவனுயிரையென்றான். (கரு)

போக்குவனுயிரையென்றுபுகன்றதோர்தம்பிதன்னை
மாக்களிவண்டுலாவுமாலைதாழ்மார்பிற்புல்லி
தாக்கணங்கினிதுவாழுந்தலமிதுதன்ணந்தோட்டுத்
தேக்கமழ்கொன்றைமோலிச்சிவன்பராசத்தியெல்லை. (கசா)

அனையதோர்சத்தியாணைவலியினுலறிவுநீங்கி
மனநினைந்தனைநீயிந்தவண்ணமற்றுதலாலே
புனிதநல்வினையோய்நின்பாற்புணர்ந்ததோர்பாவமின்று
லெனவறைந்தனனயோத்தியிறையவனிராமனென்பான். (கஎ)

முன்னவனுங்கிசைத்தமுதுமொழிவாய்மைகேட்டுப்
பின்னரும்பின்னோன்வெம்பிப்பிழைத்தவிப்பாவந்தீர
வென்னுயிரொழிப்பனுண்மையெனவிசைத்திறைஞ்சிநின்றா
னன்னதோர்காலைவந்தானரியமார்க்கண்டனாங்கு. (கஅ)

வந்தவணிகழ்ந்தவண்ணங்கேட்டுமற்றவனுமந்தச்
சுந்தரவிராமன்போலச்சொற்றனன்சொற்றவேலை
யிந்தவெம்பாவந்தீர்தற்கின்னுயிர்விடுப்பனென்னுஞ்
சிந்தைநைந்தழுங்கிப்பின்னும்பின்னவன்செப்பினானே. (ககூ)

செப்பியவிளையோன்றன்னைத்திருமுனிதேற்றியிந்த
வைப்பினிலுலகமெல்லாம்வாழமண்டனமென்றோது
மொப்பருந்தீர்த்தமொன்றுண்டுணைத்தவத்தீர்த்தமூழ்கி
னிப்பவநீங்கும்வாய்மையென்றனனென்றவெல்லை. (உ0)

இம்மொழிமறுப்பாயல்லையென்றிராகவனிசைத்தா
னம்மொழிவினவியஞ்சியிளவலத்தடத்திலாட
வெம்மைகொளனையபாவம்விட்டகன்றொழிந்ததீசன்
செம்மலர்நோன்றாளன்பிற்சிறந்தமாதவத்தின்மிக்கீர். (உக)

வேறு.

இன்னுமித்திருவாவியின்காதையொன்றெடுத்துப்
பன்னுவன்றவப்படிமையீர்கேண்மின்கள்பரிவான்
மன்னுகாசிபன்மனைவியரிருவரிலதிதி
மின்னுவச்சிரன்முதலியவிண்ணவர்ப்பயந்தாள். (உஉ)

திதியெனும்பெயர்ச்சேயிழைசெங்கண்வெள்ளெயிற்றுக்
கொதிதருஞ்சினத்தவுணர்தங்குழாத்தினைத்தந்தாள்
புதியபூங்குழற்பூவையரிருவருமாறாய்
வதிவராதலான்மைந்தருமாறுகொண்டுறைவார். (உ௩)

மாறுகொண்டவாளவுணருமமருமலைந்தா
ரீறடைந்தனரவுணரங்கவர்தமையீன்றாள்
சீறிவானவர்ச்செகுப்பதோர்சிறுவனைப்பெறுதற்
கூறின்மாதவம்புரிந்திடமதித்தனளுளத்தில். (உச)

உளத்திலெண்ணியாரூர்நகரடைந்தொருபுற்றின்
முளைத்தெழுந்ததோர்கற்பகமுதலினைமுன்னி
யளப்பருந்தவமாற்றினளாற்றலுமலைநீர்
துளித்தவேணியான்றோன்றினன்றோன்றலுந்தோகை. (உ௫)

நெஞ்சுதுண்ணெனவெழுந்தனடொழுதனணின்று
ளஞ்சலென்றுநீவேண்டியதென்கொலென்றறைய
வெஞ்சமர்க்களத்தமரரைவெல்வதோர்வென்றி
மஞ்சன்வேண்டினள்கொடுத்துடன்மறைந்தனன்வள்ளல். (உசு)

மறைந்தவள்ளலைப்போற்றியேதன்மனைவந்தாங்
குறைந்தமர்ந்தனளுற்றனள்கருப்பமக்கருப்ப
நிறைந்தவெல்லையிலயர்விருனோரிமைநிசிமு
னுறங்கினளவளுறங்குமவ்வேலையதுணர்ந்து. (உஎ)

வயிற்றிலெய்தியேமுதிர்ந்தவச்சூலினைவஞ்சித்
தயிற்கொழுஞ்சுடர்வாளினாற்பலதுணியாக்கித்
துயிற்கொள்வாள்வயினீங்கினன்கன்னவெந்தொழிலி
னியற்கைவல்லவனன்னவேயிந்திரனென்பான். (உஅ)

துணித்தபல்வகைத்துணிபலகுழவியின்றொகையாய்க்
கணத்திலீசனதாணையாற்கதும்மனவுதித்த
மணக்கொழும்புதுமலர்விதிகெடுப்பினுமாளாத்
தணப்பினல்விதியாளர்தாங்கெடுவரோசாற்றில். (உகூ)

வேறு.

அன்னைதன்வயிற்றில்வஞ்சித்தடைந்தவணிறைகருப்பந்
தன்னைவாள்கொடுதுணித்ததன்மையாற்பாலற்கொன்ற
வின்னல்வெம்பாதகத்தோடீன்றவட்பிழைத்தபாவந்
துன்னியவாயிரங்கட்சுடர்முடியரசன்றன்பால். (௩0)

அனையவெம்பாவந்தீர்ப்பானளவிலாநதிகளாடி
மனமிகவருந்திப்பன்னாள்வாசவன்வானிலாசான்
றனையடைந்திந்தவண்ணஞ்சாற்றினன்சாற்றலோடும்
புனிதமாங்குரவனன்னோற்கினையனபுகலலுற்றான். (௩க)

வளங்கெழுமாரூர்வாலமண்டனமடுவிற்றோய்ந்தாங்
கிளம்பிறைமௌலியீசனருட்குறியினிதுதாபித்
துளங்கெழுகாதலன்பினொப்பில்பூசனைபுரிந்தாற்
களங்கமீதகலுமென்றுகழறினன்கழறலோடும். (௩உ)

வந்தனனாரூரொல்லைவாலமண்டனம்படிந்தாங்
கிந்திரன்விதியினோடுஞ்சிவலிங்கமியல்பிற்றாபித்
தந்தமிலன்பிற்பூசையாற்றினனந்தப்பாவஞ்
சிந்தினன்புனிதனானன்சென்றுவீற்றிருந்தான்சேணில். (௩௩)

மகத்தினிலுயர்ந்தசீர்த்திமாண்புசாலாயிரங்கட
பகைத்திறல்கடிந்தவாகைவச்சிரபாணிபண்டாங்
ககத்தெழுமன்பிற்பூசைபுரிந்தவவ்விலிங்கத்திற்குச்
சகத்திரநேத்திரேசனெனும்பெயர்சார்ந்ததன்றே. (௩௪)

வேறு.

வணங்கியிந்தமாமூர்த்தியையொருமுறைவழுத்திற்
குணங்கொண்மாதவிராயிரங்கோடிவெம்பாவந்
தணந்தகன்றிடுமிருமுறைபோற்றிடிற்றூவா
விணங்குநல்வளத்திந்திரனுலகவாழ்வெய்தும் (௩௫)

கோலவெண்களிற்றவனிலக்குவன்பவம்பறிக்கும்
வாலமண்டனத்தீர்த்தமான்மியமகிழ்ந்துரைப்போர்
சாலமுன்செய்பாதகமெலாந்தபனன்முன்பனியைப்
போலகன்றுவான்போகமுற்றுயர்கதிபுகுவார். (௩௬)

வாலமண்டனத்தீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசுஉக

---

## மநிட்டைதீர்த்தச்சருக்கம்.

தொன்மைநற்றவத்தின்மிக்கசூதனீதுசொற்றபின்
வன்மறப்புலத்தைவென்றமுனிவரோடுவனசமா
மென்மலர்க்கயைத்தடத்தின்மேற்றிசைப்பொலிந்ததோர்
நன்மநிட்டைதீர்த்தமான்மியந்தெரிந்துசாற்றுவான். (க)

தலைமைசாலுமுனிவர்தூயநன்மநிட்டைதீர்த்தமென்
றுலகமேத்துமோரிலஞ்சியுண்டுமற்றதனிடைக்
குலமொழுங்குதருமமன்புகுணமிலார்கண்மூழ்கினு
நலமலிந்ததேவராகிநாகநாடுநண்ணுவார். (உ)

நீதகற்றுமார்கழித்திங்களாதிபங்குனி
மாதமுற்றுமனைய்தீர்த்தமரபின்மூழ்கில்வாசிமா
மேதமுற்படுந்தழல்வேள்விகோடியாற்றிய
வேதுதற்கரியபேறெய்துமற்றிதுண்மையே. (௩)

அஞ்சுபாதகங்கள்கோடியாழிவாயழற்படும்
பஞ்சுபோன்மடிந்திடும்பழங்கண்விண்டகன்றிடு
நெஞ்சிலெண்ணுமெவையுநண்ணுநீடுசெல்வமாதியா
மெஞ்சலில்வளங்களும்வருந்திடாமலெய்துமே. (௪)

வேறு.

இந்தவாவியிருங்கதையெண்ணில
வந்தணீர்மற்றவையுமொருகதை
வந்தவாறுவகுத்துரைசெய்குவ
சிந்தைவேறின்றிக்கேண்மின்றிருந்தவே (௫)

உலேப்பின்மாதவிர்முன்னமொருபகற்
புலேக்குலத்திலொருத்திபொலன்வரைச்
சிலேப்பிரான்றிருவாரூர்த்திருநகர்த்
தலத்தொர்கூவத்திற்றண்புனன்மொண்டிழி. (௬)

அடுத்ததாங்கொரரும்பசுவேட்டுநீ
ரெடுத்துவார்புனன்மற்றதுறநீந்துபின்
குடத்துநாரங்கொணர்ந்தனள்போய்ப்புலாள்
மடுத்ததன்புலேச்சேரியில்வைகினுள். (௭)

மற்றனுள்சிலவைகலகன்றபின்
பொற்றனித்திருக்கோயில்புகுந்துதான்
வெற்றிவேற்கணுமைதிருமேனியி
லுற்றவாரங்கவாங்கொளித்தேகினுள். (௮)

ஏகலோடுமிறைவிதன்கோயிலின்
மாகடுந்திறற்காவலர்வன்கருங்
காகமெய்யவட்கண்டனர்பற்றியே
வேகவெஞ்சினமெய்தினர்வீட்டினர். (௯)

பொன்னின்மாலிமயந்தருபூங்கொடி
மன்னுகோயிலங்காவலர்வாட்டிட
முன்னராவிமுடிந்தனண்மற்றவள்
பின்னரெய்தியபேறினிப்பேசுவாம். (௧௦)

பொய்கைசூழ்தமிழ்க்கூடற்புரவலன்
பெய்கைமேகம்பிறங்கொலிவெண்டிரை
வைகைவண்டுறைவன்மனுநான்முறை
செய்கையோம்புந்திருந்துசெங்கோலினன். (௧௧)

திருகுவெஞ்சினத்தெவ்வர்தஞ்செங்கிறக்
குருதிகொப்பளிக்குந்தனிக்கோதைவேல்
விருகனும்பெயர்வேந்தன்மனைவியா
மரிவையுந்தியவதரித்தாளரோ. (௧௨)

வேறு.

ஆவினுக்கறலன்றீந்தவறத்தினலவதரித்துத்
தேவிபொற்றெய்வமேனிதீண்டியன்றணிகவர்ந்த
பாவமற்றதனுற்றீயவேலையிற்பவளச்செவ்வாய்க்
காவியிற்பொலிந்தவாட்கட்கன்னியாய்ப்பிறந்தாளன்றே. (௧௩)

கன்னிமற்றவள்பிறந்தகாலையிற்கணிதநூலோர்
மன்னனேநோக்கியிந்தமடமகள்பிறந்தகாலம்
பன்னருந்தீயகாலம்பார்த்திபநினக்கேயீறு
துன்னுமற்றிவளைநீத்தாற்றுன்னுறாதென்றுசொற்றார். (௧௪)

சொற்றலுமன்னர்மன்னன்றுறப்பதுதுணிந்தானல்லன்
மற்றவடன்மகிட்டையெனும்பெயருடன்வளர்ந்தாள்
குற்றமாந்தினத்துதித்தகொள்கையாற்குமரிதன்னை
யெற்றுநீருலகஞ்சுக்கன்னியென்றிசைத்ததன்றே. (௧௫)

அன்னவள்வளருங்காலையத்தனதாவிகொண்டாங்
கொன்னலர்நகரிகொண்டாரன்னையுமுடனேழிந்தா
ளன்னகரிரவினீங்கிநச்சிளங்கன்னிகானிற்
றுன்னினண்முன்னையூழின்றொடர்ச்சியார்துடைக்குநீரார். (௧௬)

அன்னையுமத்தன்றானுமாருயிரிழந்துமாய
நன்னகரதனைநீங்கிநடுவிருள்யாமத்தூடு
கன்னிதான்றமியளாகிக்காயுமாவழங்குங்கானந்
தன்னைவந்தெய்தியாவிதளர்ந்தனள்புலம்பலுற்றாள். (௧௭)

வேறு.

என்னைத்துறந்தாலுய்வுண்டாமென்றுநூலோரியம்பிடவு
மென்னைத்துறவாதளித்தவருளெந்தாயன்னையிந்நாளிங்
கென்னைத்துறந்துகானகத்திலிருளில்விடுத்தீரிதற்குமுன
மென்னைத்துறந்தீராமாகிலிந்தவண்ணமெய்தாதே. (௧௮)

கனமயிலாதவினையேனைக்குழவிப்பருவங்களையாமற்
சமையவளர்த்துப்பேயுறங்குமிருளிற்கானந்தனிற்றள்ளிக்
குமரிவைகைத்திருநாடுகொடுங்கோன்மன்னர்கைக்கொடுத்தே
[illegible]நாட்டிற்குடிபோவதத்தாயன்னுயறங்கொல்லோ. (௧௯)

அறியாப்பருவத்தகற்றினீரோலடையேனின்னனீவிருமே
குறையாத்திருவோடுறைவீரோகுரவீர்பெரியோருரைகொள்ளா
துறைவேற்பகைவர்க்கெறிநினைவாமொவீநீர்வைகைநாடுதவிச்
சிறியேற்கிந்தக்காடருளிச்செய்தீரொன்சொல்செய்திரோ. (உ0)

நச்சுப்பாம்புக்கமுதூட்டிநன்குபோற்றிவளர்ப்பவர்போ
னச்சுக்கன்னியென்றுலகநவிலுமென்னைநாடேறு
நச்சிப்போற்றிவளர்த்தளித்தீர்நலைதிர்குரவீர்யாரோனு
நச்சப்படாதவனத்தின்றுவிடுத்தகுமோநலையன்றே. (உக)

வேறு.

எனப்புலம்பிநெடிதுயிர்த்தேயேங்கிவாடி
யீன்றவான்மடிந்தொழியவிரங்கிமாழ்கும்
புனிற்றிளங்கன்றெனவரற்றிமழைக்கண்மாறாப்
புனல்பொழிந்துவயிறதுக்கிப்பொங்குமின்னற்
கனற்கொழுந்துசுடவுடலங்கருகிவெந்து
கவினழிந்துமுகம்புலர்ந்துகனைந்துசால
மனக்கவலைக்கடன்மூழ்கிமறந்துநாவு
மறிந்துநிலத்தறிவொழிந்துமயங்கிச்சோர்ந்தாள். (உஉ)

சேயமலர்த்திருவிரும்புநாடுமூருஞ்
செழுநிதியும்பிறவெவையுஞ்சேரார்கொள்ளத்
தாயுயிருந்தந்தையுயிர்தானுமாயத்
தனிநகரந்தனைநீங்கித்தமியளாகிப்
பேயுறங்குநள்ளிருளில்யாருமெய்தாப்
பேரடவியிடைப்பட்டாள்பேதையென்று
லாயிழைமற்றவடுயரையன்னளாவிக்
காவியாங்கடவுளன்றியாரோசொல்வார். (உங)

வேறு.

ஆயிழைமகளிர்பல்வேறணிவகையணிந்துபோற்றப்
பாயொளிமாடமீதுபகல்விளையாட்டயர்ந்த
காயுமால்யானைவேந்தனொருமகள்கங்குற்போதிற்
றீயகானடைந்தாளந்தோசெல்வநீர்க்குமிழியன்றே. (உச)

இழைத்தமுற்பாவந்தன்னுலின்னணந்துயருழந்த
மழைத்தடங்கண்ணுண்முந்தையறத்தினல்வனத்தைநீங்கிக்
கழைத்தடங்காடுஞ்செந்நெற்கானமுங்கழுநீரோங்குந்
தழைத்தபூஞ்சோலைவேலித்தண்பணையாரூர்சார்ந்தாள். (உரு)

பரஞ்சுடரின்பமேனிப்பராசத்திமயமாமெல்லை
தெரிந்தஙோரளவுதன்னிற்றெரிசனவேதிகண்ட
விரும்பெனநெஞ்சிற்றொல்லையிருளகன்றீறிலாத
வரந்தருதெய்வஞானவயங்கொளிபடைத்தாண்மன்னோ. (உசு)

இருளகன்றிடலுந்துஞ்சுங்கனவிடையேய்ந்தவெல்லாந்
தெருளுறுநனவிற்றேருஞ்செய்கைபோன்முற்பிறப்பிற்
புரிதருசெய்கையெல்லாந்தெரிந்தனள்புரிசையாரூர்த்
திருநகர்ப்பெருமைதன்னையாவரோசெப்புநீரார். (உஎ)

முன்புரிசெய்கைதேர்ந்துமுந்துதான்பசுவினுக்கு
நன்புனலளித்தகூவநணுகிமற்றதனைஞால
மின்புறுபொய்கையாக்கியதன்மருங்கிழைத்துக்கோயி
லன்புடனுமையைத்தாபித்தாற்றினள்பூசையன்னாள். (உஅ)

முற்புரிதவறுதீரமூழ்கியத்தடமுப்போதும்
பொற்புறுமுமையைப்பூசைவிதிமுறைபுரிந்துபோற்றிப்
பற்பகல்விரதத்தோடும்பகருந்தவம்பூண்டிற்று
ளம்புதஞானவல்லிதோன்றினளரிவைமுன்னர். (உகூ)

உளங்கெழுகருணைபோடுமற்றவளுறுதியன்பாங்
களந்திடுபொருட்டாலன்னையபிராணிவடிவமாகித்
துளங்கிவெண்களிற்றின்மீதுதோன்றினள்சுடர்பரந்த
பளிங்குமால்வரையிற்றோன்றுபச்சிளங்கதிரோயென்ன. (௩0)

உறுதிகண்டளிப்பப்போந்தவுமையவடன்னைநோக்கி
மறுவறுநங்கைவேண்டும்வரந்தினைக்கேட்டியென்ன
நிறைதவநிலைமைபூண்டநேரிழைநினதுமாட்டுப்
பெறுவதோர்வரந்தானில்லையென்றெதிர்பேசிநின்றாள். (௩க)

பேசியமாற்றங்கேட்டுப்பெருஞ்சினம்பிடித்தாள்போலக்
காசறுஞானவல்லிகண்ணிணைசிவப்பநோக்கி
வீசிநின்சிரந்துணிப்பன்வெய்யவச்சிரத்தாலென்ன
வாசறுமுமையாள்சேடியானுனக்கஞ்சேனென்றாள். (௩உ)

என்றபோதுவகையெய்தியெடுத்தலவ்வுருவமாறி
நின்றனள்நின்றகாலைநெஞ்சகந்துண்ணென்றஞ்சிச்
சென்றெதிரடியிற்றாழ்ந்துசேணகன்றணைந்தவாவைக்
கன்றெதிர்கண்டாலென்னக்களிசிறந்தேத்துகின்றாள். (௩௩)

வேறு.

பூ[illegible]புயந்தார்ப்பொன்னஞ்சடைமௌலித்
தேவாதிதேவன்றிருமேனிபாதிகொண்ட
மூவாமுதல்வியுலகமுழுதீன்ற
பாவாயறமனைத்தும்பூத்தபசுங்கொடியே. (௧௪)

துய்யசுருதித்தொடுகடலின்மீதுதித்து
வையமுழுதும்விளக்குமலர்க்கதிரோ
பொய்யிலறஞ்சால்புனிதமுனிவர்மனச்
செய்யகமலம்பொழிந்தசெழுந்தேனோ. (௧௫)

ஆராவமுதேயரியதிருஞான
வேராகிநின்றாய்விரிஞ்சன்முதலோருய்யக்
காரார்விடத்தையரன்கண்டத்தினிதமைத்த
பேராவருளின்பெருவெள்ளப்பேராறே. (௧௬)

நந்தாவிளக்கொளியேஞாலத்துயிரனைத்துந்
தந்தாரருள்புரியுந்தாயென்றினிதெடுத்து
முந்தாரணமுழுதுமேத்துமுழுமுதலே
சிந்தாமணியேதெவிட்டாததீங்கரும்பே. (௧௭)

கோவாததெய்வக்குலமாமணிமுத்தே
நாவாலெடுத்தேத்திநைந்துருகிப்போற்றுகின்ற
பாவாணர்யாரும்படைத்தசெழுநிதியே
தாவாதவீட்டின்பமாகுந்தனிப்பொருளே. (௧௮)

பன்னுகினுமுள்ளம்பதைத்தஞ்சும்வெம்பாவ
முன்னமிழைத்தமுதியகடைப்பிறப்பி
னென்னையொருபொருளாயெண்ணியெழுந்தருளிப்
பொன்னடியின்காட்சிபுரிந்தளித்தபுண்ணியமே (௧௯)

நீங்காவறுமைநெடுங்கோடைநீக்குநிழற்
பூங்காவனமேபுலையாங்கடைப்பிறப்பிற்
றீங்காயபேதையேன்செய்தவினைதெரிவித்
தீங்காரருள்புரிந்தவேமப்பெருந்துணையே. (௨௦)

உள்ளம்புணர்ந்தவொழியாமருட்கங்கு
றள்ளிமுதுக்குறைவுதந்துகுறைவுபடாக்
கொள்ளையருட்கண்கொடியேனிடைவைத்த
தெள்ளுஞ்சுவைமதுரத்தெய்வச்செழுங்கனியே. (௨௧)

கஞ்சமலர்மடந்தைகாமரயிராணி
யஞ்சொலிசைவாணிமுதலோரருச்சிக்கும்
பஞ்சுறழும்பூந்தாட்பவளவாய்ப்பான்முறுவல்
வஞ்சிமருங்குன்மலைமேன்மரகதமே. (சஉ)

முன்னுளிழைத்தமுடியாவினைப்பாவந்
தன்னுலழல்வாய்நிரயந்தனிற்புக்கு
வெந்நோயுழந்துமெலியாதெனையளித்த
வன்னுயென்றேத்தித்தொழுதாளணங்கனையாள். (சங)

வேறு.

ஏத்தியென்பிழைபொறுத்திங்கின்னருள்புரிதியென்று
வாழ்த்தினள்வாழ்த்தலோடுமகிழ்ந்துநஞ்சேடியாகிப்
பூத்தருகுழலாய்நாளும்பொலிந்துவீற்றிருத்தியென்னுக்
காத்துலகளிக்குஞ்செல்விகழறினள்கழறலோடும். (சச)

வணங்கியென்பெயரினிந்தமலர்த்தடம்விளங்கவிந்நீ
ரிணங்கியேவிதியிற்றேய்வார்க்கெண்ணியயாவுமெய்தக்
குணங்கொள்குன்றனையாயன்புகூர்ந்தருள்புரிதியென்னு
வணங்கவள்வேண்டலோடுமவ்வரமளித்தாளன்னை. (சரு)

பின்னரும்வணங்கிநின்றுபேதையேன்பூசைசெய்த
வின்னதோர்வடிவநீங்காதென்றும்வீற்றிருத்தியார்க்கு
மென்னிறைவரங்கணல்கவேண்டுமாலென்றுவேண்ட
வன்னதோர்வரமுந்தந்தாளறமெலாமன்றுதந்தாள். (சசு)

வரமிவைமூன்றுநல்கிவளரருள்புரிந்தேயந்தத்
தெரியிழைமடந்தைதன்னைச்சேடியாக்கொண்டுவெள்ளிக்
கிரியகந்தனையடைந்தாள்கேடிலாவிமயமங்கை
பிருளறுதெய்வயோகவெண்ணிலாவிருந்தவத்தீர். (சஎ)

மாதுமையருள்புரிந்தவரத்தினுலன்றுதொட்டுத்
தீதுதீர்தன்மநிட்டைதீர்த்தமென்றுலகமேத்தப்
போதலரந்தப்பொய்கைபொலிந்ததப்பொய்கைமூழ்கி
வேதமாமுனிவீரின்னவிரைமலர்வாவிப்பாங்கர். (சஅ)

மேவியவிமலைகோயில்விருப்பொடுவலங்கொண்டன்னுள்
பூவடிபணிந்துபோற்றும்புண்ணியப்புனிதமேலோர்
தீவினையனைத்துஞ்சிந்தித்திருவொடுசிறப்புநண்ணிக்
காவல்பூண்டுலகமோம்பிக்கடவுளருலகஞ்சேர்வார். (சகூ)

அப்பெரும்பொய்கைமூழ்கியம்பிகைதன்னைப்பூசை
செப்பருந்தன்மநிட்டைசெய்தவப்பயனாலன்று
ளொப்பருந்தந்தைதாயுமுயர்பெருங்கயிலையெய்தி
மெய்ப்பெருந்தெய்வவாழ்வுமேவிவீற்றிருந்தாரன்றே. (௫0)

செப்புமித்தன்மநிட்டைதீர்த்தத்தின்மூழ்கித்திங்க
ளொப்பருங்குலத்திற்றோன்றுந்தோன்றன்மற்றொருவன்மாதர்
மெய்ப்படுமுயிர்கொல்பாவம்விட்டியகாதையொன்றுண
டப்பெருங்காதைதன்னையறைகுவனருந்தவத்தீர். (௫க)

வேறு.

கந்தடுசீற்றக்கார்மதயானை
யிந்திரனன்றனெண்டிசையேத்துஞ்
சந்தனுவென்பான்றந்தருள்செல்வ
மைந்தன்வயப்போர்வாளரிபோல்வான். (௫உ)

காமருதெய்வக்கங்கையெனும்பேர்த்
தேமலரோதிச்செல்வியளித்த
கோமகன்வீரக்கோற்றொடிதோய்ந்த
தூமலர்மாலைத்தூண்கெழுதோளான். (௫௩)

முடிவறுவேதமுதலியதொன்னூற்
படிதவிர்கேள்விப்பார்த்திபர்கோமான்
கடிமலர்வாளிக்காமனைவென்றோன்
விடலருஞ்சீர்த்திவீடுமனென்பான். (௫௪)

மதிமுடிவானோன்மாமலர்நோன்றாள்
விதிமுறைபோற்றிவெண்மழுப்பெற்ற
வெதிரில்வலத்தினிராமனிடத்து
முதுபடைவிஞ்சைமுற்றுமுணர்ந்தோன். (௫௫)

வேறு.

குருகுலம்விளங்கியோங்கக்குரிசின்மற்றவனறத்தின்
புரைதவிர்வரம்புபேணிப்பொலிந்துவீற்றிருக்குநாளிற்
கருதலரிஞ்சிசாய்த்தகடாமுகக்கருங்கையானை
வரைபுரைதோளான்காசிமாநகாமன்னர்மன்னன். (௫௬)

அருள்புரிமகளிர்மூவரம்பையம்பிகையம்பன்ன
வரிதருதடங்கணம்பாலிகையெனுமங்கைமற்றத்
தெரியிழைமாதரார்க்குச்சுயம்வரஞ்செப்பிஞாலத்
தரசர்தந்தொகுதிக்கெல்லாமறிவித்தானனையகாலை. (௫௭)

அந்தமில்பல்லதேயத்தளவில்பல்வேந்தர்யாரும்
வந்தனர்வந்தகாலைமன்னுதன்றுணைவன்றிண்டோட்
கந்திடையன்னமாதர்கதிர்முலைக்களிறுசேர்ப்பான்
சிந்தைசெய்தடைந்தானுங்குக்கங்கைதன்செலவச்செம்மல். (ருஅ)

காலையங்கதனின்மாதர்காமமுற்றத்துறந்து
சாலுநல்விரதம்பூண்டோன்சயமவரத்துற்றதென்னென்
றோலநீருலகமன்னர்யாவருமொருங்குநக்கார்
வேலையங்கதனில்வேலைவிடமெனவெகுண்டெழுந்தான். (ருகூ)

விடமெனவெகுணடெழுந்தவீடுமனமுதமன்ன
மடநடைமாதர்தம்மைவல்லையிலவலிதுபற்றிக
கொடிகெழுதன்றேரேற்றிககொடுஞ்சிலைகுழையவாங்கிச்
சுடுசரந்துரந்துவேந்தர்யாரையுந்துரந்தானன்றே. (கூ0)

சீற்றமால்யானைவாசிதேரொடுபதாதிசுற்ற
வேற்றெதிர்மலைந்தவேந்தர்யாவருமிரியநூறி
யாற்றல்சால்வாகைசூடியண்ணல்போரணங்கைவேட்டுக்
கோற்றொடிமாதர்தம்மைகொண்டவணகன்றுபோந்தான். (கூக)

போந்தருள்காலையந்தப்பூவையர்மூவர்தம்மிற்
சாந்தணிகொங்கையம்பைதனைபுகழ்சாளுவப்பேர்
வேந்தன்பால்வேட்கையுற்றேன்விடுத்தியாலென்னையென்ன
வேந்தலாங்கவளைநீத்துத்தன்பதியெய்தினானே. (கூஉ)

தன்பதியெய்திமற்றத்தாழ்குழன்மாதர்தம்மை
யன்புறுதுணைவனுக்காங்கணிகெழுவதுவையாற்றி
யின்புடனமரச்செய்தங்கிருந்தனனேந்தலிப்பான்
மின்பொலிமருங்குலம்பைதன்செயலவிளம்பல்செய்வாம். (கூ௩)

வீடுமன்விடுப்பப்போந்தமெல்லியல்சாளுவப்பே
ராடல்வேலரசன்முன்போயெண்ணியவறைந்தகாலை
வாடியமருங்குனல்லாய்மாற்றலனீத்தநின்னைப்
பாடல்சால்வதுவையாற்றல்பழியெனப்பகர்ந்தானன்றே. (கூச)

பழியெனமறுத்தகாலைப்பைந்தொடிப்பாவைமீண்டு
கழிபெருஞ்சிறப்பின்மிக்ககாங்கெயன்றனையடைந்து
விழைதருவிருப்பிற்போற்றிவிளைந்தவாறனைத்துஞ்செப்பி
வழிவழுபுகழாய்நின்னையன்றிவேறரணமின்றால். (கூரு)

திருபர்தம்பெருமானென்னைநீயினிவதுவையாற்றி
யருள்புரிந்தளித்தியென்றுவறைந்தனடான்கொண்டுள்ள
விரதநன்னிலைவிளம்பிவீடுமன்மறுத்தான்வெம்பி
வரிவளைவன்னிநாப்பண்வல்லியிற்புலர்ந்தாண்மாதோ. (௬௬)

வேறு.

அரிவைவெய்துயிர்த்தழுங்கியேயாயிடையகன்று
பரசிராமனைநோக்கியேபற்பகற்றமம்பூண்
டுரியநோன்பொடுமுற்றனனூற்றுழியந்தக்
குரிசிலெய்தியேவேண்டியகூறுதியென்றான். (௬௭)

வேண்டுநல்வரம்விளம்பெனவிளம்பியவேலைப்
பூண்டயங்கியமுலையினளவணங்கியேபோற்றி
மாண்டகேள்விசால்வீடுமன்மற்றெனைமணப்ப
வீண்டுநல்லருள்புரிதியென்றியம்பினளன்றே. (௬௮)

இயம்பிநின்றதோரிலங்கிழைதனையெதிர்நோக்கி
நயங்கொள்பேரருள்புரிந்துநீநவின்றவாறிழைத்துங்
கயங்கொள்காவியங்கண்ணினியென்றுகட்டுரைத்து
வயங்குபோர்மழுவள்ளல்வீடுமனுழைவந்தான். (௬௯)

வந்தகாலையிற்குரவனைவிதிமுறைவழிபட்
டெந்தையெய்தியதென்னெனவெய்தியதிசைத்தா
னந்தவாய்மைகேட்டரியதன்விரதமாங்கறைந்த
மைந்துசான்றதோட்காங்கையன்மறுத்தனன்மாதோ. (௭௦)

மறுத்தகாலையில்வலம்படுவார்சிலைவணக்கிச்
செறுத்துவெஞ்சமர்தொடங்கினன்செருமழுவிராமன்
கறுத்துவீடுமன்றானுநீள்கடைவிழிசிவந்து
விறற்கொடுஞ்சிலைகோட்டுபுவெஞ்சமர்முயன்றான். (௭௧)

இருவருஞ்சமர்முயன்றதோரொல்லையிலெழுபார்
வரைகளெண்டிசைதுளங்கினமற்றதுகாலைத்
திருவினீடியவிந்திரன்முதலியதேவர்
விரைவினெய்தியேவெஞ்சமர்விலக்கினரன்றே. (௭௨)

வேறு.

விலக்கியவேலைதன்னில்வெயின்மழுப்படைதரித்த
மலைத்தடந்தோளிராமன்றனுறைவைப்பிற்போந்தான்
பொலக்குறுந்தொடிக்கைநல்லாள்புன்கணுற்றழுங்கிச்சால
நிலைக்களஞ்சிறிதுங்காணுணெருப்பில்வீழ்வதுதுணிந்தாள். (௭௩)

துணிவுசெய்தழலமைத்துத்தோன்றலங்காங்கையன்பாற்
பணிமொழிமாதர்க்கொன்றபழியுறுகொடியபாவ
மணைகவென்றறைந்துசாபமவ்வெரிவீழ்ந்தவிந்தா
மணமலிகூந்தலூழின்வலியையார்கடக்கவல்லார். (எச)

பையரவல்குற்பாவைபாயெரிபடிந்தபின்ன
ரெய்தியசாபந்தீர்தற்கிரும்புனல்யாவும்பன்னுண்
மையறுகங்கைமைந்தன்மரபினின்மூழ்கியாரூர்த்
துய்யநீர்க்கயையடைந்துதுகளறுசிராத்தஞ்செய்வான். (எரு)

தொடங்கியபோதில்வானிற்றூயதோர்வாணிநின்பா
லடைந்தவெம்பவவழுக்கையமலமாந்தன்மநிட்டைத்
தடந்தனிற்கழுவிநீக்கிச்சார்ந்துபின்னினையதீர்த்தத்
திடந்தனிற்சிராத்தந்தன்னையிழைத்தியென்றிசைத்ததன்றே. ()

இசைதருமாற்றங்கேளாவெழுந்தனனெல்லையேகித்
திசைபுகழ்தன்மநிட்டைதீர்த்தத்திற்றோய்ந்தானந்த
வசைதருபாவமாங்குமாண்டதுவந்துபின்னர்
கசையொடுசிராத்தஞ்செய்தானலங்கெழுகயையின்பாங்கர். (எஎ)

ஆயிடையகன்றுபுற்றினகத்தெழுமமலற்போற்றித்
தூயதோரிலிங்கந்துர்க்கைசுடர்க்கதிரினிதுதாபித்
தேயநூல்விதியிற்பூசையிழைத்தனனிறைஞ்சியேத்திச்
சேயபூமடுவொன்றாங்குச்சிறப்பொடுவிளங்கத்தந்தான். (எஅ)

தந்ததோர்மடுவிற்கங்கைதனையழைத்துலகமெல்லா
முய்ந்திடவைத்துப்பின்னரொப்பிறன்புரத்திலெய்தி
யந்தமில்சிறப்பினோடுமமர்ந்தனனறவீரந்தச்
சந்தனுமைந்தன்றந்ததண்மலர்த்தீர்த்தமூழ்கி. (எகூ)

வேறு.

கன்னிமேடநற்றுலாப்பெயர்த்திங்களிற்கண்ணுறுமேழெட்டு
மன்னுமொன்பதாம்பக்கத்துமுறையினின்மற்றவனருச்சித்த
பொன்னிருங்கதிரிலிங்கமொண்சயமகட்போற்றுவார்மிடிநோயா
லின்னலெய்திடாரெண்ணியவெண்ணியவெய்துவரிதுவாய்மை. ()

வேறு.

கங்கைதன்புதல்வன்றந்ததோர்தெய்வக்கங்கைமாமடுவினின்
மூழ்கி, யங்கவன்பூசையாற்றியவிலிங்கமூர்த்திதன்சந்நிதியடைந்

று, வெங்கொடும்பொய்ச்சூனுரைப்பவர்குட்டவெய்யநோயெய்தி யேவிளிவுற், றங்கண்மாஞாலத்துமரா யுதிப்பரையமன்றிவ்வுரைய றவிர். (அக)

கமலமாநகரிற்கங்கைமாநதியையிருத்தியகங்கைதன்புதல்வன்
விமலமாஞ்சத்திமாநகர்ப்பெருமைவிளம்பிடக்கேட்டறனளித்த
வமலமாமைந்தன்வீமனேமுதலோரரவவெங்கொடியினனாதிக்
குமரர்விற்குரவன்கன்னனேமுதலோரடைந்தனர்கொடிமதிலாரூர்.

அடைந்தனர்தேவதீர்த்தநீராடிநீறணிந்தளவறுதான, மிடைந்,தவந்தணருக்குதவினர்புற்றின்விமலனைப்போற்றினராங்குப், படர்ந்தபேரன்பின்வேறுவேறமலப்பாஞ்சுடருருவமாமிலிங்கந், தொடர்ந்தநூல்விதியிற்றாபனஞ்செய்வானனைவருந்தொடங்கினரன்றே

யாதவர்குலத்தைவிளக்கியதுவரைக்கிறைவனுமிலங்குபேராழி
மாதவன்செம்பொனுடைகச்சிகரமாமணிக்கோயிலாங்கமைத்துத்
தீதுதீர்தெய்வச்சிவாகமவிதியிற்சிவலிங்கமூர்த்தியைத்தாபித்
தோதுபேரன்பிற்பூசைசெய்திறைஞ்சியுருகியேபோற்றினனுவப்பால்.

கிருபன்விற்குரவனச்சுவத்தாமன்கேடில்சீர்ச்சல்லியன்சகுனி
கருணன்மற்றின்னோர்வேறுவேறுங்குக்கனகவாலயம்புரிந்தீச
னுருவமாமிலிங்கம்விதிமுறைதாபித்துருகுபேரன்பொடுபுதிய
மருமலர்தூவிப்பூசைசெய்திறைஞ்சிமதியொடுபோற்றினரன்பால்.

தருமனேமுதலாமைவருஞ்செம்பொனாலயந்தனித்தனிதந்தாங், கிருளறுசோதிமாசிவலிங்கமினிதுதாபித்துநூல்விதியில், விரைமலர்சந்தமாதியாற்பூசைவிருப்பொடுநயந்தனர்பரிந்து, சரையறுமன்பிற்பணிந்துதாழ்ந்தெழுந்துகைதொழுதேத்தினர்களிப்பால். ()

நாகமார்கொடியோனாதிநூற்றுவருந்தனித்தனிநகுமணிச்சிகர
நாகமீதளவுந்தமனியக்கோயினன்கமைத்தாகமவிதியி
னாகவீருரியோனருளுருவிலிங்கநலம்பெறத்தாபனஞ்செய்து
நாகமந்திரமுதற்பலமலரானவைதவிர்பூசனைபுரிந்தார். (அஎ)

குந்திமாத்திரிபாஞ்சாலிபானுமதிகுவலயமுதலுலகனைத்துந்
தந்தறம்வளர்க்குஞ்சுந்தரிதன்னைத்தனித்தனிதாபனஞ்செய்து
கந்தமாமலர்கள்சந்தனந்தீபங்கமழ்நறுந்தூபமாதியினு
னந்தமில்சிறப்பிற்பூசைசெய்திறைஞ்சியன்பொடுபோற்றினரன்றே

இம்முறைபூசைவேறுவேறாற்றி யெண்ணிலாவரம்பல பெற்றுப், பொய்ம்மைதீர்புனிதவிரதமோடைந்துபோதமர்ந்தமலவாரூரிற், செம்மைசேரன்பிற்புற்றிடங்கொண்டசிவபிரான்றனைவிடைகொண்டு, தம்முதுபதியிற்சார்ந்தனர்வேதத்தலைப்பொருளுணர்ந்தநற்றவத்தீர். (அகூ)

அன்னவர்பூசை யாற்றியவிலிங்க மமலைதன்றரிசனம்புரிவோர், பின்னல்வெம்பிணியான் மிடியினலிளையா ரிருநிதிபடைத்துவீற்றிருக்கு, மன்னவனென்னவாழ்வினிற்பொலிந்துமகிழ்வொடுகிளைத்துவீற்றிருப்பார், பின்னர்வானுலகப்பெருவளம்படைப்பார்பெறலருமுத்தியும்பெறுவார். (கூ0)

தன்மகிட்டையினற்பொலிதருதீர்த்தத்தகுதிசான்மகிமைகள்கேட்டோர், கன்மனங்கரையவோதினோர்யாருங்காசுறுசாபமும்பவமும், வன்மனத்தோடுதேவராலயத்தின்வான்பொருள்கவர்ந்திடும்பவமு, மின்மையையடையவியற்றியேயுமையினிணையடிக்கமலமேவுவரால். (கூக)

தன்மகிட்டைதீர்த்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஎஉ0.

---

## நாகதீர்த்தச்சருக்கம்.

---

வேகவல்வினைவீட்டியேவிளியாவீடுதந்தருள்விமலவாரூரி, னாகதீர்த்தமாம்வாவியொன்றுளதானவின்றவத்திருவாவியின்மேன்மை, மோகமாதியமுருக்கியமுனிவீர்முளையிளம்பிறைமுடித்தருண்முக்க, ணேகநாயகனருளினலிசைப்பேனென்றுசூதனுங்கியம்புதலுற்றான். (க)

ஞானமாதவீரனந்தனையாதிநாகர்தந்துளநாகதீர்த்தப்பேர்ப், பானல்வாவியிற்படிந்தவரழல்வாய்ப் பாம்பினலுயிர்மாண்டிடாரந்தத், தேனருமலர்வாவியிற்சிராத்தஞ்செய்யில்வெவ்வராத்தீவிடத்திறந்தோ, ரூனமாநிரயம்புகாதும்பரூர்புகுந்துறைவாரிஃதுண்மை.

அந்தவாவியின்காதைகள்பலவுண்டவற்றுளோர்கதையறைகுவனமரில், வந்தமாற்றலர்குருதிவாய்மடுத்தமதுகைவாகைவேன்மன்னவனொருவ, னிந்துவார்சடையீசனன்புடையோனிவுளிமேதை

மோராயிரமிழைத்தோன், முந்தைமாமனுமுறைநெறிவளர்த்தோ
ன்முருகனன்னவன்முதுகலைதெரிந்தோன். (௩)

கொந்துலாவியகொழுமடலவிழ்ந்துகுளிர்ந்ததாமரைக்கோயி
ற்றொடிமடந்தை, சந்தளாவியமுலைமுயங்குறுந்தாமமார்பினன்சயமக
ள்கேள்வன், கந்துசீறியகடாமுகக்களிற்றுக்கரியவார்கழல்வெண்கு
டைச்செங்கோற், பைந்தண்மாலைதாழ்பொன்னிவர்தடந்தோட்பா
டல்சால்புகழ்ப்பார்த்திபர்கோமான். (௪)

வேறு.

மந்திரநான்மறைவடித்தமான்புசா
லந்தணராணினைமோம்புமன்பினு
நந்தைபோலடைந்தவர்நர்மைத்தாங்குவா
னிந்திரசேனனென்றிசைக்குர்பேரினன். (௫)

அன்னவன்கலிகடிந்தாழிசூழ்தரு
மிந்நிலம்புரந்தரசிருக்கும்மேல்வையில்
வன்னிவாயரவெயிறழுந்திமாய்ந்தனன்
முன்னையூழ்வலியையார்முருக்கவல்லரே. (௬)

பூதலமன்னவன்புயங்காகுந்திறல்
வீதலுமவனருள்விண்டுசேனனுங்
காதலன்றுன்பமாங்கடலின்மூழ்கினு
ஞதிநூல்விதிவழிகடன்களாற்றினன். (௭)

கடன்புரிந்தொருவகைதேறிக்காதலன்
றடங்கடன்மாநிலந்தாங்கிவைகுநா
ணெடும்புனல்வடபெருங்கங்கைநீள்கயை
யடைந்தனன்விதிமுறைசிராத்தமாற்றினன். (௮)

வேறு.

அரும்பெறலினியதந்தைக்கறையுநூல்விதிவழாமற்
றிருந்தவேசிராத்தமாற்றிச்சென்றுதன்பதியின்மேவி
மருந்துறழ்மைந்தன்கங்குல்வாளரிசுமந்தபைம்பொற்
சொரிந்தபூம்பாயன்மீதுதுயின்றனன்றுயிலுமெல்லை. (௯)

கனவினிலெய்தித்தாதைகண்புனல்சொரியநின்றே
யெனதுயிர்மைந்தநீயின்றிழைத்தவிச்சிராத்தந்தன்னாற்
பனகவல்விடத்தான்மாய்ந்தபவவினைத்துன்பநீங்கி
யுனகனுயின்பநீங்காவமருலகடைந்தேனல்லேன். (௧௦)

என்றெதிரிசைத்தலோடுமிரங்கியேயினியென்செய்வ
தென்றபோதாரூர்தன்னிலியாவருநாகதீர்த்த
மென்றினிதேத்தும்வாவியிழைத்திடிற்சிராத்தமுய்வே
னென்றனனென்றந்தைமைந்தன்விழித்திவையாவுந்தேர்ந்தான். (கக)

தேர்ந்தனனாரூரெய்திச்செழுமலர்நாகதீர்த்தஞ்
சார்ந்தனன்விதியின்மூழ்கித்தவலருஞ்சிராத்தமாற்றி
வார்ந்திழிகுருதிவேலான்வயங்குமப்பொய்கைப்பாங்க
ராய்ந்தநான்மறையோர்சூழவமர்ந்தனனமருங்காலை. (கஉ)

தீவினைதீர்ந்துதாதைதேவர்தமுலகஞ்சேர்ந்தான்
காவலதெளிதியென்னககனமேல்வாணிகூற
நாவலர்புகழுஞ்சீர்த்திநரபதிமைந்தன்கேளா
வோவறுமுவகையெய்தியுளத்தினில்விறும்பூதுற்றான். (கங)

மனமிகமகிழ்ந்துமைந்தன்மறையவர்தங்களோடு
மனகனையாரூர்ப்புற்றினகத்தெழுமமலஞானப்
புனிதனைவலங்கொண்டன்பிற்போற்றியேவிடைகொண்டேகித்
தனதுமாநகரடைந்தான்றவத்தினிற்றலைமைபெற்றீர். (கச)

அரவநஞ்சாதியாயநஞ்சினாலாவிநீத்த
விருளுறுபாவமிந்தவாவியிற்சிராத்தமீந்தா
லொருவுவதன்றிமற்றையொன்றினுமொழிந்திடாது
புரிசடையீசற்கன்புபூண்டமாதவத்தின்மிக்கீர். (கரு)

மலர்கமழ்நாகதீர்த்தமகிமையையியம்பினோரு
நலமுறக்கேட்டோர்தாமுநாகமாதியவிடத்தா
லலமராரொருகுடைக்கீழ்ம்புவிமுழுதுமோம்பிப்
பொலன்மணிவிமானமீதிற்பொன்னகரெய்திவாழ்வார் (சகா)

நாகதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - களஙகா

---

## விசுவாமித்திரதீர்த்தச்சருக்கம்.

பணைபுரைபசுந்தோளுமையுடனெண்டோட் பகவன்வீற்றிரு
க்குமாரூரி, லிணைதவிர்விசுவாமித்திரதீர்த்தமென்றுலகினிதெடுத்

தேத்து, மணமலர்வாவியொன்றுளதனையவாவியின்மான்மியமுரைகுப்பன், றுணைதவிர்முனிவீர்கேண்மினேவென்னச்சூதமாமுனிவரன்சொல்வான். (௧)

மேதகுசிறப்பின்விளங்கியவிசுவாமித்திரதீர்த்தநீர்மூழ்கிலாதவன்றினத்திற்பரணிநாள்மூழ்கிலாருருசாவிரதிகாதலனவர்கல்விமற்றில்லோர்ப முனியாவர்பட்சமலச்சிதரனவர்திருவிலாரீசன்றிருவடியன்பினிற்பிறந்தீர். (௨)

சாற்றுமிக்காலத்தினையதோர் தீர்த்தந்தோய்ந்ததோர்தன்மையான்முன்னை, மாற்றருந்தெய்வமேனகைசாபவலியினன்மாணிளம்பிணையாய்த், தோற்றியவுருவமகன்றுதன்றுலமிற்றுனனினனின்றுதொட்டனைய, கோற்றொடியந்நாள்வருந்தோறுய்குலவுமிப்பொய்கையிற்குடைந்தாள் (௩)

இம்முறைகுடைந்தாங்கேகுநாளொருநாள்யாருமெய்தாததோர்வனத்திற், செம்மைகொள்சாலேகதிரொளிப்பொலிந்தமேனியணிளமையிற்சிறந்தோன், கொய்மலர்வாளிப்படைமதன்வனப்பிற்குலவியவனப்பினனெண்டோன், மைம்மணிமிடற்றோன்மலரடிமலர்ந்தமனத்தினன்மாதவத்துயர்ந்தோன் (௪)

வேறு.

கோசிகனென்றுஞாலமேத்தியகுறைதீர்சீர்த்தி
மாசறுமுனியைக்கண்டாள்காண்டலுமனத்தெழுந்த
வாசைவெந்தீயாலன்னாளணிமுலையாரவெந்து
பூசியகருப்புரப்பூம்பொடியெனப்பொலிந்ததம்மா. (௫)

மாரிவாய்ப்பீரமென்னமலர்ந்ததுபீரஞ்செங்கை
வேரிவாய்க்கமலவண்டுவீழ்ந்தனமின்மருங்குற்
சீர்கொள்பொற்றெய்வத்தூசுநெகிழ்ந்ததுசெல்விநெஞ்ச
மாரழற்சிகையளாவுமரக்கெனவுடைந்ததன்றே. (௬)

இத்திறநிகழநின்றவிலங்கிழைமடந்தைமாரன்
புத்தலர்வெய்யவாளிபொங்கிளமுலைமுகட்டிற்
றைத்திடவருந்திச்சாலத்தளர்ந்தனண்மெல்லவேகி
[illegible]மமுனிவன்முன்னருற்றிவையுரைக்கலுற்றாள். (௭)

காளையம்பருவஞ்சான்றமுனிவநின்கவின்கண்டாசை
நீள்கடலிடையிலாழ்ந்தேனிலையொருசிறிதுங்காணேன்
றோளிரும்புணைதந்தாவிதொலைந்திடாதளித்தியென்று
வாள்பொருமதர்நெடுங்கண்மடவரல்புகன்றவெல்லை. (அ)

தாதவிழ்செய்யதோட்டுத்தாமரைத்தவிசில்வைகும்
வேதியனெனவிதித்தமெய்ம்முனியவளைநோக்கிப்
போதொடுவிரிந்தகூந்தற்பூவைநின்னகந்தோய்ந்தான்
மாதவங்குன்றுமென்னுமறுத்துரைவழங்கினனால். (கூ)

யாருமில்வனத்தில்வேட்கையெய்தியேயெதிர்வந்துற்ற
வாரமுதன்னசாயலணங்கினைவெறுத்தானம்மா
மாரனைவென்றோன்பொற்றாண்மனத்தினிலிருத்திநோற்கும்
பார்முதற்பற்றுநீத்தோர்தவவலிபகர்தற்பாற்றே. (க0)

மறுத்தெதிருரைத்தலோடுமனத்தினில்வேட்கையுற்ற
பிறைத்திருநுதலவேலுண்கடபேரெழின்மாதர்தம்மை
வெறுப்பதிங்கிளவனப்புமிக்கவாடவர்கடங்கட்
கறத்தியலன்றுதொன்னூலறநெறியாய்ந்தமேலோய். (கக)

ஆதலாலாசைவெந்தீயழலுறுவெம்மையாறச்
சோதிகொள்சிதமார்பிற்றணைமுலைமுழுங்கப்புல்லி
காதலிற்கலந்தென்னாவிகாத்தருள்புரிதியென்றாண்
மாதுரைவினவிப்பின்னுமாதவன்மறுத்தான்மாதோ (கஉ)

பின்னருமறுத்தலோடும்பெய்வளைவெகுண்டேயிந்த
வின்னிளவனப்புமாறிநரைதிரையின்றுநின்பாற்
றுன்னுகவென்றுசாபஞ்சொற்றனள்சொற்றவண்ண
மன்னவன்றெய்வயாக்கையடுத்ததாங்கடுத்தவேலை (கங)

முனிவனுமுனிந்துசாலமுற்றிழைநினதுமெய்யி
னனிமுதிர்கிழமைவந்துநண்ணுகவென்றுசாபந்
தனையளித்தலுமவ்வாறுசார்ந்ததுசார்ந்தவெல்லை
வனிதையவ்வெல்லைநீங்கிவந்தனளாரூரெல்லை. (கச)

வந்தனள்பருதிவாரமருவியபரணிதன்னி
லிந்தமாமடுவிலாடியிளநலம்பெற்றாளாங்குப்
பைந்தொடிமடந்தைபெற்றபரிசுகண்டன்னவேலை
யந்தமாமுனியுமாடியரும்பெறலிளமைபெற்றான். (கரு)

பொரும்புனற்பண்ணையாரூர்ப்புற்றிடங்கொண்டமூர்த்தி
யரும்பெறலருளாலிங்கீராடியேயிளமைபெற்ற
திருந்தெழிலிருவர்தாமுந்தில்லையானருளாற்றில்லை
யிருந்தடநீரிலாடியிளமைபெற்றோரையொத்தார். (கசு)

மேனகையிளமைபெற்றுவிண்ணுலகடைந்தாளந்த
ஞானமாமுனிவனிந்தநறைமலர்வாவிப்பாங்கர்
மாநிலமுய்யச்சோதிவளர்சிவலிங்கந்தாபித்
தானமில்பூசையாற்றியோகுசெய்துறைந்தானன்றே. (கஎ)

யோகுசெய்தனையமேலோனுறைதலாலவன்பேரிந்த
நாகுலாந்துறைகொள்வாவிக்குற்றதுநற்றவத்திர்
போகமும்வீடுநல்குமிப்பெரும்பொய்கைமேன்மை
யேகநாயகனேயன்றியாவரேயியம்புநீரார். (கஅ)

தவவலிசாரும்விசுவாமித்திரன்றன்பேர்த்திர்த்தத்
துவமையின்மகிமைகேட்போரோதுவோருயாரறத்தா
லவமிகுமாதர்காமமகன்றுநல்லிளமைபெற்றுச்
சிவமுறுதெய்வயோகஞ்சேர்ந்தினிதிருப்பாரென்றும். (ககூ)

விசுவாமித்திரதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஎரு

## சூரியபுட்கரணிச் சருக்கம்.

சூரியமேமுதற்கலைகளாய்ந்தகாட்சி
யரியதவநிலைசான்றவறங்கொள்வேள்விச்
சூரியமாமுனிவர்தமைச்சிறப்பினோக்கித்
தேவர்தொழுந்தேவாதிதேவன்ஞானக்
காரிகைதன்னுடனுறையுமாரூர்த்தேவ
தீர்த்தத்தின்றென்பாலிற்கவினுந்தெய்வச்
சூரியபுட்கரணியெனுந்தீர்த்தமேன்மை
சொல்வனெனச்சூதமுனிசொல்லலுற்றான். (க)

தொல்லையருந்தவமுனிவீர்செல்வவாரூர்ச்
சூரியபுட்கரணியெனுந்துகடீர்தீர்த்த
முல்லைநகையுமைபாகன்விழிகளென்ன
மூன்றாகிப்பொலியுமவைமூன்றின்மூன்று

மெல்லிதழ்மாமுளரிமலர்குவிதலின்றி
மேலொடுபோல்கீழ்நோக்கிவிளங்குமென்று
மல்லல்வினைத்தொகையனைத்துமறுத்துமுத்தி
யடைவரிவையொருமூன்றுமாடினோரே. (உ)

மேலபுடைகீழுறநோக்குமுளரிநீங்கா
வியன்றடமூன்றினுமுறையின்விதியினோடு
காலைவியனுச்சியொடுமாலைதன்னிற்
கார்த்திகையிற்கார்த்திகைநாட் படிந்தோர்காமன்
போலவெழின்மருவிப்பெருசெல்வக்கலவி
பொருந்தியிரும்புவிமுழுதும்புரந்துவானின்
மாலைமுடியிமையவர்க்கரசராகி
வைகிப்பின்சிவபதத்தின்மகிழ்ந்துவாழ்வார். (ங)

கமலமலர்மேனோங்கும்பொய்கைதன்னிற்
கார்த்திகையிற்கார்த்திகைநாளுச்சிவேலை
விமலவொளியாயிரந்தோடுடை யதெய்வ
விரைமலர்த்தாமரையொன்றுவிளங்கித்தோன்று
மமலவிரிகதிர்க்கடவுளதன்பால்வைகு
மனையபெருந்தீர்த்தத்தினைப்புகுந்தை
யிமயமகண்முலையுழுதவெண்டோண்முக்க
ணெம்பிரானையறிவனிருந்தவத்தீர். (ச)

வேறு.

அறைந்தவக்காலநாடியத்தடமூன்றுமாடி
பிறந்திடாவெண்ணிலசித்தியினிதுபெற்றிரவிதீர்த்த
நறுந்தடமருங்குசூழ்ந்தநாண்மலர்க்காவினீழ
லுறைந்தனன்கௌசிகப்பேரொப்பிலாமுனிவர்கோமான். (ரு)

வேறு.

அன்னுறையுமவ்வேலையடவிவேட்டைதொழிலிழைத்து,
மின்னார்வடிவேற்பிருகளனென்னும்வேந்தன்மிகுவேனி, றன்னா
ல்வெதும்பியிரவிதடஞ் சார்ந்துதானைத்தலைவரொடும், தென்னார்த
மிழின்றீஞ்சுவைபோற் றெவிட்டாச்செழுந்தேம்புனலுண்டான்.()

தண்ணம்புனலுண்டழலாறித்தயங்குமிதழாயிரம்படைத்த
வண்ணமலராக்கைதொடலுமறைந்ததொல்லைமறைந்தவுடன்
விண்ணுந்திசையும்புகழ்வேந்தன்மேனிமீதுவெண்குட்டந்
துண்ணென்றெழுந்ததெழக்கண்டுவெருவியரசன்றுளங்கினனால்,

துளங்கியாசனையல்சூழ்ந்தசோலைநீழலடைந்தாங்கு
விளங்குஞான்விளக்கென்னமேவும்விசுவாமித்திரனை
யுளங்கொள்காதலுடன்வணங்கியுற்றதெமற்றவற்குரைத்துக்
களங்கமீதுகழிந்தொழியத்தருளைபுரிந்தருளென்றான். (அ)

முனிவன்வினவிக்கைலைமலைமுதலமலைவலக்கணிதுறையும்
வனசமலர்காணத்தமலர்மன்றலைநனைந்தொட்டலாகா
தனையமலனைத்தொட்டமையாலடைந்ததிந்தவன்குட்ட
மினையவெங்நோயகன்றொழியவிம்பர்போட்டியிகல்வேலோய். ()

இந்தத்தீர்த்தத்தடம்பணையிலிரவிதன்னைத்தாபித்தே
யிந்தத்தீர்த்தத்தடம்படிந்தேயாண்டிலையருச்சித்தா
லிந்தக்குட்டமகன்றொழியுமென்றுவிருடியியம்புதலு
மிந்தப்படியானிழைப்பனெனவிறைவன்முனியையிறைஞ்சினனால்.

இறைஞ்சியிரவிபெருந்தீர்த்தப்பணையிற்போயிலினிதிழைத்தே
யறங்கொள்விதியினிரவிதனையரசன்போற்றியிந்து
நறுந்தண்மலராலோராண்டுவகைசிறப்பூசைபுரிந்தப்
பிறங்குமிரவிபோலநிறம்பெற்றனனழியாப்பெருந்தவத்தீர். (கக)

இரவிபோலநிறம்பெற்றவிறைவனிந்தவுலகுபுரந்
திரவியுலகந்தனையடைந்தானிந்தவிறைவன்பூசிந்த
விரவிகோயில்வலங்கொண்டேயெதிர்தாழ்ந்திறைஞ்சியேத்துமவ
ரிரவியுலகந்தனையடைந்தாங்கெண்ணில்காலமிருப்பாரே. (கஉ)

பருதிதீர்த்தம்படிந்ததப்பருதிபாதம்பணிந்தேத்தின்
மருவுமலகைமுயலகனோய்குட்டமாதிவெம்பிணிக
ளொருவியொழியுமொழியாததிருவந்தனையுமுள்ளத்தி
னிருள்விண்டகலுமகலாதஞானவொளிதானெய்திடுமால். (கங)

இந்தவிரவிபுட்கரணியெய்துஞ்சரிதமியம்பிடுவோ
ரந்தமெய்தாவன்போடொருஞ்செவியிற்கேட்போர்க
ணந்துங்குட்டநோய்முதலாநவையினீங்கிநரபதியாய்
மூந்தைதவலியவிருணீங்கிமுதல்வன்முளரிப்பதமுறுவார். (கச)

சூரியபுட்கரணிச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - களசுக.

# திருவாரூர்ப்புராணம்.

## மிருகதீர்த்தச்சருக்கம்.

விமலமாதவிர்வாலமண்டனத்தின்
மேற்றிசைத்தலைமிருகதீர்த்தப்பே
ரமலவாவியொன்றுண்டதன்மேன்மை
யளவியாவர்க்குமளவிடவரிதா
லுமையுமீசனுமனையபூந்தடத்தி
லுலகமுய்யத்திடவுறைந்தருள்புரிவார்
கமலமாமலர்கமழுமப்பொய்கை
கண்டுளோரவர்சருக்குழிகாணார். (க)

சித்திரைப்பெயர்படைத்ததோர்திங்கட்
சிறந்தசுக்கிலபக்கமற்றதனி
லுத்தமச்சதுர்த்தசிதனில்விதியி
லொப்பிலாததோர்மிருகதீர்த்தப்பேர்ப்
புத்தலர்த்தடம்படிந்தவர்பவங்கள்
பொன்றவீட்டியேபொன்றிடாவின்ப
முத்திமேவுவர்முன்னியவரங்கண்
முழுதுமெய்துவர்முதுமறைமுனிவீர். (உ)

மிருகதீர்த்தமாம்வாவிநீர்தோய்ந்த
மிருகம்யாவையுநரர்வடிவாகு
நரர்படிந்திடிற்சுரர்வடிவாவார்
நாமுரைப்பதென்வேறினியந்த
விரைகொள்பூந்தடமணைந்தகாலொருகால்
மீதுதீண்டினும்பவமெலாம்விளியு
மரியமாதவமுனிவிர்காள்கேண்மி
னந்தவாவியின்காதையொன்றறைவேன். (ங)

முந்துகானிடைவேட்டுவர்வேட்டை
முயன்றுவாளியான்முருக்கலும்வெருவிச்
சிந்தியேதிகைத்தோடுபல்விலங்கிற்
சிலவிலங்கினஞ்சிவபிரானருளா
லந்தவாவிநீர்வீழ்ந்தனவீழ்ந்த
வளவினல்லெழின்மாந்தராயெழுந்து

வந்தவத்திறங்கண்டிறும்பூது
மனத்தடைந்தனர்வரிசிலைமறவர். (௪)

மனத்திலற்புதமெய்துபுநின்ற
மறவர்தாமுமுன்னூழினலந்தப்
புனற்படிந்தனர்படிந்தெழுமளவிற்
பொன்னிலங்குதேவுருவொடுபொலிந்தாங்
கினக்கொழுஞ்சுடர்மணிகெழுவிமானத்
தேறிவானிடையேகினரந்தப்
பனிச்செழுந்தடமிருகதீர்த்தப்பேர்
படைத்ததன்றுதொட்டருந்தவம்படைத்தீர். (௫)

இனியநற்பதியாகியவாரூ
ரெல்லைமேவியமிருகதீர்த்தத்தின்
புனிதமெய்துறுபுகழினைக்கேட்டோர்
பொங்குமன்பினுற்புரிவொடுபுகன்றோர்
மனிதவிவ்வுருவகன்றுவானெய்தி
மன்னுதேவராய்வாழ்வர்மற்றுள்ள
கனிவிலாருயிர்கேட்டிடினன்றே
கனியுநன்னரவடிவொடுகவினும். (௬)

மிருகதீர்த்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௭௭௫

## பிரமதீர்த்தச்சருக்கம்.

இன்னநற்கதைபலவெழிலுறச்
சொன்னசூதமுனிபதந்தாழ்ந்துபின்
பன்னருங்கதையின்னும்பகரென
நன்னயம்பெறச்சூதனவிற்றுவான். (௧)

முருகுலாவுமுளரியங்கோயில்வாழ்
திருவினார்தவஞ்செய்தசெழும்பதிப்
பிரமதீர்த்தமெனப்பெயர்பெற்றசீ
ரரியதீர்த்தமொன்றுண்டாலறவிர்காள். (௨)

சொன்னதீர்த்தஞ்சுருதியின்றொன்மைதேர்
மன்னுகாட்சிவரனுடைமாதவிர்
முன்னர்ஞாலமுழுதும்படைத்ததோ
ரன்னமூர்பவனுக்கியதாலரோ. (௩)

கூறும்வாவிக்குளிர்புனன்மூழ்கிடி
னூறிலாதவுரனுடைமாதவிர்
வேறுகொண்கணைவெஃகியமாதர்பா
லேறுதீவினையீறுறுமென்பவே. (௪)

வேறு.

பண்டைநாளிவ்வூரெல்லைப்பார்ப்பனியொருத்திதன்னைக்
கொண்டவற்பிழைத்துவேறோராடவன்குவவுத்திண்டோண்
மண்டுகாதலிற்றிளைத்துவைகலும்பிரமவாவி
யொண்டுறைநீர்படிந்தாங்கொழுகினளொழுகுநாளில். (௫)

உடையதோர்கொழுநனேர்ந்தாங்குருத்தெழுந்தொறுத்தல்செய் [வா
னடர்தலுமுனக்குவஞ்சமாற்றினனல்லேன்செந்தீ
யிடைபடிந்தெழுவனென்னுவிசைத்தனளிசைத்தவெல்லைக்
கொடியதோர்வெகுளிநீங்கிக்கொடுந்தழற்படுதியென்றான். (௬)

அழல்படிந்தெழுதியென்னுவறைதலுமழலமைத்து
முழுகிமற்றதனிற்காய்ந்தமொய்யொளியாடகப்பொற்
செழுநறுங்கொடியோசெய்யகமலமேற்றிருவோவென்ன
வொழுகொளிவிரிந்தகாமருருவுபெற்றெழுந்தாளொல்லை. (௭)

அன்னதோர்காலைதன்னிலந்தணன்றழலைச்சீறிப்
பன்னரும்வஞ்சஞ்செய்தபாவியைவேவச்செய்யா
தின்னதோர்தன்மைசெய்தாயானுனைச்சபிப்பனென்ன
வன்னியந்தேவுநின்றுமற்றிவைவிளம்புமன்றே. (அ)

மணங்கமழ்பிரமதீர்த்தமூழ்கியவரத்தினாலே
யணங்கிவள்புரிந்தபாவமகன்றனளாதலாலே
தணந்திடாவெனதுவெம்மைசார்ந்திலதிவளிடத்தி
னிணங்குறாலுணர்ந்தமேலோயிம்மொழிசரதமென்றான். (௯)

கட்டுரைவழங்கிச்செந்தீக்கடவுடான்மறைந்தகாலை
விட்டனன்வெகுளிநீங்கிவேதியன்விருப்பினோடு
மட்டொளிர்செம்பொன்மேனியாரமுதன்னசாயன்
மட்டவிழ்குழலாளோடுமகிழ்ந்துவீற்றிருந்தான்மாதோ. (௧௦)

ஆசறுபிரமவாவியாழ்புனலிடையிற்பாவ
மாசதுகழுவிப்பன்னுள்வாழ்வொடுமகிழ்ந்துமல்கிப்
பாசிழையமுதச்செவ்வாய்ப்பணைமுலைப்பசும்பொற்பாவை
பூசரனோடும்பின்னர்ப்பொன்னுலகடைந்தாளன்றே. (கக)

பிறந்தவர்பிறவாமேன்மைபிறங்கியவிப்பதிக்க
ணுறைந்திடும்பிரமதீர்த்தவுயர்மொழிசேர் பேர்சொல்வோர்
மறந்தறியாதுற்றுமணமகற்பிழைத்தபாவம்
வெறுந்துகள்செய்துமேலைவின்னுலகேய்வரம்மா. (கஉ)

பிரமதீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஎஅஎ

## கோமுகதீர்த்தச்சருக்கம்.

கோமுகதீர்த்தமென்னுங்கொழுமலர்த்தீர்த்தமொன்றுண
டேமமூதெயில்சூழாரூரிடத்திலத்தடத்திலென்று
நாமநீர்க்கங்கைநண்ணுநவின்றவத்தடத்தைநோக்கிற்
றீமுதுபாவகோடிசிதைந்துடன்சிந்திநீங்கும். (க)

சீர்கொள்வைகாசித்திங்கட்சித்திரைநாளிற்சேர்ந்து
பார்புகழ்சிறப்பின்மிக்கபதினொராம்பக்கத்தந்த
நீர்படிந்தாடிற்குட்டமுதலியநெடுநோய்நீங்கு
மேர்கொள்பொன்வடிவுந்தொல்லையிமையவர்பதமுமெய்தும். (உ)

மட்டலர்வயங்குமந்தவாவியிலனையகாலத்
தெட்டிருந்திசையுமேத்துமிறைவன்மற்றொருவன்மூழ்கிக்
குட்டநோயகன்றுசெம்பொற்கொழுஞ்சுடர்வடிவம்பெற்று
விட்டொளிர்விமானமூர்ந்துவிண்ணுலகெய்தினனே. (௩)

வேறு.

அனையகாதையறைகுவனம்புல
முனிவுவஞ்சமுனிந்தமுனிவிர்கா
ளினிதுகேண்மினிருபிறப்பேய்ந்துள
பனவர்தம்பொருள்வவ்வியபாவத்தால். (௪)

வெம்புசீற்றத்துமாற்றலர்வெண்ணிணஞ்
செம்புலாலளையுந்தனிச்செய்யவேற்
கம்பயானையங்காசினிகாவல
னம்பரீடனெனும்பெயராண்டகை. (௫)

வெய்யகுட்டவினைப்பெருநோய்கொடு
மொய்யுடைக்கொலைநஞ்சமுதுபணி
மையழற்படுவாய்ப்படுதேனையிற்
பையுளுற்றனன்பற்பகலென்பவே. (௬)

வேறு.

எண்ணிலாமாமருந்துண்டுமெண்ணிலாப்
புண்ணியதானங்கள்புரிந்தும்பூதலத்
தண்ணல்வெம்பிணியஃதகன்றிடாமையா
லுண்ணலிதுயரொனுமுததிமூழ்கினன். (௭)

துயரொனுங்கடலிடைத்துன்னிச்சோர்ந்ததோர்
வயமிகுதானைமாமன்னர்மன்னவன்
புயலுறழ்வண்ணனைப்புரிந்துநோக்கியே
யுயர்தவம்பற்பலவுஞற்றினனரோ. (௮)

மாதவம்புரிந்துழிவந்துமாதவன்
பூதலவேந்தனைப்புரிந்துநோக்கியே
யாதுநீவேட்டனையிசைத்தியாலெனு
வோதினனேதலுமுகந்திறைஞ்சியே. (௯)

போற்றுபுதொழுதனன்புன்கணேயிது
மாற்றுதியென்றனன்மற்றவெல்லையிற்
சாற்றுதன்மேயினன்றடக்கைமும்மதச்
சீற்றவெங்கரிமருப்பொடித்தசெங்கணன். (௧௦)

சோதிநாயகன்மணித்தூயபுற்றிடத்
தாதிவாழ்தென்கமலாலயத்தினிற்
றீதுதீர்கோமுகதீர்த்தமென்றுல
கோதுமோர்தெய்வநீர்வாவியுண்டரோ. (௧௧)

அப்புனல்படிந்திடிலகலுமக்கண
மிப்பிணியென்றினிதிசைத்துநீங்கினன்
மைப்புயன்மேனியான்மன்னன்வல்லையிற்
செப்பியவாவியிற்சென்றுமூழ்கினன். (௧௨)

வேறு.

சென்றுழமுழகலுந்தொலேந்ததுநியவெந்துயர்நோய்
பொன்றயங்கியபுரைதவிர்தேவுருப்பொருந்தி
மின்றயங்கியவியன்மணிவிமானமேற்கொண்டாங்
கன்றுபுங்கவரெதிர்கொளப்பொன்னுலகடைந்தான். (கங)

பூமுகம்விரிபுதுமணக்கோமுகப்பேராய்கை
யேமமிக்கநன்மான்மியமினிதுகேட் பிப்போர்
காமமேவுறக்கருதுவோர்கயமலிகுட் டம்
தோமகன்றிடத்துன்னுவர்சுவர்க்கநன்னகரம். (கச)

கோமுகதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கசு0க

## பிருணைகுண்டச்சருக்கம்.

நறுங்கடிநறவப்பூம்பொழிற்படப்பைநலங்கெழுபழனவாரூரிற், சிறந்ததோர்பிருணைகுண்டமாந் தனிப்பேர்த்தீர்த்தமொன்றுள ததன்பெருமை, யறைந்திடலரிதாலதனிடைப்படிந்தா லந்தணராருயிரழித்த, மறங்கெழுபாவமடிந்திடும்வாய்மை மாசிலாஞானமாதவத்தீர். (க)

மன்னவனொருவனத்தடந்தோய்ந்துமறையவருயிர்க்கொலைப் பாவந், தன்னைநீத்துயர்ந்தானன்னதோர்காதை சாற்றுதுந்தனிச்சுடராழிப், பொன்னிவர்கொடிஞ்சி மரகதப்புரவிப்பொங்கொளித் தேரினன்குலத்து, மின்னிவர்குடுமிவீரமாமடந்தை விழிக்கடை பொருதநீள்வேலான். (உ)

வேறு.

அனகனூன்முழுவதுமளந்தகேள்வியான்
மனுமுறைதிருத்தியவயங்குகோலினன்
புனைதருபொலங்கழல்பொலிந்ததாளினன்
கனல்பொருகொடுஞ்சினக்கடாங்கொள்யானையான். (௩)

குத்திரவெங்கலிகடிந்தகொற்றத்தான்
சித்திரநிலமகடழைப்பத்தெண்ணிலாச்
சத்திரநீழலிலளிக்குந்தண்ணளி
மித்திரசேனனும்வேந்தர்வேந்தனே. (௪)

வேறு.

அத்திறல்வேந்தனாரணமோது
முத்தமவாய்மையோர்ந்துணர்காட்சி
மெய்த்தவர்சூழமேதகுதிர்க்கச்
சத்திரயாகந்தந்தனனென்றே. (ரு)

தேசுறுஞானத்தெய்வவசிட்ட
னாசறுமாசாரியனன்னவைகப்
பூசுரரோடும்பூதலமன்னன்
காசறுவேள்விசெயதருள்காலை. (சா)

கொலலுலைபற்றுங்கூரெரியென்ன
வல்லழல்பற்றிமண்டுவயிற்றின்
வெல்லருமொய்ம்பின்வெய்யவரக்க
ரொல்லெனவந்தாரோரிருவோரால். (எ)

வேறு.

வந்தகொடியோர்தழன்மகங்கெழுவுசாலை
சிந்தினர்செழுங்குரிசின்மற்றதுதெரிந்தே
யந்தவிருவோரிலொருவெயயவனைதாவி
வெந்திறல்கொள்வாள்கொடுதடிந்துவிளிவித்தான். (அ)

மற்றதுதெரிந்தொருவன்மாயையிலகன்று
னற்றமில்சிறப்பொடுமெருந்தவர்வியப்பக்
கொற்றவன்மகத்தொழின்முடித்தொர்குறைவின்றிக
கற்றமறைவேதியர்களிப்பநிதிதந்தான். (கூ)

வேதியருவப்பநிதிதூவிவடமீனின்
மாதலைவனுதிமுனிவோர்தமைவணங்கி
மேதகுகதிர்க்குலம்விளங்கவருவேந்தன்
போதுகொடுவேதமுறைபூசனைபுரிந்தான். (கo)

வேறு.

பூசைசெய்துயர்வசிட்டனையாதியாம்புனிதமாமுனிவோர்கட்
காசிலாவறுசுவையுடனோதனமளித்திடுமவ்வேலை
தேசமன்னவனடுந்திறலஞ்சிமுன்கரந்துநீங்கியதீய
மாசுலாவியமனத்தினன்வஞ்சமொன்றாற்றினன்மாயத்தால். (கக)

மாயையானரூன்றசைகொணர்ந்தனன்மடைப்பளியிடைப்புக்குத்
தூயபல்கறியுடன்கலந்தேகினன்றண்ணெனக்கரந்தாங்குத்
தீய்வன்செயநேர்ந்திடாதரசனற்செழுங்கறித்திரளோடே
யாயவூனையுமளித்திடல்செய்தனனளித்திடுமவ்வேலை. (கஉ)

கலத்திலூனதுவசிட்ட மாமுனிவரன்கண்டுவெஞ்சினமெய்தி
யிலைக்கொழுஞ்சுடர்வேலினய்மனிதரூனீந்தனையிப்பாவத்
துலைக்கடுங்கனலவயிற்றுவாளரக்கனாயுதிரமூன்றசைமாந்திப்
புலைக்கொடுந்தொழிலிழைத்தனைதிரிகுதியெனப்புகன்றனன்சாபம்

அரசனஞ்சியேமனிதரூன்வந்தவாறென்கொலென்றகத்தெண்ணி
விரைவினெய்தியேநாரதனிகழ்ந்தவைவிளம்பினனதுகாலைத்
திருகுவெஞ்சினமெய்தியேவேந்தனுந்திருமுனிதனைச்சாபம்
புரியவேதனதொண்மலர்க்கரத்தினிற்புதுநறும்புனல்கொண்டான்.

கொண்டகாலையிற்றேவிவந்திறைஞ்சியேகுரவனையெதிர்சீறன்
மண்டலம்புகழறநெறிநூலுணர்மன்னவர்க்கியல்பன்றால்
விண்டுநீங்குதிவெகுளியென்றுரைத்தலும்வெகுளியைவிடுத்தங்கைப்
புண்டரீகமேற்புனலினைத்தனதுசெம்பூங்கழன்மிசைப்பெய்தான்.

வேறு.

கரத்துநீர்பெய்தகாலைகனன்மழைபெய்யப்பட்ட
விரைச்செழுங்கமலமென்னவெந்தொளிநிறஞ்சிதைந்து
வரைத்தடந்திணிதோட்கொற்றமணிமுடிமன்னர்மன்ன
னரிக்கழன்மிழற்றுஞ்செம்பொனடிமலர்கறுத்ததம்மா. (கசு)

பன்மாலைமதுகைத்திண்டோட் பாறுலாம்படைவேன்மன்னர்
நன்மாலைநிரைகடாழுங்குமணிவயிரம்வேய்ந்த
பொன்மோலிபடச்சிவந்தபூங்கழல்கறுத்தபண்பாற்
கன்மாடபாதநாமங்காவலனெய்தினானே (கஎ)

தன்னுடைவெகுளிநீங்கிச்சாபநீர்காலிற்பெய்த
மன்னவன்வசிட்டன்றன்னைவணங்கியிச்சாபநீங்க
வின்னருள்புரிதியென்னவிப்பரிசிழைத்தவஞ்சத
துன்னலன்றனைநீகொன்றவேலையிற்றொலையுமென்றான். (கஅ)

வேறு.

என்றுவசிட்டனேகினனேகலுமெரிசெங்கண்
வன்றிறல்வெய்யவிராக்கதனாகிவனத்தூடு
சென்றனனெண்ணில்விலங்கொடுமன்பதைசெற்றுவி
கொன்றுகொழுந்தசைதின்றுதிரிந்தான்கோமன்னன். (க[illegible])

எண்ணிலுயிர்க்கொலைசெய்துழல்காலைபிலிகல்வேலான்
கண்ணிலரக்கற்கண்டுயிர்கொன்றானதுகாலை
துண்ணெனவிண்டுதொலைந்ததுஞானச்சுடர்போலு
மண்ணல்வசிட்டனறைந்திடுசாபமவ்வேலை. (உo)

முன்னொருநாகமுண்டுமிழ்காலைபின்முதுதிங்க
டன்னையொர்நாகம்பின்னுறவவ்வுந்தகையென்ன
மன்னுயிர்கோடிவதைத்துழல்காலையின்மறையோர்த
மின்னுயிர்மாய்த்தகொலைப்பழியெய்தியதிறைவன்பால். (உக)

விப்பிரவெம்பழிபற்றியலைப்பவெருவெய்தி
யிப்புவியெங்குமுலைந்தலமந்துழலெல்லைக்கட்
டைப்பணிவேய்ந்தபராபரனெந்தைபராசத்தி
வைப்பினிலுற்றான்முற்செய்தவத்தான்மறவேலான். (உஉ)

வேறு.

முன்னையறத்தாற்புற்றிடங்கொண்முதல்வனூரூர்வந்தடைந்த
மன்னன்பிருணமடுவினிடைவீழ்ந்தான்றவறிவல்லிருள்வா
யன்னவேலைதனதுகுலக்கடவுள்போலுமவிர்சோதிப் [னில்.
பொன்னின்மேனிதான்படைத்தாங்கெழுந்தானெழுந்தபோதுத

வானில்வாணிநின்னிடத்துமாசுகழிந்ததெனவுரைத்த
தானறுதகொழுஞ்சுடர்வேலுரவோனதுகேட்டுளமகிழ்ந்து
தேனறுதமலர்நாறுந்தீர்த்தமதனைக்கைதொழுது
பானிலாவெண்ணீறணிந்துபரமன்றிருவஞ்செழுத்தோதி. (உச)

தேவர்போற்றும்புற்றிடத்துத்தேவைத்தொழுதுவிடைகொண்டு
மேவியேதன்றிருநகரில்வேந்தன்மைந்தன்பிரசேனன்
காவல்பூண்டுபுவியளிப்பான்கதிர்மாமகுடங்கவித்தருளிப்
பூவின்மாதுதவம்புரியும்புரத்தின்மீண்டுபுக்கனனால். (உரு)

புக்குவணங்கிப்புற்றிடத்துப்புனிதன்றன்னைப்பூசித்து
மைக்கொள்பாவமாசகற்றிமணிப்பொன்யாக்கைதனக்களித்த
மிக்கவாவித்தடங்கரையில்விமலன்றிருத்தாண்மனத்திருத்தித்
தக்கதவம்பூண்டுறைந்தேபின்முத்தியடைந்தானூர்வேந்தன். ()

வாவியதன்பால்விதிமுறையின்வளரும்பக்கச்சதுர்த்தசியின்
மேவிமூழ்கிப்புற்றிடங்கொள்விமலற்போற்றில்வேதியர்த
மாவிவாட்டும்பவமுதலாம்பவங்களழியுமழியாத
தேவதேவன்றிருவடிக்கீழ்த்திருவுமெய்துஞ்செழுந்தவத்தீர். (உஎ)

பிரமன்யாகம்புரிதருமிப்பிறங்குசீர்த்திக்கமலைமலர்
வரமன்பிருணகுண்டத்தின்வண்மையதனைவகுப்போருஞ்
சிரமணீங்கியன்பேய்ந்துசெவியிலேற்குஞ்செல்வர்களும்
பரமன்வேதியர்க்கொன்றபாவநீங்கிவாழ்வுறுவார். (௨௮)

பிருணகுண்டச்சருக்க முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - ௧௮௨௧

---

## கயாசிரசுதீர்த்தச்சருக்கம்.

---

கலிநலியாமாநகரிற்கலைமறையீர்கயாசிரசென்
றுலகுபுகழொருதீர்த்தமுளதந்தத்தடம்படிந்தோர்
மெலிவடையாருறுபிணியாமெய்யொழியான்மிகுபாவந்
தொலையமுனிந்தெஞ்ஞான்றுந்தொலையாதவளம்பெறுவார். (௧)

வேறு.

உரைதருதடத்தின்பாங்கரொப்பருஞ்சிராத்தஞ்செய்யி
லிருளறுதவத்தின்மிக்கீரியலபுதீர்மரணமுற்றோர்
புரைபடுவினையினீங்கிப்பொன்னுலகெய்தித்தெய்வத்
தெரிவையாதங்கள்கொங்கைச்செழுந்தடந்திளைத்துவாழ்வார். (௨)

மடிந்தவரங்கமந்தமாமணிநீரினுய்த்தாற்
றொடர்ந்ததீவினையினீங்கித்தொல்லைவானுலகில்வாழ்க்கை
யடைந்துகந்தருவர்சூழ்ந்தாங்கமுதுறழ்கீதம்பாட
மிடைந்தபூந்தருவினீழல்வீற்றினிதிருப்பரன்றே. (௩)

வண்ணவொண்கமலத்தேவும்வகுப்பருஞ்சிறப்பின்மிக்க
கண்ணெகிழ்போதுநாறுங்கயாசிரசென்னுந்தொல்பே
ரண்ணலந்தீர்த்தக்காதையளவிலவற்றுளொன்று
புண்ணியமுனிவீர்கேண்மின்வந்தவாபுகலலுற்றாம். (௪)

சேணுறுதேயமெய்திச்செழுநிதியீட்டிச்சில்லோர்
வாணிகர்சுரத்தினூடுவந்தனரொருவனங்கு
நீணெறிவிலங்கிச்சென்றோர்நீள்வனத்திடையிற்புக்கான்
காணுறுகதிரோன்மேலைக்கருங்கடலிடையிற்புக்கான். (௫)

வெருவருமடவிநாப்பண்வெம்பசியுழந்துவாடி
யொருவனுயாமந்தன்னிலுறைந்தனனுறைந்தகாலே
யெரிபுரைமணிகள்வில்விட்டிருள்கெடவிமைக்குஞ்செம்பொன்
வரைபுரைமாடமொன்றுமற்றவண்வயங்கக்கண்டான். (சு)

கண்டலுமிறும்பூதெய்திக்கருத்திடையச்சங்கூர்ந்து
சேண்டொடநிவந்தமாடமருங்குறச்சென்றபோது
பூண்டகுபொற்பிற்றெய்வப்பூவையராடல்செய்யப்
பாண்டகுகுரல்யாழ்வீணைக்கின்னரர்பல்லோர்பாட. (எ)

பல்வகைத்தானைசுற்றப்பாவையர்கவரிவீச
நல்லெழிலரசர்பல்லோர்ஞாங்கரிற்சூழநாப்ப
ணெல்வளர்மணிப்பொற்பீடத்திலங்குதேவுருவத்தோடுஞ்
செல்வவேந்தொருவன்வைகத்தெரிந்தவன்முன்னர்ச்சென்றான். ()

வேறு.

சென்றுகண்டுதன்செயன்முறைமுழுவதுஞ்செப்பி
நின்றகாலையிலஞ்சலென்றருளியேநிருபன்
மன்றவன்புகூர்ந்தமுதுணவழங்கிமற்றாங்கோர்
துன்றியாணரொண்மாளிகைத்துயில்கொளச்செய்தான். (கூ)

துயிலமர்ந்துழித்தோன்றினன்சுடரவன்றுயிலு
மயர்வுநீங்கியாங்கெழுந்தனனெழுந்ததோரளவி
லுயர்செய்பொன்மணிமாளிகையொல்லையிலொளித்த
தியலுநல்லறமில்லவர்பெருந்திருவென்ன. (க0)

மாயமாமணிமாளிகைமறைதலுநோக்கி
யேயசெல்வமோடரசையும்யாரையுங்காணு
ணுயவன்பெரிதற்புதமெய்தினனஞ்சி
மேயினனவண்வெய்யவன்குடகடல்வீழ்ந்தான். (கக)

வீழ்ந்தவேலையின்முன்னையிற்றிருவொடும்விளங்கி
வாழ்ந்தவேந்தனையடைந்தனன்மாயமீதென்கொல்
சூழ்ந்தவார்கழற்காவிஞய்சொல்லெனத்தொழுது
தாழ்ந்துகேட்டனன்மன்னவனின்னணஞ்சாற்றும். (கஉ)

யானருத்ததேசாதிபன்சுகையனென்றறையு
மானவேந்தன்யான்றொல்லைநாண்மாற்றலர்வாட்டத்
தானையோடிவண்மடிந்தனனென்றலைமண்டை
யூனகன்றவெள்ளோட்டினையோகிமற்றொருவன். (கங)

ஏடுத்தனன்கொணர்ந்தேகியேபராசத்தியெல்லை
யடுத்துமற்றவன்கயாசிரசென்றுலகறையுந்
தடத்தின்மாமருங்காசிரமஞ்சமைத்தந்த
மடுத்தயங்குநீர்மற்றதின்மொண்டனன்வைத்து. (கச)

வேறு.

இருந்தவன்மற்றவெடுத்தவப்புனல்கொண்டிராப்பொழுதிழை
த்திடுநியமம், திருந்தவேசெய்துமிஞ்சுநீர்கங்குறீர்ந்துழியகற்றியிவ்
வாறு, புரிந்தவனுளும்வைகினனன்றைப்புரியுமத்திறத்தினன்மா
லை, வருந்தொறுமிவ்வாறுறைந்துவானிரவிவந்துழியலகையாய்வ
திவன். (கரு)

என்றிவையியம்பிப்பின்னருமவனை யெதிருறநோக்கிநீயவன்
பாற், சென்றுமற்றதனைவாங்கிநுண்டுகளாச் செய்துறைசெய்தவத்
தீர்த்த, மன்றனீர்மடுவிலுய்த்திடிலென்றும்வான்பதமருவுவனென்
று, வென்றிவேலரசன்விளம்பிவேண்டுதலும் விளம்பியபடியவன்
புரிந்தான். (கசு)

புரிந்ததோரளவிற்புரவலன்றெய்வப் பொங்கொளிமேனியிற்
பொலிந்து, நிரந்தபன்மணிகொண்மானமூர்ந்தவனை நேர்ந்தனன்
முகமன்கணிகழ்த்தி, வரம்பலவழங்கிவான்பதமடைந்துவளங்கெ
ழுவாழ்வொடுமல்கி, யரம்பையர்கனிவாயாரமுதருந்தியமர்ந்துவீற்
றிருந்தனனம்மா. (கஎ)

பன்னரும்வரங்கள்பற்பலவழங்கிப்பார்த்திபன்பைம்பொனு
டடைந்த, பின்னர்மற்றின்னோனன்னதோர்தீர்த்தப்பெரும்புனல்ப
டிந்துமற்றதன்பாற், பொன்னொளியிலிங்கந்தாபனஞ்செய்துபூசை
செய்திறைஞ்சியேபன்னுண், மன்னியபாசவலையறுத்தமலவாழ்வு
பெற்றுய்ந்தனன்மாதோ. (கஅ)

அறைந்தவத்தீர்த்தம்படிந்துமற்றதன்பா லமர்ந்தவச்சிவலிங்க
மதனைச், சிறந்தருளன்பினொருமுறைவணங்கித்தெரிசனஞ்செய்தி
டிற்கோடி, பிறந்தைவெம்பாவம்பெயர்ந்திடும்பெயராப்பெருந்திரு
வெய்திடும்பிறழா, நிறைந்தபேரின்பச்சிவபதங்கிடைக்குநிகர்தவிர்
நிலைதருதவத்தீர். (ககூ)

புண்ணியமுனிவீர்கயாசிரசென்னப் புகன்றவப்புனன்மடுக்க
ரையி, லண்ணலஞ்சிவனுக்கன்புசான்றுடைய வருந்தவர்க்கோதன
மளிப்போ, ரெண்ணருங்கற்பஞ்சிவபதந்தன்னி லெய்தியேயினித

மர்ந்தாங்கு, நண்ணரும்புனிதநலங்கெழுமுத்திநண்ணிவீற்றிருப்ப ரெந்நாளும். (உ0)

கன்னிவாழ்சத்திபுரமெனக்கரையுமிப்பதிதன்னிடைக்கவின, மன்னிடுமேன்மைக்கயாசிரசென்னும் வண்பெயர்த்தீர்த்தநன்மகிமை, சொன்னவரதனைச்செவியினிலேற்றோர் துயருறுகடிப்பவமக ன்றுங், இன்னநீரின்பயாக்கைபெற்றேகியீசனதுலகிடையிருப்பார்.

கயாசிரசுதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - க௭0.

## பரசிராமதீர்த்தச்சருக்கம்.

பொன்றிகழ்மதிலாரூரிற்புகழ்பரசிராமதீர்த்த
மென்றுலகங்களெல்லாமெடுத்தினிதிசைக்குந்தீர்த்த
மொன்றுளதொருகாற்றேய்ந்தோரும்பர்கோனுதனத்திற்
சென்றுடனுறைவர்செல்வத்தெய்வமாதவத்தின்மிக்கீர். (க)

பாசவெவ்வினைகடந்துபடிதவிர்பரமானந்த
வாசறுவின்பவீட்டிலடைகுவர்மூன்றுபோது
தேசுறுமனையதெய்வச்செழுந்தடம்படிந்தோரந்த
மாசறுதீர்த்தந்தொன்னாள்வந்தவாறறைவன்மன்னே. (உ)

மலைகெழுமருவியென்னமதங்கொண்மால்யானைமன்னன்
கலைகெழுமறிவின்மிக்கான்கதிரவன்குலத்திற்றோன்றல்
சிலைகெழுவெய்யதானைச்சேரலர்மார்பமூழ்கி
யலைகெழுகுருதிமூழ்குமஞ்சுடராடல்வேலான். (௩)

ஆயிரந்தடந்தோள்கொண்டவருச்சுனனறத்தினோடு
மாயிரும்புவனங்காத்துவைகுநாள்வலங்கொள்வாகைக்
காயிருந்தானைசூழக்கடுங்கொலைவிலங்குமாய்ப்பான்
வேயிருஞ்சாரற்குன்றமிடைந்தபேரடவிபுக்கான். (௪)

அடவிபுக்காற்றிவேட்டையழலுறமுச்சிவேலை
மிடைபெருந்தானையோடும்வேனிலால்வெம்பிவைய
முடையவன்முனிவர்தம்மிலுயர்சமதக்கினிப்பேர்ப்
படிமையோன்விரதநோன்புபயிலுமாசிரமம்போந்தான். (௫)

போந்துபோற்றலுமுனிவர்கோன்பொங்கழல்வடிவேல்
வேந்தர்வேந்தனையுபசரித்தினியவைவிளம்பி
வாய்ந்ததன்பெருஞ்சுரபியையழைத்துமன்னவற்கு
மேய்ந்ததானைக்கும்விருந்தினையீந்ததோமொல்லை. (௬)

அரசனற்புதமெய்தியேயருந்தவற்பணிந்து
சுரபிமற்றிதுதருமெனப்பன்முறைதொழுது
பரவிவேண்டலும்வேள்வியைவளர்க்குமிப்பசுவை
நிருபகேட்பதுதருமமன்றெனநிகழ்த்தினால் (௭)

தருமமன்றெனச்சாற்றியேமறுத்துழித்தருமப்
பொருவினூன்முறைதெரிந்தசெங்கோலுடைப்புனித
வரசனந்தணற்கிற்றினைவிளைத்தனனந்தோ
கருதரும்விதிவலியினையாவரோகடப்பார். (௮)

வேதமாமுனிக்கிற்றினைவிளைத்தழல்வேந்தன்
காதுவேற்படைமறவர்வெங்கரிபரிசுற்றத்
தீதுதீர்தனிச்சுரபியைப்பற்றுவான்செறிந்த
போதுதந்ததாலெண்ணிலாப்பொருபடைவெள்ளம். (௯)

எண்ணில்பல்வகைத்தானையையிமைப்பினிலீந்தே
யண்ணல்வேந்தர்கோனடிபடைத்தொகுதிகளனைத்துந்
துண்ணெனத்தொலைத்தகன்றதுசுரபியாங்கமைச்சர்
வண்ணவாட்படைமன்னவற்கினையனவகுப்பார். (௧௦)

அறத்திினீங்கியேயந்தணனுருயிர்சிந்துந்
திறத்திினின்வலிசிதைந்ததுநினதுபாற்றேசு
புறத்துநீங்கியேபோயதுன்பொலஞ்சுடர்மேனி
கறுத்ததிவ்விடைநிற்பதுகருமமதன்றால். (௧௧)

எனமொழிந்துழியிறைவனுங்கிமைப்பினிலகன்று
தனதுமாநகர்சார்ந்தனன்பின்னரோசார்ந்தா
னினியதாதைதன்பூசனைக்கேற்றனகொணர்ந்து
துனைவினுயிடைமழுவுடையிராமனுந்தோன்றல். (௧௨)

தோன்றலாயிடைநிகழ்ந்தனகேட்டனன்றுளங்கிக
கான்றுகண்புனல்சிந்திடக்கவன்றழுதிரங்கி
மான்றுதேறியேமற்றவண்மடிந்ததாதைக்குச்
சான்றதொல்கடன்றருப்பணந்துனைவராற்றந்தான். (௧௩)

தந்துபின்னர்நற்றாதையைத்தடிந்தவனுதிரச்
செந்தணீரினாற்றருப்பணமுன்னரேசெய்யா
வந்தவெய்யவனுதித்திடுமரசர்மாகுலத்தைச்
சிந்திமூவெழுதலைமுறைசெழுங்குருதியினால். (௧௪)

பின்னராற்றுவன்றருப்பணமெனச்சினம்பிடித்தே
யன்னதொல்பசுவளித்தவெம்படையுடனகன்று
பொன்னுலாவுவேலறுமுகன்சூரொடுபொருதாங்
கொன்னலன்றனையெதிர்ந்தனனுறுசமர்புரிந்தான். (௧௫)

புரிந்தவெல்லையிற்புகலியிற்பிள்ளையோடெதிர்ந்து
வரங்கொணீறிடார்வாதுசெய்துழியவர்மனங்கொள்
விரிந்தகல்வியன்றுதவுறுத்தன்மைபோல்வேந்தன்
றெரிந்தபல்படைவிஞ்சைகளுதவிலசிறிதும். (௧௬)

மந்தரம்புரையாயிரந்தோளடலவலியுஞ்
சிந்திமாண்டதுவீரமுஞ்சிதைந்ததுசிதையா
முந்துபெற்றபல்வரங்களுமுடிந்தனமுனிவர்க்
கந்தமாற்றினேர்க்குதவியொன்றுண்டுகொலறையில. (௧௭)

ஒளியின்ஞாயிறுபோலநின்றுறுசமர்புரிந்த
மிளிர்நிலாவுமிழ்வேலினன்றனைவிரைக்கொன்றை
யளிகொடாரினனளித்தபோர்மழுப்படையதனால்
வளருமாண்புகழிராமனுங்கெறிந்துயிர்வதைத்தான். (௧௮)

வதைத்துமற்றவன்குருதிநீர்வாரியைக்கொணர்ந்து
நதிக்கொழுஞ்சடைநாயகன்கமலைமாநகரப்
பதிக்கணோர்மடுத்தந்ததிற்பெய்துநூலபகரும்
விதித்திறத்தொடுமூழ்கினன்வீரரில்வீரன். (௧௯)

ஈந்தனன்பிதிர்தருப்பணமிம்முறையிதன்பால்
வேந்தர்தங்களைமூவெழுமுறையுயிர்வீட்டிச்
சேந்தசோரிநீர்பெய்தனன்றருப்பணஞ்செய்தா
னேய்ந்தபோர்மழுவாண்டகைதன்மையாரிசைப்பார் (௨௦)

வேறு.

இன்னணமிராமனங்கிழைத்தவெல்லையி
லன்னவன்கனவிடையவனைத்தந்ததோர்
பன்னருமறைமுனிபரிவிற்றோன்றியே
முன்னுறவெதிர்ந்திவைமொழிதன்மேயினான் (௨௧)

செயற்கருஞ்செய்கைநீசெய்துமுற்றிய
வியற்கையான்மகிழ்ந்தனமுத்தியெய்தினம்
வியப்பவர்யாவர்நின்வீரத்தன்மையை
வயப்படையரசரைவாட்டன்மாற்றினி. (உ௨)

பந்திசேர்பன்மணிப்பாந்தள்வேய்ந்ததோ
ளிந்துசேகரனருண்முழுதுமெய்தியே
மைந்தநீயூழிதோறூழிவாழியென்
றந்தமில்கருணையாலாசிகூறினான். (உ௩)

கூறியதுணர்ந்தெழீஇக்குளிர்ந்துநெஞ்சக
மாறினான்சினத்தழலாற்றினான்றுயர்
மாறிடாவுவகையாம்வாரிமூழ்கினா
னீறிலாவிசைமழுவிராமனென்பவே. (உ௪)

மூன்றிரும்புவனமுமுடிவின்றோங்கவே
தோன்றியோர்புற்றிடையமர்ந்தசோதியைத்
தேன்றிகழ்மலரினாற்பூசைசெய்தனன்
றான்புரிதவவனஞ்சார்ந்துவைகினான். (உ௫)

வேறு.

காரணமிவற்றினாலேகருதருமாதவத்தீர்
சீர்திகழ்பரசிராமதீர்த்தமாந்திருப்பேரந்த
வேர்திகழ்வாவிபெற்றதியம்பியவனையதெய்வ
நீர்படிந்தாடினோர்க்குநேரலர்புறங்கொடுப்பார். (உ௬)

பூத்ததேம்போதுநாறும்புனைதவிர்பரசிராம
தீர்த்தநீர்விதியின்மூழ்கிச்சிறப்பொடுசிராத்தஞ்செய்யின்
மாத்தவங்கலையின்மிசைகீர்மாசறுமிதன்புலத்தார்
நீத்தமார்சென்னிமுக்கணிமலனைதுலகஞ்சேர்வார். (உ௭)

விரைசெறிசோலைசுற்றவிளங்கிடுமாரூர்மேய
பரசிராமப்பேர்த்தீர்த்தப்பாங்கினைப்பகர்வோர்கேட்போர்
முரசதிர்தானைசூழமுரணியபகைவர்க்கொன்று
பரசுதென்புலத்தாரோடும்பரமனைதுலகில்வாழ்வார். (உ௮)

பரசிராமதீர்த்தச்சருக்கமுற்றிற்று

ஆ திருவிருத்தம் - ௧௮௭௮.

## ஆன்றகிய தீர்த்தச் சருக்கம்.

திகழ்தருமான்றகிய தீர்த்தமென் றுலகமெல்லாம்
புகழ்தருதீர்த்தமொன் றுபொலிதருமாரூர்வைப்பின்
மிகுதருமுனிவீரந்தமேதகுதீர்த்தநோக்கிற்
றொகையறுபாவகோடி துன்னெனத்தொலைந்துநீங்கும். (க)

சாற்றுமத்தீர்த்தமூழ்கித்தராபதியொருவன்முன்னாண்
மாற்றரும்வரைவில்பாவவரையை நுண்டுகளதாக்கி
யேற்றமாம்பிரமலோகத்தெய்தியகாதைசொல்வன்
கூற்றுயிர்குடித்தபொற்றாட்கொற்றவனருளினாலே. (உ)

மன்னுவானருத்ததேயமன்னவன்சுவேதனென்பா
னிங்கிலமுறையினோம்பியிருந்தனனிருக்குநாளின்
முன்னையூழ்முறையினாலேமுறையினைவிடுத்துப்பார்மேற்
றுன்னியகுடிகட்கெல்லாந்துயர்பெரிதாற்றினானே. (ங)

துயர்பெரிதாற்றியன்னார்தொல்பொருண்முழுதும்வவ்வி
யுயர்தவவறிவின்மேலோர்க்கூறுசெய்தறனழித்தாங்
கயன்மனைவிழைந்துதேவராலயப்பொருள்கவர்ந்து
மபல்கெழுவேடர்தம்மின்வன்கொலைபலவிழைத்தான். (ச)

கரவுசெய்தாறலைத்துங்கனலெரியில்லமூட்டிப்
பொருள்பலகவர்ந்துமீசன்பூசனைகுறைத்துநல்லோ
ருரையினைவெறுத்துந்தீயோருரையினையுகந்துமிவ்வா
றரசன்வெம்பாவகோடிமுழுவதுமாற்றினானால். (ரு)

ஆற்றியவெய்யபாவத்தரசர்கோன்விழிமறைந்தாங்
காற்றரும்பிணிகள்யாவுமடைந்தனனடைந்தகாலை
யாற்றல்சாலமைச்சர்மைந்தராதியர்வெறுத்துநீத்தா
ராற்றவுமின்னலெய்தியாரழல்வனத்திலுற்றான். (சு)

ஆரழல்வனத்திலுற்றாங்கழற்பசியுடற்றவாடிச்
சார்தருபிணியாற்பன்னாட்சாலவும்வருத்தமெய்தி
யோர்பகன்முன்னாட்செய்தவுயரறமுய்ப்பப்போந்தா
ரூரடைந்தான்றகியதீர்த்தத்தினூடுதோய்ந்தான். (எ)

தோய்ந்தொருகால்வந்தஞ்சுடரொளியாக்கைபெற்று
வாய்ந்தபொன்மானமூர்ந்துமன்னவனையனூர்புக்கான்
பாய்ந்தநீரனையவாவிபடிந்தவர்மூன்றுபோது
தேய்ந்தவெண்டிங்கள்வேணிச்சிவனடிநீழல்சேர்வார். (அ)

ஆன்றகீயப்பேர்த்திர்த்தவரியசீர்செப்பினோர்கள்
கான்றபேரன்பினோடுகருத்துறகேட்கலுற்றோர்
சான்றசீர்மானமேறிச்சதமகனூரின்வாழ்ந்து
தேன்றதும்பியநற்கொன்றைச்செஎனியான்பதத்தைச்சேர்வார். ()

ஆன்றகீயதீர்த்தசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅஅஎ

## சத்தமாதர் தீர்த்தச்சருக்கம்.

மைத்தவிர்ந்தமாமுதுக்குறைமாதவமுனிவீ
ரித்தலத்தினிலுளதென்பவுலகெலாமேத்துஞ்
சத்தகன்னியர்தந்ததோரதடமலர்ப்பொய்கை
யத்தடத்தினைநோக்குமுன்பவமெலாமகலும். (க)

வழுவில்கேள்விசான்மாதவமுனிவிர்மற்றொருநாண்
முழுகில்வெவ்வியகுட்டநோய்முயலகன்முடைகொ
ளழுகுநோய்முதலகன்றிடுமந்தணர்க்கொன்ற
பழியொழிந்திடுமூன்றுநாளத்தடம்படியில். (உ)

மட்டலர்ந்தமாமலர்செறிவாவிமற்றதன்பா
லெட்டெனும்பொழுதாடிடிலெட்டருந்தவத்தீ
ரட்டசித்தியாய்கெய்திடுந்திங்களொன்றாடிற்
கிட்டருந்தனிப்பேரின்பவாழ்க்கைதான்கிட்டும். (ங)

ஊழிபேரினுமொழிந்திடாவொப்பருந்தவத்தீ
ராழிஞாலமுமறங்களுமமரர்தமுலகும்
வாழவன்னதொல்வாவியின்வடபுலத்தந்த
வேழுமாதரும்வீற்றினிதிருப்பரொன்றான்றும். (ச)

அனையமாதர்தந்திருவுருநோக்கியேயன்பா
லினிதசூழ்ந்தெதிர்தாழ்ந்தெழுந்தேத்துதல்செய்யின்

முனிவர்தங்களின்மேதகுமூதுணர்முனிவீர்
மனநினைந்தனயாவையுமெய்திடும்வாய்மை. (௫)

மாதராரவர்வாழுமவ்வெல்லையின்வடபாற்
றீதிலாவிசுவாதிகனெனும்பெயர்த்தெய்வ
வாதியானசிவலிங்கமொன்றமர்ந்திடுமந்தச்
சோதிமூர்த்தியைத்தொழுதிடிற்பவமெலாந்தொலையும். (௬)

சத்தமாதர்தஞ்சரித்திரஞ்சாற்றிடுநாவர்
சுத்தவன்பொடுதோய்வுறக்கேட்டசோத்திரத்தோர்
வித்தகத்துறுமனநினைசித்திவேறனைத்து
மெத்தவெய்தியேபவமெலாம்வீட்டுவர்மெய்ம்மை. (௭)

சத்தமாதாதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௯௬௪

## கௌமாரிதீர்த்தச்சருக்கம்.

தவநோன்புவேதவேள்வித்தன்மையிற்றலைமைசான்ற
வவம்பாவுமகன்றதொல்லைமுனிவிர்காளாரூர்வைப்பிற்
கவுமாரிதீர்த்தமென்றோர்காமருதீர்த்தமுண்டு
பவம்யாவுமகற்றுமந்தப்பைந்தடத்தீர்த்தமம்மா. (௧)

கழறுமத்தீர்த்தமோரேழ்கன்னியர்தம்மிற்றெய்வ
வெழில்வளர்கௌமாரிப்பேரோந்திழையிழைத்ததந்தப்
பழிதவிர்தீர்த்தமோர்காற்பார்த்தவர்நிரயம்பாரா
ரொழுகுதேந்தருவினீழலுகந்தினிதுறைவரன்றே. (௨)

ஆவணித்திங்களெய்தும்பூரணையவிட்டந்தன்னின்
மேவியப்புனிததீர்த்தம்விதிமுறைமூழ்கினோர்கள்
பாவமாம்படலநீக்கிப்பணிமதிச்சென்னிமுக்கட்
டேவனற்றிருத்தாணீழல்சேர்ந்துவீற்றிருப்பர்மாதோ. (௩)

படிமையீரனையதீர்த்தப்பாங்கரிற்பகர்ந்ததெய்வ
மடவாலவள்பூசித்தமாசிவலிங்கமொன்றுண்
டொடிவறுமன்பினந்தமூர்த்தியையொருகாற்போற்றின்
முடிவறுபவங்கள்யாவுமுடிந்திடுமுத்தியெய்தும். (௪)

கோதுசேர்கலிசெலாதகுணமுடையிப்புரத்தின்
மேதகுகௌமாரிப்பேர்த்தீர்த்தநீர்விரித்துரைப்போர்
தீதுபாறத்தரிப்போர்தெவ்வுசெய்பவமகற்றி
மாதவராகியீசன்வான்பதமன்னுவாரால். (௯)

கௌமாரிதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅகக.

ர்க்கண்டதீர்த்தச்சருக்கம்·

வரைவறுதவத்தின்மிக்கீர்மார்க்கண்டதீர்த்தமென்றே
யிருநிலம்புகழுந்தீர்த்தமொன்றுளதிசர்வாழும்
புரைதவிராரூர்தன்னிற்புகன்றவத்தடத்தையோர்காற்
றெரிசனஞ்செய்யிற்கோடிதீயவெம்பாவஞ்சிந்தும். (க)

இருடிகாளந்தத்தீர்த்தமிருளுறைகண்டத்தெந்தை
யருளினாற்கூற்றைவென்றவருந்தவமார்க்கண்டப்பேர்த்
திருமுனிதந்ததாகுஞ்செப்புமத்தீர்த்தத்தோர்காற்
பரிவொடுமூழ்கிற்கோடிபிறப்பினிற்பாவம்பாறும். (உ)

ஆர்த்ததெண்டிரைநீர்க்கங்கையலம்பியசடிலத்தெண்டோண்
மூர்த்தியைநெஞ்சில்வைத்தமுழுதுணர்மாதவத்தீர்
கார்த்திகைத்திங்களெய்துங்கார்த்திகைநாளிலந்தத்
தீர்த்தமதடைந்துமேலோர்செப்பியவிதிவழாமல். (ஙு)

மறையவர்மூழ்கிற்செம்பொன்மாமணிவயிரப்பத்தி
யெறிசுடரிமைக்குங்காமரிணைதவிர்விமானமேறி
நறைகமழ்செவ்வித்தோட்டுநளினமாமலர்மேல்வைகு
மிறையவன்பதத்திலெய்தியிருந்துபின்முத்தியெய்வார். (ச)

சூத்திரர்படிந்துமூழ்கிற்றொல்படைமதனைக்காய்ந்த
நேத்திரங்கொண்டநெற்றிநிமலன்பாலன்புசான்ற
சாத்திரம்வடித்தகேள்வித்தவத்துயர்சிறப்பின்மேலாய்
கோத்திரமறையோராகிக்குறுகுவரமரர்நாட்டில். (ஞ)

ஈசனையெம்மையாளுமிறைவனையருச்சித்தேத்து
நேசமாமுனிவீர்செம்பொனிரையிதழ்முளரிநாறும்

வாசமார்தெய்வநன்னீர்மார்க்கண்டதீர்த்தந்தன்னைப்
பேசினுமொருகானூறுபிறப்பில்வெம்பாவநீங்கும். (௬)

புரைதவிர்மார்க்கண்டப்பேர்ப்புனிதீர்த்தப்புகழ்ச்சி
யுரைசெய்வார்செவியேற்பார்களூனுற்றியபாவங்கோடி
கரையிருள்கதிர்முன்போலக்கண்டுபொற்கனமெய்தி
நிரைநிரைபோகந்துய்த்துநின்மலன்பதத்தினெய்வார். (எ)

மார்க்கண்ட தீர்த்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௧௦௬

---

## உருவதீர்த்தச்சருக்கம்.

ஆரியமாதவக்கிழமைசாலமலமாமுனிவீ
ருருவதீர்த்தமென்றுலகெலாமுரைக்குமோர்தீர்த்த
மருவுமித்தலத்தன்னதோர்தீர்த்தமான்மியத்தைச்
சுருதிநான்முகன்பற்பகலசொல்லினுந்தொலையா. (௧)

வெண்ணிலாமதிமிலைச்சியவிரிசடைக்கற்றை
யண்ணலாயிழைபங்கனதடிநறுங்கமல
முண்ணிலாவியமுனிவிரத்தடத்தினிலொருகாற்
கண்ணிலாதவர்மூழ்கிடிற்கண்மலரெய்தும். (௨)

தீக்கொடும்புலவேடரைமுருக்கியதிண்மைப்
போக்கின்மாதவமுனிவிர்காள்செவியிலார்புகலு
நாக்கிலாதவர்மூழ்கிடினவின்றவையெய்து
மூக்கிலாதவர்மூழ்கிடின்மூக்குடனெய்தும். (௩)

கரமிழந்தவர்மூழ்கிடிற்கரமலரெய்துஞ்
சரணமில்லவர்மூழ்கிடிற்சரணமங்கெய்து
மரியமாதவமுனிவிரிக்காரணமதனு
லுருவதீர்த்தமென்றுரைத்ததத்தடத்தைமூதுலகம். (௪)

ஆன்றவேதநூன்முதற்கலையாய்ந்தமூதறிவு
சான்றமாதவமுனிவிர்காள்சாற்றுமத்தடத்து
மூன்றுநாண்முறைமூழ்கினோர்பவமெலாமுருக்கி
மூன்றயங்குகைவானவனடிநிழல்வாழ்வார். (௫)

உருவதீர்த்தமாமகிமைகளோதிடுநல்லோர்
பொருவிலாதபேரன்பொடுகேட்குநர்புதரா
யொருவலின்றியெங்கணுமுறையுமாபதிபாத
மருவுமின்பவாரிதியினின்மன்னுவாழ்வுறுவார். (௬)

உருவதீர்த்தசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம - ககூகஉ

---

## அக்கினிதீர்த்தச்சருக்கம்.

மைக்கருங்கண்டராரூர்மாநகர்வடகீழ்ப்பாங்க
ரக்கினிதீர்த்தமென்றேயமபுவிமுழுதுமேத்து
மிகமர்தீர்த்தமொன்றுவிளங்குமத்தீர்த்தமேன்மை
தககதோரனந்தற்கேனுஞ்சாற்றுதலரிதுமாதோ. (க)

வேறு.

மையன்மாசிருணீங்கியமாதவிர்
துய்யவத்தடந்தோய்ந்திடிற்சூலைநோய்
வெய்யகுட்டமுதலியவெம்பிணி
செய்யதீப்படுபஞ்சிற்சிதையுமால. (உ)

கரியநெட்டுடற்பேயின்கணத்தொகை
மருள்செய்பூதம்வயங்கெழுசிற்றத்து
முரண்மறங்கொண்முயலகனுதிய
வெருவியொல்லையில்விட்டகன்றேகுமால. (௩)

குருடருமர்செவிடர்குறளர்கூ
னுருவர்தாமுதலூனருமொப்பிலா
வரியவத்தடமாடிலவ்வூனநீத்
திரவிவெஃகுமெழில்பெறறிலங்குவார். (௪)

எண்ணில்பல்வகைப்பாவமெனைத்தையும்
பண்ணினோருமப்பைந்தடமாடிடிற்
புண்ணியம்பலகோடிபுரிந்தவர்
நண்ணுகின்றசிவகதிநண்ணுவார். (௫)

திதிலக்கினிதீர்த்தச்சிறப்பினை
யோதுகின்றவருண்மையிற்கேட்குநர்
காதுசூலைகயமுதனேய்குரு
டாதியூனமகன்றுலகாள்வரே. (சா)

அக்கினிதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவித்தம் - கசுகஅ.

## விண்டுபததீர்த்தச்சருக்கம்.

வென்றிவிடைக்கொடிவிமலனூர்மேல்பால்
விண்டுபதமென்றுலகம்விளம்புந்தீர்த்த
மொன்றுளதுமுனிவீர்காளனையதீர்த்தத்
துயர்பெருமையுரைப்பரிதாலுரைத்தவாவி
மன்றனறும்புனலொருகான்மரபின்மூழ்கின்
மதுநுகர்ந்தமாபாவமடியுநன்றி
கொன்றகொடும்பாதகமுநம்பினோைக்
கொன்றகொலைப்பாதகமுங்குலைந்துநீங்கும். (க)

அரியமறைநூலுணர்ந்தவந்தணாள
ராவியடும்பாதகமுமமுதத்தீஞ்சொற்
றெரிவையரைச்சேதாவைச்சிறுவர்தம்மைச்
செகுத்தகொடும்பாதகமுந்தேசுசான்ற
வுரிமைதருகோமானைச்சுற்றத்தோரை
யொறுத்தபெரும்பாதகமுமுரைத்தவந்த
விரைகமழும்புதியமலர்வாவிமூழ்கில்
விண்டகலுமிஃதுண்மைமெய்த்தவத்தீர். (உ)

வேறு.

பாதிவெண்மதிபுனைந்தபரமன்றாண்மனத்துட்கொண்ட
மாதவமுனிவீரந்தமலர்ப்பெருந்தடத்தின்மூன்று
போதினிதாடினோர்கள்பொருதிரையாழிமுந்நீர்
மேதினிமுழுதுங்காக்குமிகுபுகழ்வேந்தராவார். (ங)

மந்திரவேதநன்னூல்வடித்தநற்கேள்விசான்ற
வந்தணீரிந்தவாவியையிருதினம்படிந்தோ
ரிந்திரபதத்திலெய்தியிளநலங்கனிந்தபொற்பிற்
பைந்தொடியரம்பைமாதர்பணைமுலைதிளைத்துவாழ்வார்.

பொன்பொலிகமலவாசப்புதியவப்பொய்கையாடி
யன்பொடுசிராத்தமாதியரும்பெறல்விதியினூற்றிற்
றென்புலவாணர்தெய்வச்சிவபதத்தமர்ந்துமேவி
யின்புறவளத்திறேடுமினிதுவீற்றிருப்பரொன்றும். (௯)

இதமுறுஞ்செல்வவாரூர்த்திருநகர்மேல்பால்விண்டு
பதமெனுமித்தீர்த்தத்தின்பான்மையையெடுத்துரைப்போ
ரிதமுறக்கேட்போர்யாருமியற்றுபாதகங்களைந்து
மதமுறமெய்ஞ்ஞானம்பெற்றடைவர்பேரின்பமாதோ. (௰)

விண்டுபததீர்த்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௬௨௪

---

## சமிச்சிரதீர்த்தச்சருக்கம்.

சேயொடுந்தேவியோடுஞ்செம்பொனூதனத்துவைகு
நாயகன்கோயின்முன்னர்ச்சமிச்சிரதீர்த்தநாமத்
தூயதோர்தடமுண்டந்நீர்தோய்ந்தவர்நிரயந்தோயா
ராயிழையமுதஞ்சாயலரம்பையராகந்தோய்வார். (௧)

தண்ணறும்புதியவாசச்சமிச்சிரதீர்த்தத்தின்பா
னண்ணினுமதனைக்கண்ணனூடினுமொருகானெஞ்சி
லெண்ணினுமினிதுநாவாலேத்தினுமிந்தநன்னீ
ருண்ணினுங்கோடிபாவமொல்லையிலொழியுமம்மா. (௨)

ஆசுதீர்மாசித்திங்களட்டமிதன்னிலிந்த
வாசநீர்மூழ்கிப்புற்றிலாதியில்வந்தெழுந்த
தேசுறுதெய்வஞானச்சிவலிங்கமூர்த்திதன்னை
நேசமோடினிதிறைஞ்சிநெஞ்சகங்கனிந்துபோற்றி. (௩)

இன்னருளிறைவியோடுமிலங்குவேலிளையநம்பி
தன்னொடும்வீரசிங்காதனத்திலெவ்வுலகுமுய்ய
மன்னியேயூழியூழிவாழுநாயகனைவாழ்த்திப்
பொன்னடியிறைஞ்சிச்சூழ்ந்துபோற்றியபுனிதமேலோர். (௪)

இருநிதிக்கிழவன்செல்வத்தெண்ணிருமடங்குகொண்ட
திருவினிற்பொலிந்துமல்கித்திண்புவிபுரந்துபின்னர்த்

தருங்கிழற்செம்பொனாட்டிற்றலைமைசாலரசுதாங்கி
யொருதனிச்சிவலோகத்திலுவந்துவீற்றிருப்பரன்றே. (ரு)

இத்தகுசமிச்சிரப்பேரெய்தியதீர்த்தமேன்மை
யுத்தமச்செவியிலேற்போருயருநாவோதுவோர்கள்
சித்திரங்கிக்கோனென்னச்செல்வமுஞ்சேணுமெய்தும்
புத்தியும்பெற்றுப்பின்னர்ப்புராரிதாள்பகுவரன்றே. (சு)

சமிசசிரதீாத்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௩௩௦.

---

## அகத்தியதீர்த்தச்சருக்கம்.

ஊற்றமாந்தவத்தினிலுயர்ந்தவந்தணீர்
சாற்றியசமிச்சிரதடத்தின்கீழ்த்திசை
மாற்றிலாவாவியொன்றுண்டுமற்றதை
யேற்றமாமகத்தியதீர்த்தமென்பரால. (௧)

அனையதோர்தீர்த்தமொப்பாயதீர்த்தமா
முனிவிர்காண்மூவுலகத்திலிலலையா
னினையினும்பவமெலாநீங்குமந்தநீர்
நனைபவர்பேற்றையார்நவிற்றவல்லரே. (௨)

மெய்த்தவமுனிவிர்காள்விதிவழாமலே
யத்தடமாடியேசிராத்தமாற்றிடின்
மைத்தவிர்தென்புலவாணர்வண்டுளர்
புத்தலரிதழியான்புரத்திலெய்துவார்.. (௩)

வே று.

சித்திரைத்திங்கட்சுக்கிலபக்கத்திகழ்சதுர்த்தசியிலத்தடத்தி
னுத்தமவிதியின்மூழ்கிடிலயுதகோடிவெம்பாதகமொழியுஞ்
சித்திகளனைத்துங்கைவருமேலாஞ்சிவபதங்கிடைத்திடுமழியா
முத்தியுமெளிதினெய்திடும்வாய்மைமூதுரைவேதமாமுனிவீர். ()

பங்குனித்திங்களட்டமிமூழ்கிற் பவமெலாமொழிந்திடுமமுதத், திங்களிற்பொலிந்தசடையினுன்றெய்வத் திருவடிப்பேறினிதெய்தும், பொங்குமத்தீர்த்தம்வந்தவாறுரைப்பன்புகழ்த்தமிழ்மு

னிசிவனருளா, லங்கடற்புவிநேர்நிறுத்துவான்பொதியத்தடையு நாளடைந்தனனுநூர். (கூ)

அடைந்துபுற்றகத்திலெழுந்தபேரொளியையன்பினிற்போற் றியோர்தீர்த்த, நெடுங்கடலுலகமுய்ந்திடவிழைத்து நீடுமத்தீர்த்த நீள்கரையி, னிடந்தனில்லலங்கொண்மழுவினுய்றன்னேயினிதுதா பித்தருச்சனேசெய், துடம்பிடித்தட க்கைநம்பியாணவகனுறைந்தன னுறைதருநாளில். (சு)

மேருமால்வரையோடிகலிநீள்விந்தம்விண்ணொடுடவளர்ந்துவா ன்கதிரோன், றேர்படராதுதடுத்தலுமன்னுன்செந்தமிழ்முனிவனு க்குரைப்பப், பாரகம்புதையப்படுத்தியப்பொருப்பைப்படர்ந்தன ன்மற்றவன்பொதியத், தாரியமுனிவீரவன்பெயரடைந்ததத்தடஞ் சிவலிங்கமதற்கே. (எ)

தனதுதேர்வானிற்படர்ந்திடப்பணித்ததன்மையாலன்றுதொ ட்டாழித், தினகரனந்தச்சித்திரைத்திங்க டிகழ்சதுர்த்தசிவருந் தோறு, முனியவன்பூசைபுரிந்ததோரிலிங்கமூர்த்தியைப்பூசனேபுரி ந்தாங், கினியபேரன்பின்வலங்கொடுசூழ்ந்தேவழிபடுமெண்ணருந் தவத்தீர். (அ)

செங்கதிர்வந்துவலங்கொளுமந்தச் சித்திரைச்சதுர்த்தசிதன் னிற், கொங்கலர்செறிந்தவகத்தியதீர்த்தக்குளிர்புனன்மூழ்கியேயந் தப், பங்கமின்முனிவன்பூசனேபுரிந்த பரஞ்சுடர்மூர்த்தியைத்தொ ழுவோர், வெங்கொடும்பாவயாவையும்விட்டு வீட்டினின்மேவு வர்மெய்ம்மை. (கூ)

மூவுலகாளும்வரமுடைப்பெரியமுசுமுகக்குரங்குமரசன், கா வல்செய்தமர்ந்தகமலைமாநகரிற்கவினுமிவ்வகத்தியதீர்த்தத், தோ வுறுமேன்மைசெப்பினோர்கேட்டோ ருயர்பகையாவையுமொழிந் து, சேவுயர்கொடியான்சிவபுரத்தெய்திச்சின்மயச்செல்வமேசேர் வார். (கo)

அகத்தியதீர்த்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கககூo

---

## கபிலநதிச்சருக்கம்.

தேசுறுமகத்தியதீர்த்தத்தென்றிசை
மாசிலாவொருநதிவயங்குமற்றதை
யாசிலாமுனிவிர்காளங்கண்மாநில
மேசுதீர்கபிலமாநதியென்றேத்துமால். (க)

அந்தமாநதிப்புனலளைந்தெழுந்திடு
மந்தமாருதமதுவந்துமேற்படிற்
சிந்தியேமடிந்திடுஞ்சோடிதீப்பவ
மிந்துசேகரன்றனையெதிர்ந்தகூற்றென. (உ)

ஒருவிசையிந்தநீருடுதோய்ந்திட
வருபயன்வகுக்கொணாதென்னின்மற்றதி
லிருவிசைமூழ்கிடிலெய்துபேற்றினை
யருமறைமுனிவிர்காளளக்கலாகுமே. (௩)

மந்திரமருந்தொடுமணியிற்றீர்ந்திடா
வெந்துயர்ப்பிணிகளும்விளியவீட்டிடு
மந்தமிலாயுளுமறிவுநல்கிடு
மிந்திரன்மாலயன்பதமுமீந்திடும். (௪)

மேன்மைகொளெட்டெனவிளம்புசித்தியு
மூனமின்முத்தியுமுதவுமந்தணீர்
கானறுந்தீம்புனற்கபிலமாநதி
மான்மியம்யாவரோவகுக்கவல்லரோ. (௫)

வேறு.

ஆதிமாதவிர்பண்டைநாட் கபிலனென்றறையும்
வேதமாமுனியப்புனல்விதிமுறைமூழ்கிச்
சோதிநீறணிந்தைம்புலப்பகைதுரந்தீசன்
பாதபங்கயமிதயமென்பங்கயத்திருத்தி. (௬)

ஐந்தெழுத்தினைமரபினிலெண்ணியேயந்தப்
பைந்தண்மாநதிக்கரையினிற்பழுதறுதவஞ்செய்
தெந்தையீசனதருளினாலீறிலாமுனிவ
ரந்தமெய்திடாவட்டமாசித்தியுமடைந்தான். (௭)

இனையதன்மையாற்கபிலமாநதியெனவிசைக்கும்
புனிதநாமமப்பூம்புனற்கடைந்ததுபுரைதீர்
முனிவிரந்தமாநதிப்பெருந்தன்மையைமுக்க
ணனகனன்றியேயாவர்க்குமறைந்திடலரிதால். (அ

இந்தமேன்மைசால்கபிலமாநதியிசைகேட்போர்
முந்துமன்பொடுபடிப்பவர்மூதுலகளிற்றே
யந்தமெய்திடாச்சித்திகளனைத்தையுமடைந்து
பந்தநீங்கியேபரமன்வாழ்பதமடைகுவரால். (௯

கபிலநதிச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௯௪௯.

## சர்வதீர்த்தச்சருக்கம்.

ஆதிநாளினில்வானகநீங்கி
யளவிறீர்த்தமாரூரில்வந்தடைந்த
காதைநால்வகைவேதநூற்றெய்வக்
கலைக்கடற்குமீகாமனுங்காட்சி
வாதராயணனருளினுல்வகுப்பன்
வரம்பின்மாதவிர்கேண்மினீங்கென்னுச்
சூதனும்பெயர்ஞானமாமுனிவன்
றொன்மைசான்முனிவோரொடுசொல்வான். (௧)

பண்டைஞான்றுபன்முனிவரருரகர்
பத்திமாமணிப்பசும்பொலன்மௌலி
யண்டர்மாதிரங்காவலரியக்க
ரளவிறெய்வமாநதிகள்கந்தருவர்
விண்டலர்ந்ததார்வசுக்கள்வண்கருடர்
வெங்கதிர்ப்பிரான்முதலினோர்விண்மீன்
மண்டியேபுடைசூழுறமகவான்
வயிரம்வேய்ந்ததோர்மன்றில்வீற்றிருந்தான். (௨)

இருந்தவிந்திரன்குருவினைநோக்கி
யீரிரண்டெனவிசைத்திடுமுகத்துப்
பொருந்தியற்கையீங்கிசைத்தியாலென்னுப்
பகன்றகாலையின்மகவகமன்றிற்

றிருந்துநன்மைசால்செய்கையாங்கிசைத்துத்
தீயவெங்கொடுங்கலியுகச்செய்கை
மருந்துபோலருளாகரனுங்கு
வகுத்துரைத்தனன்மற்றதுகாலை. (௩)

கருகுபாவத்தினுருவமாம்வெய்ய
கடையுகத்தினிற்கடைதருங்கடிய
புரைபடுஞ்செயன்முழுவதூஉம்வினவிப்
புரையிலாதுயர்மூன்றரைகோடி
யரியதீர்த்தங்கள்யாவையுநடுங்கி
யஞ்சிநலலறமலேத்திடுமந்தத்
திருகுதீயுகத்தம்புவிசேரிற்
றேயுமெங்கடங்தெய்வதத்தன்மை. (௪)

வேறு.

ஆதலாற்கடையுகத்தினம்புவியிருத்தலாற்றேந்
தீதுடைக்கொடியபாவச்செய்கைசேர்கலியிழைக்கும்
வாதைமற்றில்லாத்தெய்வமாதலம்யாதெமக்கிங்
கோதெனப்பகர்தலோடுங்குரவனுங்கோதலுற்றான். (௫)

பரசிவனின்பஞானப்பராசத்தியெல்லையாகுங்
கருதரும்புகழாரூரிற்கலியுகவாதையெய்தா
தருமறைமுனிவர்பலலோரடுங்கலிக்கஞ்சியாங்கு
மருவினரீசன்றானுமன்னிவீற்றிருப்பனென்றாம். (௬)

என்றுதேசிகனிசைப்பவிறைவனைவிடைகொண்டேகிச்
சென்றுயர்திருவாரூரிற்சிறந்தவன்மீகநாதன்
மன்றலந்திருத்தாள்போற்றிமற்றவனருள்பெற்றாங்கே
யன்றுமூன்றரையாங்கோடிதீர்த்தமுமமர்ந்தவன்றே. (௭)

அல்லுறழ்மிடற்றோனாராங்தெனுங்குரோசமாய
வெல்லைமற்றெங்கும்பூணாலெலலையொவ்வொன்றினுக்காத்
தொல்லைமாஞாலமுய்யத்துகளறுபுனிததெய்வ
மல்லலந்தீர்த்தம்யாவுமருவிவீற்றிருந்தமாதோ. (௮)

ஊன்றியதவத்தின்மிக்கீரொவ்வொருதீர்த்தம்வைகு
மான்றதோர்தலத்தின்மேன்மைக்களவிலவென்றாலம்ம
மூன்றரைக்கோடிதீர்த்தம்வைகியமுடியாச்சீர்த்தி
சான்றவாரூரின்மேன்மைபிரமற்குஞ்சாற்றலாமோ. (௯)

இந்திரனவையினொனருமமருமபுனறறாததமயாவு
முந்தினிதடைந்துவைகுமுறைமையான்முதல்வனரு
ளாங்தெனுங்குரோசவெல்லையானகுளப்படியினிரு
மந்திரமுனிவீர்தெய்வமாபெருந்தீர்த்தமாமால். (சல)

இலகுசீநகரமென்னுமிப்பதிவைகுமேன்மை
பலகின்மூன்றனையாங்கோடிதீர்த்தமென்றகிலம்போற்று
நலமுறுசர்வதீர்த்தநன்மையைநவிற்றுவோர்கள்
பலமுறக்கேட்டோர்பன்னுட்பசுபதிபதத்தில்வாழ்வார். (சக)

சாவதீர்த்தச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கசுசுo.

---

## உருத்திரகோடிச்சருக்கம்.

வரத்தினிலுயர்ந்தவரந்தருகபிலமாநதிவடகரைமருங்கி
லுருத்திரகோடீச்சுரமெனவுலகமுரைத்திடுமாதலமொன்றுண்
டுருட்சிறந்தீசன்யோகியாயாங்கேயந்தணீரூழிதோறூழி [ம்
விருப்புடன்முனிவர்விஞ்சையரியக்கர்விண்ணவர்சூழவீற்றிருக்கு

போற்றியமுனிவர்தெளியநால்வேதம்புனிதவாகமமுதற்கலைகள்
சாற்றியுமளவின்மந்திரத்தொகுதிதந்துமோரொண்வகைத்தாய
மாற்றருஞ்சித்திவழங்கியுந்தொல்லைமாசிவயோகநன்களித்து
மேற்றமாந்தெய்வத்தனிச்சிவஞானவெழில்விளக்கீந்திருளிரித்தும்

இன்னணமெண்ணிறிருவிளையாடலியற்றியேயெம்பிரானென்று, மன்னிவீற்றிருப்பனென்னிலத்தலத்தின் மான்மியம்யான்கொ லோவகுப்பன், பன்னருமறைதேர் முனிவிரத்தலத்திற்பரமனுலயந் தனைவலங்கொண், டின்னருமன்பிற்றெழுதவர்க்கரிதாமொருபொ நுளுலகத்திலின்றால். (உ)

உருத்திரகோடீச்சுரமெனவொருகா லுரைப்பினுநாவினுல்வி தியாற், றெரிப்பினுமனத்தானினைப்பினுஞ் சேணிற்செய்கரங்கூப் பினும்பவங்க, ளருக்கன்முன்னிருள்போலகன்றுபோயொழியுமறி வுநற்றிருவும்வந்தணையும், விரித்தமாமறைதேர்விழுத்தகுமுனிவீர் மிக்கமாமுத்தியுமெய்தும். (ங)

அருமறைமுனிவீருருத்திரகோடீச்சுரத்தரனுலயத்தயலின்
மருவிவீற்றிருந்தாங்கஞ்செழுத்தாதிமந்திரமெண்ணுவார்தமக்குப்
புரைதவிரட்டசித்தியுமெய்தும்பொருவிலாவத்தலத்துள்ள
வரியவற்புதங்களெண்ணிலமுழுதுமறைநதிடிலுகம்பலசெலுமால்

ஒப்பிலத்தலத்தில்விளைந்தவற்புதமொன் றுரைத்திடக்கேண்மினெண்குணத்தோன், செப்பருருரனையோகியாயெண்ணி றிருவிளையாடல்செய்தாங்கு, முப்பெரும்புவனமுய்ந்திட வைகு முறைமைகேட்டவண்முதுமறையின், மெய்ப்பொருளுணர்ந்தகோடிமாமுனிவர்மேவினர்மேவியவேலை. (௬)

உலகெலாமுய்யவாயிடையுறைந்த வொப்பிலாயோகிதன்றெய்வப், பொலனவிர்மேனிமுன்னரோகண்டோர் புண்ணியமொன்றவண்புகன்று, மலிதருகோடிமுனிவருஞ்செறிந்து வந்தடைகாலைமற்றவர்க்காங், கலகில்பேரொளிகொள்கோடிநல்வடிவா யரும்பெறற்காட்சியதளித்தான். (௭)

வார்புனற்கடங்கடொறுந்தெரிபவர்கருத தனிதுதனிவயங்கியேதோன்று, மோரிருங்கதிர்போலயாவருங்காண வொருவனேகோடிநல்லுருவாய், நேர்பெறத்தோன்றவேறுவேறுங்கு நிறைந்தவந்தணரொலாநேர்க்கிச், சீர்பெறவிதியிற்றமித்தமிபூசைசெய்தனர் போற்றுதல்செய்தார். (௮)

போற்றியேகோடிமுனிவருங்கோடி பொலன்சுடருருவுகொண்டாங்குத், தோற்றியேநின்றசுடரினைநோக்கித் துணையடிநீழலைப்பிரியாப், பேற்றினையளித்தியென்றனரெந்தை பேரருள்புரிந்தியாவர்க்கும், வீற்றுவீற்றம்பொன்விமானமீத்துகந்து மற்றிவைவிளம்புதல்செய்வான். (௯)

யாவருநீவிரிலங்குபொன்விமானத்தேறியேயெம்முலகெய்தித் தாவிலாவளத்தோடுறைந்துபின்னெமது தாணிழல்பிரிந்திடாதென்று, மோவில்பேரின்பத்துடனமர்ந்துறைமி னென்னலுமுவந்தனைவோரும், பூவடிபோற்றிப்புனிதனைவிடைகொண் டேகினர்சிவபெரும்புரத்தில். (௰)

விண்ணகம்போழ்ந்தவாளொளிவிமான மிசைக்கொடுசிவபுரமேவி, நண்ணியேபின்னர்நாயகன்றிருத்தா ணறுமலர்ப்புதுநிழலொன்றி, யெண்ணில்பேரின்பமடைந்தனரடைந்த துருத்திரகோ

டியாமிசைப்பே, ரண்ணலோர்கோடிமூர்த்தியாய்க் காட்சியளித்த
லாலாலயமதற்கே. (கக)

நாயகன்றனக்குமுருத்திரகோடி நாதனெனாமமதடைந்த, தாயு
நான்முனிவீர்கபிலமாநதிதோய்ந் தருத்திரகோடியாலயத்தைத்,
தூயபேரன்பின்வலங்கொடுகோடி வடிவமாய்த்தோன்றியமூர்த்தி,
சேயபொன்மேனியொருவிசைகாண்போர் சிவபுரங்காண்பதுதிண்
ணம். (கஉ)

கருதருந்தவத்திர்கடககார்த்திகைமார்கழிபுணர்சுக்கிலபக்கம்,
வருசதுர்த்தசியிற்கபிலநீராடி மரபினீறணிந்தொருகோடி, யுருவு
கொண்டமர்ந்தமூர்த்தியை வலங்கொண்டுவொழிந்தஞ்செழுத்
தோதி, யிரவிடைத்துயிலாதருச்சனைபுரிவோ ரெம்பிரானுருவமே
யாவார். (கங)

பாடல்சால்சிறப்பினுருத்திரகோடீச்சுரத்தினிற்பரமனைறெழுத்து
நீடுமந்திரத்தோடுருத்திரசதநின்மலநந்திமந்திரநாற் [டாத
கேடிலாவிதியோடிசைக்கிலெப்பவமுங்கேடுபட்டொழிந்திடுங்கெ
நாடரும்யோகங்கைவருமெளிதின் முத்தியுமெய்துநற்றவத்தீர். ()

கோடிமாமுனிவரனைவருங்காணக் கோடிசெங்கதிருதித்தெ
ன்னக், கோடிநல்லுருவங்கொண்டவன்முன்னர்க் குலவுகோதான
மதளிக்கிற், கோடிகோவதைத்தபாதகமுதலாங் கோடிமாபாதகங்
குலையுங், கோடிகோமேதப்பெரும்பயன்கிடைக்குங் கோதுதீர்கு
ணப்பெருந்தவத்தீர். (கரு)

உம்பராதியர்வந்திறைஞ்சியேசூழுமுருத்திரகோடியாந்தலத்தி
லெம்பிரானன்பரொருவருக்கன்னமீந்தவரிந்திரனுவர்
வம்பவிழ்மலர்மேனமறையவனுவரிருவருக்கீந்தவர்வாச
வம்புயமடந்தைநாயகனுவர்மூவருக்கீந்தவரறவீர். (கசு)

இத்தகைசான்றவுருத்திரகோடி யெனுந்தலத்தொருபுடைபு
விக்கீழ்ச், சித்திரத்தெய்வநவமணிச்செம்பொற் செழுஞ்சுடர்ப்பீ
டமொன்றுண்டா, லுத்தமவின்டுசிலையெனவுரைப்ப ரதன்மிசை
யோகுசெய்துறைந்து, சித்திகளனந்தம்பெற்றனனெங்கள் சிவபி
ரானருளினற்றிருமால். (கஎ)

அனையதோர்தெய்வச்சிலையின்மேற்கங்கை யரும்பெறல்யமு
னைகீர்வாணி, யினையதோர்மூன்றுநதியுமாங்கோடு மென்றுமவ்வெ

ல்லையிலிறந்த, மனிதரையாதியுயிரெலாம்வீடு மருவுமத்தலத்தின் மாய்ந்தோரைக், கனலிடைத்தகனம்புரிந்திடிலுடனேகண்ணுதல் காட்சிதந்தருளும். (கஅ)

அதற்கொருகுறியுண்டனையதோர்சுடலையடலையிலெம்பிரான் விடையின், பதச்சுவடினிதுதோன்றுமத்தலத்தி னற்புதம்பகர்ந்தி டலரிது, துதிப்பருமுனிவீர யிடைச்சிராத்தஞ் செய்திடிற்றொல் லவான்பிதிர்க்கண், முதற்பரங்கடவுடிருவடிநீழன் முடிவிலாவாழ் வுபெற்றுறைவார். (கக)

திருத்தமாங்கோடிமுனிவர்கண்டுவக்கத்திருவுருத்தனித்தனி காண்பித், துருத்திரகோடீச்சுரனெனுநாம முற்றவன்மான்மியமி தனை, யருத்தியோடொருகான்மொழிந்திடிற்கேட்கி னளவிலாக் கொடியமாபாவம், வருத்திடாதொழியுஞ்சித்தியுமுத்தி வாழ்வும்வ ந்தெய்திடுமென்றே. (உ0)

உருத்திரகோடிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கககூ0.

## கோகருணச்சருக்கம்.

அறங்கரைநாவினந்தணீராரூர் வடதிசைத்தென்றிசையகத்து ச், சிறந்தகோகருணமென்றலகேத்துஞ் சிவாலயமிரண்டுளவவற் றை, நிறைந்தபேரன்பினொருமுறைதொழுவோர் நிரயவெந்துயரு ரூர்வாச, நறுந்தருநிழலினரம்பையர்சூழ நண்ணுவர்நாகநன்னுட் டில். (க)

நினையினுமுளத்தாற்காணினும்விழியா னிகழ்த்தினுநாவினு லொருகால், வினைதருபவங்கள்கோடிவிண்டொழியும் விளம்புமவ் வாலயமேவு, மனகவொண்புனிதமூர்த்திபொன்னடிகள் சிவநிசிய ருச்சனைபுரிவோர், மனமுதல்கடந்தசின்மயவகண்ட வாழ்வுபெற் றுய்வதுவாய்மை. (உ)

உரைத்தவாலயமோரிரண்டினும்விதியோடொப்பிலாவஞ்செ ழுத்தோதில், விரித்தநூல்வேள்வியந்தணர்க்கொன்ற வெம்பவமு தலியபவங்க, ளெரித்தலையடுத்தபஞ்சியிலழியு மியம்பியசிவாலய மவைக்கு, வரத்தினிலுயர்ந்தமுனிவிர்கோகருண மெனப்பெயர் வந்தவாறறைவாம். (ஙு)

வேறு.

ஆலமாமுருவமெய்தியமுதமாஞ்சுவைபடைத்துச்
சூலிமாகருணையென்னத்தொல்பவந்தொலையவீட்டி
ஞாலமாமடந்தைமார்பினசையொளிபரந்தநீல
மாலைபோல்வயங்கித்தோன்றுமாநதியமுனைப்பாங்கர். (௪

இருநிதியியக்கர்கோமானேமயாநகரும்வானோர்
புரவலனுகந்ததெய்வப்பொன்னின்மாநகரும்பொற்பிற்
றிருமறுமார்பனின்பச்செலவமாநகருமொன்றா
யுருவுகொண்டென்னவைகுமுத்தரமதுரைதன்னில். (ரு

அறந்தருகேள்விசான்றவந்தணரிருவர்சாலப்
பிறங்குகோகருணனென்னும்பேரினர்பிறழுங்கூற்று
மறஞ்சினம்வஞ்சமில்லோர்மற்றவர்சுற்றத்தோடு
முறுந்தழல்விரதமோமமியுறைந்தனருறையுநாளில். (௬

வேறு.

இருவர்தங்களிலொருவனைக்கொணர்திரொன் றிருந்திறற்கூ
றேவ, விரைவினேகியதூதுவர்கவையடிமேதியூர்தியனுங்குத், த
திரொன்றகோகருணனைக்கொணர்ந்திடா தப்பெயர்தரித்தோன்ம
றொருவனைக்கொணர்ந்தேகினர்யாவர்கொலூழ்வலியொழிப்பா

மற்றவன்றனைத்தூதுவர்கொண்டுபோய்மறலிமுன்றரலோடுங் [
கொற்றவன்றெரிந்திவன்றனைவிடுத்துமற்றவன்றனைக்கொணர்மின்
ளிற்றைவைகலிங்கென்றனனென்றபோதந்தணனெதிர்போற்றிப்
பற்றினேடிகறீர்ந்ததோர்நடுவனைநோக்கியேபகர்கின்றான். (௮

தருமமுற்புரிதவத்தினுனின்மனெதிர்சார்ந்தனன்மிடியென்னு
திரைகடற்குள்வீழ்ந்தலைந்தனன்யானினிச்செல்கலனுண்டென்
விருநிதிக்குவையளித்தினிதருள்சுரந்தேகுதியினியென்று, வு
கொடுத்தனன்கொடுத்தலு மறையவன்பின்னுமொன்றுரை செ
வான். (௯

திருவின்மல்கியதென்றிசைநாயக விவ்விடைச்செறிந்துள்
நிரயபேதங்கணிகழ்த்தெனநிகழ்த்தினனிகழ்த்தியவவைகண்டு,
ருதல்வேண்டுமென்றுரைத்தனன்விடுத்தனன்மறையவன்றன்மே
ரி, நரககோடியிற்சிற்சிலகண்டனன் காட்டிடநமன்றூதர். (௰

நரு

வேறு.

குரவனை யிகழ்ந்து நன்றிகொன்றிறைமுறை பிழைத்துக்
கரவினுல் வன்மைதன்னுற் பிறர்பொருள் கவர்ந்த தீங்கால்
வெருவரு ரௌரவத்தில் வெங்கனற் கொதித்த வெங்கெ
யெரியழ லிருப்புத்தாழியிடைப் படுமவனைக் கண்டான். (கக)

ஆய்ந்திலெந்தறமன்றென்னுதயன்மனையம்பொனுகந்
தோய்ந்திட விழைந்து பார்த்த பாவத்தாற் சூழ்ந்து செந்தீக்
காய்ந்த கூரிருப்புமூக்குக் காக்கைகள் கண்கள் கொத்த
வோய்ந்துளங் குலைந்தேயந்தத் தமத்திடையுறைவோர்க்கண்டான்.

பிறர்மனையாகந்தோய்ந்த பெருங்கொடும் பாவந்தன்னுற்
றுறுகனன்மயமாய்த் தோன்றுந் துர்ச்சக நிரயத்துற்றுப்
பொறியெரி வெந்த செப்புப் பாவையைப் பூணப் புல்லி
யறிவினுமளவாத் துன்புற்றலறுவார் பலரைக் கண்டான். (கஙு)

அரனையஞ்செழுத்தை நீற்றைப் புராணத்தை யாகமத்தைப்
பெருமறைதனையிகழ்ந்த பாவத்தாற் பிரமுகப்பேர்
நரகடைந்தழற்கூர்வாளாறுக்கரிபட்டுக் கார
வெரிகொணீர்நுங்கிநுங்கியிளைப்பவர் பலரைக் கண்டான். (கச)

தனக்கொருகுற்றஞ்செய்யார் தங்கட்கு நம்பினோர்க்கும்
வினைக்கொலை விளைத்த தீய வெங்கொடும் பாவந்தன்னு
னினைப்பினு நெஞ்சமஞ்சு நிகும்பமா நிரயத்தெய்திக்
கனற்சுடுமணற்கிடந்து கலங்குவார் பலரைக் கண்டான். (கரு)

மருவிய தோழன்றன்னை வஞ்சித்த பாவந்தன்னுல்
வெருவரு விதாரகத்து மேவி வெங்காலதூதர்
பொருசுடர்வாளாற் போழ்ந்து போழ்ந்த வப்புண்வாய்தோறு
மெரியழற் குழம்பு வீச வேங்குவார் பலரைக் கண்டான். (கசு)

கோளுரைபயின்றதீங்காற் கொடிய வீவற்சமென்னு
நீள் பெருநிரயத்தெய்தி நிலையின்றி மலத்தி லாழ்ந்து
மூளுறு பசியாலந்த மூழ்கிய மலத்தைத் துய்த்து
நாள்பல கிடந்து சாலநைந்துளார் பலரைக் கண்டான். (கஎ)

பரவைவாய் நஞ்சையுண்டு பண்ணவர்க்கமுதமீந்த
பரசிவன் பூசைசெய்யாதுண்டதோர் பாவந்தன்னுற்
கிருமிபோசனமாந் தொல்லைக் கேடிலா நிரயமெய்திக்
கிருமிபோசனமாயுண்டு கிடப்பவர் பலரைக் கண்டான். (கஅ)

எள்ளருந்தருமம்பாவமீசன்மற்றில்லையென்ற
தள்ளரும்பாவந்தன்னாற்சான்மலிநிரயமெய்தி
முள்ளழலிலவின்மேலேறிமுழுதுடல்கிழிந்தூன்சிந்தி
யுள்ளனைந்தழுங்கிவெங்நோயுழப்பவர்பலரைக்கண்டான். (௧௯)

நாயினால்விலங்குவாட்டிநனிதசைதின்றபாவத்
தோய்வுறுவின்னல்வெந்தீயுருவமாம்பிராணரோத
மாய்தோர்நிரயமெய்தியழல்கொள்வாய்நாய்கறிப்பப்
பாய்தருகுருதியூடுபடிபவர்பலரைக்கண்டான். (௨௦)

நற்கிளைமனைவிமைந்தர்நாதனைம்பினர்தாய்தந்தை
யற்புதவீசன்றொண்டரதிதியர்பசிப்பவுண்ட
முற்கொடுவினையாலாழ்ந்தமுதுபெருந்துர்க்கந்தூத்துட்
பற்கெழுபாந்தள்வாயிற்பட்டுளோர்பலரைக்கண்டான். (௨௧)

அறநெறிவரம்புதன்னையழித்தவெவ்வினையினாலே
நிறைதருநெருப்புவெள்ளநீடுவைதரணியாற்றி
னுறுசுழியிடையிற்பட்டாங்கொள்ளழலெயிற்றுப்பேழ்வாய்ப்
பொறியுடன்முதலைவவ்வப்புலம்புவோர்பலரைக்கண்டான். (௨௨)

சென்னியம்பிறையான்முன்னஞ்செப்பியதெய்வநூலி
னன்னெறிநடந்திடாதுநவைநெறிநடந்தபாவத்
துன்னருங்கொடியதூதரொழுகழனெடியகூர்வாட்
பன்னமார்வனத்துளீர்க்கப்பதைப்பவர்பலரைக்கண்டான். (௨௩)

அருமறைவாணரீசனாலயப்பொருள்கவர்ந்த
கருதரும்பாவந்தன்னாற்காரிரும்பொழுகக்காய்ந்தாங்
குருகியசந்தஞ்சப்பேரொருபெருங்குழியிலெய்தி
யெரியுடலீகறிப்பவிரங்குவார்பலரைக்கண்டான். (௨௪)

கல்வியோரீசனன்பர்தங்களைக்காய்ந்ததீங்காற்
செல்வழிசிறுகியாழ்ந்துசீறெலிமூஞ்சூறுதி
பல்பெருங்கரியசெந்தேளிடையறப்பரந்துமொய்த்த
வல்வருமந்தகூபத்தழுந்துவார்பலரைக்கண்டான். (௨௫)

அயன்மனையகத்துநாளுமமவாசிதன்னிலுண்ட
துயர்தருவினையினாலேதுர்க்கடநிரயந்துன்னிப்
பயில்விழியிருப்புத்துண்டப்பறவைநாவீர்த்துக்கொத்தச்
செயலழிந்திரங்கிமாழ்கித்திகைப்பவர்பலரைக்கண்டான். (௨௬)

மானமாம்வரம்புநீங்கிவயங்குநற்புனிதமின்றி
யீனமாமகளிர்தங்களிளமுலைதோய்ந்தபாவத்
தூனிணமுதிரஞ்சீயாலுறநிறைபயங்கரத்தின்
மேனிலையின்றியாழ்ந்துமெலிபவர்பலரைக்கண்டான். (உஎ)

மண்டழன்முதியவேனில்வருந்தியானினங்கள்வாவித்
தண்டுறைநீருண்வேலைவிலக்கியதீமைதன்னாற்
கண்டகநிரயம்வீழ்ந்துகனலுருப்புழுக்கண்மொய்த்துக்
கொண்டுடலரிப்பச்சோர்ந்துகுலைபவர்பலரைக்கண்டான். (உஅ)

வித்தகவிஞ்சைமேலோர்விளம்பியபாடல்கேட்டுப்
பத்தியால்வழிபாடாற்றிப்பயனுதவாததீங்காற்
சித்திரதுந்துபிப்பேர்த்தீநரகடைந்துகாதில்
வைத்தழற்சலாகையேற்றமாழ்குவார்பலரைக்கண்டான். (உகூ)

மெய்ந்நெறிவேதநன்னூல்விதிமுறைவழுவுறாது
பன்னருஞ்சிராத்தமாதிபண்ணிடாப்பவத்தினாலே
புன்னரகம்புகுந்துபொங்கியவெயின்மேன்மொய்ப்ப
வன்னிகீழ்மொய்ப்பவெம்பிவருந்துவோர்பலரைக்கண்டான். (௩0)

இசைதருவிரதந்தன்னையிழந்ததோர்பாவந்தன்னா
னிசிதசத்திரமெனும்பேர்நிரயத்திற்கிடந்துவாளாற்
றசையுடலரிபட்டாங்குத்தண்டத்தான்மொத்துண்டாற்றப்
பசியழல்வாட்டவின்னற்படுபவர்பலரைக்கண்டான். (௩க)

பைந்தொடிமகளிர்பாலர்பசுவொடுவேதமாந்தர்க்
கந்தமதிழைத்ததீங்கினதோமுகநிரயமேவி
வெந்தழலிடைவிடாதுவிடுசிகைமுகத்திற்றூவத்
தந்தலைகீழாத்தூங்கித்தளர்பவர்பலரைக்கண்டான். (௩உ)

நடுநிலையிகந்துபொய்யைநவின்றுபொய்க்கரியுரைத்த
கொடுமையாற்பிடணப்பேர்க்குழியிருணிரயத்தாழ்ந்து
கடியவீக்கணம்பேன்கீடங்காறெறும்பிவைகறிப்ப
வுடல்பதைத்தரற்றியாவியொடுங்குவார்பலரைக்கண்டான். (௩௩)

துடித்திடமீனின்வர்க்கந்தூண்டிலாற்படுத்ததீங்கான்
மடுத்தெரிகனலிற்காய்ந்தமடித்தவாய்க்கூரிரும்பு
மிடற்றிடைக்கோத்துத்தூக்கிமிடற்கொடுந்தூதர்பாசத்
[illegible]த்திடப்பதைத்துவாய்விட்டரற்றுவார்பலரைக்கண்டான். ( )

பரத்தையர்தம்பாற்சேர்ந்துபழிதவிர்மனையைச்சேரா
திரக்கமும்பொறையுமின்றிமதுநுகர்ந்தின்றோர்மூத்தோ
ருரைத்தசொற்பிழைத்தபாவத்துறுகனற்செக்கிலிட்டாங்
கரைத்துவெந்தூதர்வாட்டவழுங்குவார்பலரைக்கண்டான். (௧௫)

ஒருபெருங்கடவுளெண்டோளீசனேயென்றுணர்ந்த
பெரியவர்கீழிருப்பப்பிறங்குமாதனத்திருந்த
புரைபடுவினையினாலேபொங்கழற்பாறைமேவிக்
கருகிவெந்துடம்புகன்றிக்கதறுவார்பலரைக்கண்டான். (௧௬)

விடலருங்கொழுநன்முக்கண்விண்ணவற்கன்புசான்ற
வடியவர்கலத்திற்கற்சோறடிசிலென்றுதளித்த
கெடலரும்பாவந்தன்னாற்கெழுதழற்பொறியில்வெய்ய
சுடுமணல்வாரிநுங்கித்துடிப்பவர்பலரைக்கண்டான். (௧௭)

வண்புதுக்கண்ணிவேய்ந்துமணவினைமரபிற்கொண்ட
கொண்கனைப்பிழைத்துக்கற்பினீங்கியகொடுமைதன்னாற்
பெண்குறித்தலத்திற்காலனேவலர்பெருந்தீக்குந்தம்
புண்படச்சொருகநின்றுபுழுங்குவார்பலரைக்கண்டான். (௧௮)

இன்னவர்போலப்பல்வேறிழைத்ததீவினையாலெண்ணில்
வெந்நிரயம்புகுந்துமெலிந்துவாய்விட்டரற்றிப்
பன்னருந்துயருழக்கும்பற்பலர்தம்மைக்கண்டே
யந்நிலையஞ்சிநீங்கியந்தகன்றனையடைந்தான். (௧௯)

வேறு.

அடைந்துவெய்துயிர்த்தழுங்கியேயந்தகவிந்த
மிடைந்தவெவ்விருட்கொடுந்துயர்நிரயமாவேலை
படிந்தலைந்திடாதுய்ந்திடும்படிபகரென்னத்
தொடர்ந்துநூலுணர்தருமனுங்கிவையிவைசொல்வான். (௨௦)

உலகநாயகனூழியின்முதல்வனொண்மதிய
மிலகுவார்சடையிறையவன்பூசனையிழைத்தோ
ரலகிலாதவிக்கொடுநிரயக்கடலாழா
புலமையோயிதுவாய்மையாரணங்களும்புகலும். (௨௧)

மைதருந்திருமிடற்றினன்மலரடிப்பூசை
செய்தமேலவரல்லரோதேவரென்றிசைப்போர்
பொய்தவிர்ந்தபேரன்பொடுசிவார்ச்சனைபுரிவோர்க்
கெய்தரும்பொருளெவ்வுலகத்தினுமின்றால். (௨௨)

மலைவில்கேள்விசால்கோதமனத்திரிவசிட்டன்
சலதியுண்டவனுதியோர்சங்கரன்செம்பொ
னலர்கொள்சேவடியருச்சனைப்பலத்தினலன்றே
வுலகில்யாரினுமொப்பருந்தலைமைபெற்றுயர்ந்தார். (சக)

மைந்தர்நற்பசுமடந்தையருயிர்க்கொலைமாயா
வந்தணர்க்கொலைமுதலியபாதகமனைத்தும்
வெந்தழற்சிகைமிசைப்படுபஞ்சுபோலவிளியுஞ்
செந்துகிர்ச்சடைச்சிவன்றனைப்பூசனைசெய்யில். (சச)

நன்றிகுன்றியுநடுநிலைபிழைத்துநல்லறத்தைக்
கொன்றுமூன்மதுமாந்தியுங்கோளுரைபயின்றுங்
கன்றிமேலவர்ப்பழித்துமீன்றோருரைகடந்து
நின்றவெந்தொழில்யாவையுநீங்குறுதிறைத்தும். (சரு)

செறிந்தபாவங்கண்முழுவதூஉஞ்செங்கதிர்முன்ன
ருறைந்தகாரிருள்போலவேயொல்லையிலொழியும்
பிறந்துமால்வரைவளர்ந்ததோர்பெண்கொடிபாகத்
திறந்திடாததோரிறைவனைப்பூசைசெய்திறைஞ்சில். (சசா)

வேறு.

ஈசனைப்பூசைசெய்யிலிறந்திடாப்பவமொன்றில்லை
யீசனைப்பூசைசெய்யிலெய்திடாப்பதமொன்றில்லை
யீசனைப்பூசைசெய்யிலெய்திடாச்சித்தியில்லை
யீசனைப்பூசைசெய்யாரெய்திடாநிரயமில்லை. (சஎ)

தாமரைபுரையுஞ்செங்கட்டலைவனுஞ்சதுமுகத்து
நாமகள்கொழுநன்றனுஞாலமதளித்துக்காக்கு
மேமநல்லரசும்வாழ்வுமின்பமும்படைத்ததீசன்
றேமலரடிகள்பூசைசெய்தநற்றிறத்தாலன்றே. (சஅ)

இந்திரனங்கியான்மற்றெனக்குமேற்றிசையிருப்போன்
மைந்துடைவருணன்வண்கான்மன்னவனளகைவள்ள
லந்தமிலீசனெண்டிக்கரசுபெற்றுயர்ந்ததெண்டோட்
சுந்தரன்றனைப்பூசித்ததொல்பெரும்பயனாற்கண்டாய். (சகூ)

விலங்கல்வண்டடந்தோள்வாகைவிருத்திரன்றன்னைவேலை
யிலங்கைமன்றன்னைக்கொன்றவிருங்கொலைப்பாவநீங்க
வலங்கெழுநேமியானும்வாசவன்றானுமீசன்
பொலங்கழலடிகள்பூசைபுரிந்ததுமறியாய்போலும். (ரு0)

## கோகருணைச்சருக்கம்.

ஆதிநூல்வேதவேள்வியந்தணர்குலத்துமிக்க
தாதையைவதைத்தோன்றானுஞ்சங்கரன்றனைப்பூசித்த
மேதகுவரத்தினாலேவீடுறப்பெற்றம்படைத்த
காதைதான்கேளாய்கொல்லோகலைபலகற்றமேலோய். (ருக)

விழுந்தபூச்சிவனுக்கென்றுவிளம்பினேனென்றானும்வில்வக்
கொழுந்தளிர்தரையிலவீழ்தக்கொடுங்கொலைவேடன்றானுந்
தொழுங்கணநாதராஞமொன்றிடிற்றொல்லையீசன்
செழுங்கழலருச்சித்தோர்தமபெருமையார்செப்புநீரார். (ருஉ)

வேறு.

சிவனையர்ச்சனைபுரிபவர்இருந்தடிம்தாழுவோ
ரவரடிக்கடியோருமீங்கடைந்திடாரொன்னிற்
பவமனைத்தையும்விட்டும்மம்பரனையர்ச்சிசகுந்
தவர்தமகதிலைநரகெனச்சாற்றவேண்டுமோ. (ருங)

அறமளித்தவள்பாகனையருச்சனைபுரிந்த
மறைகொழித்தவாய் மைந்தனன்மற்றியான்படைத்த
விறைமைபெற்றவித்தனியரசிழந்தோர்காதை
குறைபடைதடாககேள்வியாயகேட்டிலைசொல்லோ. (ருச)

ஆதிநாயகற்பூசனைபுரிபவரடியோர்
பாததாமரைதொழுபவர்நினைபவர்பதிகக்கும்
போதல்செய்திடேனயானெனைப்புடையுறச்சூழ்ந்த
தூதரோகவுநினைந்திடார்தோலலைமாமறையோய். (ருரு)

பனிநிலாமதிமிலைச்சியபைம்பொன்மாமௌலிப்
புனிதநாயகன்பூவடியருச்சனைபுரியு
மனகர்சேவடியடியவரடியவரடியார்
கனவுதன்னினுநிரயமாமலலையைககாணார். (ருசா)

எனககனைந்தோர்தருமனேயேதியேயுனககு
மெனக்கும்யாவர்க்குமீசனைப்பூசைசெய்துய்ய
வெனக்கொராமாதலமினிதிசைத்தென்றனைவிடுத்தி
யெனக்கைகூப்பிநின்றிரங்கியேமறையவனிரந்தான். (ருஎ)

இரங்கியேத்திநின்றிரந்தோர்பனவனுக்கிரங்கிச்
சுரந்துநல்லருள்கூர்ந்தனனடுவனுஞ்சொல்வான்
விரிந்தசெஞ்சடைவிண்ணவனவிமலையோடென்றும்
புரிந்துவாழ்வுறுமாதலம்பலவுளபுகலில். (ருஅ)

மாதலங்களின் விசேடமா மொருதலம்வகுப்பன்
சீதவெண் டிரைக்காவிரித்தெய்வநன் னாட்டின்
மாதர்வண்கமலாலயமாபுரமறையோய்
பூதலங்கெழுபுரங்களில்விசேடமாம்புரமால். (ருகூ)

அனையதோர்தலத்தருட்சிவலிங்கநீதாபித்
தினிதுபூசைசெய்தேத்திடிற்பவமெலாமிரித்துப்
புனிதனாகியேபொங்குபேரின்பவானந்தத்
தனிமைசான்றநல்வீடுபெற்றுய்குவைசரதம். (சு௦)

என்றியம்பியேவரம்பலமறையவற்கீந்து
வென்றிமேதியன்றூதரோடிவன்றனைவிடுத்து
நின்றகோகருணத்தொடுவம்மெனநிகழ்த்தச்
சென்றிவன்றனைவிடுத்தவன்றனைக்கொடுசென்றார். (சுக)

சென்றவெல்லையினெல்லையின்கட்டளைசிதைந்த
தின்றுவல்லையிலிவனையும்விடுமின்களென்னாக்
கொன்றைவேணியானாணையாற்கூற்றுவன்கூறத்
துன்றுதூதுவர்விடுத்தனர்விதியையார்துடைப்பார். (சுஉ)

விடுத்துநீங்கினர்தூதுவர்வெம்மழுவலத்தி
லெடுத்தநாயகனருளினாலிருவருமுய்ந்தாங்
கடுத்தமர்ந்துழியந்தகனறைந்தவாறனைத்து
மெடுத்தியம்பினனவனிவற்கியம்பியவெல்லை. (சுந)

இவனுமீசனைப்பூசைசெய்துய்ந்திடவிசைந்தா
னவனுமற்றிவன்றானுமாங்கடைந்தனராரூர்ப்
பவமகற்றிடுந்தேவதீர்த்தப்புனல்படிந்தார்
சிவனதாலயமெய்தினர்வலமுறைசெய்தார். (சுச)

வேறு.

வலங்கொடுதாழ்ந்தெழுந்துமாலயன்முதலோருய்யப்
பொலஞ்சுடரொளியாய்முன்னம்புற்றிடத்துதித்தமூல
லிலிங்கமாமூர்த்திதன்னையேத்தியேயருச்சித்தாரூர்த்
தலந்தனிற்றவம்புரிந்துசார்ந்தனர்சாருநாளில். (சுரு)

மன்றலம்பொழில்சூழாரூர்வடதிசையகத்துமற்றத்
தென்றிசையகத்துஞ்செம்பொனாலயஞ்செய்துநூற்பா
லொன்றியவிதிவழாமற்சிவலிங்கமுகந்துதாபித்
தன்றருச்சனைபுரிந்தார்தனித்தனியந்தணாளர். (சுசு)

அருசசனைபுரிந்துபன்னுளமலனைப்போற்றிப்பின்ன
ரிருட்படுபிறப்புநீத்தாரிருபிறப்பாளரீங்குத்
தெரித்தகாரணத்தினலேசிவாலயமிவற்றைமேலோ
ருரைப்பர்கோகருணமென்றேயொப்பிலாவுயர்தவத்தீர். (கூஎ)

இயம்பியசிவாலயங்களிரண்டையும்வலங்கொண்டாங்கு
நயந்துறைமூர்த்திபொற்றுணைறுமலர்போற்றல்செய்வோர்
வியன்பெறுதிருவின்மல்கிவீற்றினிதிருந்துபின்ன
ருயர்ந்தமேலுலகவாழ்வினுளமகிழ்ந்துறைவரன்றே. (கூஅ)

கதிதருமாரூரிற்கோகருணமாமான்மியத்தை
விதிமுறையோதுமேலோர்விருப்புடன்கேட்குநல்லோர்
முதியவெந்நிரயத்தாழார்முன்னையூழ்வினையினீங்கி
நதிமதிவேணியன்றுணைண்ணுவார்திண்ணமன்றே. (கூகூ)

கோகருணச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ0சகூ.

## சத்தமுனிச்சருக்கம்.

அத்திரிவசிட்டன்காசிபன்பாரத்துவாசனேயறந்தெரிவிசுவா, மித்திரன்சமதக்கினிகௌதமப்பேர் மெய்த்தவனென்றுலகேத்துஞ், சத்தமாமுனிவர்புற்றிடங்கொண்ட தாணுவைப்பூசைசெய்தழியா, முத்திபெற்றுய்ந்தபெருங்கதைகேண்மின் மொழிகுவன்முதுமறைமுனிவீர். (க)

வேறு.

முன்னொருவேலைதன்னின்முதுக்குறைமுனிவீர்மேகம்
பன்னிருவருடமாரிபயத்தலின்றொழிதலாலே
யின்னல்வெங்கரிப்புத்தீயாலிருநிலவனைப்பிலுள்ள
மன்னுயிரனைத்துஞ்சாலவாடியேபுலர்ந்தமாதோ. (உ)

தீயவப்பருவந்தன்னிற்றேயங்கள்பலவுஞ்சென்று
பாயெரியென்னமண்டிப்பற்றியகரிப்பிற்பன்னாட்
டேயேழ்முனிவர்சாலத்துயர்பெரிதுழந்தோர்வைகற்
காய்கனிவாதையெய்தாக்கடவுளாரூரில்வந்தார். (ங)

திருவறம்வளர்க்குமெங்கள்செல்விமாதலம்புரிந்து
மருவியேயூழியூழிமன்னிவீற்றிருத்தலாலே
தருவளங்குன்றாதென்றுந்தழைத்தவாரூரைச்சார்ந்தார்
கருதருஞ்சுரத்திலுற்றோர்கற்பகநிழல்சேர்ந்தென்ன. (௪)

பரஞ்சுடரின்பஞானப்பராசத்திநகரத்தெய்தி
வரந்தருதேவதீர்த்தவாசமாமணிநீராடி
விரிந்தெழுகரிப்புவெங்கீவெம்மையும்விளிவுறாத
வரந்தைவல்வினைவெங்கோடைவெப்பமுமாற்றினாரே. (௫)

நிலவொளிநீறணிந்துநியமங்கண்முற்றிமுக்க
ணிலகுபேரொளியையுள்ளத்திருத்தியஞ்செழுத்துக்கூறி
மலர்கதிர்விலங்கநீண்டமாமணிமதிற்புறத்துப்
பலமுறைசூழ்ந்துதாழ்ந்துபைம்பொனாலயத்துட்புக்கார். (௬)

பைம்பொனாலயத்துளெய்திப்படிமையோர்பைந்தார்மொய்ம்பி
னம்பொனாடளிக்குமண்ணலரியயனமரர்வந்து
தம்பொனார்முடிகள்சாய்த்துத்தண்மலர்தூவிப்போற்றுஞ்
செம்பொனாரொளிகொண்மூலச்சிவலிங்கந்தன்னைக்கண்டார். (௭)

கண்டெதிர்பணிந்தெழுந்துகைம்மலருச்சிகூப்பி
விண்டுநெக்குருகியுள்ளம்விழியறல்பொழிந்துபுற்றிற்
பண்டுவந்தெழுந்தஞானப்பரஞ்சுடரொளியைவாழ்த்தி
மண்டியபரமானந்தவாரியிற்படிந்தார்மன்னோ. (௮)

மகிழ்சிறந்தினிதுவாழ்த்திவலியவற்கடத்தினீங்கி
யகிலமதுய்யத்தங்கள்பவப்பிணியகன்றுமாயப்
புகழ்மறைமுனிவர்மேலோர்பற்றிடங்கொண்டவாதி
பகவனைவிதிவழாமற்பரிவினாற்பூசைசெய்தார். (௯)

ஆரணவிதியிற்பூசையாற்றினர்போற்றியாங்குப்
பூரணன்கருணைபெற்றுப்புரைதவிர்பன்னசாலை
சீர்பெறவினிதமைத்துத்திருந்துமாதவங்களாற்றி
யோரெழுவோருமாரூருறைந்தனருறையுநாளில். (௧௦)

எழுவகையுலகத்துள்ளவெண்ணிலாவுயிருமுய்ய
வெழுவகைமுனிவருந்தம்பெயரினாலீறிலாத
வெழுவகையிலிங்கந்தாபித்தியல்வழாதினிதுபூசித்
தெழுவகையாயதெய்வத்தீர்த்தமுமிழைத்தாரன்றே. (௧௧)

அங்கவையமைத்துமூன்றுகாலமுமம்பொற்புற்றிற்
பொங்கொளிமூலலிங்கபூசனைபுரிந்துபோற்றித்
தங்கடம்பெயராற்றந்ததாணுவேவாரோழும்பூசித்
தெங்கடம்பெருமானூரிருந்தனரொண்ணில்காலம். (கஉ)

பூங்கமலாலயத்துட்புற்றிடத்தமலன்றன்னை
யாங்கெழுமுனிவர்தாமன்றருச்சனைபுரிதலோடுந்
தீங்குடைவறுமைநீங்கித்திங்கண்மும்மாரிபெய்து
வாங்குநீருலகங்குன்றாவளத்தினிலையாந்தன்றே. (கங)

முழுதுலகுய்யவாரூர்முதல்வனைப்பூசைசெய்தாங்
கெழுமுனிவோரும்பன்னாட்பராசத்திபல்லைவைகி
மழுவலந்தரித்தவெங்கள்வன்மீகநாதன்றானை
விழிகொடுநோக்கலோடும்வீடுபெற்றுய்ந்தாரன்றே. (கச)

அந்தமில்வீடுபெற்றவந்தவேழ்முனிவரன்று
தந்தவேழ்தடத்துமூழ்கியன்னவர்தங்கள்பேரான்
முந்துதாபித்தவோரேழிலிங்கமுமுறையிற்போற்றிற்
சிந்திடும்பவங்களெல்லாஞ்சிவகதியெய்துந்திண்ணம். (கரு)

மாசறுபுரட்டாதிப்பேர்த்திங்களில்வளரும்பக்கத்
தேசிலாவஞ்சாம்பக்கத்தேழ்பெருமுனிவர்தீர்த்த
மாசிலாவிதியின்மூழ்கியவர்களர்ச்சித்தவோரேழ்
தேசுறுமிலிங்கபூசைசெய்பவர்பிறப்பிற்செல்லார். (கசு)

ஆவணித்திங்களெய்தும்பூரணையதனிலந்தப்
பூவலர்சத்ததீர்த்தம்புரைதவிர்விதியின்மூழ்கித்
தேவியற்சத்தலிங்கதெரிசனம்புரிவோர்தங்கள்
பாவவெற்பனைத்துநுண்டூள்படுமிதற்கையமின்றால். (கஎ)

முற்றுநூலுணர்ந்தசத்தமுனிவர்தென்கமலைதன்னி
லுற்றினிதிலிங்கந்தாபித்துயர்கதியுறுமிக்காதை
சொற்றவர்முறையிற்கேட்டோர்சூழ்பவந்தொலையவெங்கள்
புற்றிடங்கொண்டநாதன்பொன்னடிநீழல்சேர்வார். (கஅ)

சத்தமுனிச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ0கூஎ.

## பிரமயாகச்சருக்கம்.

திருவினுடவஞ்செய்யுந்திருநகர்
மருவிமுன்னொருவைகல்வண்டாமரைப்
பிரமன்வேள்விபுரிந்தபெருங்கதை
யிருடிகாளிங்கியம்புவன்கேண்மினே. (க)

முன்னொர்வைகல்விரிஞ்சன்முதுமறை
பன்னும்வேள்வியொன்ருற்றிப்பனிமதிச்
சென்னியீசன்றிருவருளெய்துவா
னுன்னினுன்றன்னுளத்தினிலெனபவே. (உ)

உன்னிஞாலத்துயர்ந்தசிவபுர
மன்னுமாரூர்வளநகராமென
வன்னவூர்தியறிவினிற்றேர்ந்தெழீஇப்
பொன்னினாட்டினர்தம்மொடும்போந்தனன். (௩)

பொன்னினுறைபுங்கவர்தம்மொடு
பொன்னிநாடுபுகுந்துபுதுமலர்ப்
பொன்னின்வாழ்விற்பொலிகமலாலயப்
பொன்னின்மாநகரெல்லைபொருந்தினன். (ச)

வேறு.

பொருந்தியநான்முகன்புலவர்தம்மொடுந்
திருந்தியவண்புகழ்த்தேவதீர்த்தமாம்
பெருந்தடமூழ்கிநீறணிந்துபிஞ்ஞகன்
வரந்தருதிருவடிமனத்துவைத்தரோ. (௫)

விதிமுறையஞ்செழுத்தோதிவேதியர்
புதுநறுந்தருநிழற்புலவர்சூழப்போய்
மதிமலிபுரிசையங்கோயில்வாய்தலி
னெதிர்தொழுதம்புயனிறைஞ்சினனரோ. (௬)

இறைஞ்சுபுகோயிலினெய்திப்புற்றிடத்
துறைந்ததோர்மூர்த்தியையுமையுடன்றொழு
தறந்தருபெரும்புகழேத்தியன்னவர்
பிறங்கியதிருவருள்பெற்றுமீண்டனன். (௭)

பண்ணவர்தம்மொடுமீண்டுபங்கயன்
றண்ணறுஞ்சூரியதடத்தின்பாங்கரின்
விண்ணவர்கம்மியற்கொண்டுவேள்வியங்
கண்ணகன்சாலைநூல்விதியிற்கண்டனன். (௮)

வேறு.

மேதகுசாலைநல்கிவேண்டுவவமைத்தபின்னர்ப்
போதினனமர்ந்துவேள்விபுரிதரும்வேலைநோக்கி
யோதுமினென்னஞானயோகமாமுனிவரோர்ந்தாங்
கேதமில்வேலையிந்தவேலையென்றியம்பினாரோ. (௯)

இயம்பலுமனையவேலையிமையவர்மகளிரோடுந்
தயங்கொளிவாணியெய்தத்தாழ்த்துழித்தேவரங்கோர்
பயங்கெழுபொதுவரீன்றபாவையைக்கொணர்ந்துதேனு
வயின்றனிலுதிப்பித்தொல்லைமலரயன்முன்னருய்த்தார். (௧௦)

தெண்டிரைவயிற்றின்முன்னந்தெள்ளமுதுதிப்பித்தென்ன
வெண்டகுதெய்வத்தேனுவயிற்றிடையினிதுதிப்பித்
தண்டர்தாந்தந்தகாமரண்டர்தங்கன்னிதன்னைக்
கண்டிருநான்குகண்ணுங்களித்தனன்கமலத்தண்ணல். (௧௧)

அருமறையண்ணல்சாலவகமகிழ்ந்தவட்குக்காயத்
திரியெனநாமங்கூறிமற்றவள்செங்கைபற்றிப்
பெருமறைமுனிவராங்குப்பேசியவேலைதன்னிற்
சுரரொடும்வேள்விசெய்வான்றொடங்கினான்றொடங்கலோடும். ()

துன்னெனவவையினூடுசோதனைபுரிவானுக்குக்
கண்ணுதன்மாயையாலோர்காபாலிவடிவமாகி
நண்ணினனண்ணலோடுநங்கணாயகனென்றுள்ளத்
தெண்ணலர்நிற்றனிற்றலேகுதியெனவிகழ்ந்தார். (௧௩)

ஏகுதியென்னவெண்டோளிறையவன்கபாலந்தன்னை
யாகுதிவேள்விச்சாலையகத்துவைத்தவண்மறைந்தா
னாகருமுனிவர்தாமுநாயகன்மாயமெண்ணார்
வேகமோடிகழ்ந்துகூறிவெண்டலையெடுத்தெறிந்தார். (௧௪)

எடுத்தெடுத்தெறியப்போகாதுடனுடனெய்தியாங்கே
யடுத்தடுத்துறைந்ததந்தக்கபாலமற்றதனைக்கண்டே

கடிப்புதுமலரோனுள்ளக்கண்ணினானோக்கிக்கண்டான்
வடித்தமுக்குடுமிவைவேல்வானவன்புரிந்தமாயம். (கரு)

எம்பிரான்மாயந்தேர்ந்தேயாவர்க்குமெடுத்தியம்பி
யம்புயாதனத்தோனஞ்சியஞ்செழுத்தினிதுகூறித்
தம்பிரான்கபாலம்வைத்ததலத்திலோரிலிங்கந்தாபித்
தும்பர்மாமுனிவரோடுமுகந்துபூசனைபுரிந்தான். (கசு)

பூசைசெய்திறைஞ்சிச்சூழ்ந்துபோற்றியேபுனிதன்றன்பா
லாசிலாவருள்பெற்றும்பருந்தவர்தங்களோடுந்
தேசுறுசுருதிவாய்மைத்திறந்தெரிந்துலகமுய்ய
வாசமாமலரோன்வேள்விமரபொடுபுரிந்தான்மாதோ. (கஎ)

மரபொடுபுரிந்தயாகமுடிவினில்வந்துவாணி
விரைமலர்வேதனண்டர்மின்னினைவேட்டுவேள்வி
தருசெயனோக்கியன்னான்றனைத்துறந்தாதிமூலந்
திருவளர்செம்பொற்புற்றின்மூர்த்தியைப்பூசைசெய்தாள். (கஅ)

வேறு.

பூசைசெய்தனள்போற்றியேபுற்றிடங்கொண்ட
வீசனின்னருளெய்தியேயெம்பிரான்செம்பொன்
மாசிலாமணிக்கோயிலின்மருங்கினிற்றவம்பூண்
டாசுதீர்சிவயோகத்தினமர்ந்தனளன்றே. (ககூ)

வேதநான்முகன்வேள்வியைவிதிமுறைமுடித்தே
யாதிமூலமாமருமணிப்புற்றிடத்தமர்ந்த
மாதுபாகனைவணங்கியேவரம்பலபெற்றுத்
தீதில்வானவர்தம்மொடுஞ்சேணுலகடைந்தான். (உ0)

கரியமாமிடற்றெம்பிரான்செங்கைவெண்கபால
மருவுதானத்தின்மலருறைமறையவன்றாபித்
துரியபூசையன்றாற்றலாலுலகெலாமந்த
வரியமூர்த்தியைக்கபாலிநாயகனெனவறையும். (உக)

தாவில்கார்த்திகைத்திங்களஞ்சதுர்த்தசிதன்னிற்
றாவிவண்டுறைசூரியதீர்த்தநீர்தோய்ந்து
பூவினான்றொழுங்கபாலிநாயகன்றனைப்போற்றிற்
பாவகோடிவிண்டொழிந்திடுங்கதிரெதிர்பனியில். (உஉ)

நண்ணியிங்கர்ஙகரோடம்புயன்யாகம்
புண்ணியின்புறமிக்கதைபடிப்பவர்கேட்போ
ரெண்ணில்பல்வளனெய்தியெண்டிசையிசைபரப்பி
விண்ணிலும்றரமகளிர்தோண்மேவிவீற்றிருப்பார். (உ௩)

பிரமயாகச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௦௯௦

## திருமணச்சருக்கம்.

தேவயாகபுரத்தினிற்செஞ்சடைத்
தேவதேவன்றிருவறந்தந்தஞோர்
தேவிதன்னைத்திருமணஞ்செய்தமை
தேவுசான்மறையந்தணிர்செப்புகேன். (௧)

மலரினுன்றருமைந்தர்பதின்மரிற்
றலைமைசான்றுளதக்கன்றலைமிசை
நிலவுவைத்தநிமலனைநோக்கியே
யலகின்மாதவமாற்றினனென்பவே. (௨)

ஆற்றுமெல்லையிலாற்றிருஞ்சென்னியான்
ஞேற்றினன்முனந்தோற்றலுந்தாழ்ந்தெழீஇப்
போற்றினனெதிர்போற்றலும்வேண்டிய
சாற்றுகென்றனன்றக்கனுஞ்சாற்றுவான். (௩)

இந்துசேகரவென்னொருகன்னியாந்
தந்துநல்லறந்தந்ததலைவியை
வந்துவந்துமணஞ்செயவேண்டுமென்
றந்தமில்லவன்கேட்கவறைந்தனன். (௪)

அறைந்தவவ்வரமாங்கருள்செய்துடன்
மறைந்தனன்மறையின்றலைவானவ
னிறைந்தெழுந்ததோர்நெஞ்சமகிழ்ச்சியிற்
சிறந்துதன்பதிசென்றுன்சிறுவிதி. (௫)

வேறு.

சென்றுதன்பதியின்மேவிச்சிலபகல்போயபின்றை
மன்றலங்கூந்தற்செவ்வாய்மனைவியர்தங்களோடும்

பொன்றிகழ்மணிகொழிக்கும்பொங்குகாளிந்திே
றுன்றுமாதவர்கள்பல்லோர்சூழ்ந்திடப்போந்தானமற. (௬)

போந்துயிரனைத்துமுய்யப்புனற்பெருந்துறையின்பாங்கர்ச்
சேந்ததாமரைப்பீடத்திற்சிவபிரானருளினாலே
மாய்ந்திடாவேதநாதவலம்புரிவடிவாய்வைகும்
பாய்ந்தநீருலகமீன்றபசுஞ்சுடரொளியைக்கண்டான். (எ)

முந்துசெய்தவத்தாற்கண்டமுதல்வன்மாமுளரிவாசச்
செந்தண்மாமலர்மேலிந்தவலம்புரித்தெய்வச்சங்கம்
வந்தவாறென்கொலென்னுமனத்திறும்பூதுகொண்டாங்
கெந்தைதன்னுணைதன்னாலெடுத்தனனெடுத்தவெல்லே. (அ)

வலம்புரிவடிவநீங்கிமரகதவண்ணச்சோதி
யிலங்கெழிற்குழவியாளுனிறைவியற்புதநீரொய்தி
யலம்புநீர்ச்சடையான்பங்கிலம்பிகைவந்தவாறு
புலங்கெழுகருத்தானேக்கிச்சிறுவிதிபுளகம்பூத்தான். (௯)

உவகையங்கடலின்மூழ்கியுலகெலாம்பயந்தாடன்னைத்
தவலருங்கற்பிற்றேவிதன்கரத்தளித்துவெய்ய
பவமுழுதகற்றுந்தெய்வப்பைம்புனலாடிப்போந்து
குவலயம்புகழுந்தக்கன்றன்பெருங்கோயில்சார்ந்தான். (௧௦)

மற்றவன்கரத்துநல்கவாங்கியகௌரிதன்னை
யற்றமில்சிறப்பிற்போற்றியன்பொடுவளர்த்தானென்ப
பொற்றொடிவேதவல்லிபுனிதமாமுனிவீரன்று
ணற்றவமாண்புதன்னையாவரோவிற்றுநீரார். (௧௧)

அகிலமுமலரோனாதியாருயிர்த்தொகையும்பெற்ற
முகிழ்முலைமுதிராக்கன்னிமுழுதுலகுடையதக்கன்
மகளெனவளருநாளின்மற்றவண்மதிதோய்சென்னிப்
பகவனைநோக்கிப்பன்னாட்பன்னருந்தவம்புரிந்தாள். (௧௨)

பணங்கொள்வாளரவப்பைம்பொற்பணியணிபரமமூர்த்தி
மணஞ்செயப்பெறுவனென்னுமரபொடுவிரதம்பூண்டாங்
கணங்கினர்சூழ்ந்துபோற்றவறமெலாமன்றளித்த
வணங்கியமருங்குனல்லாண்மாதவம்புரியுநாளில். (௧௩)

ஆதியோர்மறையோனாகியணைந்துபன்மாயமாற்றி
மாதவநிலைமைநோக்கிமகிழ்ந்துதன்வயங்குஞானச்

சோதிமாமேனிகாட்டிச்சுந்தரிகின்னைமன்றல்
வேதநூல்விதியிற்செய்தும்விரதத்தான்மெலியலென்றான். (கச)

என்றருள்வழங்கியீசனேகினினியேயவெல்லை
மீன்றன்மாமலரோன்மைந்தன்மற்றதுவினவிவல்லே
சென்றுலகீன்றவெங்கள்செல்வியைச்சிறப்பிற்போற்றித்
தன்றிருமனையிற்கொண்டுசார்ந்தனன்சார்ந்தபின்னர். (கரு)

கன்னியைவதுவைநீராற்கண்ணுதற்களித்தற்கேற்ற
நன்னகராரூரொன்னாடியேமுனிவரோடு
மன்னமூர்கடவுளாதியமரர்தங்குழாத்தினோடும்
பொன்னிநாடடைந்துதக்கன்கமலையம்புரத்திற்புக்கான். (கசு)

வேறு.

புக்குநாவலம்பொன்னினோர்புதுமணச்சாலை
யக்கணத்தினுங்காற்றியேயருமறைச்சடங்கு
மிக்கநான்முகன்விதித்திடவிமலநாயகியை
மைக்கொள்கண்டனுக்கீந்தனன்வதுவைநீர்மரபில். (கஎ)

ஈந்தபின்னராங்கெழின்மணிப்பீடமேலிறைவன்
வாய்ந்தகற்புடைமங்கையோடுறைமணக்கோலஞ்
சேந்தபூவினன்முதலினோர்தெரிந்துகண்குளிர்ந்து
வேய்ந்ததார்முடிவணங்கியேவிளம்புதலுற்றார். (கஅ)

கோதைதன்னைநீவதுவைசெய்தமர்ந்தவிக்கோல
மாதரன்பொடுகண்டுவந்துலகெலாம்வாழ
வாதிமாபராசத்திதன்றிருநகரத்து
வேதநாயகநாளும்வீற்றிருந்திடவேண்டும். (கசு)

என்றியம்பியேவேண்டலுமன்னவரிடத்துத்
துன்றுநல்லருள்வழங்கியேதொல்லையாரூரிற்
குன்றவில்லினனறந்தருகுமரியோடென்று
மன்றன்மாமணக்காட்சிதந்தமர்ந்தனன்மாதோ. (உ0)

உலகிலெண்ணிலாவூர்பலவிருப்பவாரூரி
லலகிலாவறம்வளர்த்தருளமலையையமல
னிலகுமாமணஞ்செய்துவீற்றிருந்தனனென்றுந்
தொலைவின்மாதவிரங்கர்ப்பெருமையார்சொல்வார். (உக)

கடந்தைதன்னெடும்வள்ளலாங்குறைமணக்கோல
மடைந்துகண்டுவந்தேத்தியவாடவரலரி
னிடங்கொண்மாதரிற்பொலிதருமாதரையெய்தித்
தொடர்ந்தவாழ்வொடுமமர்ந்துபின்னெய்துவர்துறக்கம். (உஉ)

மாதர்கண்டுவந்தேத்தியேவலங்கொடுவணங்கிற்
சீதரன்றனிற்சிறந்தவாடவர்புயந்திளைத்துப்
பூதலம்புகழ்வாழ்வினிற்சிறப்பொடுபொலிந்து
சோதிவான்பதந்துன்னியேநல்வளந்துய்ப்பார். (உ௩)

தக்கனெண்மகளாகமுன்றந்துபின்னுமையை
நக்கனன்மணஞ்செய்கதைநவிற்றிடக்கேட்கத்
தக்கவாடவர்தையலாரிரதியின்மதனின்
மிக்கமாதரைப்புருடரைமேவியின்புறுவார். (உச)

திருமணச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உககச.

## சோமநாதச்சருக்கம்.

சோமநாதனென்றுலகெலாமேத்துந்
தூயதோர்சிவலிங்கமாமூர்த்தி
காமர்தென்கமலாலயநகரிற்
கனிந்துபோற்றுவோர்கருத்திடைநினைந்த
வேமநல்வரமினிதளித்துறையும்
யாவராயினுஞ்சோமவாரத்திற்
றூமுவந்துசூழ்ந்திறைஞ்சியேயந்தத்
தனிப்பரஞ்சுடர்தனைத்தொழுதேத்தில். (க)

மருந்துமந்திரமாமணியிவற்றான்
மாறிடாதவெம்பிணியெலாமாறுந்
திருந்துகல்வியுஞ்செல்வமுஞ்சிறப்புஞ்
சித்தியுந்தனிமுத்தியுமெளிதிற்
பொருந்துமிம்மொழிவாய்மையாலந்தப்
புனிதநாயகற்கனையதோர்நாம
மருந்தவத்தினீர்வந்தவாறறைகே
னமலமாமறைவியாதனைதருளால். (உ)

வேறு.

தாமரைக்கணணுன்றந்தருடனையன்றந்தருடக்கனென்றுரைக் குந், தீமனக்கொடியோன்றன்பெறுமிருபானேமெனுந்தெரிவைய ர்தம்மைச், சோமனுக்களித்தானவனுரோகணிபாற்றொடர்ந்தபே ரன்பூண்டோவாக், காமமுற்றினிதுகலந்துமற்றவரைக் கலந்திலு தொழுகியகாலை. (க)

மற்றதுவினைவிச்சிறுவிதிதிங்கள் வன்கலைகுறைந்திடச்சாபஞ், சொற்றனன்சொற்றவேலையில்வெருவிந்துண்ணெனவெழுந்தனனு ரு, ருற்றனன்றேவதீர்த்தநீர்படிந்தானேதியஞ் செழுத்துநீறணிந் தான், புற்றிடங்கொண்டபுனிதநாயகனைப் போற்றினன்புகழ்மதிக் கடவுள். (உ)

போற்றியேயாங்கோர்புகழ்ச்சிவலிங்கம்புரைதவிர்விதிமுறை தாபித், தாற்றியேபூசைமும்முறைவலங்கொண்டடிதொழுதேத்தி னன்விடைமேற், றோற்றமில்பரமன்றோற்றிவேண்டியநீசொல்லெ னவெய்யதோர்தக்கன் சாற்றியசாபந்தவிர்ந்திடவரத்தைத்தந்தரு ளென்றனன்றந்தான். (௩)

தந்தருள்புரிந்தசங்கரன்றன்னைச் சந்திரன்பின்னரும்போற்றி யிந்தநல்லிலிங்கத்தென்றும்வீற்றிருந்தே யெனதுவாரந்தனிலீங்கு, வந்தெதிர்தொழுவோர்வன்பிணிமாற்றி மற்றவர்வேண்டியவரங்க ளெந்தைநீயளிப்பவேண்டுமென்றுரைப்ப வினையதோர்வரமுமீந்த னனே. (௪)

ஈந்துடன்மறைந்தானெந்தை யிவ்விலிங்கத்தேத்தியேசோம னுமிறைஞ்சிப், போந்துதன்பதியிற்சாபநோய்சிந்திப்பொலிவொ டுபுகழவீற்றிருந்தா, னுய்ந்தநூன்முனிவீரனையகாரணத்தாலணை ந்ததுசோமநாதப்பேர், வாய்ந்தவப்புனிதவண்சிவலிங்கமாசிலாமாம ணிதனக்கே. (௫)

துங்கவெண்மதிவெங்கலியுருவாரூர்த் தொன்னகர்மேவியோ ரிலிங்கந், தங்கநன்கமைத்தர்ச்சனைபுரிந்தடல்சேர்தக்கனுலுற்றவெ ஞ்சாப, மங்கவொண்கலைபெற்றுயர்ந்தவிச்சரிதமகிழ்ந்துரைசெய் பவர்கேட்போர், வெங்கயங்குட்டமுதற்பலநோயான்மெலிவுறார் பொலிவர்மன்மதன்போல். (௬)

சோமநாதச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உகஉ.

## தாரகைச் சருக்கம்.

இந்திரனாதியாயவிமையவர்க்கமுதமீயுஞ்
சந்திரன்மணந்ததெய்வத்தாரகைமாதர்முன்னம்
பைந்தடம்பொழிலாரூரிற்பகவதிபூசைசெய்த
வந்தமில்காதைசொலவனுசிலாவருந்தவத்தீர். (க)

தக்கனன்றிசைத்தசாபஞ்சங்கரனருளானீங்கி
மிக்கவானின்பச்செல்வமேவியசோமனென்பான்
மைக்குழலுரோகணிப்பேர்மாதுதோண்மணந்துமற்றத்
தொக்கமாதரையிகழ்ந்துமுழுவதுந்துறந்தானன்றே. (உ)

முழுவதுந்துறந்தவெல்லைமுகிழ்முலைமாதரின்ன
லழுவினுல்வெதும்பித்தங்களரும்பதநீங்கியாரூர்ப்
பழையமாநகரிலெய்திப்பகவதிதனைத்தாபித்துத்
தழைதருகாதலோடுந்தனித்தனிபூசைசெய்தார். (ங)

தனித்தனிபூசைசெய்துதாழ்ந்தினிதேத்தலோடும்
பனிப்பிறைமாலைகூடந்தற்பகவதிதோன்றிநீவிர்
மனத்திடைக்குறித்துவேண்டும்வரமுரைசெய்மினென்ன
வனப்பெடையன்னநல்லாராங்கினிதுரையலுற்றார். (ச)

மற்றெமையிகழ்ந்துநீத்தமதிப்பெருங்கடவுளெம்பாற்
பற்றுவைத்தினிதுமேவும்படிபுரிந்தளித்தியென்ன
வற்றமில்கருணையோடுமவ்வரமவர்க்குநல்கிச்
சுற்றுநீருலகம்போற்றுஞ்சுந்தரிமறைந்தாளன்றே. (ரு)

சுந்தரிமறைந்தவேலைத்தொழுதவணகன்றுதங்க
ளந்தமில்பதத்திற்சென்றாங்கணைந்தனரணைதலோடுஞ்
சந்திரன்விருப்பமெய்தித்தண்ணளிபுரிந்துசாலச்
சிந்தைகொளன்பிற்சேர்ந்துதிருந்துநற்சிறப்புச்செய்தான். (சு)

தாரகைமாதர்முன்னந்தனித்தனிபூசைசெய்த
வாரணமுதல்விகோட்டமட்டமிதன்னிற்சூழ்ந்து
நேர்தொழுதிறைஞ்சிப்போற்றுநிரைவளைமடந்தைநல்லார்
மாரனைவென்றபொற்பின்மகிழ்நரையெய்திவாழ்வார். (எ)

காளையர்வலங்கொண்டாங்குக்கருத்துறவணங்கிப்போற்றி
ரலர்நாறுங்கூந்தனன்னுதலிரதியன்ன

வான்பொருமதர்நெடுங்கண்மாதரையெய்தியன்னார்
தோள்கலந்தினிதுநாளுந்தொலைவுறுவின்பந்துய்ப்பார். (அ)

பகவதிதனைப்பூசித்துப்பண்டுதாரகையாமாதர்
நகுமதிமணாளன்றன்னைநண்ணியின்புறமிக்காதை
யகனமர்ந்திசைப்போர்கேட்போரனைவருமணம்புரிந்து
புகழ்மதனிரதிபோலப்பொலிந்தினிதின்பந்துய்ப்பார். (௯)

தாரகைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உ௧௩௧.

## பஞ்சபிண்டிகைச் சருக்கம்.

பஞ்சின்மெல்லடிப்பவளவாய்க்கயல்விழிப்பணைத்தோட்
கஞ்சமாமகள்காதலினருச்சனைபுரிந்த
பஞ்சபிண்டிகையெனும்பெயர்படைத்ததோர்சத்தி
யஞ்சமார்துறைப்பொய்கையாரூரிலுண்டறவீர். (௧)

அனையதோர்சிவசத்தியையன்புடனொருகால்
வனிதைமாரவர்வழிபடின்மாரனிற்பொலிந்த
வினியகேள்வனையெய்தியேயிரதியிற்சிறந்து
நனிமகிழ்ந்துநல்வளத்தொடுநண்ணுவர்நாளும். (உ)

அன்பினுடவரொருமுறையாதரித்தேத்திற்
பொன்பொலிந்தபூந்தாமரைப்பொன்னெனப்பொலிந்த
வின்பநல்லெழிலிலங்கிழைமாதரையெய்தி
மின்பிறங்கியநேமியானென்னவீற்றிருப்பார். (௩)

இரண்டுபோதுசூழ்ந்தெதிருறத்தாழ்ந்தினிதிறைஞ்சிற்
புரந்தரன்பதமெய்துவர்பொழுதுமூன்றேத்தில்
விரிந்ததாமரையயன்பதமேவுவர்நாற்போ
தருந்தவத்தினீர்தொழுதிடின்மால்பதமடைவார். (௪)

ஐந்துவெம்புலப்பகையினைமுருக்கியவறவீ
ரைந்துபோதுசூழ்ந்தன்புடனடிதொழுதேத்தி
லைந்துவாயரவேந்தியவாறுலாஞ்சடிலத்
தைந்துமாமுகனுலகினிலமர்ந்துவீற்றிருப்பார். (௫)

பங்கயக்கயஞ்சூழுமிக்கமலையம்பதியிற்
றங்குபஞ்சபிண்டிகையெனுஞ்சத்திதன்சரிதம்
பொங்குமன்பொடுபுகன்றவர்கேட்டவருலக
மெங்குநற்புகழோங்கவாழ்ந்தெய்துவர்கதியே. (சு)

பஞ்சபிண்டிகைச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகருஎ.

---

## அம்பைவிருத்தைச்சருக்கம்.

---

வித்தகமுனிவீராடகேச்சுரத்திலம்பையே விருத்தையென்றறையுஞ், சத்திகள்கோட்டமிரண்டுளவவற்றைத் தலையினுலிறைஞ்சியேசூழ்ந்து, பத்தியாற்றெழுவோர்பணிந்திடாவெய்ய பகைவரைவென்றிசைபடைப்ப, ருத்தரகுருவத்துத்தமபோகமுவப் பொடுதுய்த்துவீற்றிருப்பார். (க)

வேறு.

அறைந்தவவ்விருசத்திகள்வந்தவாறறைவன்
சிறந்ததண்ணளிவெண்குடைக்கருங்கழற்செங்கோன்
மறங்கொள்வேற்சமற்காரனுமன்னவன்பயந்த
பிறங்குபேரொழிறிருந்தியபேதையரிருவர் (உ)

அம்பைநேர்விழியம்பையேவிருத்தையென்றறையுஞ்
செம்பொனன்னவர்செய்யகோலரசரிற்சிறந்த
தம்பெருந்தனித்தலைவர்தந்தடம்புயந்தழுவி
யும்பர்காமுறுந்திருவொடுமுறைதருநாளில் (ங)

கவளமும்மதக்கடுங்கொலைக்களிற்றுவெங்கால
யவனராம்பகைவேந்தரான்மகிழ்நர்தாமிறப்பத்
துவளுநுண்ணிடைத்தோகையரிருவருந்துளங்கித்
தவிர்தல்செய்திடாத்துயர்கொடுபுலம்பியேதளர்ந்தார். (ச)

புலம்பிவாடியபூவையர்நம்முயிர்போலு
நலங்கொள்காதலர்த்தடிந்தபோர்நண்ணலர்மாதர்
[illegible]ரம்மில்வெந்துயருறக்காணுதுமென்னு
[illegible]தமாசினங்கொண்டனர்வஞ்சினம்பிடித்தார். ([illegible])

வேறு.

பிடித்தனர்வஞ்சினம்பெயர்ந்துதம்பதி
யடுத்தனர்தென்கமலாலயத்தினிற்
படித்தலம்புகழ்பராசத்திபங்கய
வடித்துணைவணங்கினரன்பிற்போற்றினர். (௬)

போற்றினராங்கவட்புரிந்துநோக்கியே
வேற்றுணைவிழியினர்விரதமேற்கொளா
மாற்றருஞ்சிவபராசத்திமந்திரஞ்
சாற்றினர்பற்பகற்றவம்புரிந்தனர். (௭)

மாதவம்பற்பகல்வருந்தியாற்றின
ராதிநாயகிவரமளித்தல்செய்திலள்
போதவிழ்கூந்தலார்புழுங்கிநெஞ்சகம்
யாதினியிழைப்பதென்றெண்ணினாரரோ. (௮)

எண்ணினருடற்றசையீர்ந்துசத்திதா
ளுண்ணினைந்தவண்மனுவுரைத்துவெந்தழற்
கண்ணுறவுய்த்தொருகடியமாமகம்
பண்ணினர்பாவைமார்பண்ணுமெல்லையில். (௯)

ஆயிரந்திமுகமாயிரந்தலை
யாயிரமாயிரமங்கைகொண்டுள
வாயிரங்கோடிவெம்பூதமங்கிவா
யாயிரங்கோடிநெட்டலகைசூழவே (௧௦)

கூர்நுதிவாளயில்குந்தம்வச்சிரஞ்
சோரிதோய்முத்தலைச்சூலமாதிய
வீரவெம்படைக்கலந்தாங்கிவேலைவாய்க்
கூரழலிருபெருங்கொழுந்தெழுந்தென. (௧௧)

பொருகடனிலமுதற்புவனம்யாவையு
மருளியவொருபராசத்தியாணையா
லிருபெருஞ்சத்திகளெரிகொள்வேள்விவா
யுருமிடியெனத்தெழித்துருத்தெழுந்தனர். (௧௨)

வேறு.

எழுந்தருளம்பைவிருத்தையாமிசைப்பேர்ச் சத்திகளிருவரு
மஞ்சுச், செழுந்திருமாதர்தமையெதிர்நோக்கி வேண்டியசெப்புமி

னென்னக், கொழும்புதுமலர்தூய்த்தொழுதுநின்றெங்கள் கொழு நனைக்கொன்றவெம்பகைஞ, ரழிந்திடவாடல்புரிந்திடவேண்டுமெ ன்றனரன்னதோரொல்லை. (கூ)

அலகைவெம்பூதப்படையுடனெழுந்தாங்கடலுடைமாற்றலர் தம்மைத், தொலைவுசெய்தொல்லைமீண்டனர்மீண்ட சத்திகடமை யெதிர்தொழுது, பலமுறைபோற்றிநாளுமிப்பதியைப்பாதுகாத்த ருண்மினென்றுரைததுப், பொலனிழைமாதர்வேண்டலுமாரூர்ப் புரத்தில்வீற்றிருந்தனரன்றே. (கச)

வீற்றினிதிருந்தசத்திகடமக்குவேறுவேறாலயம்விதித்துப்
போற்றினர்பூசைபுரிந்தவரருளாற்பூவையர்பொன்னுலகடைந்தார்
சீற்றமின்முனிவீரட்டமிதன்னிற்சித்திரையைப்பசிப்பிறப்பின்
மாற்றிலாவந்தச்சத்திகடம்மைவணங்குவார்பகைவரால்வருந்தார்.

இயம்புமாரூரினிலகிடுமம்பை விருத்தையென்றிசைப்பவர்கா தை, நயம்பெறக்கேட்டோருரைத்துளோர்யாரு நன்மைசால்சத்தி பேரருளாற், சயந்தனேயடைந்துதரியலர்ச்செற்றுத் தாரணிமுழு வதுமாண்டு, பயன்பெறுபோகபூமிசேர்ந்தின்பம் பல்லுகந்துய்த்து வீற்றிருப்பார். (கரு)

அம்பைவிருத்தைச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகஙரு.

---

## புரந்தரன்றவம்புரிசருக்கம்.

---

அரும்பவிழ்தாமரையமர்ந்தசெல்விமுன்
றிருந்துமாதவம்புரிதெய்வவெல்லையிற்
புரந்தரன்றவம்புரிகாதைபொங்கொளி
யிருந்தவமுனிவிர்காளிசைப்பன்கேண்மினே. (க)

சோரிவாய்க்கூர்முனேச்சுடர்கொள்வச்சிரத்
தாரினுற்பொலிந்ததோட்சதமகன்றனேப்
போரினுற்புரந்துபொன்னுடுகொண்டனன்
வீரவாற்கலியெனும்வெய்யதானவன். (உ)

விரிதருகட்லெனவெய்யதானவப்
பொருபடையிடையறப்புடையிற்சூழறத்
திருமலிவளம்பலதுய்த்துச்செம்பொனு
டரசுசெய்திருந்தனனுளிமொய்ம்பினுன். (௩)

புரிதருசமரிடைப்புறங்கொடுத்ததோர்
சுரர்பதிபாற்கடனடுவட்டுன்னியாங்
கரவணையறிதுயிலமர்ந்தநாரணன்
மரைபுரைதிருவடிவணங்கிக்கூறுவான். (௪)

ஞாட்பிடையெனைப்புறங்கண்டுநந்துறச்
சேட்புலங்கொண்டனன்செய்யசோரிவாய்
வாட்படைவாற்கலிமாவின்கேளவநின்
றாட்புணையன்றியோர்சரணமில்லையால். (௫)

தமியனேனிமையவர்தங்குழாத்தொடு
மமருலகடைந்திடவளித்தியாலெனு
வுமிழ்சுடர்வச்சிரனுரைத்துவேண்டலு
மிமிழ்திரைப்பாற்கடலிறைவன்கூறுவான். (௬)

வேறு.

ஆதியீசனைப்பூசைசெய்தாயிரம்வருட
மாதவம்பலவாற்றிடில்வாற்கலிதன்னைக்
காதுபோரிடைக்கடக்கலாமல்லதுவேறிங்
கோதிடும்பரிசொன்றிலையென்றவனுரைத்தான். (௭)

தளையவிழ்ந்தசெந்தாமரைத்தவிசுறைதலைவி
யொளிருமஞ்சுணங்கேந்தியமுலைமுகடுழத
துளபமார்பினன்சொல்லியவினுவெதிர்சொல்வான்
மிளிரும்வெண்பிறைக்கோட்டயிராவதவேந்தன். (௮)

ஓரிடத்தில்யானுறைந்திடிலொற்றினல்வினவிப்
போரிழைத்துயிர்வாட்டுவன்புன்றொழிலவுணன்
சீர்கொளர்ச்சனைமாதவஞ்செய்யுமாறென்கொல்
காருடற்படைநேமியாய்கழறுதியென்றான். (௯)

வாசவன்பகர்வாசகங்கேட்டுமோமாயன்
றேசமார்புகழ்க்கமலையிற்புற்றில்வாழ்சிவனைப்
பூசைசெய்தவண்மாதவம்புரிபவர்க்கென்று
மாசுறுந்தொழிலவுணர்தமூறுவந்தணையா. (௧௦)

என்றியம்பியேவிடுத்தலுமிந்திரனென்பான
சென்றுபுற்றிடங்கொண்டவற்பூசனைசெய்தே
யொன்றொராயிரம்வருடமாதவம்புரிந்துறைந்தான்
மன்றல்வாரிசமகடவம்புரியுமாநகரில். (௧௧)

ஆதிமூலமாமமலனைப்பூசைசெய்தன்னான்
பாதபங்கயமனநறும்பங்கயத்திருத்தி
மாதவம்புரிவரத்தினன்மாற்றலற்றடிந்து
தீதில்வானரசெய்தினனிமையவர்செம்மல். (௧௨)

புரந்தரன்றவம்புரிந்தவிச்சரித்திரங்கேட்போர்
சுரந்தவன்பொடுசொல்லுவோர்மன்னர்மன்னவரா
யரந்தையற்றுவாழ்ந்தல்லியங்கோதைபங்காளுங்
கரந்தைவேணியன்கருணையால்வானுலகடைவார். (௧௩)

புரந்தரன்றவம்புரிசருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௧௩௩

---

## சித்திரபீடச்சருக்கம்.

---

புற்றிடங்கொண்டவெண்டோட்புங்கவனருளினாலே
சொற்றமிழ்முனிவன்முன்னந்தொடுகடலுண்டகாதை
பற்றிகலாதியாயபழுதெலாங்கடந்தகாட்சி
நற்றவமுனிவிராய்ந்துநவிற்றுவனன்குகேண்மின். (௧)

வேறு.

முன்னொர்வைகலிலவுணருமுதியவானவருந்
துன்னிவெஞ்சமராற்றினராற்றலுந்தொலைந்து
மின்னல்வாட்படைத்தானவர்வென்கொடுத்திரிந்து
பின்னலந்திரைநேமியம்பெருங்கடல்புகுந்தார். (௨)

கரந்தவேலையிற்பகற்பொழுதுறைந்தனர்கங்கு
லிரந்தவேலையிலெழுந்தனர்மலைந்தனர்நிருத
ரரந்தையெய்தினர்முரிந்தனரமரர்போய்மலயத்
திருந்தமாதவற்றொழுதனரின்னணமிசைப்பார். (௩)

மல்வலங்கெழுதோளுடைமறங்கொள்வாதாவி
வில்வலன்பெருவிறல்வலிவீட்டியேவிசும்பி
னெல்வலந்தராதிகளுடனெழுந்ததோர்விந்தத்
தொல்வலந்தொலைத்தெங்கள்பாற்பேரருள்சுரந்து. (ச)

அன்றுகாத்ததுபோலகன்கடல்குறைத்ததனா
டொன்றுகார்க்கனல்வடவைகளுறைந்தனவென்னத்
துன்றுவாட்படைத்தானவர்தொகையினைக்காட்டி
யின்றுகாத்தருளென்றுநின்றேத்தியேயிரந்தார். (ரு)

அமரர்வேண்டலுங்குறுமுனிநெடுங்கடலதனை
யிமயமங்கைகோனருளினுலிமைப்பினிலருந்திச்
சமர்செய்வாட்படைத்தானவர்க்காட்டுதுஞ்சரத
நுமதுதுன்பினைவிடுக்குதிராலெனநுவன்றான். (சா)

நுவன்றெழுந்துபோய்நுவலருந்தேவதீர்த்தப்பேர்ப்
பவந்தொலைத்தருள்வாவியிற்படிந்துநீறணிந்து
சிவன்றிருந்தடிசிந்தையிலிருத்தியஞ்செழுத்தாங்
குவந்துகூறியேயொளிமணியாலயத்துற்றான். (எ)

உற்றிறைஞ்சியேவலமுறைசூழ்ந்துளமுருகி
நெற்றிமேனிமிர்கண்ணுடைநிலாத்தவழ்மௌலிப்
புற்றிடங்கொண்மாமூர்த்தியைவிதிவழிபூசித்
தற்றமில்லதோரன்பொடுபோற்றினனன்றே. (அ)

போற்றிசெய்தொருபுற்றிடங்கொண்டவன்கோயின்
மேற்றிசைப்புறத்தொருமணிப்பீடிகைவிதித்து
மாற்றிலீசன்றன்மந்திரசத்திகளனைத்து
மேற்றினன்றனதாணையாலினிதுதாபித்தான். (கூ)

வே று.

இனிதுதாபித்துப்பூசைவிதிமுறையிழைத்துப்போற்றி
யனகவன்மீகநாதனருளடைந்துதென்னான்
முனிவரனமரரோடுமுழுதினைக்கொத்துமொய்த்த
கனைகுரன்மகரவேலைக்கருங்கடன்மருங்குசேர்ந்தான். (கய)

மாமுனியெங்களீசன்மந்திரவலியினாலே
கார்முகமலக்கையாற்கடலினைவாருங்காலைத்
தாமமார்நறியகொன்றைச்சடையினிலமைந்தகங்கை
[illegible]னையமைந்தவவன்றவநவிலவற்றே. [illegible]

சந்தனவேலிச்சாரற்றடஞ்சுனேப்பொதியவெற்பிற்
செந்தமிழ்முனிவன்கையிற்செழுங்கடலடங்குந்தன்மை
யந்தரமடங்கமூடியடர்ந்தெழுமாலமெங்கள்
சுந்தரனகங்கைதன்னிலடங்கியதோற்றம்போலும். (கஉ)

நீலமாமணிப்பொற்செங்கைநிலவியகடலேமுன்ன
மேலேவானமரருய்யவிமலனஞ்சுண்டதென்னச்
சீலமாமுனிவனுண்டான்சிவனருள்பெற்ருேர்மேன்மை
கோலமாமலரில்வாழுங்குரிசிற்குங்கூறற்பாற்ருே. (கங)

குறுமுனிநெடியவேலேகுடித்துழிக்கொடியகூர்வா
யெறிபடைவச்சிரத்தாலிரிந்துமுன்கரந்துறைந்த
செறிதருவாைகளென்னச்சேர்ந்தவண்மிடைந்ததீய
வுறுகொலேயவுணர்தம்மையொல்லேயிற்றடிந்தாரும்பர். (கச)

தானவர்கிளேயனேத்துந்தடிந்தபின்மகவாறுதி
வானவர்மகிழ்ந்துசாலமலயமாதவனேப்போற்றி
மீனமார்கடலேமீளவிடுத்தருளெனவிளம்பத்
தேனிருந்தொழுகுதீஞ்சொற்செந்தமிழ்முனிவன்சொல்வான். ()

சகரர்தம்வழியின்மிக்கதலேமைசேர்தண்டாச்சீர்த்திப்
பகிரதன்பொருட்டுமுக்கட்பகவனதருளிஞலே
மிகுபெருங்கங்கைமேவும்விண்ணவிரனேயவெள்ளத்
தகறருமாழிவேலேவறுமைதானகலுமன்றே. (கசு)

என்றவனியம்பிவாஞேர்தம்மொடுமெய்தியாரூர்
மன்றலங்கொன்றைமௌலிவன்மீகநாதற்போற்றி
யன்றுதான்பூசைசெய்தவளவிலாமந்திரங்க
ளொன்றியமணிப்பொற்பீடந்தொழுதிவையுரைக்கலுற்ருன். (கஎ)

சித்திரபீடமென்னுந்திருந்தியதெய்வநாம
மித்திருமணிப்பீடத்திற்கின்றுதொட்டோங்கிமல்கப்
பத்தியாலிவணிருந்துமந்திரம்பன்னுவோர்கட்
குத்தமசித்தியெட்டுமெய்துகவெனவுரைத்தான். (கஅ)

இன்னணமியம்பிப்பின்னரிமையவர்தமைவிடுத்துப்
பொன்னவிர்புரிசையாரூர்ப்புனிதனேவிடைகொண்டேகித்
தென்னிளஞ்சிறுகால்சந்தச்செழும்பொழிற்றவழ்ந்துலாவுங்
கன்னியந்தமிழ்ப்பொருப்பிற்கடமுனியமர்ந்தானன்றே. (கக)

அட்டமிசதுர்த்தசிக்கணந்தமந்திரபீடத்தை
மட்டவிழ்மலர்கவேமிமரபொடுபூசைசெய்யி
லெட்டெனுஞ்சித்தியன்றியெண்ணியவெவையுமெய்தும்
விட்டொளிவிளங்குஞானமுத்தியுமெளிதின்மேவும். (உ0)

செப்பியதெய்வச்செம்பொற்சித்திரபீடத்தின்பா
லொப்பிலஞ்செழுத்துமுன்னுமந்திரமுவந்துரைப்போர்
முப்பெரும்புவனத்தில்லாப்பொருளினைமுன்னினுலுங்
கைப்படுபுனிதநெல்லிக்கனியெனக்காண்பரன்றே. (உக)

மலயம்வாழ்முனிவன்முன்னுன்மகபதிமுதலோர்வேண்ட
வலைகடலுண்ணவாரூரதனிடையடைந்தர்ச்சித்த
சிலைகொள்சித்திரபீடத்தின்செய்தியையுரைப்போர்கேட்போர்
புலமைசேர்கல்விசெல்வம்போர்மகளருள்பெற்றுய்வார். (உஉ)

சித்திரபீடச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகஅஅ.

---

## உச்செயினிபீடச்சருக்கம்.

பச்சைமரகதம்பழுத்தபடிவமாலும்
　　பஃறெரகைவண்டிமிர்தோட்டுப்பதுமத்தோனும்
வச்சிரனும்வானவருஞ்சனகாதி
　　மாதவரும்பூசைபுரிவன்மீகத்து
நச்சரவத்தொடிகெழுதோணெற்றிச்செங்க
　　ணம்பர்திருவாரூர்நன்னகரந்தன்னி
லுச்செயினிபீடமெனவுலகமேத்து
　　மொருகனகமணிப்பீடமுளதுமாதோ. (க)

வே று.

தேசுறுசிவயோகத்திற்றிருந்தியதவத்தின்மிக்கி
ராசுறுகொடியவெம்பேய்முயலகனழல்கொள்செங்கட்
காய்சினமிகுவெம்பூதகணங்களத்தெய்வச்செம்பொன்
மாசறுபீடந்தன்னைவலங்கொளநீங்குமன்றே.

பார்முழுதேத்துந்தெய்வப்படிமையீர்படலைவெச்தி
யாரழலன்னசிற்றத்தரவெயிறுமிழ்ந்தநஞ்சஞ்
சீர்கெழுமனையசெம்பொற்செழுமணிப்பீடந்தன்னை
யோர்முறைவலமாச்சூழினெல்லையிலொழியுமன்றே. (௩)

புணரிசூழுலகமெல்லாம்போற்றிடப்பொலிந்தவந்த
வணிகெழுநவமணிப்பொன்னுடகபீடந்தன்னைப்
பணிதல்செய்தினிதுசூழிற்படிமையீர்படிதவிர்ந்த
மணிமுதலவற்றான்மாயாவன்கொடும்பிணியுமாயும். (௪)

மங்கையோர்பங்கர்வாழுமனனுடைமுனிவீர்வானிற்
செங்கதிர்மண்டலம்போற்சிறந்தவத்தெய்வபீடம்
பொங்குதேமலராற்பூசைபுரிந்திடினினைந்தவெல்லா
மங்கையினெல்லிபோலவக்கணத்தெய்துமம்மா. (௫)

அனகனூரமர்ந்தவம்பொனுச்செயினிபீடத்
தினிதுறுசீர்த்திகேட்டோரியம்பினோரிருவருந்த
முனைகொடுவினைகளுய்கண்முடிவுறமுருக்கிமூவாப்
பனகபூடணத்தற்காளாய்ப்பல்வகைச்சித்தியெய்வார். (௬)

உச்செயினிபீடச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உகசுச.

## சித்திரச்சிலைச்சருக்கம்.

பொய்த்தபூதலத்தின்வாழ்க்கைபுரையறத்துறந்தபொய்தீர்
தத்துவமுனிவீர்தெய்வவாணிதன்றடத்தின்பாங்கர்ப்
புத்தலர்முளரிமேவும்புங்கவன்றன்னுள்வைத்த
சித்திரச்சிலையின்மேன்மைசெப்புவன்றெரிந்துகேண்மின். (க)

நகுமணிவெயிலெறித்தநற்சிலையதனைக்காணின்
மிகுசுடர்வழங்கும்வானில்வெங்கதிர்க்கடவுண்முன்னம்
புகுமிருட்பிழம்பினீட்டம்பொருக்கெனநீங்கியாங்குத்
தொகையறுபாவவீட்டந்துண்ணெனத்தொலைந்துநீங்கும். (உ)

வலமுறைசூழின்றுக்கான்மாபெரும்பூதமாதி
தொலேவுறுந்தொழிலினீங்காத்தொல்லேவெம்பிணிகணீங்கு
மலரின்மேலணங்குநீங்காதணேந்தருமளவிலாத
புலமையுஞ்சிறப்புமேலாம்போகமுமுண்டாமன்றே. (௩)

மற்றதனிடத்தின்வைகிமதிக்குறைதவழ்ந்துலாவுங்
கற்றையஞ்சடையான்பொற்றுள்கருத்தினிலிருத்தியன்று
னற்றமிலஞ்செழுத்துவிதிமுறையாய்ந்துநாவாற்
சொற்றிடிற்றெய்வக்கல்விதொலேவிலாச்செலவமேவும். (௪)

நண்ணலர்புறங்கொடுக்குமாண்மையுநவைதவிர்ந்த
விண்ணவர்தமக்குமெய்தாச்சித்தியுமேவுமன்றி
யெண்ணியபிறவுமெய்துமெய்திடற்கரியதொல்லே
யண்ணல்வான்கதியுமெய்துமறனுடையருந்தவத்தீர். (௫)

ஆடகேச்சுரத்தமர்ந்தவரியசித்திரச்சிலேச்சீர்
நாடுறுமுளத்தரின்பநற்செவியேற்போர்முன்னேப்
பாடுறுபவங்கள்வீட்டிப்பலவகைச்செல்வமெய்தி
வீடுறவரியைவாட்டிவிமலனதருள்பெற்றுய்வார். (௬)

சித்திரசிலேச்சருக்க முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - ௨௨00.

---

## துருவாசச் சருக்கம்.

சொல்லருந்தவத்தின்மிககதுருவாசமுனிவன்றெல்லே
மல்லலங்கமலேயீசன்வளரருளதனுன்முன்ன
மெல்லேயில்சித்தியாவுமெய்தியவிசைகொள்காதை
வெல்லரும்புலத்தைவென்றீர்விளம்புவன்விருப்பிற்கேண்மின். (௧)

தூயமாமறைதேர்காட்சித்துருவாசமுனிவன்முன்னஞ்
சேயமாமலர்கொள்வாசத்தேவதீர்த்தம்படிந்து
மாயவல்லிருளேவீட்டும்வளரொளிநீறணிந்தாங்
காயுநூன்மரபிலாற்றுமரும்பெறற்கடன்களாற்றி. (௨)

பூதலம்புகழுமாரூர்ப்புற்றிடங்கொண்டவெண்டோ
ளாதியையருச்சித்தேத்தியகத்தியமுனிபூசித்த

...தய்வச்செம்பொற்சித்திரபீடந்தன்னை
யேதமில்விதியிற்பூசித்திறைஞ்சியேயினிதுபோற்றி. (ரு)

செப்பருந்தெய்வஞானச்சிவலிங்கமொன்றுதாபித்
தொப்பில்பேரன்பினோடுமுவந்துமுப்போதும்பூசித்
திப்படியிழைத்துநாளும்பராசத்தியெல்லைதன்னி
லப்பெருமுனிவர்கோமானுச்சிரமம்புரிந்து. (சு)

அவ்விடையமர்ந்துகுன்றுவரியமாதவம்புரிந்து
சைவமாமுனிவர்மேலோன்சார்ந்தனன்சாருநாளின்
மைவளர்மிடற்றுமுக்கண்வானவனருளினாலே
யெவ்வமிலட்டசித்தியெளிதினிலெய்தினானே. (ரு)

அலகிலாவட்டசித்தியடைந்தவம்முனிவன்றாபித்
திலகுமாமலர்களேவியினிதுபூசித்தவந்தத்
தொலைவிலாமூர்த்திதன்னைத்துருவாசநாதனென்றே
புலமைசால்சிறப்பின்வாய்மைப்புலவர்தாம்புகல்வரன்றே. (சு)

வளர்பிறையட்டமிக்கண்வயங்குமம்மூர்த்திதன்னை
யுளங்நிறைகாதலோடும்பூசைசெய்துவந்துபோற்றி
லளவறுவளங்கொள்செல்வமட்டமாசித்திமுத்தி
யெளிதினிலெய்தும்வாய்மையீறிலாவிருந்தவத்தீர். (எ)

தொல்லைமாஞாலம்போற்றுந்துருவாசமுனிபூசித்த
வெல்லைதீர்மகிமையோடுமிலங்கிடுமிலிங்கமேன்மை
சொல்லவல்லவர்கேட்போர்கயேமாசித்தியெட்டு
மொல்லையினடைந்தரன்றனுயர்பதநண்ணிவாழ்வார். (அ)

துருவாசச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஉ0அ.

## குமரகோட்டச்சருக்கம்.

எண்டிசைமுழுவதூஉமேத்துபுற்றிடங்
கொண்டவர்வாழ்பதிக்குமரகோட்டமொன்
றுண்டுதொல்லறவிர்காஞ்னைத்தவாலயம்
பண்டமரேசர்தாம்படைத்ததென்பவே. (க)

அருமறைம்முனிவிர்காளந்தவாலய
மிருள்கெடவிமைத்திடுமேமமூதெயி
றிருமணிக்கோபுரஞ்சிகரமாதியாற்
புரைதவிர்சிறப்பொடுபொலிந்திலங்குமே. (௨)

உரைத்தவககோயிலொண்சிகரமோர்விசை
தெரித்திடிலாயிரம்பிறப்பிற்சேர்ந்துள
புரைப்பவம்யாவையும்பொங்குவெங்கதி
ரருக்கன்முன்னிருளெனவகன்றுமாயுமே. (௩)

அந்தமின்மாதவத்தறவிரன்னதோர்
மந்திரமும்முறைவலங்கொண்டோர்முறை
புந்திகொளன்பொடுபுரிந்துபோற்றுவோ
ரிந்திரனுலகினிலின்பமெய்துவார். (௪)

வேறு.

அனையபொற்கோட்டத்தமரர்கோன்மகளும் வள்ளியுமிருபுற த்தமரக், கனைகுரற்பசும்பொற்கிண்கிணியரற்றுங் காமர்பூந்தாம ரைச்செந்தாட், புனைமலர்க்காந்தட்பன்னிருதடந்தோட் பொன்மு டியாறுடைக்கடவு, டினகரத்தொகுதிகோடிதொக்கன்ன செழும ணிச்செம்பொனுதனத்து. (௫)

பாழிவாயரவுக்கமடமும்களிறும்பார்முதற்பூதமுஞ்சலியா
தாழிவாய்நெடியமாமுதறடிந்தவடலெகழூவடிமுனைவாகை
யூழிவாயழலினொளிறுவேலேந்தியூழிதோறாழிதென்கமலை
வாழிமாநகரங்காவல்பூண்டமரர்மாதவர்வணங்கவீற்றிருக்கும். (௬)

அருமறைமுனிவீராங்குவீற்றிருக்கு மறுமுகக்கடவுளைவலங் கொண், டுருகியேபோற்றிப்பூதவேதாளமுறுசினமுயலகனுதி, வெ ருவிவிண்டகலுமணிமுதலவற்றல் விளிந்திடாப்பிணிகளும்விளி யுந், திருகியபகைவஞ்சனைகெடுங்கெடாத செல்வமுங்கல்வியுமெ ய்தும். (௭)

கார்த்திகைநாளிலொருமுறையந்தக் கடவுளைக்கைதொழூஉப் பரவி, யார்த்தபேரன்பிற்போற்றுவோரொழுக்கமாரணம்வேள்வி நல்விரத, மார்த்தவந்திருவின்மலிந்தவந்தணராய் மாநிலம்புகழவீ ற்றிருந்து, சீர்த்தகுதெய்வமல்லலஞ்செல்வச் சிவபதமெய்துவர்தி ண்ணம். (௮)

கமலைமாநகரமறுமுகக்கடவுள் காவல்பூண்டிறைந்தகாரணமு, மமரர்தாமந்தவாலயமுன்ன ரமைத்ததுமன்னவராங்குக், குமரவே ண்மலர்த்தாள்பூசைசெய்தனந்தங் கொழுந்தழல்வேள்விசெய்தது வும், விமலமாமறைநூல்வியாதனதருளால் விளம்புவன்மேதகுதவ த்தீர். (௯)

வேதமாமுனிவர்விண்ணவர்சித்தர்விஞ்சையராதியோர்மேவி
மாதவம்வேள்விசெய்தனருய்வான்மாபராசத்திதன்னகரி
லேதமார்கலிநோயலகைதீர்காவிராக்கதரிவற்றிலுலென்றுந்
தீதுறுதினிதுகாத்தருளென்னச்சிவபிரான்றிருவருள்செய்து. (௧௦)

ஆதிநாட்காவலளித்திடநீங்காதருளொடுகாவல்பூண்டுறைந்தா ன், சோதிவேற்குமரனவனுறைகோட்டஞ்சுடர்மணியாடகத்தமை த்துப், போதினுற்பூசைபுரிந்தவற்போற்றிப்புலவர்மற்றவன்புரிவர த்தால், வேதநூற்றிறத்தினூறிலாதெண்ணில்வேள்விகள்புரிந்தன ர்மேனாள். (௧௧)

அந்தணீரந்தத்திறத்தினற்றேவ யாகமாபுரமெனுந்தனிப்பே ர், வந்ததாரூர்க்குவானவர்முன்னம் வகுத்தவக்குமரகோட்டகத்தி, லெந்தைபன்னிருதோளிளையவனோரா றெழுத்துமந்திரமினிதிசை க்கிற், சிந்தைகொள்கருமமுழுவதுமுற்றுமெய்திடுஞ்சித்தியோடொ ட்டும். (௧௨)

ஒப்பில்சீர்க்குமரகோட்டமென்றுன்றோ ருரைத்தவிம்மகிமை யைவிதியிற், செப்புவோர்நாவிற்கேட்பவர்செவியிற் செல்வமுங்க ல்வியுஞ்சிறப்பு, மிப்புவிமுழுதும்பொதுக்கடிந்தாளு மிறைமையு மிமையவர்புகழு, மப்பெரும்பதமும்பெற்றுவாழ்ந்தெமையாளறு முகன்றிருவடியடைவார். (௧௩)

குமரகோட்டச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௨௨௧

## சந்திரகோட்டச்சருக்கம்.

அந்தமில்புகழான்றுந்துமாரனேயம்பரீடன்
மந்தரவாகுவிக்குவாகுவாமன்னனின்னோர்
தந்துமுன்பூசைசெய்தசந்திரகோட்டமொன்றுண்
டெந்தைதன்றிருவாரூரினெல்லையிலிருந்தவத்தீர்.

அனையமுக்கோட்டநீங்காதமுதவெண்ணிலவுகாலுந்
தனிமதிக்கடவுளென்றுஞ்சார்ந்துவீற்றிருக்குமந்தப்
புனைமணிக்கோட்டமூன்றும்புரிவொடுவலங்கொண்டாங்கே
யினிதுவீற்றிருக்குஞ்சோமனிணையடியிறைஞ்சியேத்தி. (உ)

சோமவாரத்திற்பூசைதொடர்ந்தநல்விதியிற்செய்வோ
ரேமநல்வாழ்வின்மல்கியெண்ணிலாவின்பந்துய்த்து
நாமநீருலகமேத்தநன்கினிதமர்ந்துபின்னர்க்
காமுறுவளங்கொடிங்கட்கடவுடன்னுலகஞ்சேர்வார். (௩)

ஆலவெங்கொடியநாகமமுதவெண்டிங்கள்வவ்வும்
வேலையில்வலங்கொண்டேத்திவிருப்பொடுதொழுவோர்நோயான்
மாலுறுமிடியால்வாடார்வாழ்வொடுமகிழ்ந்துமல்கிக்
கோலவானரம்பைமாதர்குவிமுலைதிளைத்துவாழ்வார். (௪)

கந்தமாபுரத்திலுற்றகலைமதிகோட்டமேன்மை
நந்துறுதுணைப்போரன்பானற்செவியேற்போர்பாரிற்
சந்ததிமுதலாஞ்செல்வந்தழைந்துதீவினைகணீங்கி
யிந்திரனகரியெய்தியிசைபடவாழ்வரன்றே. (௫)

சந்திரகோட்டச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஉஉ௬.

## சூரியகோட்டச்சருக்கம்·

சீர்திகழ்தெய்வயாகமாபுரத்திற் றிருமறைத்தெய்வமாமுனி
வீர், சூரியகோட்டமூன்றுளவவற்றைத்தொழுதுமும்முறைவலஞ்
செய்யி, லாரணருயிர்கொறீவினைமுதலாமளவில்வெவ்வினைமுழுத
லும், பார்வலஞ்செய்தபயனுமாமேதம்பண்ணியபயனும்வந்தெ
ய்தும். (க)

மூன்றுகோட்டத்துமுறைமுறையாகமூன்றுகாலமுமுதுபரித்
தேர், வான்றிகழ்கதிரோன்மன்னிவீற்றிருக்குமற்றவன்றன்னைமுப்
போது, மான்றபேரன்பின்முறைமுறைபோற்றினழுகுநோய்குட்
டநோய்முடைபூன், கான்றபுண்ணுறுநோய்சூலைநோய்முதலாங்க
டியவெம்பிணியெலாங்கழியும். (உ)

அந்தமுக்கோட்டத்தருங்கதிர்க்கடவுளாரருள்வரத்தினன்மேனு, னாய்ந்தவர்கதையிலொருகதையுரைப்பனுயர்புகழ்விடங்கமாபுரியென், றிந்தமூவுலகுமிசைக்குமோர்பதியி லிருபிறப்பாளன்மற்றொருவன், முந்துவெங்குட்டநோயினாற்சாலமுதிர் துயருழந்தனனன்றே. (௩)

உழந்திடுநாளின்மறையவனொருவனெண்கதிரும்பரிற்படரா, தெழுந்துபாரிடத்திலெய்தியதென்ன வெய்தினன்மற்றவனிடத்திற், செழுஞ்சுடர்வடமீனனையமாமனைவி தன்னொடுஞ்செங்கரங்கூப்பிப், பிழம்பிருள்விழுங்கும்பிறங்கியசுடரிற் பிறங்குருப்பெற்றவாறென்னே. (௪)

இசைமதியென்னவப்பெருமறையோ னிசைத்தலுமிப்பெருமறையோன், றிசைபுகழ்காஞ்சியென்பதிநின்போற்றீயவெங்குட்டநோய்படைத்தேன், வசைதவிராரூர்மூன்றுகோட்டத்தும்வாழிருங்கதிரைமுப்போது, நசையொடுமுறையிற்போற்றியிவ்வுருவநண்ணினனெனநவின்றனனே. (௫)

நவின்றதோரளவின்மற்றவன்கற்பினங்கையோடெம்பிரானாரூ, ருவந்தினிதடைந்தேயனையமுககோட்டத் தொளிர்கதிர்க்கடவுளைமுறையி, னிவந்தபேரன்பிற்காலமோர்மூன்று நெறியினிற்போற்றியேயந்தச், சிவந்தவெங்கதிரோன்றிகழுருப்பெற்றுமற்றவன்சேணுலகடைந்தான். (௬)

தினகரன்மூன்றுகாலமுமுறையிற்றினந்தினம்வைகுறுங்கோட்டத், தினியநற்காதையேத்துவோர்செவியிலேற்பவரிசைபரந்தெங்குங், கனையிருடுரக்குங்கதிருடலம்பெற்றுக்கயமுதனோய்களினீங்கிப், புனிதமெய்ப்புலவராகியேவிண்ணிற்பொலிகுவர்புகரிலாமுனிவீர். (௭)

சூரியகோட்டச்சருக்க முற்றிற்று.

---

அ. திருவிருத்தம்-௨௨௩.

# உருத்திரகோட்டச்சருக்கம்.

பருப்பதச்சிலையார்புற்றிடங்கொண்ட பரமர்தம்பதியினிற்பதி னோ, ருருத்திரர்கோட்டமொன்றினோ டொருபானுண்டவைமும் முறைசூழ்ந்து, கருத்துறவொருகாற்கை தொழுதிறைஞ்சிற்கருத ருந்தவத்தினலுயர்ந்த, திருத்தகுமுனிவிர்பதினொருகோடிபிறப்பி னிற்றீப்பவந்தீரும். (க)

சொல்லருந்தவத்தீர்சித்திரைத்திங்கட் டௌறுசுக்கிலபக்கத், தெல்லையில்சிறப்பிற்சதுர்த்தசிதனனி லியம்பியவுருத்திரகோட்ட ந், தொல்லைநூல்விதியின்வணங்கியேமுந்நாழ்சூழ்ந்தினிதாங்குவிற் றிருக்கு, மல்லலஞ்சீர்த்தியுருத்திரர்த்தொழுவோர் மற்றவர்வடிவ மேயாவார். (உ)

அரிமுதலமரர்க்கரியதோரமலற்கன்புசாலருந்தவமுனிவீ, ரு ரைதருங்கோட்டத்துறைத்தவப்பதினோ ருருத்திரர்மந்திரமுரைக் கி, விரவிமுன்னடைந்தவிருளெனப்பாவம் யாவையுமிரிந்திடுமி மைப்பிற், கருதருஞ்சிறப்பிற்சித்தியோரெட்டு மெளிதினிற்கைவ ருமன்றே. (ங)

ஓதிசான்முனிவீருரைத்தவத்தெய்வ வுருத்திரகோட்டநேர் நோக்கிக், காதலினொருகாற்சேணுறநின்று காணினும்யோசனைக டந்து, தீதுறுபாவம்போய்மடிந்தொழியுந் தேய்ந்திடாச்செல்வமு ஞ்சிறப்பு, மேதினியரசுங்கல்வியுந்தொலையா விண்ணகவாழ்வும் வந்தெய்தும். (ச)

இந்தமாநகராருருத்திரகோட்டத் தியலுறுமகிமைகேட்டிடு வோர், புந்தியாரன்பிற்புகலுவோர்யாரும் பூதலமன்னவராகிச், சிந் தையினினைந்தசித்திகள்யாவுஞ் சேர்ந்துசேணுட்டரசெய்தி, முந் தைமாமுனிவர்தொழுதிடுங்கயிலை முதல்வனைப்போற்றிடப்பெறு வார். (ரு)

உருத்திரகோட்டச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உஉ௩௮.

## விந்தைகோட்டச்சருக்கம்.

இந்தவாரூர்காத்தளிப்பவெண்டிக்கேத்துஞ்சமற்காரன்
முந்தைஞான்றுதாபித்தமுரண்கொளரிமானேறுகைக்கும்
விந்தைகோயிலொன்றுளதுமுனிவீரந்தவியன்கோயில்
புந்தியன்பால்வலங்கொள்வோர்புவனிமுழுதுந்தனிபுரப்பார். (க)

வளரும்பக்கத்தட்டமியில்வலங்கொண்டந்தமணிக்கோயில்
விளையுமன்பினுங்குறையும்விந்தைதன்னைத்தொழுதேத்தி [ப
லொளிகொளிகல்வேற்பெருந்தானையொன்னலார்கள்புறங்கொடுப்
ரளவில்செல்வவளனுண்டாமட்டசித்தியவையெய்தும். (உ)

வேறு.

வார்கழல்வாகைவேலான்மன்னவனொருவன்செங்கட்
கார்மதவெள்ளையானைக்கடவுளர்தலைவனன்னான்
சேரலர்வணங்குந்தாளான்சித்திரவிரதனென்பான்
றாரணிமுழுதுந்தொன்னூடணிபுரந்தரசுசெய்தான். (ந)

அரசுசெய்தமருநாளிலமலவாரூரடைந்து
புரவலர்கோமான்றொல்லைப்புகழ்ச்சமற்காரன்முன்னந்
திருநகர்காப்பச்செய்ததேவியைவலஞ்செய்தாங்குப்
பரிவொடுதொழுதுசாலப்பல்பெரும்பூசைநல்கி. (ச)

மரபொடுபோற்றிப்பன்னுண்மதுகைவேன்மன்னர்மன்னன்
விரதமோடொழுகுநாளின்மெய்த்தவமுனிவர்நோக்கிப்
புரவலரேறேயிந்தப்போர்மகடனைவலங்கொண்
டுரிமையின்வணங்கிநாளுமொழுகுமாறென்கொலென்றார். (ரு)

வேறு.

முனிவர்கேட்டுழிமுந்துபைங்கிள்ளையாய் முதல்விகோயிலி னெல்லை, யினிதுவைகினன்வைகுநாளிந்நகர் காக்குமிவ்விறையாள் பொற், சின்கரம்புடைசூழ்ந்ததோர்வரத்தின் முன்னறிவொடுதிரைவையந், தனிபுரந்தருடலைவனுத்தோன்றி யித்தலைவியாலயஞ்சூழ்ந்து. (சா)

நாடொறும்பணிந்தேத்துதல்செய்தன னலங்கொண்முற்றொடர்பாலென், றூட்ல்வேலினுன்றைந்தனனறைதலுமற்புதமிகவெய்தி, நீமொதவரன்றுதொட்டன்னதோர் நிமலைதன்பூங்கோயில், பாடுலன்பொடுவலங்கொடுபோற்றியேவரம்பலபடைத்தாரால். (எ)

வேறு.

உரைத்தமன்னவனெப்பிலாவிறைவிதன்கருணை
வரத்தினாற்பகைமாற்றலர்தங்களைவாட்டி
யுரைப்பருந்திருவளத்தொடுபொலிந்துலகனைத்தும்
புரத்தல்செய்துபின்புலவர்தம்பொன்னுலகடைந்தான். (அ)

பறவைசூழுறப்போயதோர்பலத்தினாற்பாரிற்
கிறைவனாகியேபொன்னுலகெய்தியதென்னின்
மறுவிலாதவப்போர்மகளாலயம்வலஞ்சூ
ழுறிவினோர்பெறும்பேற்றினையாவரோயறைவார். (௯)

சயமளித்திடும்விந்தைதன்சரித்திரமுரைப்போர்
நயமலிந்திடக்கேட்பவர்நல்லருள்வாய்ந்து
பயன்விளைத்திடுசித்தியொட்டையும்படைத்துப்
புயவலத்தினாற்பொன்னுலகாளுவர்புதர்காள். (௧௦)

விந்தைகோட்டச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - உ௨௪அ

## காலவச்சருக்கம்.

காலனதாவிகொண்டகனைகழற்கமலச்செம்பொற்
காலனதருளினாலேகமலைமாநகரிலெண்ணில்
காலமாதவம்புரிந்தோர்கான்முளைதன்னைமுன்னங்
காலவமுனிவன்பெற்றகதையதுகட்டுரைப்பாம் (௧)

கருதருந்தவத்தின்மிக்ககாலவமுனிவனென்பா
னிருளறுவிரதத்தோடுமில்லறக்கிழமைபூண்டு
மருவினான்மருவுநாளின்மதலைதன்பொருட்டுவந்து
திருமகடவம்புரிந்ததிருவாரூரொலலைசேர்ந்தான். (௨)

தேங்கமழ்தேவதீர்த்தச்செழும்புனல்வாவிதோய்ந்தா
னோங்கொளிநீறணிந்தானெப்பில்வன்மீகநாதன்
பூங்கழல்போற்றல்செய்தான்பொலிசுடரிரவிதன்னை
யாங்கொளாகுவடத்தினீழற்றுபித்தானருந்தவத்தோன். (௩)

அருச்சனைபுரிந்துபன்னாளாசிலாவிரதம்பூண்டு
கருத்திலஞ்செழுத்துமுன்னிக்கருதருந்தவம்புரிந்
மருக்கமழ்பொழிலாரூரில்வைகினன்வைகுநாளில்
விரித்தசெங்கதிரஞ்சோதிவிண்ணவன்றோன்றினனே. (ச)

செங்கதிர்தோன்றலோடுஞ்செவ்வொளிவதனசீத
பங்கயமலர்ந்துதொல்லைப்பவவிருண்முழுதுநீங்கித்
துங்கமாமுனிவர்கோமான்சூழ்ந்துதாழ்ந்தெழுந்துநின்று
பொங்குபேரன்பினோடும்புகழ்முறைபோற்றினனே. (டு)

மிகுபுகழ்போற்றிநின்றவேதியர்கோமான்றன்னை
நகுசுடரிரவிநோக்கிவேண்டியநவிற்றுகென்னத்
திகழ்தருமுனிவனின்போலுலகெலாஞ்சிறப்பினேத்தப்
புகழொளியால்விளங்கும்புதல்வனைத்தருதியென்றான். (சா)

வேறு.

வரமளித்துடன்மறைந்தனன்வான்கதிர்ச்செல்வ
னரியநற்றவன்மகிழ்ந்தனன்றன்பதியடைந்தான்
பெருவளத்தொடுசிறந்தினிதமர்ந்தனன்பெற்றா
னொருதனித்திருமைந்தனையுலகெலாமுய்ய. (எ)

சுடர்க்கதிர்ப்பிரான்றோன்றியேதொல்வடநீழ
லிடத்தினல்கியதன்மையாலிலங்குபேரொளியிற்
படித்தலத்தினைவிளக்கியவந்தபாலகற்கு
வடித்தகேள்வியோர்புனைந்தனர்வடேசநன்னமம். (அ)

அந்தநல்லிளஞ்சேய்கமலாலயத்தடைந்து
தந்தைமாதவம்பற்பகல்புரிந்திடத்தன்னை
முந்துநல்கியசெங்கதிர்க்கடவுண்மாமூர்த்திக்
கந்தமில்லதோரம்பொனாலயமினிதமைத்தான். (கூ)

பாலனன்பொடுபூசைசெய்தேத்தியேபன்னாட்
சாலுமெண்வகைச்சித்தியிற்றலைமைபெற்றுயர்ந்தா
னலநீழலினாதிதன்கண்ணருளடைந்த
சீலமாதவர்க்கெய்திடாச்சித்தியுமுளதோ. (கo)

காலவப்பெயர்முனியவன்கான்முளைபோற்று
மாலிடத்தமரருக்கனையவனதுநாளிற்
சால்புபெற்றதோர்சத்தமிதனிலெ[illegible]ர்தொழுவோர்
ஞாலமேத்துநற்புதல்வரைப்பெறுவர்நற்றவத்தீர்.

பிறங்குகாலவப்பெயர்முனியிரவியைத்தாபித்
தறங்கொண்மைந்தனையடைந்துவாழருங்கதையிதனை
மறங்கடிந்தநன்மனத்தொடுகேட்பவருரைப்போர்
திறங்கொள்செல்வரைப்பெற்றுற்றிருவொடும்பொலிவார். (௧௨)

காலவச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஉ௬0.

## அரிச்சந்திரச்சருக்கம்.

வரிவண்டுபுடைமிழற்றுமணங்கமழலங்கன்மௌலித்
திரிசங்குநாமவேந்தன்றிருமைந்தன்றிருவாரூரிற்
பரமன்றாண்மனத்திருத்திப்பகரருந்தவம்புரிந்தோ
ரருமந்தமகனைப்பெற்றவருங்கதையறைதுமன்றே. (௧)

வேறு.

மணியிரண்டெனப்பிறங்கும்வள்ளலாயிரந்தலைப்
பணியிரண்டெனப்பிறங்குபுலமையாளிபடிமகட்
கணியிரண்டெனப்பிறங்குமண்ணல்பாவலர்க்குவெம்
பிணியிரண்டெனப்பிறங்குமிடிகடிந்தபெற்றியான். (௨)

மதியிரண்டெனச்சிறந்தகவிகைமன்னன்வானுலாய்
கதிரிரண்டெனச்சிறந்ததிகிரிமீளிகங்கைமா
நதியிரண்டெனச்சிறந்தநவைதவிர்ந்தபுனிதன்மா
விதியிரண்டெனச்சிறந்தமேன்மைநீடுவாய்மையான். (௩)

செய்யசெம்பொன்மலையிரண்டெனச்சிறந்ததிண்மையான்
வையமோம்புதாமரைக்கண்வால்வலம்புரிக்கைவண்
டுய்யகாரிரண்டெனச்சுரந்துநல்குகருணையான்
வெய்யகூற்றிரண்டெனவிளங்குவெங்களிற்றினன். (௪)

இருவர்வேலெடுத்தகாளையெனவிளங்குதிறலின
னிருவர்வேனின்மாரவேளெனத்திருந்துமெழிலின
னிருவர்மாநிதிப்பிரானெனப்பொலிந்ததிருவின
ரிபாகசாதனனெனத்தயங்குமிறைமையான்.

வேறு.

தண்பிறைமோலிதரித்தவர்பொற்றாள்
வண்கமலங்கண்மலர்ந்தமனத்தா
னெண்கதிரின்குலமுய்ந்திடவந்தோன்
றிண்புவிமன்னுயிர்செய்தவமொப்பான். (௬)

பொங்கொளியாலெழுபூதலம்வான
மெங்கும்விளக்கியவேந்தலிருட்கார்
வெங்கலிமாமதவேழமுழக்கு
சிங்கமடைந்தவர்செல்வமதன்னான். (௭)

சீர்கெழுமாமறைசெப்பியதான
மாரழல்வேள்வியளப்பிலதந்தோன்
வார்கடலாடைமடந்தைமணந்த
தார்கமழ்தோளரிச்சந்திரனென்பான். (௮)

வேறு.

காயும்வெய்யபுலன்கடிந்தகடவுண்முனிவர்தவமோங்க
வாயுமனுநூன்முறைதழைப்பவவனிமுழுதும்வளஞ்சுரப்பத்
தூயசைவவைதிகமாந்துகடீர்சமயம்பொலிவெய்தத்
தாயினினியவருள்பூண்டுதனிக்கோல்செலுத்திவைகினனால். (௯)

வேறு.

வைகுமெல்லையின்மதலைவேண்டியே
நெய்கொள்வேலுடைநிருபர்தம்பிரான்
பொய்கடந்தமெய்ப்புனிதர்போற்றிய
மைகொள்கண்டராரூரில்வந்தனன். (௧௦)

வந்துவந்துமாதவர்வணங்கிய
செந்தண்மாமலர்த்தேவதீர்த்தமா
மந்தவாவிதோய்ந்தமலநீறணிந்
தெந்தையஞ்செழுத்தெண்ணினானரோ. (௧௧)

நியமம்யாவையுநெறியின்முற்றினா
னியல்பினல்கினான்றானமெண்ணில
புயலுலாவுபொற்புரிசைசூழ்தருங்
குயிலுமாமணிக்கோயிலெய்தினான்.

வேறு.

எய்தியன்றுதிறலிக்கிரனென்பான்
செய்தபுற்றிலெழுசெஞ்சடைமுக்கண்
மைதழைந்தமணிகண்டர்மலர்த்தாள்
பொய்தவிர்ந்தவிறைபோற்றுதல்செய்தான். (கஉ)

போற்றினுலகுபூத்தவளோடு
மேற்றினுன்றனையிறைஞ்சிவலஞ்செய்
தாற்றினுன்விதியொடர்ச்சனையன்பான்
மாற்றலார்குருதிமாந்தியவாளான். (கங)

தேங்குபானுமைகொடெண்டிசைவீசு
மேங்குகங்கைமுடியோனருளெய்தி
யோங்குபேரொளிகொளோர்சிவலிங்க
மாங்குநூல்விதியினுற்றினனன்றே. (கச)

வேறு.

விதிமுறைதாபித்தன்பால்விமலனைவிதிவழாமற்
புதுமலர்தூவிப்பூசைபுரிந்துநல்விரதம்பூண்டு
கதிர்பரந்திமைக்குஞ்செவ்வேற்காவலன்கணிப்பில்கால
மதலைதன்பொருட்டிமாயாமாதவம்புரிந்தான்மாதோ. (கரு)

போதினுன்மூன்றுபோதும்புரைதவிர்பூசைசெய்து
காதலால்வணங்கிப்போற்றிக்காவலன்விரதத்தோடு
மாதவம்புரிதல்காணுமாமலைவல்லியோடும்
பாதிவெண்டிங்கள்வேணிப்பண்ணவன்றோன்றினனே. (கசா)

தோன்றலுந்தோன்றலஞ்சித்துண்ணெனத்தாழ்ந்தெழுந்து
கான்றுநீர்கண்கள்சிந்தக்கைம்மலருச்சிகூப்பி
வான்றிகழ்செம்பொற்கோட்டுமலைமகள்பாகனீங்காத்
தேன்றிகழ்கொன்றைவேய்ந்தசெல்வனைப்போற்றிசெய்தான். ()

வேறு.

வன்புறங்கொளாமையோடுவெலியபன்றிமாமருப்
பென்பின்மாலைகரியமாலையாதியாயவிமையவர்
மின்செய்மாலைவெண்டலைக்கலத்தினோடுவேய்ந்தசெம்
பொன்பொலிந்தமார்பினுய்போற்றிபோற்றிபோற்றியே. (கஅ)

திங்கள்வெண்ணிலாவரும்புசெந்துணர்க்கடுக்கையின்
கொங்குவிண்டுயிர்த்தலர்ந்தமலரினொடுகூவிளைப்
பைங்குறுஞ்செழுந்தளிர்ப்பரித்திலங்குபாய்திரை
பொங்குகங்கைவேணியாய்போற்றிபோற்றிபோற்றியே. (௨௰)

சீற்றவாளரவணைச்செழுந்துழாயலங்கலா
னாற்றினாறுமன்பினொடுமொளிவிரிந்தவிழிமலர்
மாற்றிலாதசெய்யதாமரைபுனைந்துவாழ்த்தியே
போற்றவாழிநல்கினாய்போற்றிபோற்றிபோற்றியே. (௨௧)

வெறியிலங்குமலர்விரிஞ்சன்வெண்டலைவெயின்மழு
மறியிலங்குகையினாய்வன்னியோம்புமாதவக்
குறியிலங்குமுனிவருய்த்தகொலைசெய்வெங்கொடும்புலிப்
பொறியிலங்குமுரிவையாய்போற்றிபோற்றிபோற்றியே. (௨௨)

வேறு.

எனப்பெரும்புகழினிதெடுத்தேத்தியேயிறைஞ்சி
யனற்கொழுஞ்சிகையளாவியவரக்கெனக்கரைந்த
மனத்தெழுந்தபேரன்பினான்மாமலர்க்கண்கள்
புனற்பொழிந்திடநின்றனனின்றதோர்போழ்தில். (௨௩)

வேறு.

அரசனையருளினோக்கியாலமர்கடவுள்யாது
கருதினைகழறுகென்னக்கருதியதிசைத்தானெந்தை
வரமதுதந்தானுங்குமலைமகண்முனிந்தேயென்னைப்
பரவுதல்செய்திடாதபகரரும்பாவந்தன்னால். (௨௪)

அருள்புரிமதலைவெவ்வாயரவினான்முடிகவென்னு
வுரைபகர்ந்தீசனொடுமொல்லையின்மறைந்தாளாங்குப்
பெரிதுசெய்தவத்தானோக்கம்பெற்றுடனிறந்தோனென்னப்
புரவலனெரிதோய்ந்தன்னதுன்பத்திற்புழுங்கினானே. (௨௫)

ஆரானொவ்வநோயாலழுங்கிமற்றதனைவேந்தன்
பேரறிவென்னுந்தெய்வப்பீடுசான்மருந்தினீக்கி
யோர்மணிச்செம்பொற்பீடத்துமையொடுமகேசன்றன்னைச்
சாருநூல்விதிதெரிந்துதாபனஞ்செய்தானன்றே. (௨௬)

உமையொடுமகேசன்றன்னையொருபெருஞ்செம்பொற்பீடத்
தமைவுறவிருத்திப்பூசையாற்றியேவிரதம்பூண்டு

தமரவார்கழற்காண்மன்னன்றவம்புரிந்துறைந்தான்பண்ணுட்
கமலைமாதவம்புரிந்தகமலைமாநகரந்தன்னில். (உஎ)

விதிமுன்றவழிபட்டேத்தும்வேலையில்விமலையோடு
நதிபொலிபவளவேணிநாயகன்விடையிற்றோன்ற
வெதிர்தொழுதிறைஞ்சிமுன்னமெங்கணுங்கியைவாழ்த்திக்
கதிரிலைவைவேற்செங்கோற்காவலன்போற்றலுற்றான். (உஅ)

வேறு.

தமையோர்முனிவர்தமதுள்ளத்தண்டாமரையின்வீற்றிருக்கு
மமையாவின்பத்திருஞானவன்னப்பெடையேயரன்வாமக்
கமழ்பூஞ்சோலைப்பசுங்கிளியேகானவேதக்கருங்குயிலே
யிமயாசலத்தின்வளர்ந்துபலவண்டமீன்றவிளந்தோகாய். (உகூ)

வேறு.

நீறுதோய்மேனிநிமலனிறைசோதி
யாறுதோய்தேங்கொன்றையம்பொற்றிருமுடிமே
ஹறுபூஞ்சேவடியாய்நாவாற்சுவைகொள்ளா
வீறிலாவானந்தவின்பப்பசுந்தேறல். (௩௦)

பொன்னுடுகாவல்புரிந்தளித்தபோர்மதுகைக்
கொன்னார்வடிவேற்குமரன்றனையீன்ற
வன்னையமுதூறுமஞ்சொலிசைப்பனுவ
னன்னுவலோர்தொகுதிபெற்றநவநிதியே. (௩க)

மீனேறுவேலையுலகுய்யமேனாளிற்
கானேறுசந்தங்கமழ்பூம்பணிவரைமேற்
றேனேறிதழிச்சிவபிரான்கைப்பிடித்த
மானேயறமுழுதுமீன்றமடப்பிடியே. (௩உ)

என்றுபரவியிறைஞ்சியினிதெழுந்து
மன்றனறுங்கமலவண்பூங்கரங்குவித்துக்
குன்றமுறழ்திண்டோட்குரிசின்மனங்குழைந்து
நின்றுலகமீன்றாளைநோக்கிநிகழ்த்துவனால். (௩௩)

வேறு.

மின்றிகழ்சடையானோடும்விமலைநீவிடையிற்றோன்றி
நின்றதோர்கோலங்கண்டுநிறைந்தெழுகளிப்பினாலே
யொன்றையுமுணராதீசனெண்புகழ்போற்றிநின்றே
புன்றனையிகழ்ந்தேனல்லேனெங்கருளுதியொப்பாய். (௩௪)

அகிலவாருயிர்கட்கெல்லாமன்னைநீமுனிந்தால்யார்க்கும்
புகல்பிறிதுண்டோதேருப்புத்திரர்பிழைசெய்தாலுந்
தகுமருள்புரிவதீன்றோர்தங்கடனன்றோதாவா
விகபரமிரண்டுநல்குமிமயமேலுதித்தபாவாய். (௩௫)

தந்தருண்மதலையூறுதணந்துநின்கருணைதன்னா
லுய்ந்திடவளித்தியென்னாவுரவுநீருலகமன்னன்
வந்தனைசெய்தலோடுமகிழ்ந்துபேரருள்சுரந்து
செந்திருமுதலோர்போற்றுந்தேவிமற்றினையசொல்வாள். (௩௬)

யாம்பகர்சாபம்பொய்யாதீற்றினையெய்தியுய்ந்து
மேம்படுதிருவின்மல்கிமேதினிமுழுதுங்காக்குந்
தேம்பொழிதாரோய்நின்னோர்சேயெனத்தேவிசெப்ப
வாம்பரிவெய்யதானைமன்னவன்மகிழ்ச்சிபூத்தான். (௩௭)

மிகமகிழ்ந்தரசன்ஞானவிமலையைவிருப்பினேத்தி
யகநெகிழ்ந்துருகியன்னையடியிணைவணங்கிநின்று
புகழ்முறைதுதித்துப்போற்றிப்புரைதவிரிராசசூய
மகவினைபுரியவேண்டும்வரந்தருகென்னநல்கி. (௩௮)

மறைந்தனளீசனோடுமற்றவர்தம்மைப்போற்றி
யறந்தருசெங்கோலண்ணலருள்விடைபெற்றுப்போந்து
நிறைந்தமாநிதிபழுத்தநெடுமதிலயோத்தியெய்தி
யுறைந்துலகனைத்துமோம்பியுவப்பொடுமேவுநாளில். (௩௯)

ஓங்கருளுததியன்னவுமையொடுமகேசன்றன்னைத்
தேங்கமழ்மலராற்பூசைசெய்தநற்றிறத்தினாலே
வாங்குநீருலகமன்னன்மாமுதறடிந்தவைவேற்
பூங்கழன்முருகனன்னபுதல்வனைப்பயந்தான்மன்னோ. (௪0)

மாதிரம்விசயங்கொண்டுமாநிதிமழைபொழிந்து
மேதகுமிராசசூயவேள்வியும்விதியினாற்றிப்
பூதலம்புரந்துசாலப்புகழொடுபொலிந்துமல்கி
யாதியங்கடவுளீசனடிநிழலமர்ந்தானன்றே. (௪௧)

வேறு.

இமிழ்கடற்புவிமன்னவன்பூசைமுன்னிழைத்த
வமையுநல்லொளிச்சிவலிங்கமூர்த்தியையமல
வுமைமகேசனையொருவிசையுவப்பொடுதொழுவோர்
[illegible]ளத்திலெண்ணியவெலாமெய்துவர்சரதம். (௪௨)

இசைகொளிவ்வரிச்சந்திரனிருங்கதைகேட்போர்
நசையொடோதுவோர்நலந்தருபுத்திரப்பேறும்
வசையிலாவரசுரிமையும்வாய்மையுந்திருவும்
திசையெலாம்படர்சீர்த்தியுமடைந்துசேணுறுவார். (சஞ)

அரிச்சந்திரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௬0௯

## நளச்சருக்கம்.

கலிதருகழற்கால்வெள்வேற்காவலனொருவன்முன்னூர்
கலிதருநஞ்சமுண்டகடவுள்காதலித்துவாழுங்
கலியதுவெம்மையெய்தாக்கமலைமாநகரிலெய்திக
கலியதுநீங்கியுய்ந்தகதையதுகழறலசெய்வாம். (க)

வேறு.

தொல்லைவெண்டலைப்பலிகருழறிசையுடைத்தூயோன்
வில்லுமில்லுமாந்தன்மையான்மேருநீள்கயிலை •
மல்லன்மாலவனைவழங்கிடாதொழிந்தமாவளங்கொள்
செல்லைவென்றசெந்தாமரைச்செங்கையஞ்செல்வன். (உ)

வேதநூலுணர்வசிட்டனும்வேதியனுடைய
தாதலாலுயர்தேனுவையளிதுதிடமவிர்ந்தோன்
நீதிலவான்பெரும்புலவர்கோன்படைத்தலாற்றெய்வச்
சோதிமாமணிவழங்கிடாதொழிந்தநற்றூயோன். (௩)

ஊனமீந்திடாவுயர்மறைவாணர்தமொண்கைத்
தானமீந்ததண்புனலினூற்றடங்கடறந்தோன்
கானமீந்துவெங்கலிக்கெதிர்கருதலர்தமக்கு
வானமீந்தவர்பதிகலைவல்லவர்க்கீந்தோன். (ச)

பொங்கழற்பெருவேள்விகளெண்ணிலபுரிந்தோ
னங்கண்மாநிலந்தாங்கியவரசரேறன்னான்
வெங்கண்யானையான்வீரசேனன்றிருமைந்தன்
திங்கள்வானவன்றிருக்குலம்விளக்கியசெம்மல். (௫)

னிரைவலம்புரிமுரல்வயனிடநன்னாடர்
புரவலன்புகழ்வீமனல்கியதனிப்புதல்வி
திருவினல்லெழிற்றமையந்திமுலேமுகந்திளேத்த
பிரசமாலேயந்தோளினனளனெனும்பேரோன். (சு)

வேறு.

தருமமும்பொறையும்வாய்மையும்வீரத் தன்மையுமொழுக்க முநவேும், திருவுநற்குணமுந்திருந்துபேரழகுஞ் சிறப்புமொண்சீர்த்தியுங்கொடையு, மருளுமாதவமும்புனிதமுமன்பு மறிவுமோருருவுகொண்டாழி, யிருநிலமுதித்தாலென்னவந்துதித்தான் யாரவன்பெருமையையிசைப்பார். (எ)

வேந்தவன்முறையிற்செய்யகோல்செலுத்தி மேவுநாட்புட்கரனெனும்பே, ரேய்ந்ததோர்தாயத்திறையவனொடுசூ திழைத்துவெங்கலியினூரும், வாய்ந்தநன்னாடுந்தானேயுமரசு மாநிதியீட்டமுந்தோற்றுப், போந்தனன்கற்பிற்பொலிதருந்தேவி தன்னொடும்பொங்கழல்வனத்தில். (அ)

வேறு.

வனத்தினிற்கலிதுரந்துவையகங்காத்தமன்னன்
வனத்தினிற்கலிதுரப்பமனேயொடும்போந்தானந்தோ
வனத்தடங்கொங்கைஞானவண்கலேமகடோய்நாவின்
வனத்தலர்விதிக்குந்தொல்லூழ்வரம்பதுகடக்கவற்றே. (கூ)

பொன்னவிர்பொறிசுணங்கிற்பொலிந்தபூண்முலேயாளோடு
மன்னனேவனத்தினூடுவன்கலிதுரந்தபான்மை
தன்னேமுன்கடிந்துவெந்தீத்தழல்வனந்தன்னிலுய்த்த
வின்னலேநாடித்தானுமிழைத்ததுபோலுமம்மா. (க0)

பொலங்கொடியன்னபொற்பிற்பொங்கிளமுலேயாளோடும்
வலம்படுதானேமன்னர்மன்னவன்புனலுமின்றி
புலர்ந்துநாவறந்துவெந்தீயுறுபசியுடற்றவாடிக்
கலங்கனுெய்திப்பன்னாட்கானகத்துழன்றானன்றே. (கக)

கானிடையுழலுநாளிலொருபகற்கங்குறன்னிற்
றேனமர்குழலாளோடுஞ்சென்றோர்பாழ்ங்கோயிலெய்தி
பூனுமிழ்குருதிவேலானுறக்கத்திெனருவிநீங்கித்
தான்கன்றெழுந்தானவியுடவினேத்தணந்தாலென்ன. (கஉ)

ஆ[illegible]யன்னவனகன்றுநீங்க
நேரிழைதமியளாகிநெடுங்கணீர்மாரிநின்று
வார்முலைநனைப்பமாழ்கிமகிழ்நனைத்தேடிக்காணாள்
கூரிலையெஃகம்பட்டகுலமடப்பிணையிற்சோர்ந்தாள். (௧௩)

வாடினள்வெருவியேங்கிமயங்கினள்வனத்தின்பாங்கர்
நாடினணெடிதரற்றிநடுங்கினடுன்பத்தீயிற்
கூடினள்வெம்பியுள்ளங்கொதித்தனளுயிர்ப்பொடுங்கி
வீடினள்போலுமென்னவீழ்ந்தறிவொழிந்தாளன்றே. (௧௪)

மாண்டிடும்விதிவந்தெய்தாமரபினான்மாயாதாவி
மீண்டும்வந்தெய்தலோடும்வெய்துயிர்த்தெழுந்திரங்கி
யீண்டுநெய்வறந்தசெம்பொனெழின்மணிவிளக்கமென்னக்
காண்டகுமொளிபோய்மேனிகரைந்தனள்புலம்பலுற்றாள். (௧௫)

வேறு.

புல்வாய்புலியுறவுகூரப்புவிபுரந்த
நெல்வாய்மருதநிடதத்திருநாடா
செல்வாய்வனத்திற்றெரிவையைக்கைவிட்டே
யல்வாயகல்வதறனோவரசர்க்கே. (௧௬)

மேவார்கடம்மைவிடுக்கின்றவெங்கானத்
தீவாய்வனத்திற்சிறியேனைக்கைவிட்டே
யோவாவருளுமொழிந்தாயுரவோனே
யாவாவிதுவுந்தகுமோவரசர்க்கே. (௧௭)

உன்னன்புறுதுணையாயுற்றதமியேனைத்
தன்னந்தனியேதழல்வாய்வனத்திடையிற்
கன்னங்கரியவிருளூடுகைவிட்டா
யின்னஞ்செயத்தக்கதுண்டோவிறையோனே. (௧௮)

பேயுமுறங்கும்பிறங்கிருள்யாமத்திடையே
காயும்விலங்குமிடைகானினிடைக்கைவிட்டாய்
தீயசிறுதமியேன்செய்தகுறையாதோ
தாயினுலகனைத்துங்காத்ததனிவேந்தே. (௧௯)

வேறு.

எனப்புலம்பியேயிரங்கினளிரங்கியவெல்லை
கனக்கடுங்கருஞ்சிலைகளுங்கரைந்தனபறவை
யினக்குலங்களுமிரங்கினவிரங்குறுவன்கண்
வனக்கொடுங்கொலைமாக்களுமுருகினமாதோ. (௨௰)

இரங்கியேங்கியவிளங்கொடியிருள்வனமெங்குந்
திரிந்துமுன்னையூழுய்த்திடத்திருத்தகுதாதை
பொருந்துமாநகர்ப்போயினள்பிறந்தகம்புக்காள்
கருங்கடற்கவிழருங்கலங்கரையணைந்தென்ன. (உக)

வேறு.

அளித்தமேலவராற்றலுமொரு சிறிதாறிடாத்துயராறி, யிளை
த்தநுண்ணிடையிறைவனைக்காண்பதிங் கென்றுகொலென்றேத,
ளத்திலெண்ணியேயுறைந்தனண்முகங்குளிர்ந் துலகெலாமருள்
செய்யுந், துளித்தகார்முகில்வரவுபார்த்துறைதருந் தோகைமாமயி
ல்போல. (உஉ)

மடந்தைமற்றவடன்னைவெங்காட்டினில்வல்லிருளிடைநீங்கிப்
படர்ந்தகாவலன்கலிதொடர்ந்தலைத்திடப்பற்பலவனந்தோறு
மடைந்துவெந்துயருழந்திடும்வேலையிலொருபகலகன்புற்றி
னிடங்கொளெம்பிரான்றென்கமலாலயத்தெல்லையினயல்சென்றான்.

வேறு.

சென்றுமன்னவன்றென்கமலாலயந்தெரிந்தா
னன்றுவெங்கலியகன்றதாலணிமதிற்கயலே
துன்றுவண்புகழ்த்தோன்றல்வைச்சிரவணன்வதன
மன்றல்வாரிசங்கண்டவர்வறுமைபோன்மாதோ. (உச)

வெய்யதீக்கலிமேவுறாவியனகர்மேவித்
துய்யகோமகன்றொலைந்திடாக்கலிவலிதொலைத்துச்
செய்யமாமலர்த்தேவதீர்த்தப்புனலாடி
மையிலஞ்செழுத்தோதிநீறணிந்தனன்மரபால். (உரு)

புற்றிடங்கொளும்புனிதனைப்பூசனைபுரிந்தா
னற்றமில்லதோரன்பொடுமிறைஞ்சினனகத்துப்
பற்றிநின்றமாமூலவல்லிருளின்வேர்பறித்தா
னிற்றிடாதநற்றிருப்புகழேத்துதலுற்றான். (உசு)

வேறு.

போதுறைசெல்வப்பாவைபொறிசுணங்கேந்தும்பொன்னஞ்
சூதிளமுலைதோய்சந்தந்துதைந்ததண்டுளவமார்பன்
காதலினருச்சித்தேத்தக்கனலெரிதவழும்வைவாய்ச்
சோதியந்திகிரியீந்தசோதியேபோற்றிபோற்றி. (உஎ)

மதுவிரிவாசகாறுமடலவிழ்கமலக்கோயின்
முதுமறைநான்முகத்தோன்முறையினன்மூன்றுபோதும்
புதியதண்போதுதூவிப்பூசனைபுரிந்துபோற்ற
விதிதருந்தொழிலளித்தவிதியிலாய்போற்றிபோற்றி. (உ௯)

வெந்திறல்விசயவெள்வேல்விருத்திரவுணன்றன்னை
முந்துவஞ்சனையாற்கொன்றமுதுபழிபாவந்தீர்வான்
பைந்தடத்தேவதீர்த்தம்படிந்துபன்மலர்கடேவி
யிந்திரன்பூசைசெய்தவிந்துசேகரனேபோற்றி. (உ௲)

வன்கலிவாதையெய்தாமாநகருடையாய்போற்றி
நன்கலிநிறைநீர்வானநதிபொதிசடையாய்போற்றி
யென்கலிதொலைத்தாய்போற்றியேத்தியபுலவோர்தங்கள்
புன்கலிதொலைத்துவாழ்வுபுரிந்தகற்பகமேபோற்றி. (௩0)

வேறு.

எனவுளங்களைந்தேத்தியோர்தீர்த்தமாங்கிழைத்தோ
ரனகவொண்சிவலிங்கமோடருந்திறல்விந்தை
தனைநலந்தகவிதிமுறைதாபனஞ்செய்து
புனிதமாமலர்தூவியேபுரிந்தனன்பூசை. (௩௧)

பூசைசெய்துநல்வரம்பலபெற்றனன்போந்து
மூசுவண்டறைதாரினன்முந்துதானிழந்த
தேசமாநிதிபிறவெலாந்தேவியோடெய்தி
மாசிலாதபல்வளத்தொடுமன்னிவீற்றிருந்தான். (௩௨)

தேசுமல்கியஞாயிறுதிங்கள்வாரத்தின்
மாசியட்டமிதன்னினுமன்னவன்வகுத்த
வாசில்வாவிதோய்ந்தவணருச்சித்தவவ்விலிங்கம்
பூசல்வேலடல்விந்தைதாள்போற்றுதல்புரிவோர். (௩௩)

வெய்யதீக்கலிவாதையான்மேவுறூர்நோயாற்
பையுளெய்திடாரொண்ணியவளனெலாம்படைப்பார்
வையமேத்திடவானவரிறையெனவாழ்வார்
கையினெல்லிபோற்காணருங்கயிலையுங்காண்பார். (௩௪)

இறைவனுநளனிலிங்கமும்விந்தையுந்தாபித்
திறையுநூன்முறையருச்சனைபுரிந்தவிச்சரித

நிறையுமன்பொடுநிகழ்த்துவோர்கேட்பவர்தாமுந்
தறையெலாங்கலிதுரந்தரசாளுவர்சரதம். (௩௫)

நளச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௩௩அ.

---

## அசச்சருக்கம்.

---

அருமறைமுழுதுணர்ந்தீராதவன்குலத்துமன்ன
னொருவன்முன்பூசைசெய்தவொப்பிலாவீரச்செல்வி
திருவளர்கோயிலொன்றிச்செழும்பதியுளதக்கோயில்
புரிவொடுபோற்றுவோர்க்குப்போற்றலர்புறங்கொடுப்பார். (௧)

ஆழிசூழுலகங்காக்குமரசுவந்தெய்துமந்த
வாழியஞ்செங்கைவீரவணங்கவடன்னைமுன்ன
மாழியந்தடந்தோண்மன்னனர்ச்சித்தகாதைசொல்வ
னூழியாற்கரியபெம்மாற்கன்புசாலறவிர்கேண்மின். (௨)

ஆடல்வேற்றிலீபன்மைந்தனருண்மகனசனெனும்பே
ரேடலர்மாலைமொய்ம்பினிறையவன்றொல்லைவைகற்
பாடல்சால்சிறப்பின்மிக்கபடிபுகழ்வசிட்டனென்னுங்
கேடிலாமுனிவன்றன்னைப்பணிந்திவைகிளக்கலுற்றான். (௩)

நால்வகைத்தானையின்றிஞாலத்தைபளிக்கும்வண்ணஞ்
சீலநற்றவத்தின்மிக்கோய்செப்பெனச்செப்பலோடுங்
காலமுற்றுணர்ந்தகாட்சிக்காசறுமுனிவர்கோமான்
மாலைமொய்த்திலங்குந்திண்டோண்மன்னவற்கின்னசொல்வான்.()

மாயவன்றனக்குமுன்னமணிமுடியளித்தவாரூர்த்
தூயனைவணங்கியாங்குத்துர்க்கையைவிதியிற்றாபித்
தாய்மலர்தூவியன்பாலர்ச்சனைபுரியின்மன்ன
நீயுளந்தன்னிலின்றுநினைந்ததுமுடியுமென்றான். (௫)

குரவனீதிசைத்தலோடுங்கோமகன்பணிந்துபோற்றிப்
புரிவொடுவிடைபெற்றேகிப்புனிதவாரூரிற்போந்தாங்
கரனடிதொழுதுவீரத்தணங்கவடன்னைத்தாபித்
தரியநூல்விதிவழாமலொப்பில்பூசனைபுரிந்தான். (௬)

அருச்சனைபுரிந்துவீரவணங்கவளருளினாலே
திருத்தகுசிறப்பினோடுசெம்பொனாந்திண்டோண்மீது
தரித்துலகனைத்துமீன்றதாயெனத்தனிவேன்மன்ன
னுரைத்தமாமனுவினீதியொழுக்கத்தினோம்பல்செய்தான். (எ)

மாமுகில்பதந்தவா துவழங்கவெவ்விலங்குகள்வர்
தீமைசால்பகைவர்தம்மாற்பிறவினாற்நீங்குறுது
நாமநீருலகளித்தானாற்பெருந்தானையின்றித்
தாமவேன்மன்னர்மன்னன்சயமகளாணைதன்னால். (அ)

அன்னவடிருத்தாள்போற்றிநவமியிலவளமர்ந்த
பொன்னவிர்கோட்டமுககாற்புரியொடுவலஞ்செய்தோர்கண்
மன்னராயுதித்துவெய்யமாற்றலர்தமைத்துரந்து
நன்னிலம்புரந்துமேலாநற்கதிபெற்றுவாழ்வார். (கூ)

கோமகனசனூரிற்கொற்றவைதனைத்தாபித்து
நாமநீருலகமெல்லாநண்ணலார்வணங்கவோம்பி
யேமுறுங்காதையீதையிசைப்பவரினிதுகேட்போர்
தாமுமற்றவன்போல்வையந்தனியரசாள்வர்மாதோ. (க0)

அசச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உளச.

---

## தசாதச்சருக்கம்.

---

சந்தவண்டமிழாரூரிற்றனிச்சிவலிங்கந்தந்து
புந்திசாலன்பிற்பூசைபுரிந்ததொல்வரத்தினாலே
யந்தமில்புகழின்மிக்கவசன்மகனிராமனாதி
மைந்தனைப்பெற்றகாதைவகுத்துரைசெய்வன்மன்னோ. (க)

மருவலர்ஞாயிலிஞ்சிமட்டித்தமதமால்யானைச்
சரயுவண்புனலயோத்தித்தசரதனென்னும்வேந்த
னொருகுடைநிழல்பரப்பியுரவுநீர்நிலமடந்தை
திருவுடல்குளிரச்செய்துசெய்யகோல்செலுத்துநாளில். (உ)

ஓருதனிவெய்யகாரியுரோகணிபேதித்தூடு
வருவதுகருதிப்போதமற்றதுவினவித்தேரூர்ந்

திருவிசும்பெய்திநோர்கின்றெறிபுனற்சரயுநாடர்
புரவலனவனைநோக்கிமற்றிவைபுகலலுற்முன். (௩)

இடங்கொள்வான்ரோணிபேதித்திடைநெறியூடிநீதான்
படர்ந்திடிற்படர்ந்திடாதபதத்திஞெய்பன்னீராண்டு
தடம்புயன்மாரிதாராதாதலாற்சகடத்தூடு
நடந்திடல்நடந்தாயாகிற்றடிகுவனுந்தகத்தால். (௪)

என்றவனிசைத்தவெல்லேயிளநகைசெய்துமந்தன்
மன்றவுண்மகிழ்ச்சியெய்திவளரருள்சுரந்துநோக்கி
வென்றிவேலரசரேறேவேண்டியவரம்யாதென்னக்
குன்றுறழ்குவவுத்தோளான்ருெழுதிவைகூறுகின்றுன். (௫)

பாற்றினஞ்சுழலுஞ்செவ்வேற்பன்னிருபுயத்தோற்பெற்ற
வேற்றிரும்பதாகையெண்டோளிறையவன்வலக்கணீன்ற
மாற்றிலாமைந்தனைமந்தநீசகடத்தூடு
நூற்றுநான்குகத்தின்காறும்வாரலேயெனநுவன்றுன். (௬)

அன்னதோர்வரமுநல்கியலர்கதிர்ச்செல்வன்மைந்தன்
பின்னரும்வேறுவேறுபீடுசால்வரங்கணல்கி
யின்னருள்புரிதலோடுமெதிர்தொழுதிறைஞ்சியேத்தி
மன்னவன்விடைகொண்டொல்லேமாநகரயோத்திவந்தான். (௭)

வேறு.

இந்தமேன்மைகேட்டிவனெடுதோழமையெய்தி
யந்தவாசவனமர்ந்தனனமர்தருநாளிற்
றந்தநான்குடைக்களிற்றினன்றன்னவைதன்னின்
முந்தொர்வைகலங்கேகினனயோத்தியர்முதல்வன். (அ)

ஏகிமன்னவனிறைஞ்சலுந்தழீஇயருகிருத்திப்
பாகசாதனன்விருந்தளித்தினியனபகர்ந்து
மாகமேலரும்பொருள்பலவழங்கியேவிடுப்ப
மேகவண்கையான்மீண்டனன்மீண்டதோர்வேலே. (௯)

விண்ணின்வேந்தனுங்கோமகல்வினேபுரிவித்தான்
மண்ணின்வேந்தர்கோன்மருவியதலத்தும்மற்றதனை
நண்ணிநாரதனவிற்றினனவிற்றலுமனத்தி
லெண்ணியென்கொலென்றையுறுவைகினனிறைவன். (௧௦)

வைகியேசிலவைகல்போயகன்றுழிமற்றோர்
வைகல்வாகைவேற்சம்பரற்றடிந்தவன்வானின்
வைகும்வேந்தவைமேவினன்மேவலுமகிழ்ந்து
வைகல்செய்தனன்றானுறையாதனமருங்கு. (கக)

மருங்குவைகுறச்செய்துநன்மொழிபலவழங்கி
யிருந்தவெல்லையானிருந்ததோமொல்லையில்யாகம்
புரிந்தகாரணம்புகலெனப்புரவலன்புகல
நிரந்தபொன்னிணர்க்கற்பகநாடர்கோனிகழ்த்தும். (கஉ)

மருந்துநல்கியநெடுநிலாமதியிடைமறுப்போற்
றிருந்துநல்லெழிற்சேயிலாத்தீமைநின்னிடத்தி
னிருந்தகாரணத்தென்றனனென்றபோதெரியிற்
பொருந்துதாமரைபோன்முகம்புலர்ந்திவைபுகல்வான். (கங)

சேயிறீவினைதீர்வினைசெப்பெனவாரூர்
நாயகன்றனைநாயகிதன்னொடுநவிலு
மாயுநூன்முறைவழிபடலாற்றியேநினது
தூயதந்தைநல்வரம்பலபெற்றனன்றொன்னாள். (கச)

நீயுமங்ஙனமெய்தியேநிழன்மணிப்புற்றின்
மேயமூர்த்தியைவிதிமுறைவிருப்பொடுபூசித்
தாயவெல்லையிலருட்சிவலிங்கமுமமைத்துச்
சேயமாமலர்கொண்டுநீயருச்சனைசெய்யில். (கரு)

மக்கட்பேறுனக்கெய்திடும்வருந்தலென்றனக்கே
யொக்கப்போலுநற்றுணைவவீதுண்மையென்றுரைத்துப்
பக்கத்தால்விருந்துதவிவான்பதியிறைவிடுப்பத்
திக்குச்சேர்புகழ்த்தசரதன்றன்னகர்சென்றான். (கசு)

சென்றுதேவியர்தம்மொடுஞ்சேனையினோடு
நன்றுசான்றதொல்லமைச்சர்கடம்மொடுநறும்பூ
மன்றல்வார்பொழில்வண்கமலாலயமருவித்
துன்றுதேவதீர்த்தப்புனறோய்ந்துநீறணிந்தான் (கஎ)

அணிந்துசெய்கடன்முற்றியேயஞ்செழுத்தோதி
யிணங்குபல்கிளைசூழவேகோயிலுளெய்தி
வணங்கியேவலஞ்செய்துவன்மீகத்துமருவுங்
குணங்கொள்குன்றினையுமையொடுகண்டுகண்குளிர்ந்தான். (கஅ)

கண்டுகண்குளிர்ந்துள்ளநெக்குருகியேகனாந்
தண்டவில்லதோரன்பொடுதயரதன்பூசித்
தண்டர்நாயகனருளினாற்சிவலிங்கமமைத்து
மண்டுகாதலிற்பூசைசெய்திறைஞ்சினான்மரபால். (கக)

பூசைசெய்துசூழ்ந்திறைஞ்சியவெல்லையிற்பொருக்கென்
றீசனம்பிகைதன்னொடுதோன்றலுமிறைவ
னேசமோடுதாழ்ந்தெழுந்துநேர்நின்றுகைகூப்பித்
தேசுசான்றுளதிருப்புகழ்போற்றுதல்செய்வான். (உ0)

வேறு.

பண்ணொத்தசிறுகுதலைப்பசும்பாவைபாகத்தாய்
விண்ணாத்துப்புனற்கங்கைமிலைந்தபொலன்விரிசடையாய்
கண்ணெக்கக்குலைக்காந்தட்கண்ணித்தோளிளங்காளை
வண்ணச்சேவடிச்சுவடுவயங்கியபொன்மணிமார்பா. (உக)

சூலத்தாயோரிருவர்துணியாதசுடர்ச்செந்தீக்
கோலத்தாயுலகுய்யக்குருமணிக்கந்தரத்தமைத்த
வாலத்தாயனைவர்க்குமிறைவனெனமறையறையுஞ்
சீலத்தாய்வேழமுகச்செம்மலைத்தந்தருள்செய்தாய். (உஉ)

அம்பொனுயர்நாட்டமருமரியதவப்பல்லமரர்
தம்பொனரிமாலைநிரைதயங்கியமாமணிப்பத்திப்
பைம்பொனணிமாமகுடம்பலகோடிபடச்சிவந்த
செம்பொன்மறைக்கிண்கிணிக்கால்படைத்துடையசிவபெருமான்

வேறு.

கைம்மானமைத்தாய்கனல்காட்டுங்கண்ணுதலாய்
செம்மாலைவாசச்செழுங்கொன்றைச்செம்பொற்று
ளம்மானிமவான்மருமானெனவன்பா
லெம்மான்றனைப்போற்றிநின்றானிறைவர்பிரான். (உச)

வேறு.

போற்றிநின்றதோர்புரவலன்பாலருள்சுரந்து
தோற்றமில்லவன்வேண்டியதென்னெனத்தொழுது
சாற்றினானுளத்தெண்ணியவரமதுதந்து
மாற்றிலாதவவ்விலிங்கத்துண்மறைந்தனன்வள்ளல். (உரு)

அன்னவேலையிலகமகிழ்ந்தன்பொடுபோற்றி
மன்னரேறனான்வள்ளலைவிடைகொடுமெருங்கிற்

றன்றுதானைகள்சூழ்ந்திடத்தோகையரோடும்
பொன்னின்மூதெயிலயோத்திமாநகரிடைப்புக்கான். (௨௬)

புக்கமர்ந்துபின்புரவலன்புதுநிலாமௌலி
முக்கணனருள்வரத்தினலிராகவன்முதலா
மிக்கமைந்தரைப்பெற்றுயர்விண்ணெடுஞாலந்
திக்கெலாம்புகழ்சிறப்பொடுந்திருவொடுந்திகழ்ந்தான். (௨௭)

இலங்குமாநகர்க்கமலையிலிங்கமொன்றமைத்து
வலங்கொண்மைந்தரைவேண்டிமன்றசரதன்வணங்கு
நலங்கொளிக்கதைநயந்தினிதிசைப்பவர்கேட்போர்
குலங்கொள்புத்திரர்குலாவவாழ்வடைகுவர்மாதோ. (௨௮)

தசரதச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௬௭௬

## இ ரா ம ச் ச ரு க் க ம்.

வெங்கண்மால்யானைமீளிவிடுகதிரிமைக்கும்வேலான்
சங்கமாநிதியமன்னதசரதன்றந்தமைந்தன்
பொங்குபூம்புனலாருரிற்புகழ்ச்சிவலிங்கந்தாபித்
தங்கண்மாஞாலமுய்யவர்ச்சித்தவாறுசொல்வாம். (௧)

ஆடலஞ்சிலையிராமனங்கதனிரவிமைந்தன்
வீடணனனுமன்முன்னோர்சூழ்ந்திடவிமானமீதி
னீடியதானைவெள்ளநிரந்திடவிலங்கைநின்று
பாடல்சாலயோத்திமூதூர்படர்ந்ததோர்காலந்தன்னில் (௨)

எம்பிரானாரூரொல்லையெய்தியவெல்லையோடா
தம்பொன்மாமணிவிமானமமர்ந்ததங்கமர்ந்தகாலைச்
செம்பொன்வார்சிலைக்கைமீளிசிவனடிநினைந்துநோக்கிப்
பைம்பொன்மாமணிவிமானம்படர்ந்திடாவாறுதேர்ந்தான். (௩)

பகவனதின்பஞானப்பராசத்தியெல்லையிந்தத்
திகழ்திருவெல்லையந்தச்சிவசத்தியாணைதன்னா
லகன்மணிவிமானமோடாதமர்ந்ததென்றகத்துநாடித்
துகளறுமிராமனூர்திதுண்ணெனவிழிந்தானன்றே. (௪)

துண்ணெனவூர்திநீங்கித்தொழுதுதாழ்ந்தெழுந்துசூழ்ந்தோ
ரண்ணலாரூரின்மேன்மையறைந்தவரோடும்போந்து
புண்ணியதேவதீர்த்தம்படிந்துநீறணிந்துபோற்றி
யெண்ணியஞ்செழுத்துக்கூறியியல்புளிநியமமுற்றி. (௫)

கனகவாலயத்திலெய்திக்கைதொழுதிறைஞ்சிச்சூழ்ந்து
புனிதனைப்புற்றிடத்துப்புண்ணியமூர்த்திதன்னைப்
பனகவொண்பாயனீத்தபசும்புயல்வண்ணன்பண்பா
லினிதுநூல்விதியிற்பூசையிழைத்தனனேத்தலுற்றான். (௬)

வலங்கெழுநரமடங்கல்வன்றிறலழித்தாய்போற்றி
நிலம்பகவகழ்ந்தவேனநெடுவலிதொலைத்தாய்போற்றி
கலங்கெழுகடல்கலக்குங்கயல்விழிபறித்தாய்போற்றி
சலந்தரனுடல்பிளந்தசக்கரப்படையாய்போற்றி. (௭)

அந்தகவவுணனாவியழித்துலகளித்தாய்போற்றி
யந்தகன்றனையுதைத்தோரந்தணற்புரந்தாய்போற்றி
யந்தண்மாமதியும்பாம்புமணிந்தசெஞ்சடையாய்போற்றி
யந்தமுமுடிவுமில்லாவண்ணலேபோற்றிபோற்றி. (௮)

தீயதோர்தக்கனாற்றுந்தீமகஞ்சிதைத்தாய்போற்றி
பாய்புலிகளிறுரித்தபரமனேபோற்றிபோற்றி
காய்சினமுதுசூர்செற்றகந்தனைத்தந்தாய்போற்றி
தாயினுமருள்படைத்தசங்கராபோற்றிபோற்றி. (௯)

மூதெயின்மூன்றுந்தொன்னாண்முருக்கியமுதல்வபோற்றி
வேதநூலாலினீழல்விரித்தருள்விமலபோற்றி
சாதலும்பிறப்புமில்லாத்தலைவனேபோற்றிபோற்றி
பாதிபச்சொளிபடைத்தபரமனேபோற்றிபோற்றி. (௧௦)

உலகமோர்மூன்றுமேத்துமொப்பருந்தன்மைசான்ற
மலர்செறிதேவதீர்த்தவாவிநீர்தோய்ந்துமன்னர்
திலகமாம்வெள்வேற்செங்கோற்றிரிசங்குவேந்தன்போற்றப்
புலையுருநீக்கிமேலாம்பொன்னுலகளித்தாய்போற்றி. (௧௧)

வெந்திறலவுணர்கோமான்விருத்திரற்கொன்றபாவ
மிந்திரனீங்கியுய்யவின்னருள்புரிந்தாய்போற்றி
சந்திரகுலத்துதித்ததராபதிநளனைத்தொட்ட
வந்தவெங்கலிதுரந்தாரூரினிலமர்ந்தாய்போற்றி. (௧௨)

மன்னவன்கதிர்க்குலத்துமாசமற்காரனென்பான்
றன்னுடறணைவாவெங்நோய்தணிந்திடப்புரிந்தாட்கொண்டு
பொன்னடிநீழலீந்தபுனிதனேபோற்றிபோற்றி
யென்னையாளுடையாய்போற்றியாவையுமுடையாய்போற்றி. (கங)

பங்கயாதனத்துவேதன்முனிவரரொழுவர்பச்சைச்
செங்கண்மால்சனற்குமாரன்முதலினோர்செழும்பூங்கஞ்ச
மங்கைவெண்ணிறமடந்தைவானவர்பூசைசெய்த
வெங்கணயகனேபோற்றியீசனேபோற்றிபோற்றி. (கச)

எனவிறையெடுத்துப்போற்றியிராசவன்புற்றிடங்கொ
ளனகனதருள்பெற்றன்னுனம்பொனுலயத்திற்றென்பாற்
புனைமணியாலயத்திற்பொன்னஞ்சிங்காதனத்தி
லினிதுவீற்றிருக்குமெங்களீசன்முன்னெய்தினனே. (கரு)

எய்தியவீரசிங்காதனத்துவேலிளவலோடு
நெய்தருகுழலாளோடுமிழன்மணிச்செம்பொற்குன்றிற்
கைதருகதிர்பரப்பிக்காலையம்பரிதிகோடி
வைகியதென்னவைகும்வானநாயகனைக்கண்டான். (கசு)

வேறு.

கண்டுளங்குளிர்ந்துகிண்கிணிக்காலுங்கமழ்கழுநீர்மலர்த்தொடையும், வெண்டிருநூலுமார்பமுமபயவரதமிரின்வெயின்மழுவிளங்கு, முண்டகமலர்ப்பூங்கரங்களுமுகமு முகம்பொழிகருணையுநகையும், துண்டவெண்பிறையுஞ்சுடர்மணிமுடியுநோக்கியேதுணைவிழிகுளிர்ந்தான். (கஎ)

துணைவிழிகுளிர்ந்துதுணைக்கரங்கூப்பிச்சூழ்ந்துமும்முறையெதிர்தாழ்ந்து, மணிகெழுபசும்பொற்கிண்கிணிமிழற்றுமலர்ந்தசெந்தாமரைமுடிக்கொண், டுணர்வதுகடந்தவொருவனையுலகமுய்ந்திடவூழிதோறூழி, யிணைதவிர்சிங்காதனத்துவீற்றிருக்குமிறைவனையேத்துதலுற்றான். (கஅ)

மரைமலரணையின்மனுவதியகத்து நான்முகன்வாழ்வொடுவைக, நிரைமணியெறித்தநாகணைப்புறத்து நீடுவைகுண்டத்துநெடியோன், றிருவொடுமெருவவிந்திரபுரியிற்செம்பொனாரணைமிசைத்தேவ, ரரசன்வீற்றிருப்பவந்தணரூரினரியணையமர்ந்தருளரசே. ()

செம்பொறியுமிழ்கட்சேடன்மாமணிப்பொற் றீபமோராயிரமேந்தக், கம்புலாந்தரங்கப்பாற்கடற்பகுவாய்க் கறங்கிசைப்பேரிய,

ங்கறங்கப், பைம்பொனந்திருத்தாட்கிண்கிணியாடப் பல்லுயிர்த மைப்பமாமுகுந்த, னம்பொன்மார்பரங்கினைசைந்தினிதாடி யருளி யவாதியம்பொருளே. (உ0)

காருடற்செங்கட்டானவர்வீரக்கரியகற்றூணிரைவளைய, வார் சிலைக்குவடுவளைத்துவச்சிரக்கைவாசவன்செய்யகோல்வளையா, தா ரருட்கடைக்கண்வைத்தவேந்தன்பா லாரருட்கடைக்கண்வைத்த ழியாச், சீருடைச்செல்வமளித்தகிண்கிணிக்காற்றேவசிங்காதனத் தேவே. (உக)

கடல்வயிறழக்கிமலையுரங்கிழித்துக்கவிழிணர்க்கருஞ்சினைமா வி, னுடலிடைபிளந்தவுடம்பிடித்தடக்கையொருசெழுங்கனியொ டுமலையின், புடைவள ர்பசும்பொற்கொம்பொடுமருவிப்புலவர்வே ண்டியவளித்துலக, மடவரல்குளிரநிழல்புரிந்தாரூர்மாநகர்மருவுக ற்பகமே. (உஉ)

தேசுறுசெழும்பொற்றிகிரியந்தடக்கைச் செல்வனுஞ்செம் பொனுடளிக்கு, மாசறுசிறப்பிற்கற்பகநீழல் வானவர்தலைவனும்பு ரியும்,பூசனைவிரும்பாதுலகமுன்புரிந்தபுண்ணியத்திறத்தினிலாரூ, ராசறுபசும்பொனுலயம்விரும்பியருள்சுரந்தடைந்தவாரமுதே. ()

அங்கண்மாஞாலமுழுவதுமேத்து மமலமாந்தேவதீர்த்தப்பே ர்ப், பங்கயமலர்ப்பூம்பைந்தடம்படிந்து பங்குனியுத்திரந்தன்னிற், பொங்கொளிமணிப்பொனரவகிண்கிணிக்கால் புரிவொடுதெரிசனம் புரிவோர், தங்கள்வல்வினைதீர்த்தழிவிலாமுத்தி தந்தருடனிப்பர ஞ்சுடரே. (உச)

விரிகதிரொழுகுமரகதவண்ணன் விரைகமழ்நறுமலர்தூவி, மரபொடுபுரிந்தபூசனைமகிழ்ந்துமாமகப்பேறினிதளித்த, கருணைய ங்கடலேகமலைமாநகரங்காவல்கொண்டமர்ந்தகண்ணுதலே, சரண நின்சரணென்றேத்தியேதொழுதான் றசரதன்றருதனித்தனையன்.

வேறு.

கனகசிங்காதனத்துக்கடவுளைப்போற்றியன்னு
னனகவாரருளடைந்தாங்காண்டகையிராமனூரூர்த்
தனிநகர்க்குணபாலெந்துதயங்கொளியிலிங்கந்தாபித்
தினியவாகமநூல்கூறுமியல்பினிற்பூசைசெய்தான். (உகு)

புகழ்வளரயோத்திவேந்தன்பூசனைபுரிதலோடுந்
திகழ்கதிர்மைந்தன்காலின்செம்மல்வீடணன்மற்றேனோர்

மிருகவிவெள்ளிமாங்குவேறுவேறிலிங்கந்தாபித்
தகவிறையன்பிற்பூசைவிதிமுறையாற்றினோ. (உ௭)

காலையங்கதனிலீசன்கழல்பணிந்தினிதுவாழ்த்திச்
சாலுநல்வரங்கள்பெற்றுத்தணந்திடாவிடைகொண்டம்பொன்
மாலையந்தோளிராமன்வயப்படைமன்னர்சூழ
வாலையம்பழனவேலியணிமதிலயோத்திபுககான். (உ௮)

அணிமதிலயோத்திபுக்கவான்டையாவன்றுபத்து
வினைதவிரிலிங்கமைந்தோடிரவிசேர்முதலோர்கண்டு
மணியொளியிலிங்கமோர்காற்கண்டவர்வருமைகாணார்
பணியணிபகவன்செம்பொற்பதிமுமச்சலங்காண்பார். (உ௯)

கமலையிலேந்திலிங்கங்கவினுறவமைத்திராமன்
விமலநீறணிந்துபோற்றிவிளங்மாளிவிமானமூரு
மமலமாஞ்சரிதந்தன்னையறைபவர்கேட்போருமபர்
தமதுலகடைவர்மானந்தனையிவர்ந்தருந்தவத்தீர். (௩0)

இராமச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௬௦௯

## குசலவச்சருக்கம்.

தசரதவேந்தனல்குந்தனிச்சிலையிராமன்றந்த
குசலவராருர்தன்னிற்சொழுஞ்சுடரிலிங்கந்தாபித்
திசைதருவிதியிற்பூசையிழைத்ததொல்காதைசொல்வ
னசைவறுதவத்தின்மிக்கவருமறைமுனிவிர்கேண்மின். (௧)

திருத்தகுபுகழிராமன்சிவலிங்கமமைத்தநான்று
விரைப்புதுமாலைத்திண்டோள்விடணன்றன்பாலுற்ற
வரக்கர்தாந்தாபனஞ்செய்தருச்சித்தவிலிங்கநோக்கிப்
பொருக்கெனவாற்றிவீழ்ந்துபொன்றினரளப்பிலாதோர். (௨)

பல்லநாளினையவாற்றுற்பற்பலர்மடிதல்காணு
வெல்லையில்செல்வவாரூரிருந்தவரிராமனல்கும்
வெல்லருமைந்தரோடுவிளைந்தவவ்வாறனைத்துஞ்
சொல்லலுமாரூரொய்தித்துடைத்தனரனையதீமை. (௩)

நர்நீமைமுற்றுந்துறைகெழுதேவதீர்த்தக்
கடிப்புனன்முறையின்மூழ்கிக்க .வுணீறணிந்துகோயி
லடுத்தனரம்பொற்புற்றினமலனைவலங்கொண்டுள்ள
மடுத்தபேரன்பிற்றாழ்ந்துமரபொடுபோற்றினாரே. (௪)

மரபொடுபோற்றிப்பின்னர்மலைதருமடந்தையோடுந்
திருவிளங்குமரனோடுஞ்செம்பொற்சிங்காதனத்துத்
தனைமுழுதுய்யவைகுந்தம்பிரான்முன்னர்த்தாழ்ந்து
விரைமலர்தூவிநின்றுவிருப்பொடுவழுத்தல்செய்தார். (௫)

விருப்பொடுபின்னர்த்தங்கடந்தைமுன்விதியிற்றாபித
தருச்சனைபுரிந்தவோரைந்தமலமாமிலிங்கம்போற்றித்
தெரித்தநூன்முறையின்வேறுசிவலிங்கந்தாபித்தாங்கு
மருக்கமழ்மலராற்பூசைமரபொடுபுரிந்தார்மாதோ. (௬)

பூசைசெய்தீசன்செம்பொற்பூவடிதொழுதுபோற்றி
யாசறுவரங்கள்பெற்றாங்கன்பொடுவிடைகொண்டேகிக்
கோசலநாடடைந்தார்குசலவரென்னுந்தொல்பே
ரோசறுசிறப்பின்மிக்கவிருபெருநிதியமொப்பார். (௭)

வலங்கெழுமாதவத்தீர்மற்றவர்பூசைசெய்த
விலிங்கமோரிரண்டுமோர்காலெதிர்தொழுதேத்தினோர்கள்
கலங்கலுறெய்தார்செல்வங்கல்வியிற்பொலிந்துமல்கிப்
பொலன்கொள்வானடைந்துபின்னர்ப்பொருந்துவர்முத்தியின்பம்.

செய்தநற்றவத்தாலாரூர்சேர்ந்துநூல்விதியமைத்துக்
கொய்தலராருச்சித்தேத்துங்குசலவவிலிங்கமேன்மை
கைதவமின்றிக்கேட்போர்கழறுவோர்கவலைநீங்கி
யெய்தருஞ்செல்வமெல்லாமெய்திவீடடைவரன்றே. (௯)

குசலவச்சருக்க முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - உ௪௧௫.

---

## துந்துமாரச்சருக்கம்.

எந்தையீசன்றிருவாரூரொல்லையகத்தினிலங்கிலைவேற்
றுந்துமாரனெனுமரசன்றூயவிலிங்கந்தாபித்து
மூந்துபூசைபுரிந்தேபின்முடியாவின்பவீடெய்தி
யுய்ந்தவாறிங்குரைசெய்வேனுவப்பிற்கேண்மினுயர்தவத்தீர். (௧)

வேறு.

இரவிதன்குலந்திசையினாலிரவியையன்னான்
குரைதருங்கடற்குவலயங்குவலயாசுவனென்
றுரைதருந்தனிநாமமும்படைத்துளோனுலகிற்
றருமம்வேள்விகடானங்களெண்ணிலதந்தோன். (௨)

வேறு.

மாரனஞ்சுகண்ணுடையதோர் நெற்றியான்மலரடிமனங்கொண்டோன், மாரனன்னவன்வனப்பினால்வீரந்துமாமுதறடிவேற்கு, மாரனன்னவன்றுந்துவா மவுணனைவாட்டியேமாதுந்து, மாரனும்பெயர்படைத்தவன்றிருவினால்வானவரிறைபோல்வான். (௩)

வேறு.

அன்னவன்பொதுக்கடிந்தாழிவையகந்
தன்னொருகுடையினாற்கவித்துத்தாவில்சீர்
மன்னியசெய்யகோல்செலுத்திவைகினான்
முன்னுறுமிளமைபோய்மூப்புவந்துழி. (௪)

அரசதுதுறந்தனனறஞ்சுரந்தருள்
பெரியவர்வாய்மையாற்பிரமனாதியாஞ்
சுரரொடுமுனிவரர்தொழுதுசூழ்தரும்
புரைதவிர்கமலையம்புரத்திற்சேர்ந்தனன். (௫)

சேர்ந்தனன்படிந்தனன்றேவதீர்த்தநீர்
வாய்ந்தநீறணிந்தனன்மாசிலஞ்செழுத்
தாய்ந்தினிதோதினானம்பொற்புற்றிடைப்
போந்தமாமுதலினைப்போற்றினானரோ. (௬)

போற்றினான்புதுமலர்ப்பொய்கையொன்றவ
ணாற்றினானருட்சிவலிங்கமாகமஞ்
சாற்றியவிதிமுறைதாபித்தன்பொடு
மாற்றிலாமன்னவன்வழிபட்டேத்தினான். (௭)

பூசைதந்தேத்தலும்பொறியுடற்புலித்
தூசுடைவானவன்விடையிற்றோன்றினு
ஞசிலாவரசர்கோனஞ்சித்துண்ணென
நேசமோடிறைஞ்சிநேர்நின்றுபோற்றினுன். (அ)

நாயகன்வேண்டியநல்வரந்தனை
நீயுரையெனக்கரங்கூப்பிநின்மல
சேயவிம்மணியொளிச்சிவலிங்கந்தனி
னேயமோடென்றுநீநின்றுநாடொறும். (கூ)

சிறியனேன்செய்தவித்தீர்த்தமூழ்கியே
யிறைவநீயுறையுமிவ்விலிங்கமூர்த்தியை
மறுவில்பேரன்பினுல்வணங்கிப்போற்றுவோ
ருறுபவம்யாவையுமொழித்துநீக்கியே. (க0)

வேண்டியவரந்தரல்வேண்டுமென்றிறை
வேண்டலுமவ்வரம்விருப்பினல்கியே
மாண்டகுபிறப்பிலாவள்ளலன்னதோர்
காண்டகுமிலிங்கத்துக்கரந்துவைகினுன். (கக)

மன்னவனனையதோர்மூர்த்திமாமலர்ப்
பொன்னடிபூசனைபுரிந்துவைகியே
முன்னைவெம்பாசவல்லிருண்முருக்கியே
யுன்னரும்பேரொளியுருவமாயினுன். (கஉ)

வேறு.

தாவில்சித்திரைத்திங்கள்சேர்சதுர்த்தசிதன்னிற்
றேவுசான்றவிச்சிவலிங்கமூர்த்தியைத்தெரிசித்
தோவிலன்பொடுபோற்றுவோருளத்திடைநினைந்த
யாவுமெய்துவர்முத்தியுமெய்துவரொளிதின். (கங)

சந்துசூழ்பொழிற்கலியுருச்சத்திதன்புரத்திற்
றுந்துமாரனன்கமைத்தருச்சனைபுரிதூய
விந்தமூர்த்தியின்மான்மியமிசைப்பவர்கேட்போர்
சிந்துறுதுளத்தெண்ணியநலனெலாம்பெறுவார். (கச)

துந்துமாரச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-உசஉக.

---

# யயாதிச்சருக்கம்.

கன்னியம்புரிசையாரூர்க்கடவுள்பேரருளினாலே
முன்னொருவேந்தர்கோமான்மூப்பினைநீங்கிமூவா
வின்னிளம்பருவமெய்தியிலங்கொளிவிமானத்தேறிப்
பொன்னுலகடைந்தகாதைபுகலுவன்புலமைமிக்கீர். (க)

மகுடமாமன்னர்மன்னன்மதிக்குலம்விளங்கவந்தோ
னகுடனும்பெயர்புனைந்நரபதிநல்குந்தோன்ற
விகலடுபகைமால்யானையயாதியென்றிசைக்குமேந்தல்
புகழொடுபொலிந்துவையம்புரவுபூண்டுறையுநாளில். (உ)

வனைகழன்மிழற்றுநோன்றாள்வன்றிறலாளிமொய்ம்பிற்
குனிசிலைவயவரோடுமரசிளங்குமரரோடுங்
கனைகடற்றானையோடுங்காசினிக்கூறுசெய்யும் [றே
வினைகொள்வெவ்விலங்குமாய்ப்பான்வேட்டைமேற்படர்ந்தானன்

படர்ந்தனன்வேட்டைமுற்றிப்பருகுநீர்வேட்டுவேனி
லடைந்தவவ்வனத்திலாங்கோரருவியங்குன்றச்சார
லிடந்தனிலடைந்தானென்பவினக்களிவண்டினோடு
மிடைந்துதேன்மிழற்றும்பைந்தார்விடுகதிரிமைக்கும்வேலான். ()

வேறு.

விரைகொள்சந்தனவேலியஞ்சாரனீள்வெற்பி
லருவியம்புனல்பருகியேவெயிலழலாறிக்
கரியபைந்தழைச்செம்மலர்வனநிழற்கண்ணுற்
றுரியதன்கிளைசூழவீற்றிருந்தனனுரவோன். (ரு)

அனையவெல்லையிலயலொருமலர்வனத்தகத்துப்
புனைசெய்பூணெழிற்பொன்னவிர்பொறிசுணங்கேந்தும்
வனைசெய்குங்குமக்குவிமுலைவானரமகளி
ரினநெருங்கவோரிலவிதழ்மங்கையாங்கெய்தி. (சா)

தோடவிழ்ந்ததேம்புதுமலர்கொய்திடச்சூழ்ந்த
சேடிமார்தமைவிடுத்தொருசெண்பகநிழல்சேர்ந
தோட்டரிக்கணுளமுதிருந்தொழுகுமொண்கீத
மாடகங்கொள்யாழேந்தியேவடித்தனண்மாதோ. (எ)

வடித்ததீஞ்சுவைமதுரகீதத்தொலிசெவியி
லடுத்தகாலையிற்சாலவுமற்புதமெய்தித்
தொடுத்தவார்கழற்காளைதான்றுண்ணெனவெழுந்து
விடுத்தியாரையுநீங்கியக்காவின்மேவினனால் (அ)

மேவிமாந்தளிர்கோதியிம்மலர்வனமேவுங்
கூவுபூங்குயிலிசைகொலிவ்விசையெனக்குறித்தான்
காவல்வேந்திளங்காளையொண்காமர்யாழிசைக்கு
மோவியந்தனைக்கண்டுபின்றெளிந்தனனுள்ளம். (கூ)

வேறு.

கண்டனன்மையலெய்திக்கந்தருவக்குலத்தி
ஞெண்டொடிமகளோகாமனிரதியோவென்றுளத்திற்
கொண்டயலணைந்துநின்றகுரிசிலைத்தெரிதலோடும்
பண்டருகுதலைநல்லாள்பணைமுலைபசலைபூத்தாள் (கo)

பணைமுலைபசலையெய்திப்பனிமதிக்குடையோனெய்த
கணையினைவிலக்கியொள்வேற்காவலகாத்தியென்று
வணியிழைபகர்தலோடுமரசனிற்பயந்தார்யாவர்
பிணைவிழிபகர்தியென்னப்பெய்வளைபேசலுற்றாள். (கக)

சுந்தரநெடுந்தோட்காளைசுக்கிரனெனைப்பயந்த
தந்தையென்றிசைத்தாடையறலைவனிற்பயந்தமேலோர்க்
கிந்தவாறியம்பிமன்றலியல்பினிலென்னைச்சேர்தி
செந்திருவனையாயென்னச்செப்பியபடிமுடித்தாள். (கஉ)

முடித்துழிநகரிலெய்திமொய்குழலணங்கினோடு
கடிப்புதுமலர்மென்சேக்கைகலந்துவீற்றிருக்குநாளில்
வடித்தவேலிறைதனதுமரபினின்மங்கைதன்பால்
விடுத்திடாவன்புசின்னுண்மிகுதிவைத்தொழுகினால். (கங)

வெள்ளியத்திறமுணர்ந்துவேந்தன்பான்மூப்புமேவத்
தள்ளருஞ்சாபமாங்குதந்தனன்றந்தவெல்லை
யுள்ளநைந்தழுங்கிமைந்தனொருவன்பாலுதவிமூப்பை
யெள்ளருமிளமைவாங்கியிறையவன்றுய்த்தானின்பம். (கச)

வரிகழற்புலவுவைவேன்மன்னவனின்னவாறு
பரிவருத்தனைசெய்தின்பம்பருகியேபன்னாட்பின்னர்த்
திரையுடற்கிழமைதன்னைச்சேயவன்றன்பால்வாங்கி
விருநிலக்கிழமைதன்னோடிளமையையினிதளித்தான். (கரு)

மழவுசால்பருவந்தன்னைவழங்கியமைந்தன்றன்பாற்
கிழமைசால்பருவம்வாங்கிக்கெழுதவக்கிழமைபூண்டு
முழவுசான்மொய்ம்பின்வேந்தன்முனிமொழிவினவிமாறு
விழவுசான்மாடவீதிவியன்றிருவாரூர்சேர்ந்தான். (கசு)

மேதகுசிவதலத்துண்மிக்கதுகமலையென்றே
மாதவமுனிவர்மேலோன்மார்க்கண்டன்வகுத்துக்கூற
வேதமின்மனைவிமாரோடெய்தியவிறைவர்கோமான்
நீதுதீர்தேவதீர்த்தச்செழும்புனலாடினனே. (கஎ)

மனைவியரிருவரோடுமணிப்புனன்மூழ்கியாதி
யனகநீறணிந்தநாதியஞ்செழுத்தினிதுகூறிப்
புனிதவாலயத்துளெய்திப்புற்றிடங்கொண்டமூர்த்தி
தனதுதாள்பணிந்தெழுந்துதராபதிபோற்றினால். (கஅ)

உள்ளநெக்குருகிப்போற்றியொப்பிலானருளினாலே
வள்ளலந்துந்துமாரன்மரபினிற்பூசைசெய்த
வொள்ளியசிவலிங்கத்திற்குத்தரதிசையின்பாங்கர்த்
தெள்ளுநூல்விதியின்மன்னன்சிவலிங்கம்விதித்தல்செய்தான். ()

காவலனினிதுதாபித்தருளியகடவுடன்னைப்
பூவினாலினிதுபூசைபுரிந்தனன்போற்றல்செய்தான்
றேவியரிருவர்தாமுஞ்சிவலிங்கம்வேறுதாபித்
தோவறுவிதிகொள்பூசையுஞற்றினருவப்பினோடும். (உ0)

இன்னதோரெல்லைமூப்பினெல்லைநீத்திளமைசான்ற
பொன்னிவர்தெய்வயாக்கைபுரவலன்பொன்னம்பூவை
யன்னவர்தங்களோடுமடைந்தனனமலவீசன்
றன்னடிபூசைசெய்வோர்தங்களுக்கரிதொன்றுண்டோ. (உக)

அரும்பெறலிளமைச்செவ்வியாடகச்செம்பொன்யாக்கை
பொருந்தியவெல்லையாங்கோர்பொலன்சுடர்விமானம்வானி
னிருங்கதிர்மண்டலத்தினெய்தலுமதன்மேலேறித்
திருந்திழைமாதரோடுஞ்செம்மல்சேணுலகஞ்சேர்ந்தான். (உஉ)

மனைவியர்தங்களோடுமன்னவன்பூசைசெய்த
வனையதோரிலிங்கமூன்றுமன்பினாற்பூசைசெய்வோர்
நனிமுதிர்கிழமைநீங்கிநல்லெழிலிளமையெய்திக்
கனகநாடடைந்துபின்னர்முத்தியிற்கலந்துவாழ்வார். (உங)

வனிதையரிருவரோடும்வந்திறையயாதியாரூர்
தனிலொருமூன்றிலிங்கந்தாபனஞ்செய்தர்ச்சிக்கு
மினியவிச்சரிதங்கேட்போரிசைப்பவரவர்போற்றும்
புனிதநல்லிளமைபெற்றுப்போகமுண்டினிதுவாழ்வார். (உச)

யயாதிச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உசடுரு.

---

## விதுரச்சருக்கம்.

---

தருமநற்றவத்தன்மையிற்றலைமைசான்முனிவீர்
குருகுலத்தொருகுரிசிலாங்கோமசனாரூர்த்
திருநகர்த்தொழுதெம்பிரான்றிருவருட்டிறத்தா
லரியநற்பயனெய்தியவருங்கதையறைகேன். (க)

வேறு.

அறங்கொண்டதொர்படிவத்தனியண்ணலடற்சிலையின்
றிறங்கொண்டதொர்விஞைசைப்பெருந்திவேலைகடந்தோன்
மறங்கொண்டவைம்புலவேட்டுவர்வாகைத்திறல்சிந்திப்
புறங்கொண்டிடத்துரந்தோனிருமபுகழிற்கதிர்போல்வான். (உ)

பொறைவாய்மைநல்விரதத்தினிற்பொலிந்தோனெளிமலர்ந்த
பிறைசூடியபெம்மானடிமுடிசூடியபெரியோன்
மறைநால்வகைகண்டோன்றிருமைந்தன்வரையெறிந்த
விறல்வேலிளஞ்சேயன்னவன்விதுரனெனும்பெயரோன். (ங)

ஓவாதுநற்றருமத்தியலோம்பிப்புவியேத்தத்
தாவாவுயர்சிறப்பிற்பொலிதருநாளவன்றன்பான்
மூவாமறைதெரிகாலவமுனிபுங்கவன்வந்தான்
மேவாவெதிர்தொழுதாதனமளித்தானிசைவேந்தன். (ச)

வேறு.

ஆதனத்திருத்தியருச்சனைபுரிந்தாங்கவனருளாலயலிருந்து
மேதகுசிறப்பிற்குருகுலம்புரிந்தமெய்த்தவமனையநல்விதுரன்
மாதவமுனிவன்றிருமுகநோக்கிமாமகப்பேறிலாவெய்ய
தீதுறுபாவந்தீருமாறெவன்கொல்செப்புதியென்றுசெப்பினனே. ()

செப்பியவேல்லவிதுரனைநோக்கித் திருந்தெழிற்சேயிலாத்தி மை, மைப்பொழிலுடுத்தவளங்கெழுகமலை மாநகர்வணங்கவேகி ங்கு, மெய்ப்பில்வான்கதியுமெய்துமீதுண்மை யென்றனனுயர்தவத் துரவோ, னப்பொழுதவனைவணங்கியேவிடைகொண் டமலனூ ரில்வந்தடைந்தான். (சு)

செம்மலர்கமழுந்தண்டுறைத்தேவ தீர்த்தநீர்தோய்ந்துநீறணி ந்து, மும்முறைநகளைவலங்கொடுவணங்கி மூர்த்தொருபுற்றிடைமு ளைத்த, மைம்மணிமிடற்ஙோன்றனைத்தொழுதாங்கோர் வான்கதிர் மாசிவலிங்கம், பொய்ம்மைதீர்விதியிற்ருபனஞ்செய்து பூசனைபுரிந் துபோற்றினனுல். (எ)

போற்றுதல்செய்துதிப்பவமொருவிப் புரைதவிர்வரம்பலபெ ற்று, மாற்றருஞ்சிறப்பிற்றன்பதியடைந்தான் மற்றவன்றந்தவான் கதிரை, யேற்றமாவிலிங்கமூர்த்தியைஞாயி றிந்துவாரத்திலேமெ ட்டாஞ், சாற்றருந்திதியின்முறையினிற்ருெழுவோர் தனையரில்வி னைப்பவந்தவிர்வார். (அ)

குருகுலத்துதித்தவடல்கொள்விலவிதுரன் கொடிநெடுமாட வீதிகள்சூழ், திருநகர்க்கமலைதனிலவிதிமுறையோர் தினகரனிலி ங்கமொன்றமைத்து, மருமலரருச்சித்தேத்துமிச்சரிதம் வகுத்து ரைசெய்பவர்கேட்போ, ரிருநிலத்துரியபுத்திரப்பேறுற் றினிதுவா ழ்ந்தும்பர்நாடடைவார். (கூ)

விதுரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உசகூஉ.

## தருமபுத்திரச்சருக்கம்.

பகர்தருவிதுரன்முன்னோன்பாண்டுவாம்பெயர்படைத்த
புகழுடைவேந்தர்கோமான்புத்திரனூரூர்வைப்பிற்
றிகழ்சிவலிங்கந்தாபித்தருச்சனைசிறப்பினுற்றி
யகனிலவரசுபெற்றவருங்கதையறைதுமன்றே. (க)

ஆயிரங்கண்ணனொப்பானரசினுற்கலைதேர்பண்பா
லாயிரவிரட்டிநாவினரவநாயகனையொப்பா
னாயிரங்கதிரோனொப்பானொளியினலளிக்குமாண்பா
லாயிரம்பேர்படைத்தவாழிமாமுகிலையொப்பான். (உ)

திண்மையான்மேருவொப்பான்றிருமலர்வதனமேவுந்
தண்மையாலுலகம்போற்றுந்தன்குலக்கடவுளொப்பா
னுண்மையால்வேதமொப்பானூறுதீர்பொறையென்றேனும்
வண்மையால்வையமொப்பான்வளத்தினுனிதிக்கோனொப்பான். ()

அறத்தினுன்மலைமடந்தையருட்கடைவிழியையொப்பான்
மறத்தினுலுலகொறுக்குமாற்றலர்தம்மைவாட்டுந்
திறத்தினுலன்னுள்பங்கன்சிறுகைதன்னையொப்பா
னிறத்தினுற்பொலிந்தசோரிநெடுமுனைவாகைவேலான். (ச)

படையினுற்பரவையொப்பான்பற்றிகழ்தீர்ந்தபண்பி
னடுவினுனடுவனொப்பானுமகீர்ஞாலமேத்துங் [ன்
கொடையினுனிதியையொப்பான்குணத்தினுற்றனக்கொப்பில்லா
ஞுடையினுலிலங்குந்தோளான்றருமபுத்திரனுந்தோன்றல். (ரு)

திருவுமொண்சிறப்புமாயாச்சீர்த்தியுந்தவமுந்தேயா
வுரியவாணாளுமேலாமொழுக்கமுமறிவும்வீடும்
புரிதருதருமனல்கும்புத்திரனென்றுலன்னுன்
பெருமையைநான்முகத்துப்பிரமற்கும்பேசவற்றே. (சா)

தோன்றன்மற்றவனிராசசூயமேயாதிவேள்வி
யான்றநூல்விதிவழாமலளப்பிலபுரிந்துகேள்வி
சான்றவேதியர்கட்கெண்ணிறனங்கடந்துசால
மூன்றெனுமுலகமேத்தமுடிகவித்தரசுசெய்தான். (எ)

அறநிலைதழைப்பத்தேவராலயம்விழவுபொங்க
மறநிலைகுன்றக்குன்றுவைதிகசைவமல்க
வெறிகடலுலகம்வாழவிருந்தவமுனிவரோங்கத்
திறையளந்தரசோத்தச்செய்யகோல்செலுத்துநாளில் (அ)

எண்ணறுநிதியக்குன்றுமிருங்கடற்படையுநாடு
மண்ணன்மாநகருமற்றுமறனிலாவரவுயர்த்த
நண்ணலன்சூதால்வவ்வநல்லறக்கடவுளீன்ற
புண்ணியன்வனத்திற்புக்கான்விதியையார்போக்குநீரார். (சு)

வன்னியினிடைப்பிறந்தமாசிலாவடமீனன்ன
மின்னிறைகற்பின்மிக்கமெல்லியனங்கையோடும்
பின்னவர்தங்களோடும்பேரிருள்வனத்திற்பன்னுண்
முன்னியதருமமைந்தன்வைகினுன்வைகுநாளில், (கo)

பன்னகமுயர்த்தியோன்பழ்பலவஞ்சமாற்றி
யுன்னருந்துயர்விளைத்தாங்கொறுத்தனனொறுக்குந்தோறு
முன்னையூழ்வலியைநொந்துமுதுக்குறைபொறையின்மிக்க
மன்னன்வீற்றிருந்தான்மேலோர்தன்மையார்வகுக்கவல்லார். (கக)

வினைதொறுநெஞ்சம்போழுநெடுந்துயர்புரிந்தோர்மாட்டுங்
கனவினும்வெகுளிசெய்யாக்கருதரும்பொறையின்மிக்கான்
மனமிகமெலிந்துபன்னாள்வனைபடுகானமெங்குந்
தனதுயிரிளைஞரோடுஞ்சார்ந்தினிதுறையுங்காலை. (கஉ)

மாமழைவயிறுகீண்டவார்கொடிஞாயிலிஞ்சிக்
காமர்பூந்துவரையென்னுங்கடிநகர்காவல்பூண்ட
தேமலிதாரான்வாசுதேவனுந்திருப்பேர்ச்செல்வ
னுமமார்தருமன்மைந்தன்றன்புடைநண்ணினனால். (கங)

நண்ணியகாலைகாலைஞாயிறுகண்டசெய்ய
வண்ணமாமுளரிவாசமலரெனமுகமலர்ந்து
கண்ணிணைகுளிரநோக்கிக்கைதொழூஉப்பரவிக்காம
ரண்ணலந்தவிசினும்பரமர்ந்திடச்செய்தானன்றே. (கச)

செம்பொனாதனத்திருத்தித்திருந்தியசிறப்புச்செய்து
தம்பிமார்தங்களோடுந்தருமஞ்செய்தருமம்போலு
நம்பியாங்குபசரித்துநலந்தருமொழிநவின்று
தும்பிவாளெயிறொசித்ததோன்றலைநோக்கிச்சொல்வான். (கரு)

வேறு.

நாடுநன்னிதிப்பரப்புமாநகரமுமிழந்து
காடுநண்ணுபுநாடொறுஞ்சலங்கூருழந்து
வாடுகின்றயாந்தழையவந்தருண்மழைவள்ளால்
வீடுகின்றநாளில்லைகொலெங்கடவினையே. (கசு)

எனமொழிந்தனனரவுயர்கேதனனிழைத்த
வனலின்வெம்மைசாலின்னல்வஞ்சனைபலவறைந்தா
னினைதல்செய்தனனிளையரோடாங்கயலிருந்தான்
புனிதவேந்தன்மற்றவன்முகநோக்கிமால்புகல்வான். (கஎ)

தருமனல்கியதனையகேளறிவிலாத்தறுகட்
டிருகுதீயர்பாற்றிருவிற்குமுதுக்குறைதிருந்து
முரியநல்லறச்செய்கையினுயர்ந்தவர்தம்பான்
மருவும்வெந்துயர்வறுமைக்குநிலையின்றுமன்னே. (கஅ)

கங்கைவார்சடைக்கற்றையிற்கதிர்நிலாக்குழவித்
திங்கள்சூடியதேவர்கடேவனதருளா,
லுங்கள்பாலிடரொழிந்திடுமொல்லையிலென்னுச்
செங்கணனுளந்தேற்றினனறந்தருசேனய. (௧௯)

தேற்றிநெஞ்சகந்தீயவெந்துயரொனுஞ்செந்தீ
யாற்றியன்புசெய்தளவைதீர்குருகுலத்தரசர்
நோற்றநோன்பெனத்தோன்றியதோன்றலைநோக்கி
மாற்றமின்னணம்பின்னருநேமியான்வகுப்பான். (௨0)

முரசமார்கொடிமுடியுடைமுதல்வவோருறுதிக்
கருமமோதுதுங்கேண்மதிகமலைமாநகரி
னரியநூன்முறைசிவலிங்கமமைத்துமாபூசை
புரியினெய்திடும்பொருகடற்பூதலத்தரசு. (௨௧)

வண்டுலாவுபூங்குவளையந்தாரினுய்வரம்பி
லண்டர்சூழ்கமலாலயத்தகன்கடலால
முண்டநாயகனருளுருவுகந்துதாபித்துப்
பண்டுபூசனைவிதிமுறைபுரிந்தநற்பயனுல். (௨௨)

வேறு.

உலையழல்விடுகொழுந்தினொளிறுவேற்றடக்கைமீளி
நலமலிசெங்கோல்வென்றிநளனெனுநாமவேந்தன்
கலிவலிமுழுதும்வாட்டிக்கருதலன்கைக்கொண்டுள்ள
விலகொளிநகருநாடுமெய்தியாங்கரசிழைத்தான். (௨௩)

பொருப்பிருஞ்சிறையெறிந்தபொருமுனைவயிரச்செங்கை
மருப்பொருநான்குகொண்டவாரணக்கடவுண்முன்னு
ளரக்கனைமுதலோராடலழித்தவரமரிற்கொண்ட
தருக்கமழ்நாடுபெற்றுத்தலைமசாலரசுசெய்தான். (௨௪)

கடலகழிலங்கைகாக்குங்காவலன்கடகத்திண்டோ
ணெடுவனைமதுகைசிந்திநிகர்தவிர்சிலையிராமன்
கொடிமதில்யோத்தியெய்திக்குருமணிவயிரம்வேய்ந்த
முடிபுனைந்துவரிஞாலமுழுவதும்புரந்தானன்றே. (௨௫)

பொன்னிவரிஞ்சியாரூர்ப்புரத்திடையிலிங்கந்தாபித்
துன்னரும்பூசையாற்றியொப்பிலாவரசுபெற்ற
மன்னவுரனந்தமுண்டுமேற்றவர்தொகுதியெல்லாம்
பன்னுதுமென்ருற்கற்பம்பற்பலசெல்லுமம்மா. (௨௬)

என்றிவையியம்பக்கேளாவுதிட்டிரனிளையரோடு
மன்றவேமகிழ்ச்சியெய்திமருதடிசாய்த்தவாகை
மின்றிகழ்கனைகழற்கான்மீளியைவிடைகொண்டாரூர்
சென்றனன்றுவரைமூதூர்சென்றனன்வாசுதேவன். (௨எ)

எங்கடம்பெருமானுரைசெய்தியேயிளையரோடும்
பொங்கொலிமுரசுயர்த்தபுரவலன்றேவதீர்த்தக்
கொங்கவிழ்மலர்ப்பூம்பொய்கைக்குளிர்புனல்விதியினாடி
யங்கநீறணிந்தநாதியைந்தெழுத்தடைவிலெண்ணி (௨அ)

வண்ணமாமுகில்கிழித்துவருகதிர்மதிவிலக்கி
விண்ணகநெருஞ்சுபோழ்ந்துவிரிகடலுலகளந்த
வண்ணல்போனீண்டபொற்பினணிகொடிநெருங்குஞாயிற்
கண்ணகன்புரிசைசூழுங்கடவுளாலயத்திற்புக்கான். (௨௯)

கடவுளாலயத்திற்புக்குக்கனைகடலுலகமுய்ய
நெடியவன்முதலோர்வாழநிறைமுனிக்கணங்களோங்க
முடிவிலாவறங்கண்மல்கமுழுதருள்சுரந்துநாளும்
படிதவிர்தவத்தில்வைகும்பராசத்திதாள்பணிந்தான். (௩௰)

பணிந்தினிதெழுந்துசூழ்ந்துபன்முறைபோற்றியாங்குத்
தணந்துதன்னிழலிற்செல்லுந்தம்பியரோடும்போந்து
வணங்கிவானமரரோத்தும்வன்மீகநாதனெனனுங்
குணங்கெழுகுன்றைக்கண்டான்கொடிமுரசுயர்த்தகோமான். ()

வேறு.

கண்டிறைஞ்சியாங்கெழுந்திருகைம்மலருச்சி
கொண்டுமும்முறைவலங்கொடுகுழைந்துளமுருகிப்
பண்டைமாமறைத்தொகுதியும்பகர்வதற்கரிய
வண்டர்தம்பிரான்புகழிசைபரவினனன்றே. (௩௨)

வேறு.

பாடுமறைத்தொகைக்கெட்டாப்பரம்பொருளைப்புற்றிடத்து
நீடொளியைப்பரவிப்போய்நிகழ்மணிச்சிங்காதனத்தி
னேடலர்தார்க்குமரனொடுமிறைவியொடுமினிதுறைய
மாடரவக்கிண்கிணிக்காலையனைக்கண்டேத்தினனால். (௩௩)

தேவியொடுங்குமரனொடுந்தெய்வச்சிங்காதனத்து
மேவியுறைபெருமானைவிருப்பினொடுந்தொழுதேத்தி

மாவுலவுஞ்செந்தாரான்மற்றுள்ளசிவலிங்கம்
யாவுமியன்முறைவழுவாதெதிர்போற்றியிறைஞ்சினனால். (௩௪)

வேறு.

முறையினிம்முறைதொழுதனன்சிவலிங்கமூர்த்தி
யிறைவனூல்பகரியல்பினற்றூபனமிழைத்தா
னறைகொள்போதுசந்தாதியானல்லுலகேத்தும்
பொறையினலுயர்புண்ணியன்பூசனைபுரிந்தான். (௩௫)

புரிந்துபூசையாங்கெண்ணியவரம்புரிந்தெங்க
ளரந்தைநீங்குமாறளித்தியென்றன்புசெய்திறைஞ்சிக்
கரந்தைவார்சடைக்கற்றையிற்கங்கையைக்கரந்தோன்
வரந்தரும்புகழேத்துதற்றொடங்கினன்மாதோ. (௩௬)

வேறு.

தேவாதிதேவன்றிருமாலுந்தேடரிய
மூவாமுதல்வனொருமூவர்தொழுமூர்த்தி
யோவாதுநின்றவொருகடவுளென்றெடுத்துத்
தாவாமறையனைத்துமேத்துந்தனித்தலைவா. (௩௭)

மூலநடுவுமுடிவுபெயர்வருணங்
காலமுருவுகருவிதொழில்கடந்தோ
னாலநிழலானென்றுதிபுராணத்தொகுதி
யோலமிடும்பேருணர்வாமொருபொருளே. (௩௮)

ஒப்புயர்வுநன்றுதீதில்லாவொருபகவன்
மைப்பொலியுங்கண்டன்மழுவலத்தான்மானிடத்தா
னெப்பொருளுந்தானானென்றாகமமனைத்துஞ்
செப்பியினிதேத்துமெங்கள்சிவபெருமான். (௩௯)

பேராயிரம்படைத்தபெம்மான்பிறப்பில்லான்
நீராவிருடீர்க்குந்தெய்வச்செழுஞ்சோதி
கூராருமுத்தலைவேற்கூற்றுதைத்தானென்றேத்திப்
போராருநேமிப்புயல்வணங்கும்புண்ணியனே. (௪0)

எண்டோளுடையபிரானெண்குணத்தானெண்கடந்தான்
பண்டாரணமுழுதுந்தந்ததனிப்பழையோன்
கண்டோயுநெற்றியானென்றுகனிந்தேத்தி
வண்டாமரையான்வணங்குகின்றவானவனே. (௪௧)

ஐந்தொழிலாளுரூறுக்கப்புறத்தானைம்முகத்தான்
மூந்துலகமுய்யமுகமாறுகொண்டோனைத்
தந்தருளுந்தந்தைதழலாடிசங்கரனென்
றிந்திரனும்வானோருமேத்துமிறையோனே. (௪௨)

வெண்ணிலாமோலிவிமலன்விடையேறி
பண்ணிலாவுங்குதலைப்பச்சைக்கொடிபாக
னுண்ணிலாவும்பேருயிர்க்குயிராய்நின்றோனென்
றெண்ணிலாமாமுனிவர்தாம்போற்றுமெங்கோவே. (௪௩)

வேறு.

என்றினிதேத்தியிளைஞரோடிறைஞ்சி யெம்பிரானின்னரு ளெய்தி, யொன்றுபேரன்பின்விடைகொடுபோகி யொப்பிலான்றனையருச்சித்த, நன்றுசெய்பயனைன்னலர்க்கடந்து நன்குசாலரசியல்பெற்றுப், பொன்றிகழ்மௌலிபுனைந்துபார்முழுதும் புரந்தனன்பொறையினுற்பொலிந்தோன். (௪௪)

வேறு.

செப்புமித்தெய்வஞானச்சிவலிங்கமூர்த்திசெந்தாண்
முப்பொழுதிறைஞ்சினோர்கண்முதுநிலவேந்தராகி
யொப்பருந்திருவின்மல்கிப்பகைதுரந்தொருகோலோச்சி
மெய்ப்பெருங்கதிபெற்றுய்வரிம்மொழிமெய்ம்மையாமால். (௪௫)

அருமறைபுகழுமாரூரணிநகரடைந்துமுன்னம்
தருமபுத்திரனிலிங்கந்தாபனஞ்செய்தகாதை [ம்
யொருமுறையிசைப்போர்கேட்போருண்மையும்பொறையுஞ்சீரு
பெருமையுமுற்றுவையம்பேணிவான்கயிலைசேர்வார். (௪௬)

தருமபுத்திரச்சருக்க முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - உ௦௪.

---

## அருச்சுனச்சருக்கம்.

---

புகழுயர்வாய்மைதன்னிற்பொறையினிற்சிறந்தபொற்பி
னிகர்தவிர்தருமமைந்தற்கிளையவனொருவனூர்
நகரில்வாரணமுகத்துநம்பியைக்கதிரோன்றன்னை
யகனிறையன்பிற்றூபித்தருச்சித்தகாதைசொல்வாம். (௧)

மோட்டுவெங்காலகேயர் முரணுடைமதுகைவாங்க
வாட்டியசெங்கண்மீளிகாண்டவவனத்தில்வன்னி
யூட்டியதிறலான்மன்னரொண்முடியுழுதசெந்தாட்
சேட்டிளஞ்சிங்கமன்னன்செல்லுறழ்தடக்கைச்செம்மல். (உ)

உருமிடிவலியழித்தவொருதனிக்காளைவில்லின்
பெருமறைவிஞ்சைதன்னிற்றனக்கிணைபெற்றிலாதான்
றருமநல்விரதம்வாய்மைதவமறிவொழுக்கஞ்சீர்த்தி
யரனடியன்பின்மிக்கானருச்சுனனென்னும்பேரோன். (௩)

மரபினில்வையங்காத்துவைகுநாட்கங்கையாதி
யிருளறுநதிகளாடியெண்ணிலாமுனிவரோடும்
பொருதிரைநெடுங்கைவாரிப்பொன்புடைகொழிக்கும்பொன்னித்
திருவளர்நாட்டின்மேலாஞ்செல்வவாரூரைச்சேர்ந்தான். (௪)

திருத்தகுமுனிவரோடுந்தேவதீர்த்தம்படிந்தா
னுருத்திரமூர்த்திபொற்றூளுளத்திடைவைத்துநீறு
தரித்தனனஞ்செழுத்துஞ்சாற்றினனியமமுற்றி
விருப்புடனெண்ணிறூனம்விதிவழிமறையோர்க்கீந்தான். (௫)

திருநகர்வலஞ்செய்தம்பொற்செழுமணிக்கோயிலெய்தி
யொருபெரும்புற்றின்மேவுமொப்பிலாமூர்த்திதன்னை
யரியநூல்விதியிற்பூசையாற்றிமும்முறைசூழ்ந்தன்பா
லிருகரமுச்சிகூப்பியெதிர்தொழுதேத்தினானே. (௬)

வேறு.

பத்தியாலேத்திப்பரனருளெய்திப் பண்டகத்தியனருச்சித்த, சித்திரபீடமருங்கினிலங்கைதிரண்டநாற்புயத்துமும்மதத்து, முத்துமிழொருகோட்டிருசெவிமுக்கண் மூளமதிமௌலிநீள்புழைக்கை, யத்திமாமுகத்தினரசினைத்தாபித் தருச்சுனனருச்சனைபுரிந்தான். (௭)

அருச்சனைபுரிந்துவரம்பல பெற்றேயைங்கரக்கடவுள்பாலாங்கோ, ரிருட்பிழம்பறுக்குங்கதிரவன்றனையுமினிதுதாபித்தருச்சனைசெய், துரைப்பருந்தவத்துமுனிவரோடிறைஞ்சியொண்கமலாலய நீங்கித், திருத்தகுசிறப்பிற்றன்பதியடைந்தான்செஞ்சிலைவிஞ்சையஞ்செல்வன். (அ)

அன்றுவில்விசயனருச்சனைபுரிந்தவானைமாமுகத்தனிக்கடவுண், மன்றலங்கமலமலரடிநான்காந்திதியினில்வணங்கியேவழுத்தி நின்றினிதெண்ணிப்பூசைதந்திடுவோர்நினைந்தனயாவையுமெய்துந் துன்றிருங்கதிரையாறெனுந்திதியிற் றொழுபவர்வினையெலாந்தொலையும். (௯)

விரிபொழிலாரூரடைந்துவில்விசயன்விளங்கவோர்விநாயகக் கடவுள், பரிதியொன்றினிதுதாபனஞ்செய்துபணியுமிம்மான்மியங்கேட்டோர், புரிவொடுமிசைப்போர்புந்தியினினைந்தபொருளெலாம்பெற்றுமாநிலத்தி, லுரியநற்கிளையோடுற்றுவாழ்ந்ததன்பினுறுபவமற்றுமேம்படுவார். (௧0)

அருச்சுனச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௧௧௮

---

## கருடச்சருக்கம்.

---

கருதரும்புகழ்க்கமலைமாநகரினிற்கருட
னுரியபூசைசெய்தேத்தியசிவலிங்கமொன்றுண்
டரியமாதவிரன்னதோர்மூர்த்தியையொருகாற்
றெரிசனஞ்செயிற்கோடிமாபாதகஞ்சிதையும் (௧)

வேறு.

சகம்புகழ்மதுகைவீரத்தன்மைசால்கருடனென்பான்
புகன்றதோர்மூர்த்திதன்னைப்பூசனைபுரிந்தகாதை
திகம்பரனருளினாலேசெப்புவன்புலம்வேறின்றி
யகங்கெழுமன்பிற்கேண்மினறந்தவாவருந்தவத்தீர். (௨)

திருத்தகுசிவயோகத்திற்றிருந்தியதெய்வவால
விருத்தைதன்சாபத்தாலேமிடல்படுவச்சிரத்தின்
வரைத்தடஞ்சிறைவீழ்ந்தென்னவலிகெழுகருடனென்பான்
பரித்தவாடகப்பசும்பொற்படர்சிறைவீழ்ந்ததன்றே. (௩)

விரிசிறைவீழ்ந்தவேலைவினதைதன்னுரிமைத்தோன்றல்
பெருவலியின்றிநைந்துபிறங்கொளிநேமிமாயன்
றிருவடிதொழுதுவீழ்ந்தசெஞ்சுடர்ச்சிறகர்மீள
வரும்வகைபுரிதியென்னமற்றவன்வகுப்பான்மன்னோ. (௪)





மைப்பொலிமிடற்றோனெண்டோள்வானவனிமையாமுக்க
ணொப்பருங்கடவுளெம்மையுடையவனடிகள்போற்றிச்
செப்புநூல்விதியிற்பூசைசிறப்பொடுசெய்தாலன்றி
யிப்பெருஞ்சாபந்தீராதென்றுமாலிசைத்தவெல்லை, (ரு)

விடையவன்றன்னைப்போற்றிவிருப்பொடுபூசையாற்றி
யடியனேனுய்யஞாலத்தளவிலாத்தலங்கடம்மிற்
படிதவிர்தலந்தெரிந்துபகர்ந்தெனைவிடுத்தியென்னக்
கடியவெங்கருடன்கூறக்கரியவன்கட்டுரைப்பான். (சா)

தலங்களின்மேலாந்தெய்வத்தலந்திருவாரூராங்கோ
ரிலிங்கநூல்விதியிற்றாபித்தினிதுநீபூசைசெய்யிற்
பொலங்கெழுசிறகர்பெற்றுப்பொருவலிபடைப்பையென்ன
விலங்கொளியாழிப்புத்தேளிசைத்தனனிசைத்தலோடும். (எ)

வந்தனனாரூர்வைப்பின்மாசறுதேவதீர்த்தப்
பைந்தடம்படிந்துதெய்வப்பால்கொள்வெண்ணீறணிந்தாங்
கைந்தெழுத்திசைத்துச்செம்பொனலயத்தெய்திப்புற்றின்
முந்துதித்தெழுந்தஞானமுடிவிலாமுதலைப்போற்றி. (அ)

மின்பொலியிலிங்கஞ்சங்கதீர்த்தத்தின்மேல்பாற்றாபித்
தென்புநெக்குருகிப்பூசையிழைத்துநின்றேத்தலோடும்
பொன்பொலிமேருவெற்பிற்பொலன்றளிர்தோன்றியாங்கு
முன்புவீழ்சிறகரீசனணையான்முளைத்ததன்றே. (கூ)

செஞ்சிறைபெற்றதன்றிக்காசிபன்செல்வச்செம்மல்
பஞ்சிறைபடினுமொல்கும்பரிபுரமிழற்றுஞ்செந்தா
ணஞ்சிறைவிழிதோய்பங்கினாயகனருளானாய
வெஞ்சிறையிருளினீங்கிமெய்யொளிவிளக்கம்பெற்றான். (௧௦)

முருகவிழ்மலரான்முக்கண்மூர்த்தியையருச்சித்தன்ன
னருளொடுசிறகர்பெற்றானருந்திறற்கலுழனென்பா
னிருடிகாளவன்பூசித்தவித்திருமூர்த்திதன்னை
யொருமுறைகண்டுளோர்களும்பர்நாடடைவருண்மை. (கக)

புரைதவிர்கருடன்பூசைபுரிந்தவம்மூர்த்திதன்னை [ண்
யொருவன்முன்னொருகாற்கண்டாங்குய்ந்ததொல்காதையொன்று
டிருடிகாளிசைப்பன்கேண்மினெழுபரிவிசயத்திண்டேர்ப்
பரிதிவானவன்குலத்தோர்பார்த்திபன்பகைகடந்தோன். (கஉ)

கருநிறக்கலுழிவெள்ளக்கடாமுகக்களிநல்யானைக்
குருதியிற்சிவந்தகூர்வேற்குன்றுறழ்குவவுத்திண்டோள்
விரிகடற்றானைமீளிவேணுவென்றுரைக்கும்வேந்த
னொருதனிச்செங்கோலோச்சியுலகுகாத்துறைந்தானன்றே. (கங)

உறைதருநாளிற்றீயவூழ்வினையுருத்தலாலே
யிறைமுறைபிழைத்துமுக்கணிறைவனாலயத்திற்கெய்து
மறுவறுபொருளைவவ்விமாநிதிநிரம்பவைகு
மறைதனிலுய்த்தான்பஞ்சியடுக்கலிலழலுய்த்தென்ன. (கச)

அறமகன்றல்லலாற்றியாறலைவேடரொன்ன
மறையவர்வணிகரேரோர்வளனெலாஞ்சூறையாடிப்
பிறர்மனைவலிதிற்பற்றிப்பெரியவருரைபிழைத்துப்
பொறையருள்வாய்மைகுன்றிப்புரைநெறியொழுக்கம்பூண்டான். ()

கற்றவர்க்காய்ந்துகல்லாக்கயவருக்குவகைநல்கிச்
சுற்றியசுற்றத்தோர்க்குத்துயர்புரிந்தறந்தொடர்ந்த
பற்றுடையமைச்சர்தம்மைப்பழித்துமாபழிவிளைக்குஞ்
சிற்றினஞ்சேர்ந்துவெய்யதீக்குணந்தலைநின்றானால். (கசு)

அஞ்செனுமெழுத்தைநீற்றையிகழ்ந்தனனுதிமுக்க
ணஞ்சனமிடற்றோனம்பொனாலயந்தொழாதொழிந்தா
னஞ்சலிசெய்தேயீசனடியவர்தம்மைக்கண்டா
லஞ்சுதறவிர்ந்தானீங்காவகமருளடைந்தானம்மா. (கஎ)

வேறு.

வழுவிலுத்தமநால்வகைவருணநல்வரம்பிற்
கழிவிழைத்தனன்விலக்கினனறநெறியதனை
யிழிதொழிற்கொலையெண்ணிலவாற்றினனிவன்செய்
பழியனைத்தையும்பகர்ந்திடிற்பல்லுகஞ்செல்லும். (கஅ)

பழிசெய்வெவ்வினையின்னணம்புரிந்ததீப்பயனா
லழுகுநோய்முதற்கொடியநோயடைந்தனனரச
னொழிவுறாதுமாபாதகமுனாற்றினோர்க்குறுநோய்
பழுதின்மாதவிரிம்மையேபலித்திடுமன்றோ. (ககூ)

ஊனுடன்புழுவொழுகியவழுகுநோய்முதல
வீனவெம்பிணிகொண்டுபன்னாளயர்ந்திளைத்துக்
கோனிரங்கியேகுலைந்தனன்கூர்முனைக்கழுவின்
மேனெங்கியேயுயிரொடுமேவுவாரென்ன. (உ0)

முடைகொள்வெம்பிணிமுதிர்ந்துழிமனைவியுமுங்கீர்ப்
படியினோர்களுமமைச்சருமைந்தரும்புழிதீர்
மிடல்செய்தானையந்தலைவரும்வேந்தனைவெறுத்தார்
கொடுமைசெய்தவர்தம்மையார்விரும்புவார்குறிக்கில். (உக)

வெறுத்தியாவருநீத்துழிவேந்தனுமெய்யி
ளுறுத்தநோயொடுமொருவனுயழல்வனத்துற்றுப்
பொறுப்பரும்பசியின்னலாற்புலம்பியேமெலிந்தா
னறத்தைவிட்டுளோரெங்ஙனமுய்குவரறவீர். (உஉ)

வெய்யநோயினுற்பிணியினுன்மெலிந்துடல்வெம்பி
'மொய்யிருந்தழல்வனத்திடையுழலுநாண்முன்னைத்
துய்யநல்வினையுய்த்திடத்தொல்புவிவேந்தன்
செய்யபூமகடவம்புரிநகரியிற்சென்றான். (உஙு)

வேறு.

சென்றவவ்வரசன்கருடன்முன்பூசை செய்ததோர்மூர்த்தி யைத்தெரிசித், தன்றுயிரிறந்தானிறந்ததோரளவி லவிரொளிமழ விளங்கதிர்போற், பொன்றிகழ்விமானமூர்ந்துவான்புலவர் பூமழை பொழிந்திடப்போந்து, வென்றிவெள்ளேற்றுவிண்ணவன்புடையி ன் மேவியேவீற்றினிதிருந்தான். (உச)

கண்ணினுலொருகாற்கண்டதோர்பயனுற் கடலினுண்மணலை யெண்ணுகினு, மெண்ணுருப்பாவம்யாவுநீத்திவனு மெம்பிரான்பு டையில்வீற்றிருந்தான், வண்ணவொண்சிறகர்வலங்கொள் புள்ள ரையன்வலங்கொடுவழிபடல்புரிந்த, புண்ணியவிலிங்கதெரிசனப் பயனின் பெருமையையாவரோபுகல்வார். (உரு)

எங்களுயகன்பான்மேவியேயந்த விறையவனிருந்துழியிமை ய, மங்கைதானிறும்பூதடைந்துமற்றன்னுன் வரன்முறைவினுவலு மதிதோய், கங்கைவார்சடையான்கௌரியைநோக்கிக் கதிரவன்றி ருக்குலத்துதித்த, வெங்கண்மால்யானைவிடுசுடர்வடிவேல் வேனு வாம்வேந்தனிவ்வேந்தன். (உசு)

பாதகமனைத்தும்புரிந்தவனென்னுப் பகர்தலும் பனிமலைமட ந்தை, நாதநின்றிருமுனெய்தியேபுடையி னண்ணிவீற்றிருந்தவா 'றென்கொ, லோதுதியென்னுவுரைத்தனள் கருடனுவப்பொடுபூச னைசெய்த, வாதிநல்லிலிங்கங்கண்டதோர்வரத்தா லென்றனனைம் முகத்தமலன். (உஎ)

ஐம்முகக்கடவுளருளியமாற்றமறுமுகக்கடவுளையளித்த, மொய்ம்மலர்க்கூந்தல்வினவியவஷிலிங்க மூர்த்திதன்மான்மியமனைத்து, மைம்மணிமிடற்றோய்விளம்புதியென்ன மதிக்குறைதவழ்ந்தவார்பவளச், செம்மைகொள்சடையான்றிருவருள் செய்தான்றிருவுளமகிழ்ந்தனள்செல்வி. (உ௯)

பொருவிலிவ்வாரூர்த்திருநகர்தன்னிற் பொற்றொடிவினதைபுத்திரனும், கருடன்முன்னிலிங்கமமைத்தருச்சித்துக் கனகநற்சிறைபெறுஞ்சரித, மொருமுறையினிதுகேட்டவர்தமக்குமுற்றவெம்பாதகமனைத்தும், பருதிமுன்னிருள்போலழியுநல்லிளமைப் பருவமும்வாழ்வும்வந்தெய்தும். (உ௧௦)

கருடச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௬௪௭.

---

## இரத்தினவதிச்சருக்கம்.

திருவினுலொளிசிறந்தவானருத்த
தேசமன்னவன்செய்தவத்தளித்த
வரியமாமகளரதனவதியென்
றறைதரும்பெயராயிழைகமலத்
தெரிவைமாதவஞ்செய்தமாநகரிற்
றிருந்துமாதவஞ்செய்துமுன்சிவனை
யுரியபூசைசெய்தொப்பில்வான்கதிபெற்
றுய்ந்தகாதையொன்றுரைப்பன்மாதவத்தீர். (௧)

உரைதருந்தனிவேந்தர்கோனளித்த
வொப்பிலாதவப்பொற்றொடிமங்கைப்
பருவமெய்தியகாலையிலுலகப்
பற்றொழிந்தனணற்றவவிரதம்
புரியும்வேணவாவுற்றனளீன்ற
புனிதமேலவரருளினுற்றன்றோ
ரரியதோழியோடெழுந்தனளாரு
ரமலமாநகரடைந்தனளன்றே. (௨)

அடைந்துதேவதீர்த்தப்புனலாடி
யஞ்செழுத்தினாலமலநீறணிந்து
படர்ந்துகோயிலிற்புற்றிடங்கொண்ட
பகவனைப்பணிந்தேத்திமற்றவன்றாண்
மடந்தைநெஞ்சில்வைத்திருபெருந்தீர்த்த
மரபினிற்செயாமற்றவண்வைகி
யுடன்புணர்ந்தமாதோழிதன்னோடு
மொப்பின்மாதவமுனாற்றினண்மாதோ. (௩)

திருவையன்னவடோழிதன்னோடுஞ்
செயற்கருந்தவஞ்செய்துழியீசன்
கருணையோடெதிர்தோன்றியாங்கரசன்
கன்னிதன்முகநோக்கியேவேண்டும்
வரமியாதெனக்கேட்டலுமடந்தை
வணங்கியென்னொருதோழிமற்றவடா
னுரைசெய்நல்வரந்தந்தருளென்ன
வுரைப்பவன்னவண்முன்னரூற்றனனால். (௪)

முன்னரூற்றுநீவேண்டியதென்கொன்
மொழிந்திடென்றவன்மொழியமற்றவளு
மென்னுயிர்க்குயிராயினாளிசைத்த
வினியநல்வரமீந்தருளென்னப்
பன்னிநின்றனளன்னதோரொல்லைப்
பாவைமாரவரிருவர்க்குநடுவண்
பொன்னிலங்கொளியிலிங்கமாயெழுந்தான்
புவனமுய்ந்திடப்புணரிநஞ்சுண்டோன். (௫)

எழுந்தவத்திறநோக்கியேயஞ்சி
யிருவருந்தொழுதிறைஞ்சியாங்கேத்திச்
செழுந்துணர்ப்புதுமலரினாற்பூசை
செய்துபற்பகல்சிறப்பொடுவழிபட்
டொழுங்குடைத்தவமுனிவருமெய்தா
வொப்பில்வான்கதியுற்றனரந்தக்
கொழுஞ்சுடர்த்தனிமூர்த்தியைக்கண்டோர்
கூடுதற்கரும்வீடுகூடுவரால். (௬)

எழில்வளம்புகழுருத்தநாட்டரச
னினியகன்னியாமிரத்தினவதிமுன்
மழவுசாலுநற்சேடியோடடைந்து
மன்னுறுந்தவமாற்றுமிக்காதை
கிழமைகூருமெய்யன்பொடுகேட்போர்
கீதமார்ந்திடக்கிளத்துவோர்யாரும்
தழையுமாரருட்சிவனடிஞானந்
தன்னைமேவுவரிந்நிலமதனில். (எ)

இரத்தினவதிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௫௫௪

## சித்திரவருமச்சருக்கம்.

ஆடகமணிப்பூணிளமுலையுமையோ டநாதியாய்ப்பாதலத்துறையு, மாடகவிலிங்கமனையதோரிலிங்க மம்பொனூரிலுண்டதற்கு, மாடகவிலிங்கமெனப்பெயரறைவ ரனையதோர்மூர்த்தியைத்தொழுவோ, ராடகமன்றினடகம்புரிந்த வடிநிழலடைவராலறவீர்.

அத்திருமூர்த்திவந்தவாறறைவ னறவிர்காளமலவாரூரிற், சித்திரவருமனென்றுலகேத்துந் தெய்வமாமுனிவரன்றொன்னு, ணித்தனைநோக்கியவனதஞ்செழுத்து நிகழ்த்திவெம்புலப்பகையொழித்துச், சத்தியவிரதம்பூண்டுபல்காலஞ் சாற்றருந்தவம்புரிந்தனனால்.

தவம்புரிந்துறையுஞ்சித்திரவருமன் றன்னெதிர்தோன்றியெம்பெருமா, னிவந்தெழுகருணைநோக்கினேக்கி வேண்டியநிகழ்த்துதியென்னச், சிவன்றனைவணங்கிப்பாதலத்தமர்ந்த தெய்வவாடகத்தனியிலிங்க, முவந்துநான்பூசைபுரிந்திடத்தரைமே லுற்றிடவேண்டுமென்றுரைத்தான். (௨)

அறைந்தசொல்வினவிப்பாதலந்தன்னி லநாதியாயரியயன்முதலோர், சிறந்தமாபூசைசெய்யவீற்றிருக்குஞ் செம்பொனஞ்சுடரொளியிலிங்க, முறைந்தவந்நிலைபேர்ந்திருநிலமீதி லுற்றிடாதொருதனியிலிங்க, நிறைந்தமாதவத்தோய்வேறுதாபித்து நீயிவணருச்சனைபுரிதி. (௩)

அனையதோரிலிங்கமாடகலிங்க மதற்கிணையாகியப்பெயர் பெற், றினிதுலகேத்தவிளங்குகவென்றிசைத்துடனெம்பிரான் மறைந்தான், முனிவரன்மகிழ்ந்துமுக்கணன்மொழிந்தமொழிப்ப டிவிதிமுறைதேர்ந்து, புனிதநல்லிலிங்கந்தாபனம்புரிந்து புரிவொ டுபூசனைபுரிந்தான். (௫)

புரிந்திடுபூசைப்பலத்தினாலந்தப்புனிதமாமுனிவர்தங்கோமா ன், விரிந்தெழுதரங்கவிருவினைக் கடல்வாய்விட்டகன்றேறியேவி ளியா, வரந்தைகூரநாதியிருட்பிழம்பறுத்தாங்கமுதமாமதிநதிகொ ன்றை, கரந்தையோடணிந்தகடவுள்பொற்றிருத்தாட் கமலமாம லர்நிழலடைந்தான். (௬)

அன்றுதொட்டனையவிலிங்கமாமூர்த்திக்காடகமூர்த்தியாந்த னிப்பே, ரொன்றுணர்முனிவீருலகினிற்பொலிந்த துறைத்தவம் மூர்த்தியைத்தொழுவோர், துன்றுபாதலத்தினநாதியாடகப்பேர்ச் சோதிமாமூர்த்தியைத்தொழுத, நன்றுயர்பெரும்பேறெய்தியாங் குய்வர்நவிற்றுமிம்மொழித்திறம்வாய்மை. (௭)

சித்திரவருமனன்பொடுபூசை செய்ததோராடகலிங்க, முத் திசான்மேன்மைமொழிகுநர்கேட்டு முதிருநற்பத்திசெய்குநர்கள், வித்தகமாருங்கல்விசெல்வங்கண் மேவியேவீடுறுவளத்துப், புத்த லர்மலருந்தருநிழல்வாழ்க்கைப் புனிதனோடினிதுவீற்றிருப்பார்.()

சித்திரவருமச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௫௬௨.

---

## அறுபத்தெட்டி லிங்கச்சருக்கம்.

கலிகெழுகடல்சூழ்தொல்லைக்கண்ணகன்ஞாலத்துள்ள
வலகறுபதிகடம்மிலருந்தவக்கிழமைசான்ற
நலனுடைமுனிவீர்மிக்கநகரமோரறுபத்தெட்டென்
றிலகொளிமணிகொள்கண்டனிசைத்தநூலிசைக்குமன்றே.

அப்பெரும்பதிகடம்மிலறுபத்தெட்டிலிங்கமுண்டா
லொப்பிலவவைக்குஞாலத்துண்மைசான்முனிவீரந்த

மூப்பதிற்றிரண்டோடெட்டுமூர்த்தியுமுன்னமாரூர்
வைப்பினில்வந்தவாறுவகுத்துரைசெய்வன்மன்னே. (௨)

ஆதிநாளாரூர்வைப்பிலமர்ந்துளோரறுபத்தெட்டு
மாதவமறையோர்முக்கண்வள்ளலைநோக்கியன்னான்
பாதபங்கயங்கணெஞ்சப்பங்கயத்திருத்திநாவா
லோதியஞ்செழுத்துப்பன்னுளொப்பருந்தவம்புரிந்தார். (௩)

எண்ணறுகோடிகாலமெண்ணறுதவங்களாற்றிப்
புண்ணியமறையோராங்குப்புதுமதிபுனைந்தவேணிக்
கண்ணுதல்கருணைசெய்யக்கண்டிலர்புழுங்கிச்செய்ய
வண்ணவெந்தழலில்வீழ்ந்துமாய்ந்திடமதித்தாரன்றே. (௪)

மாய்ந்திடமதித்துத்தொல்லைமாமறைமுனிவர்யாருஞ்
சேந்ததீவளர்த்துவீழ்வான்றொடங்கலுஞ்சிறியதிங்க
ளேந்தியசடையான்வல்லேயெய்தினனெய்திமிக்கு
வாய்ந்தநல்லருள்வழங்கிமற்றிதுவகுப்பான்மன்னே. (௫)

தெய்வமாதவத்தின்மிக்கதிருத்தகுமுனிவீர்நீவி
ரெவ்வரம்வேண்டினாலுமீகுதுநீவிர்வேண்டு
மவ்வரமறைதிரென்னவறைந்தனனறைதலோடுஞ்
சைவமாமறையோர்போற்றிமற்றிவைசாற்றலுற்றார். (௬)

அவனியினகரந்தம்முளதிகமாமறுபத்தெட்டுச்
சிவதலமமர்ந்ததொல்லைச்சிவலிங்கமறுபத்தெட்டு
முவமையிலிவ்வூர்தன்னிலுற்றிடவேணடுமென்னத்
தவமறைமுனிவர்வேண்டவரமதுதந்தானன்றே. (௭)

வரமதுதந்துநாதன்மறைந்தனன்மற்றவன்ற
னருளினாலிலிங்கமோரெட்டறுபதுமாரூர்தன்னின்
மருவியங்கமர்ந்தவந்தவண்ணங்கண்டுளமகிழ்ந்து
திருமறைமுனிவர்யாரும்விதிமுறைபூசைசெய்தார். (௮)

பூசனைபுரிந்துபன்னாட்போற்றியவரத்தாலன்னா
ராசறுமின்பமுத்தியடைந்தனரறவீரந்தத்
தேசுறுமறுபத்தெட்டுச்சிவலிங்கந்தொழுவோர்பேற்றை
யீசனேயிசைப்பதன்றியிசைப்பரிதெவர்க்குமம்மா. (௯)

அந்தரகேசுரப்பேரிங்ககரறுபத்தெட்டு
மந்திரவடிவமெய்துமாசிவலிங்கமேன்மை
சந்ததம்விளங்கக்கேட்போர்சாற்றுவோர்யாருமும்மைப்
பந்தமதகன்றரன்றன்பதத்தினில்வாழ்வர்மன்னே. (௬௦)

அறுபத்தெட்டிலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - உ௬௭உ

## விநாயகலிங்கச்சருக்கம்.

வேதநூலுணர்முனிவிர்காள்விநாயகனெனும்பே
ராதிநாயகன்விதிமுறையருச்சனைபுரிந்த
தீதிலாதபொற்சிவலிங்கமோரிரண்டுண்டாற்
போதுநாறுதண்பொய்கைசூழ்கமலையம்புரத்தில். (௧)

ஆசிலாமறைமுனிவிர்காள்சிவலிங்கமவற்றை
நேசமோடெதிர்காண்பவர்துதிப்பவர்நினைப்போர்
பூசைசெய்பவர்வினைத்தொடர்பனைத்தையும்போக்கி
மாசிலாததோர்பேரின்பவீட்டினில்வாழ்வார். (௨)

முனிவிரவ்விருமூர்த்திக்குமொய்யொளித்தீப
மினிதளிப்பவர்க்கிறிலாஞானமதெய்தும்
புனைமலர்த்தொடைசந்தமொண்பூந்துகிலளிப்போ
ரனகவேந்தராயமரர்நாடரசுசெய்தமர்வார். (௩)

தாரகத்தினல்லுருவமாங்கரிமுகன்றந்த
சீர்கொளோரிருசிவக்குறிமேன்மைகள்செப்பும்
வாரமேய்குநர்மனமுறக்கேட்குநர்யாரு
மீரமாமதிபுனையரனிருங்கழல்சேர்வார். (௪)

விநாயகலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - உ௬௭௬

## கந்தலிங்கச்சருக்கம்.

பொருதவெண்டிரைக்கருங்கடல்வயிறு
புழுங்கமாட்டியபொங்கழல்வடிவேன்
மரகதம்புனைவிரிநெடுங்கலாப
மஞ்ஞைவாம்பரிவட்டலைநீள்கொழுந்தீ
யெரிகொழுஞ்சுடர்ச்சூட்டிருஞ்சேவ
லெழுதுகேதனன்பூசனையிழைத்த
வரியவோரிருசிவலிங்கமுளவா
லறத்தின்மேதகுமளவின்மாதவத்தீர். (௧)

உரைத்தவவ்விருமூர்த்திதாள்வணங்கி
யுருகுமன்பினுலொருமுறைபோற்றில்
வருத்துவெம்பிணிமுயலகனுதி
மாய்ந்தொழிந்திடுமோய்ந்திடாவின்பத்
திருத்தகும்பலசெல்வமுமேலாந்
தேவுசான்முதுகலவியுமெய்துங்
கருத்திலெண்ணியவரும்பொருளனைத்துங்
கையினெல்லியங்கனியில்வந்தெய்தும். (௨)

தேனலர்ந்தபூம்பைங்குழற்கருங்கட்
செய்யவாயொளிவெண்ணிலாமுறுவல்
வானரம்பையர்பொன்னிவர்திதலை
மணிமுலைத்தலைப்போகமுமெய்துங்
கானறுந்துணர்ப்பொலங்கொள்பூங்கொன்றைக்
கண்ணிசூடியவண்ணனீள்சடையா
னேனமம்புவிமுழுவதூஉமிடந்து
மெய்துருததாணீழலுமெய்தும். (௩)

அந்திவான்பிறையரவணிவேணி
யண்ணல்பூசைகொளரியமாமேனிக்
கந்தவேளிருலிங்கநற்காதை
கனியுமன்பொடுகேட்டவர்சொன்னே
ரிந்திராதியர்பதமெலாந்துய்த்தே
யேறுவாழ்கொடியெம்பிரான்பதத்தி

லுந்துசிரொடுவாழ்வரீதுண்மை
யுயருமிப்புகழுரைப்பவன்யாரே. (௪)

கந்தலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௫௪௦.

---

## பார்வதிலிங்கச்சருக்கம்.

---

ஆசிலாவறங்களுமகிலமுந்தரும்
காசிலாவின்னருட்கவுரிதொல்லைநாட்
பூசைநூல்விதிமுறைபுரிந்தபொன்னெளி
மாசிலாவிலிங்கமொன்றுண்டுமாதவீர். (க)

மாற்றிலாமலைதருவல்லிபூசனை
யாற்றியமூர்த்தியையன்பிற்றாழ்ந்தெழீஇப்
போற்றியேவலமுறைபுரிபினோர்முறை
யீற்றினையெய்திடும்பாவம்யாவுமே. (உ)

முனிவிர்காளுமைதொழுமூர்த்திக்கொப்பிலா
வினியபூஞ்சிகரமாலயமிழைப்பவர்
புனைதருசெழுமணிப்பூணளிப்பவர்
வனைதருமலர்த்தொடைதுகில்வழங்குவோர். (௩)

வெறிகமழ்சந்தனம்விரைக்கருப்புர
நறியநெய்விளக்கொடுதூபநல்குவோ
ரறைதருவிதிமுறையாட்டிமஞ்சன
நிறைசுவையின்னமுதூட்டுநீர்மையோர். (௪)

முன்னருமுனிவிரிம்மூர்த்திசந்நிதிக்
கின்னியமாடலொண்பாடலேர்கெழு
மின்னிவர்சாமரையாடிவெண்குடை
பொன்னிவராலவட்டம்புரிந்துளோர். (௫)

மாநிலத்தரசராய்வாழ்வின்மல்கியே
கானுடைக்கற்பகநாடுகாவல்பூண்
டூனுடற்சிறைப்பிணியொருவிப்பின்னுயர்
மேனிலைச்சிவகதிமேவிவாழ்வரால். (௬)

பொன்னிவர்பனிநெடும்பொருப்புநல்கிய
வன்னைநூல்விதிமுறையருச்சித்தேத்திய
முன்னியபேரொளிமணியிலிங்கமிங்
கின்னுமோர்மூன்றுளவிருந்தவத்தினீர். (எ)

அத்திருமூர்த்திகடம்மையன்பினாற்
புத்தலர்தூவியேபோற்றிலெண்வகைச்
சித்தியுமீறிலாத்திருவுஞானமு
மைத்தவிர்சிவகதிவாழ்வுமெய்துமால். (அ)

இசையுறும்பார்வதியிலிங்கமேன்மையை
நசையொடுங்கேட்பவர்நவிற்றுவோர்தமக்
கசைவில்வணசீர்த்தியுமட்டசித்தியும்
வசைதவிர்முத்தியும்வாய்க்குமென்பவே. (கூ)

பார்வதிலிங்கச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௫௮௯.

## விசையைலிங்கச்சருக்கம்.

கனகமெற்றுங்கறங்கருவித்தலைப்
பனிமலைக்கொடிபாங்கிவிசையையாம்
வனிதையர்ச்சனைசெய்ததோர்மாசிலா
வனகநற்சிவலிங்கமுண்டாலரோ. (க)

புரைதவிர்ந்தவமூர்த்தியைப்போற்றியே
யுரியபூசையுஞற்றியபேற்றினா
லரிவைமற்றவளம்பிகைசேடியாய்
மருவிவாழுநல்வாழ்வுபடைத்தனள். (உ)

முனிவிரத்திருமூர்த்தியையோர்முறை
மனநினைத்திடின்வாழ்த்தினாருயிரம்
வினைபடைத்தபிறப்பின்வெம்பாதக
மனலடுத்தநுண்பஞ்சினழியுமால். (௩)

பொய்யிலாதவிசையைநற்பூசனை
செய்யுமிச்சிவலிங்கச்சிறப்பினை

மையமின்றியறைபவர்கேட்பவர்
வெய்யபாதகம்யாவும்விளியுமே. (௪)

விசையைலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௰௬௩.

---

## சரஸ்வதிலிங்கச்சருக்கம்.

மாமணிமகுடபந்திவரியரவணையிற்றுஞ்சுங்
காமருதாமரைக்கட்கடவுளைப்பதியாவெய்தப்
பூமகடவம்புரிந்தபுனிதமாநகரின்முன்ன
நாமகள்பூசைசெய்தசிவலிங்கமொன்றுநண்ணும். (௧)

மூதுணர்முனிவீரந்தமூர்த்தியைப்பூசைசெய்த
தீதுதீர்வரத்தினாலேதெய்வநூற்கலையின்செல்வி
போதலர்கமலக்கோயிற்புங்கவன்றன்னைச்செல்வக்
காதல்கூர்கனிந்தவின்பக்கணவனுப்படைத்தாளன்றே. (௨)

புவனங்களுய்யவாணிபூசனைபுரிந்தவந்தச்
சிவலிங்கந்தன்னையோர்காற்றெரிசிக்கினெண்ணிலாத
பவம்விண்டுநீய்குந்தெய்வப்பரமமெய்ஞ்ஞானமெய்து
முவமைதீரகண்டசோதியொருபெருவீடுமெய்தும். (௩)

வாசவெண்கமலமேவும்வாணியர்ச்சனைசெய்தேத்து
மாசிலாவிவ்விலிங்கமான்மியங்கேட்டவர்க்குந்
தேசுறுஞானமுண்டாந்தீயவெம்பிறவியேமு
நாசமாமின்பமுத்திநண்ணுமென்றுரைப்பர்மேலோர். (௪)

சரஸ்வதிலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௰௬௭.

---

## பிரமலிங்கச்சருக்கம்.

வாணிசெம்பொன்வனமுலைதோய்ந்தபொற்
பூணிலங்கியமார்புடைப்புங்கவன்
மாணுநூலின்மரபினிற்பூசைசெய்
தாணுவோரிரண்டுண்டுதவத்தினீர். (௧)

நறுந்திண்ர்க்கமலாசனநாயகன்
சிறந்தவவ்விருமூர்த்திதிருவடி
பிறங்குமாகமம்பேசியபெற்றியா
லறங்கொள்பூசனையாற்றியதன்மையால். (உ)

வரையும்வார்திரைவாரியும்வாரிசூழ்
தரையும்விண்ணுஞ்சதமகனுதியாஞ்
சுரருமற்றையதொல்லுயிர்வர்க்கமு
மிரவிமுற்படுகோளுமற்றேனவும். (ஙு)

ஆக்குந்தொல்லையரசுமகவிரு
ணீக்குகின்றநிறையொளிமல்கிய
போக்கின்ஞானமும்பெற்றனன்பொய்ப்புலத்
தீக்கடுந்திறல்செற்றதிறலினீர். (ச)

அனையமூர்த்திதிருவடியன்பினு
னினைவுசெய்திற்றுதித்திடினேர்தெரிந்
தினிதிறைஞ்சிடினெண்ணறுபாதகந்
தினகரன்முன்னிருளிற்சிதையுமால். (ரு)

அன்னவூர்தியருச்சனையாற்றிய
வின்னமூர்த்தியிருங்கதைகேட்பவர்
பன்னுவோர்மலர்ப்பண்ணவன்கையினின்
மன்னியேபுவிவந்துமயங்குறார். (சா)

பிரமலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உசுoா.

## நாராயணலிங்கச்சருக்கம்.

கான்முகச்செவ்வித்தோட்டுக்கமலவாதனத்துவாழு
நான்முகக்கடவுட்பெற்றநாரணக்கடவுளாதி
நூன்முகத்தறைந்ததொல்லைவிதிமுறைநோக்கிவாசத்
தேன்முகத்தலராற்பூசைசெய்ததோரிலிங்கமுண்டால். (க)

சொல்லருந்தவத்தீரந்தச்சுடர்மணியிலிங்கந்தன்னை
மெல்லிதழலராற்பூசைவிதிமுறைபுரிந்தவாற்றுற்

பல்லமாண்புவனம்யாவும்பாதுகாத்தினிதளிக்கு
மெல்லையிலரசுபெற்றானிலங்கொளிநேமிப்புத்தேள். (உ)

திருந்தியதெய்வக்கல்விதேசுயர்சிறப்பின்மிக்க
விருந்தவமுனிவீரந்தவிலங்கொளிநேமிச்செல்வ
னரும்பெறலினியபூசையாற்றியமூர்த்திதன்னை
விரும்பியேபணிந்துசூழ்ந்துவிதிமுறைபோற்றல்செய்வோர். (௩)

அகனிலமுழுதுங்காக்குமரசராய்த்திருவினீடி
மகிழ்வொடுதிளைத்துப்பின்னர்மாசிவலோகந்தன்னின்
மிகுபெருவளத்தினோடுவீற்றிருந்தெண்ணில்கற்பம்
பகருமின்பவாழ்க்கைப்பரமவீடடைவரன்றே. (௪)

நாரணன்பூசையாற்றுநற்சிவலிங்கமேன்மை
சீரணக்கேட்போர்சொல்வோர்திகழ்புவிமுற்றுமாண்டு
வாரணத்துரிவைபோர்த்தமறைமுதலருளான்மல்கும்
பூரணவின்பஞானம்பொருந்திவீற்றிருப்பரன்றே. (௫)

நாராயணலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகூ0அ.

---

## இந்திரலிங்கச்சருக்கம்.

---

காவுதொறுமிளந்தென்றற்கன்றுபுதுமுகைவிரித்துப்
பூவலருநறுஞ்சுண்ணப்பொடிபூசிவீதிதொறு
மேவியினிதசைந்துலவிவிளையாடுமாரூரிற்
றேவர்பிரானருச்சித்தசிவலிங்கமொன்றுண்டால். (க)

மாற்றரியபுலன்கடந்தவலங்கொண்டமாதவத்தீர்
சாற்றியவச்சிவலிங்கந்தனைப்பூசைபுரிந்தபெரும்
பேற்றினுயர்பேறதனாற்பெருந்தேவர்தமக்கெல்லா
மேற்றமுறுந்தகைசான்றவிறையானானிந்திரன்றான். (உ)

மின்னிவர்கிம்புரிக்கோட்டுவெண்ணிறவாரணமூரும்
பொன்னுயர்நாடுடையபிரான்பூசித்தசிவலிங்க
மின்னமுமொன்றுளதெண்ணிலிருந்தவத்தினிசைசான்ற
பன்னுமியனூல்வேதமுழுதுணர்ந்தபடிமையினீர். (௩)



திகழ்தருமச்சிவலிங்கஞ்சிறப்பொடுபூசனைசெய்த
மிகுபயனூற்கவுதமப்பேர்மெய்ம்முனிவன்றன்மனையா
மகலிகைபொன்முலைதோய்ந்தபாவமுழுதகன்றுய்ந்தா
னகுசுடர்வச்சிரமேந்துநாகர்பிரானற்றவத்தீர். (௪)

தவமல்குந்திருமுனிவீர்சதமகன்பூசனைசெய்த
சிவலிங்கமவையிரண்டுந்தெரிசிப்பார்வலஞ்செய்வார்
பவமென்னும்பஃறிரையபரவைநெடுங்கடனீந்தி
யவிர்கின்றகொழுங்கிரணவருங்கயிலையகத்தமர்வார். (௫)

இந்திரனார்பூசைகொளுமினியவிருசிவலிங்க
முந்துகதைகேட்போர்கண்மூதுலகமன்னவராய்
நந்தலிலாப்பரதாரநச்சுபவந்தனையகற்றிக்
கொந்தலருந்தருநிழலிற்கொற்றவராய்வைகுவரால். (௬)

இந்திரலிங்கச்சருக்க முற்றிற்று

ஆ திருவிருத்தம் - உ௬கச

## சூரியலிங்கச் சருக்கம்.

கனகமுமணியுமுத்துங்கவரியுங்கரிமருப்பும்
பனிவரையகிலுஞ்சந்தும்பஃறிரைக்கரத்தாலெற்றும்
புனிதநீர்ப்பொன்னிசூழும்பூங்கமலாலயத்திற்
றினகரக்கடவுள்பூசைசெய்ததோரிலிங்கமுண்டால். (க)

ஒருதனியாழித்திண்டேரூர்ந்துலகனைத்துமுண்ட
விருள்குடித்தொளிவிரிக்குமெறிகதிராயிரத்துப்
பருதியங்கடவுண்மேனாட்பனிமலர்தூவிப்பன்னா
ளரியவம்மூர்த்திதன்னையருச்சித்தவறத்தினாலே. (உ)

விளங்குபல்கோள்கட்கெல்லாமேம்படுசிறப்பினோடு
வளங்கெழுசெல்வச்செம்பொன்வரைச்சிலைபிடித்தவண்டோ
ளிளம்பிறைமௌலிபொற்றாளிணைமலர்ஞானம்பெற்றான்
களங்கமதடையாத்தெய்வக்கலைமதியறிவின்மிக்கீர். (௩)

பருதிபூசனைபுரிந்தமூர்த்தியைப்பணிதல்செய்வோர்
பருதிபோலொளியுமேலாம்பல்பெருந்திருவுஞ்சீரும்

பருதிபோற்சிறந்தபொற்பிற்சேர்த்தியும்பகவன்பொற்றாட்
பருதிபோல்விரிந்தசோதிஞானமும்புடைப்பரன்றே. (௫)

இரவிபூசனைபுரிந்தவிலிங்கநன்மகிமைகேட்போர்
விரவுமன்போடுரைப்போர்விடுருப்புகழ்பெற்றிம்மைப்
புரசைமால்யானைசூழப்புவியரசாண்டுபின்னர்ப்
பரசமர்கரத்தரன்றன்பாதநற்போதமேய்வார். (௬)

சூரியலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகூகக

---

## பரசுராமலிங்கச்சருக்கம்.

அருந்தவநன்னிலைசான்றவறவீரம்புவிமுழுதும்
புரிந்தபெரும்புண்ணியத்திற்பொலிந்தகமலாலயத்தில்
விரிந்தநெடும்புகழ்மதுகைவிறற்பரசுராமன்முனந்
திருந்தியபூசனைசெய்தசிவலிங்கமொன்றுண்டால். (௧)

கற்றுணர்ந்தமூதறிவிற்கறைதவிர்மாதவிரந்தப்
பொற்புறுமாசிவலிங்கம்பூசித்தநற்பயனாற்
பெற்றருடாய்தனைவதைத்தபெரும்பாவமகன்றுய்ந்தா
னெற்றுதிறாக்ஷீருலகமேத்துமழுவிராமன்றான். (௨)

அன்னையுயிர்வதைசெய்தபெரும்பாவமகன்றொழிய
மின்னவிர்செந்தழல்வெவ்வாய்வீரமழுவிராமன்றான்
முன்னமருச்சனைபுரிந்தமுடிவிலாச்சிவலிங்கந்
தன்னைவலஞ்செய்தொருகாற்றனியன்பிற்றொழுதேத்தில். (௩)

தீதுதீர்தவநிலையிற்றிருந்தியநல்லறக்கிழமை
வேதநூன்முதலாயவிழுத்தகுநூன்முழுதுணர்ந்த
போதமாமுனிவீர்காள்புரைதவிர்ந்தபொற்புடைய
மாதராருயிர்வதைத்தமாபாவமடிந்தொழியும். (௪)

ஏனையவெம்பாதகமுமிரிந்தகலுமீறில்லா
மேன்மைசால்பல்வகையவிளிவில்லாத்திருமேவு
மூனமகல்பேரின்பவொப்பிலாச்சிவகதியுந்
தானினிதுவந்தெய்துந்தவறில்லாத்தவமுனிவீர். (௫)

பரசிலகுராமனின்ழபழியகற்றும்பரமன்றன்
விரசுபுகழ்கேட்குநரும்வெழ்மைமிகப்பேசுநரு
முரசநிரத்தரியலரைமுருக்கிநாரியர்க்கொன்ற
வுரைசெறியாப்பவமகற்றியுயர்வானகந்துன்னுவரால். (அ)

பரசுராமலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உசுஉ௫.

## பலபத்திராமலிங்கச்சருக்கம்.

அலம்படைத்ததிண்டோளுடையாண்டகையாடல்
வலம்படைத்ததோர்மாபலபத்திரன்மலர்தூய்ப்
புலம்படைத்ததோர்விதிமுறைபூசனைபுரிந்த
நலம்படைத்ததோர்சிவலிங்கமூர்த்திதானண்ணும். (க)

வீறுசால்பனைக்கொடியினுன்மிக்கவிப்பதியி
னூறிலாதவம்மூர்த்தியையுகந்துதாபித்து
மாறிலாதநற்பூசனைபுரிந்ததோர்மாண்பி
னீறிலாதமாவரம்பலபடைத்தனனெளிதில். (உ)

வலக்கைவாரிசமாமலர்மீமிசைவாகை
யுலக்கையேந்திஞேனுவப்பொடுபூசனைபுரிந்த
சலத்தையேந்தியதாணுவைத்தொழுபவர்தங்கள்
பலத்தையாவரோபகர்பவாபகரருந்தவத்தீர். (௩)

சிறிதுகூறுவன்கேண்மின்கள்செப்பருந்தகைசான்
மறுவிலாதவம்மூர்த்தியைவலங்கொடுபோற்றிற்
செறுனர்தம்வலிசிந்திடுந்திண்புவிபுரக்கு
மிறைமையெய்திடுமெணேந்திடுமீறிலாச்செல்வம். (௪)

கொத்தவிழ்ந்தகற்பகநிழல்வாழ்க்கையுங்குறைதீர்
சித்தியுஞ்சிவலோகமுமெய்திடுந்தெய்வ
முத்தியின்பமுமெய்திடுமுத்தரிற்சிறந்த
மைத்தவிர்ந்தமாமுனிவிர்காளிம்மொழிவாய்மை. (௫)

கண்ணனண்ணன்முன்வணங்கிடக்கதிதருமிலிங்க்
வண்ணவொண்புகழ்கேட்டிடவல்லவர்வகுப்போர்
நண்ணுபூவரசாண்டுபின்னுகராய்நயமா
ரண்ணல்சேர்கயிலாயநற்கிரியையண்ணுவரால். (சு)

பலபத்திரராமலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உசுருக.

## நந்திகேசுரலிங்கச்சருக்கம்.

கந்தவார்குழற்கவுரியும்வாணியுங்காம
ரிந்திராணியுமேத்தியேசூழவேழுலகுந்
தந்தநாயகிதவம்புரிதனிநகர்தன்னி
னந்திபூசனைபுரிந்ததோர்சிவலிங்கநண்ணும். (க)

முந்தைமாதவமுழுதுணர்கேள்விசான்முநிவீ
ரிந்தமாநிலத்தெண்ணிலாவுயிரொலாமுய்ய
வந்தமூர்த்தியைநந்திமுன்னுகமவிதியிற்
பைந்தண்மாமலராலருச்சித்தநற்பயனால். (உ)

எண்ணில்கோடிபல்கணங்களுக்கிறையவனுகி
நண்ணுகின்றதோர்தலைமையுஞானமுமீசன்
கண்ணகன்றிருவாலயத்திருக்கடைகாக்கு
மண்ணலந்திருவரசுமாங்கடைந்தனனம்மா. (௩)

எம்மையாளுடைநந்திமுன்பூசனையிழைத்த
செம்மைமாமணிச்சிவலிங்கதெரிசனஞ்செய்யின்
மும்மைவார்தளைமூட்டறமுழுதுணர்முனிவீர்
பொய்ம்மைதீர்சிவயோகமுஞானமும்பொருந்தும். (௪)

கூறுபல்வகையளவையாற்குறிப்பருந்தகைத்தாய்
வேறுவேறுளநூல்களால்விளம்புதற்கரிதா
யீறதின்றியேநின்றதோர்சிவனடியெய்தும்
பேறுவந்தினிதெய்துநற்பேறுடைமுனிவீர். (௫)

எந்தையாந்திருநந்திபூசனைபுரிந்திறைஞ்சு
மந்திவானிறத்தண்ணலிம்மூர்த்தியின்சரிதஞ்

சிந்தைமாசறச்செப்புவோர்விருப்பொடுகேட்போர்
பந்தபாசமற்றெம்பிரான்பதநிழல்சேர்வார். (சு)

நந்திகேசுரலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகூஙஎ.

---

## சண்டேசுரலிங்கச்சருக்கம்.

---

வேதமுமளக்கலாகாவிரிதருபரமஞானச்
சோதியஞ்சுடரானெஞ்சத்தொல்லிருளறுத்ததொல்லை
யாதிமாமுனிவீர்முன்னாளாதிசண்டேசனன்பிற்
றீதறுவிதியிற்பூசைசெய்ததோரிலிங்கமுண்டால். (க)

ஆதிசண்டேசனந்தவலங்கொளிமூர்த்திதன்னை
யாதிநூல்விதியிற்பூசையாற்றியவரத்தினாலே
யாதிதன்கணங்கட்கெல்லாமதிகமாம்பெருஞ்சிறப்போ
டாதியுமுடிவுமில்லாவருஞ்சிவஞானம்பெற்றான். (உ)

சந்தமாமறைநூலவேதத்தலைப்பொருளுணர்ந்தகாட்சி
யந்தமிலறத்தின்மிக்கவருந்தவமுனிவீராதி
யெந்தைசண்டேசன்பூசையிழைத்தவவ்விலிங்கந்தன்னைச்
சிந்தைகொளன்பிற்றாழ்ந்துதெரிசித்துவலஞ்செய்தேத்தில். (ஙு)

பாவமும்பழியுமின்னற்பவ்வமுமனம்படர்ந்து
மேவியவிருளுமொல்லைவிளிந்திடும்விளிந்திடாத
தாவறுதிருவினோடுதனிச்சிவஞானமுண்டா
மோவறுபரமானந்தவொப்பிலாவீடுமெய்தும். (ச)

செனித்தலான்முத்திநல்குந்திருக்கமலாலயத்தி
னனற்கணுயகன்றன்சோயிலாதிசண்டேசன்பூசை
யுனற்கரும்விதியினோடுமுஞற்றியவிலிங்கமேன்மை
தனைச்செவிகேட்டோர்சொன்னோர்சார்பழிபாவந்தீர்வார். (ரு)

சண்டேசுரலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகூசஉ.

---

## வீரபத்திரலிங்கச்சருக்கம்.



பார்படைத்தருள்பங்கயக்கடவுள்சேயிழைத்த
வாரழற்பெருவேள்வியன்றழித்ததோர்வென்றி
வீரபத்திரவுருத்திரன்விதிமுறைமேனாட்
சீர்கொளர்ச்சனைசெய்ததோர்சிவலிங்கமுண்டால். (க)

துன்றுமாதவந்திருந்தியதொல்லைமாமுனிவீர்
வென்றிமேதகுவீரபத்திரனெனுமேலோன்
பொன்றயங்குமம்மூர்த்தியைவிதிமுறைபூசை
யன்றிழைத்ததோரரும்பெறற்பெரும்பயனதனால். (உ)

ஒப்பில்பல்கலையுருத்திரகணங்களினுயர்ந்த
வொப்பிலாததோர்தலைமையுமொப்பிலாச்சிறப்பு
மொப்பில்வீரமுமதுகையுமொப்பிலாத்திருவு
மொப்பிலாததோருயர்சிவஞானமுமுற்றான். (௩)

நரமடங்கலினுண்மையுஞ்சீற்றமுநாம
வுரமடங்கலுமடங்கிடவுருத்துமுன்னெழுந்த
பொருவில்வென்றிசால்வீரனன்றருச்சனைபுரிந்த
திருநலந்தருமூர்த்தியைத்தெரிசனஞ்செய்யில். (௪)

அவனிகாக்குநீடரசுநல்லாண்மையுஞ்சிறப்பு
நவையில்செல்வமும்போகமுஞானமுநண்ணுந்
தவறிலாதமாதவத்தரிற்றலைமைசேர்தவத்தி
ரெவருமெய்தொணுப்பேரின்பவாழ்க்கையுமெய்தும். (௫)

ஆரமார்சடையானரிசிரமருளாரூர்
வீரபத்திரவிலிங்கநற்கீர்த்தியைவிளம்புந்
தீரர்தோமறக்கேட்டிடுஞ்செல்வர்கள்சகத்திற்
சூரநல்லரசுரிமையுஞானமுந்தோய்வார். (௬)

வீரபத்திரலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௬௪௮.

---

## மாசாத்தலிங்கச்சருக்கம்.

மைதவிர்ந்தவண்புகழினால்வயங்குமாசாத்தன்
பொய்தவிர்ந்தபேரன்பினால்விதிமுறைபூசை
செய்துபோற்றியதேவுசால்சிவலிங்கமொன்றுண்
டெய்தருஞ்சிவனடிநிழலெய்திடுமுனிவீர். (க)

வெறிகொள்சந்தனமெழுதியவெற்பெனப்பணைத்த
பொறிசுணங்கவிர்பூண்முலைப்பூரணைகேள்வ
னறமலிந்தநூல்விதிமுறைசிவலிங்கமதனை
நறைமலிந்தபோதாலருச்சித்தநற்பயனால். (உ)

உலகுகாவல்செய்தோம்புறுமரசுமொப்பிகந்த
தலைமைசான்றுளவுருத்திரகணத்தவர்தம்மிற்
றிலகமாயொளிர்மேன்மையுஞ்செல்வமுஞ்சிறப்பு
மலகுதீர்சிவயோகமும்பெற்றனனம்மா. (ங)

அண்டகோடிகளழியினுமழிந்திடாத்தவத்தீர்
செண்டுதாங்குகைத்தேவனன்றருச்சனைசெய்த
தண்டலில்லதோர்தனிச்சிவலிங்கமற்றதனைக்
கண்டிறைஞ்சியேவலங்கொடுகைதொழுதேத்தில். (ச)

பாரகம்புரந்தளிப்பதோர்தலைமையும்பகைசால்
வீரமாற்றலர்புறந்தரவென்றிடுதிறலுஞ்
சீர்கொள்செல்வமுங்கல்வியுந்திருந்தியபுகழு
மேர்கொள்வான்கதிப்போகமுமெளிதில்வந்தெய்தும். (ரு)

இசைகொள்கேத்திரவரத்திடையெய்திமாசாத்த
னசையொடும்புரிபூசனையேற்றநல்லிலிங்கத்
தசைவில்காதைகேட்பவர்புவியரசராய்வைகித்
திசைகள்காக்குநர்தொழுதிடச்சேணுறைந்திடுவார். (சு)

மாசாத்தலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - உகூ௱ச.

---

## மார்க்கண்டலிங்கச்சருக்கம்.

குரைகடலுலகமேத்துங்குச்சகமுனிவனல்கு
மிருககண்டயேனீன்றமிருகண்டுமுனிவன்மேனா
ளரியமாதவங்களாற்றியரனருளதனாற்பெற்ற
பொருவின்மார்க்கண்டன்பூசைபுரிந்ததோரிலிங்கமுண்டால். (௧)

மாசறுதவத்தின்மிக்கமார்க்கண்டமுனிவனென்று
காசினிபுகழுஞ்சீர்த்திக்கலையுணர்முனிவர்கோமான்
றேசொடுவிளங்குமந்தச்சிவலிங்கமூர்த்திதன்னைப்
பூசனைவிதியிற்செய்துபோற்றியவரத்தினாலே. (௨)

ஆரழற்புனிதவேள்வியாற்றிநல்விரதமோம்பிப்
பார்தழைத்துய்யவைகும்படிதவிர்தவத்தின்மிக்கீர்
சோரிவிட்டொழுகும்வெவ்வாய்ச்சுடுகனற்சிகைவிரிந்த
கூரிலைக்குடுமிச்சூலக்கூற்றுவன்றிறல்கடந்தான். (௩)

கூற்றுவன்றிறல்கடந்துகுரைகடலுலகுமற்றச்
சாற்றருமண்டமுற்றுந்தலைகுலைந்தழிந்துமாய
னாற்றலைவிரிஞ்சனாதிநாகருமழியும்போழ்து
மீற்றினையெய்திடாதவாயுளுமெய்தினானே. (௪)

முடிவுறாவாயுள்பெற்றதன்றியேமுக்கண்மூர்த்தி
யடிமலர்நீழனீங்காதமர்ந்தினிதுவந்துவாழு
நெடியபேரின்பவாழ்வுநிறைபெரும்புகழும்பெற்றுப்
படிமுதலுலகம்போற்றும்பான்மையிற்பொலிந்தானன்றே. (௫)

காலமோர்மூன்றுந்தேர்ந்தகறைதவிர்முனிவீரந்தக்
காலனைவென்றமைந்தன்காசறுபூசைசெய்த
காலையங்கதிரஞ்சோதிக்கடவுடன்காமர்கஞ்சக
காலிணைபணிந்துசூழ்ந்துகைதொழுதேத்தல்செய்வோர். (௬)

குன்றெனத்திரண்டதிண்டோட்கூன்பிறையெயிற்றுப்பேழ்வாய்
வன்றிறற்கொடியகூற்றின்வலைப்படுவருத்தமெய்தார்
பொன்றிடாத்திருவுங்குன்றாவாயுளும்பொருந்திமல்கி
வென்றியிற்பொலிந்துநாளுமேம்படுசிறப்பின்வாழ்வார். (௭)

விழவுசாலாரூர்வைப்பின்மேன்மைகொண்மார்க்கண்டப்பேர்
மழவுசேர்முனிபூசித்தமாசிவலிங்கமேன்மை
விழைவொடுகேட்போர்சொல்வோர்வீடுறுயாக்கையோடுந்
தழைவுறுசெல்வங்கல்விதனையடைந்துறைவரன்றே. (அ)

மார்க்கண்டலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உகூகூஉ.

## உரோமசலிங்கச்சருக்கம்.

மறத்துவெம்புலம்வாட்டியமாதவமுனிவீ
ரறத்தின்மேதகுமுரோமசமுனியருச்சித்த
சிறப்புமேன்மைசால்சிவலிங்கமொன்றுண்டுசெம்பொ
னிறத்துவாரிசக்கொடிதவம்புரியுநீணகரில். (க)

தருமமாம்பயிர்வளர்க்குநீர்த்தடம்புரைபலன்ன
சுருதிமாதவிர்சொல்லியசிவலிங்கமதனை
யரியபூசனைபுரிந்தநல்வரத்தினாலந்தப்
பொருவிலேனுடையுரோமசமுனிவனும்புனிதன். (உ)

கழிகொள்வார்கடற்புவிமுதற்கணிப்பருமுலகம்
பொழியுமாமதவெண்ணிறக்களிறுடைப்புலவன்
வழிநருமலர்வாரிசன்மாதவன்வானோ
ரழியுநாளினுமழிந்திடாவாழ்க்கையதடைந்தான். (ஙு)

புரையின்மாதவிரனையமாமூர்த்தியைப்போற்றித்
திருவுமெண்வகைச்சித்தியுமேதகுசிறப்பு
முரியவாயுளுமுயர்சிவஞானமுமொப்பி
லிருளிலாததோர்வீடும்வந்தெய்துமாலெளிதின். (ச)

மெய்யுணர்ந்திடுமுரோமசன்விதிமுறைபூசை
செய்யுமிச்சிவலிங்கமாமூர்த்தியின்சிறப்பைப்
பொய்யிலன்பொடுபுகல்பவர்கேட்பவர்தாமுஞ்
செய்யநல்லறஞ்செல்வமின்பங்கதிசேர்வார். (ரு)

உரோமசலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உகூகூஎ.

## வியாதலிங்கச்சருக்கம்.



பொய்யிரும்புலத்தைவென்றபுலனுடைமுனிவீர்நேமிக்
கையுடைநெடியமாயன்கலையுருவாகுந்தெய்வ
மெய்யுணரறிவின்மிக்கவியாதமாமுனிவனென்பான்
செய்யமாமலராற்பூசைசெய்ததோரிலிங்கமுண்டால். (௧)

மேதகுபராசரப்பேர்வேதமாமுனிவன்றந்த
வாதராயணனெனும்பேர்மாதவமுனிவன்றன்னாட்
காதலினுருகியந்தக்கதிரொளியிலிங்கந்தன்னைப்
போதினல்விதியிற்பூசைபுரிந்தநல்வரத்தினாலே. (௨)

ஆதியம்பகவன்றன்னாளின்கீழமர்ந்துரைத்த
வேதமுமங்கமாறும்விழுப்பொருள்சான்றவேனைத்
தீதுதீர்கலைகள்யாவுந்திருந்துபேரறிவிற்றேர்ந்தாங்
கோதிடாதுணர்ந்தானென்பவொப்பிலாவுயர்தவத்தீர். (௩)

ஒப்பறுமுனிவீரந்தவொப்பிலாமூர்த்திதன்னை
மெய்ப்பெருவிருப்பிற்சூழ்ந்துவிதிமுறைதொழுதுபோற்றின்
மைப்புரையநாதியாயமனவிருண்மாயுமாயாச்
செப்பருங்கலைகள்யாவுந்தெரிதருஞானமுண்டாம். (௪)

வாதராயணன்பூசித்தமாதேவன்சீர்த்திதன்னை
யோதினோர்யாருமிம்மையுயரறஞ்செல்வமெய்தி
நாதனாருரைத்தமுன்னூனற்பொருள்யாவுமோர்ந்து
தீதுதீரமலராகிச்சிவபதஞ்சேர்வர்திண்ணம். (௫)

வியாதலிங்கச்சருக்க முற்றுமுற்று.



ஆ திருவிருத்தம் - உகூஎஉ.

---

## சனகலிங்கச்சருக்கம்.

---

பணகமுடிமிசைக்கிடந்தபடிமுழுதுமெடுத்தேத்தும்
ணிதநெடும்புகழ்ச்செம்மல்புண்ணியத்தின்கொழுந்தனையான்
சனகனெனுந்தனிநாமத்தவமுனிவனர்ச்சித்த
தினகரன்போலொளிசிறந்தசிவலிங்கமொன்றுளதால். (௧)

வனசமலர்மன்றயோனுமற்றவனைப்பயந்தோனு
நினைவரியபேரொளியைநீங்காதநெடுந்தவத்தீர்
முனிவனுவனனையதிருமூர்த்திதனைவிதிமுறையி
னனையவிழ்தண்புதுமலராலர்ச்சித்தநற்பயனால். (௨)

முப்புவனத்திடைநிறைந்தமுனிவோரிலுயர்சிறப்பு
மெய்ப்பொருளாகமவேதமுழுதறியுமெய்யுணர்வு
மொப்பரியசிவயோகத்துண்மையுமற்றிவையன்றிச்
செப்பரியதனித்தெய்வச்சிவஞானமும்படைத்தான். (௩)

மற்றவன்பூசனைபுரிந்தமாசில்லாமாமணியைப்
பற்றினொடுசூழ்ந்திறைஞ்சிப்பரவுவோர்க்களவில்லா
வற்றமறுகலைமுழுதுமறியுமறிவுளதாகுஞ்
செற்றலர்தம்புரங்கடந்தசிவனடிஞானமுமெய்தும். (௪)

சனகமுனிபூசித்ததாணுவின்றனற்காதை
யனகமுறக்கேட்போருமன்பினொடுபுகல்வோரும்
வினைவலிகளறமுருக்கிவேதண்டநாதன்றன்
கனகமலர்ப்பதஞானந்தனையடைந்துகளிகொள்வார். (௫)

சனகலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௬௭௭

---

## சனற்குமாரலிங்கச்சருக்கம்.

மனத்திலெழும்பசும்புரவிமணியாழிவிடுகொடித்தே
ரனற்கதிரினழலாற்றுமணிபொழில்சூழாரூரிற்
சனற்குமரனெனுநாமத்தனிமுனிவனருச்சித்த
வுனற்கரியதிருஞானச்சிவலிங்கமொன்றுளதால். (௧)

விளங்கியவாலறிவென்னும்விளக்கொளியானெஞ்சகத்துக்
களங்கவிருள்வேர்களைந்தகருதரியதவமுனிவீர்
விளம்பியவச்சிவலிங்கமூர்த்திதனைவிதிமுறையி
னளந்தறியாப்பேரன்பினருச்சித்தவரும்பயனால். (௨)

தொல்லைமறையாகமநூல்சோர்வுபடாப்பொருள்சான்ற
பல்வகையபுராணமுதற்கலைமுழுதும்பழுதறவாய்ந்

தெல்லையிலாமாமுனிவர்க்கினிதுணர்த்தும்பேருணர்வு
மல்லல்வினைமுழுதகற்றுமரனடிஞானமுமடைந்தான். (௩)

அன்னவன்பூசனைபுரிந்தவமலமாஞ்சிவலிங்கந்
தன்னைவலங்கொடுதாழ்ந்துதனியன்பிற்றெழுதேத்தின்
முன்னரியகலைத்தொகுதிமுழுதறியுமுதுக்குறைவுஞ்
செந்நிறவந்துகிர்ச்சடையான்றிருவடிஞானமுமெய்தும். (௪)

இன்னசனற்குமரமுனியிழைத்தசிவலிங்கத்தி
னன்னர்சரித்திரங்கேட்டோர்நானிலத்தின்மறைமுதலாம்
பன்னரியகலையாவும்பகுத்துணர்ந்துபரமனடி
மன்னுபெருமன்பினராய்வாழ்வர்மறைமுனிவீர்காள். (௫)

சனற்குமாரலிங்கச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௬௮௨.

## பதஞ்சலிலிங்கச்சருக்கம்.

வாரிசமலர்மேனங்கைமாதவம்புரியுஞ்செல்வக்
கார்தவழ்ந்துலவுவாசங்கமழ்பொழிலாரூர்வைப்பிற்
பாரகமுழுதுமேத்தும்பதஞ்சலிபூசைசெய்த
சீர்திகழ்தெய்வஞானச்சிவலிங்கமொன்றுவைகும். (௧)

பல்வகைப்பற்றுநீத்தபடிமையிர்பதஞ்சலிப்பேர்ச்
செல்வமாமுதல்வனந்தச்சிவலிங்கமூர்த்திதன்னை
மெல்லிதழ்மலர்கடேவிவிதிமுறைவழாமலன்பாற்
சொல்லரும்பூசைசெய்ததுகளறுவரத்தினாலே. (௨)

கலையெனும்பரவைதன்னைக்கருத்தெனும்புணையானீந்து
மலகறுமுலகிலுள்ளவளவிலாவறிவின்மிக்க
புலவர்தந்தொகையின்மேலாம்புலமையும்புகழும்பொற்பி
னிலகொளியகண்டஞானச்செல்வமுமினிதுபெற்றான். (௩)

மிகுபுகழேமமன்றில்வியாக்கிரபாதனோடு
நக்குநடராயமூர்த்திதாளிடங்கண்டுங்காணுத்
திகழ்தருவலத்தாடன்னைத்தியாகநாயகன்பாற்கண்டு
சுகமிகுவிளமொன்னுந்தலத்தினிலமர்ந்தானன்றே. (௪)

படிமுழுதெடுத்தசீர்த்திப்பதஞ்சலிபூசைசெய்த
முடிவறுமொப்பில்சோதிமூர்த்தியைத்தொழுதுபோற்றி
லொடிவறுகலைகள்யாவுமுணர்தருமுணர்வுமோவாச்
சுடரொளிஞானமென்னுந்தொலைவில்பெரும்பொருளுமெய்தும். (௫)

முழுதுணர்பதஞ்சலிப்பேர்முனிவரனருச்சித்தேத்தித்
தொழுமருட்சிவலிங்கத்தின்மிகுல்பெருங்காதைகேட்போர்
வழுவறவுரைப்போர்யாருமருளறமெய்ஞ்ஞானம்பெற்
றழிவில்பேரின்பமுத்தியடைவர்மாதவத்துயர்ந்தீர். (௬)

பதஞ்சலிலிங்கச்சருக்கமுற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - உ௬௪௪

---

## உபமன்னியலிங்கச்சருக்கம்.

ஒப்பிலாப்புலிக்காலனுகந்தரு
ளொப்பிலாதவுபமன்னியமுனி
யொப்பிலாதநற்பூசையுஞற்றிய
வொப்பிலாச்சிவலிங்கமொன்றுண்டரோ. (௧)

அனையமாமுனியந்திருமூர்த்தியை
யினிதுபூசையிழைத்தவராந்திறற்
புனிதவெண்டிரைபொங்கியதீஞ்சுவை
கனைகொள்பாலின்கடலதுபெற்றனன். (௨)

பாலினைத்திபடைத்ததையன்றியே
யாவிடத்தினரசடிஞானமு
நாலனைத்துநனித்துணர்போதமுங்
காலமுற்றுந்தெரிவதோர்சாட்சியும். (௩)

அரியமாதவர்யாரினுமேம்படு
பெருமைசான்றதோர்பெற்றியுமொப்பிலாத்
திருவின்மேதகுசித்தியுஞ்சீர்த்தியு
மிருளில்வீட்டின்பவாழ்க்கையுமெய்தினன். (௪)

அந்தமாதவனுகமநூன்முறை
யந்தண்மாமலராலருச்சித்ததோ

ரந்தமூர்த்தியடியிணைதாழ்ந்தெழீஇ
யந்தமில்லதோரன்பினிற்போற்றுவோர். (௫)

எண்ணில்பல்கலையாவுந்தெரிந்துண
ரெண்ணில்போதமுமெண்ணறுசெல்வமு
மெண்ணில்சீர்த்தியுமெண்ணறுசித்தியு
மெண்ணிலாதவியற்சிவயோகமும். (௬)

அளவிலாதவகண்டமெய்ஞ்ஞானமு
மளவின்முத்தியுமெய்துவராசிலா
வளவில்வேதமுமங்கமுந்தேர்ந்துண
ரளவிலாதவறனுடைமாதவிர். (௭)

புண்டரீகமுனிமகன்பூசனை
கண்டமாசிவலிங்கநற்காதையை
மண்டுமன்பொடுகேட்டவர்மாநிலத்
தண்டுமின்பமனைத்தையுந்துய்ப்பரால். (௮)

உபமன்னியலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௬௯௬

## வாலகில்லியலிங்கச்சருக்கம்.

மூலமாகியவல்லிருண்முருக்கியமுதியோர்
வாலகில்லியர்பூசனைபுரிந்தவண்சோதிக்
கோலமாசிவலிங்கமொன்றுளதுகொய்மலர்ப்பூஞ்
சோலைசூழ்கமலாலயத்தொல்லைமாநகரில். (௧)

சேயபொன்னொளித்தெய்வவொண்சிவலிங்கமதனை
நேயமோடொருமுறைதொழுதேத்திடநீங்காக்
காயும்வெவ்வினைக்கடுந்துயர்ப்பாதகமைந்தோ
ராயிரங்கடிதகன்றிடுமுண்மையீதறவீர். (௨)

பொழுதிரண்டெதிர்தொழுதவர்பொன்னுலகடைவா
ரெழுவின்மாதவிர்ம்மப்பொழுதிறைஞ்சினோர்வான
முழுதளித்தருண்முதல்வராய்வைகுவர்நாற்போ
தழிவில்காதலிற்போற்றுவோர்பிரமனூரடைவார். (௩)

ஐந்துபோதீஞ்ழ்ந்தேத்துவோராழியானமரு
மூந்தைவைகுந்தமெய்துவூர்மூவிருவைகல்
வந்துவூந்தனைசெய்பவர்சிவபதம்வாழ்வா
ரிந்தவாசகமையமன்றெண்ணருந்தவத்தீர். (௪)

வாலகில்லியரருச்சனைவள முறச்செய்த
சீலமார்சிவலிங்கநன்மகிமைசெப்பிடுவோர்
தூலமாகியவின்பங்களனைத்தையுந்துய்த்து
மாலகன்றுவெண்கயிலைமாமலையினில்வதிவார். (௫)

வாலகில்லியலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௭0க

## யாக்கியவர்க்கலிங்கச்சருக்கம்.

போக்கறுபுலமைசான்றபுண்ணியமுனிவீர்பூமேற்
ருக்கணங்கரியதெய்வத்தவம்புரியெல்லைதன்னில்
யாக்கியவர்க்கனென்னுமிருந்தவமுனிவன்முன்னாந்
தேக்கமழ்மலராற்பூசைசெய்ததோரிலிங்கமுண்டால். (௧)

உரைதருமவ்விலிங்கமூர்த்தியையொருகாற்சென்று
தெரிசனஞ்செய்யில்வெய்யதீப்புலன்முழுதுஞ்செற்ற
வருமறைமாதவத்தீரயன்மனைவிழைந்தபாவ
மெரியிடுபஞ்சியென்னவிமைப்பினிலொழியுமன்றே. (௨)

விரிதருதெய்வச்சோதிவிமலவவ்விலிங்கந்தன்னை
யிருமுறைதொழுதுபோற்றிலிருந்தவம்பழுத்ததொல்லைத்
திருமறைமுனிவீர்மேலாந்தேசிகற்பிழைத்தபாவ
மொருவிவிண்டொல்லைதன்னிலொழிந்திடுமுண்மையீதால். (௩)

மும்முறைதெரிசித்தந்தமொய்யொளியிலிங்கந்தன்னைப்
பொய்ம்மைதீரன்பினோடும்போற்றிடிற்புலத்தைவென்ற
செம்மைமாதவத்தின்மிக்கீர்செய்நன்றிமறந்தபாவ
மிம்மெனவிரிந்துநீங்குமிம்மொழிசரதமாமால். (௪)

ஞானமாமுனிவீரந்தநலங்கெழுமிலிங்கந்தன்னைத்
தேனிறைமலர்கவேினான்முறைதெரிசித்தேத்தி

ஊனவெம்பவங்கள்யாவுமொழிந்திடுமொழிந்திடாத
வானுயர்சிவபுரத்துவாழ்வினிதெய்துமன்றே. (௯)

யானையுமுணருமேன்மையாக்கியவர்க்கன்பூசை
மேவுறக்கொண்டவீசன்மேதகுசீர்த்திகேட்டோர்
பூவிடைக்கொலைமுன்னாகப்புரிந்திடுபவங்களெல்லா
மோவிடப்பரமனற்றாளுலப்பிலாவின்பஞ்சேர்வார். (௰)

யாக்கியவாக்கலிங்கச்சருக்கமுற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௭௱௭

---

## பிப்பிலாதலிங்கச்சருக்கம்.

துப்பிலங்கியசடையினன்றனையடிங்காச்
செப்பருந்தவமுனிவிரித்திருககாததிற்
பிப்பிலாதனும்பெயருடைப்பெருந்தவமுனிவ
னொப்பில்பூசையாற்றியசிவலிங்கமொன்றுண்டால். (௧)

வேறு.

விரித்தமாமறைதேர்காசிமேதகுமுனிவிரந்த
திருத்தகுமிலிங்கந்தன்னைத்தெரிசனஞ்செய்யிலோர்கால
வருத்துறுசொடியசீற்றமுயலகன்மருள்செய்வெம்பே
யுருத்தெழுபூதமாதியொல்லையிலொழிந்துநீங்கும். (௨)

அடுதழனுகஞ்சமாதியவழிந்துமாயுங்
கொடியதோரமுகுநோய்வெங்குட்டநோயாதியாய
முடிவறுபிணிகள்யாவுமுடிந்திடுமுடிவிலீந்த
படிபுகழ்தவத்தின்மிக்கபடிதவிர்படிமையீர்காள். (௩)

இருமுறைதெரிசித்தேத்திலிசலுறுபுலத்தைவென்ற
வருமறையந்தணீர்காளைவசைப்பாவங்கோடி
வெருவிவிண்டகன்றுமாயும்வெம்பகற்கடவுள்வேந்தன்
பரவியகதிர்முன்பட்டபடரிருளென்னமாதோ. (௪)

கதிப்பழம்பொருளுணர்ந்தகாசறுகேள்விசான்ற
மூதுக்குறையந்தணீர்காண்மும்முறைதெரிசித்தேத்தின்
மதுக்கமழ்கொன்றைவேணிவானவர்பெருமான்செந்தாட்
புதுக்கொழுங்கமலநீழல்புணர்ந்துவீற்றிருப்பான்றே. (௫)

தவவலிசாலுக்கிப்பிலாதனுமுனிவன்றந்த
வுவமையிலிலிங்கமேன்மையுரைத்துளோர்யாருமுன்னைப்
பவமதிலிழைத்ததீயபாதகமனைத்துந்தீர்ந்து
சிவனருட்குரியராவர்செம்மைசேர்செய்தவத்திர். ([illegible])

பிரமதலிங்கச்சருக்க முற்றிற்று.



ஆ திருவிருத்தம் - ௨௭௧௩

## முசுகுந்தலிங்கச்சருக்கம்.

பொன்னஞ்சிங்காதனத்துப்புனிதனைப்புவனமுய்ய
முன்னந்தாபித்தசெங்கோன்முசுகுந்தனென்னுந்தொல்பேர்
மன்னன்பூசனைபுரிந்தமாசிலாவிலிங்கமொன்றுண்
டன்னஞ்சூழ்பொய்கையாரூரசலேசன்கோயிற்றென்பால். (௧)

புனிதநூல்விதியிலந்தப்பொங்கொளியிலிங்கந்தன்னை
யினிதுபூசனைபுரிந்தவீறிலாவரத்தினாலே
யனகமாமுனிவீர்தொல்லையறத்தினிலிலமோம்பி
மனுகுலவேந்தன்யாருமெய்திடாவளப்படைத்தான். (௨)

கந்துசிற்றத்துப்பிற்கடாமுரஞ்சருங்கைவென்றித்
தந்தமீரிரண்டுகொண்டதனிக்களிறுகைக்குஞ்செல்வ
விந்திரனுலகுசாத்தவிறையவன்பூசைசெய்து
வந்தநல்லிலிங்கந்தன்னையன்பினுப்போற்றல்செய்வோர். (௩)

மூரிவேலரசனந்தமுசுகுந்தனென்னமுந்நீர்ப்
பாரெலாந்தனிபுரந்துபல்பெருந்திருவின்மல்கி
நீர்பரந்துலவுஞ்சென்னிநெற்றியஞ்செங்கண்மூர்த்தி
வார்கழன்மிழற்றுஞ்செம்பொன்மலரடிநீழல்வாழ்வார். (௪)

மன்னவன்முசுகுந்தன்றன்மறைமொழிவழியிற்றாபித்
துன்னரும்பூசையாற்றுமொப்பிலிவ்விலிங்கமேன்மை
சொன்னவர்கேட்டோர்தாமுஞ்சுரர்பதியிடுக்கண்டீர்த்த
வன்னவனென்னவையமாண்டுபின்முத்திசேர்வார். ([illegible])

முசுகுந்தலிங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௭௧௮.

## சர்வலிங்கச்சருக்கம்.

தயங்கொளிமதிமிலைந்ததம்பிரானாணைதன்னால்
வியன்பெறுமறைதெரிந்தவியாதனதருளினாலே
யியம்பியவிலிங்கமேனையிலிங்கமற்றவற்றிற்சில்ல
வயங்கொளியிலிங்கங்கட்குவகுப்பன்மற்றெல்லைமன்னே. (௧)

புற்றிடங்கொண்டமூர்த்திபொலன்மணிக்கோயின்மேல்பாற்
சிற்றிடைமழைக்கட்செவ்வாய்ச்செழுமலர்த்திருமடந்தை
யற்றமில்விதியினோடுமரும்பெறற்பூசைசெய்த
மற்றிணைகடந்ததெய்வச்சிவலிங்கம்வைகுமன்றே. (௨)

திருமகன்முன்னம்பூசைசெய்தவத்தெய்வஞானத்
திருவளரிலிங்கந்தன்னைத்தெரிசனமொருகாற்செய்யிற்
றிருவொடுகல்விபோகஞ்சிவகதியெய்தும்வாய்மை
திருமறைமுழுதுந்தேர்ந்ததேசுயர்செழுந்தவத்தீர். (௩)

சித்திரமலராள்பூசைசெய்தருள்சிவலிங்கத்திற்
குத்தரதிசையின்பாங்கருலகெலாம்படைத்ததொல்லை
வித்தகவேதமூர்த்திவிதிவழிபூசைசெய்த
மைத்தவிரிலிங்கம்வைகுமாசிலாமாதவத்தீர். (௪)

மந்திரச்சுருதியாதிமாகலைமுழுதுணர்ந்த
வந்தணக்குழுவின்மிக்கவறவிர்காளம்புயத்தோன்
முந்தருச்சனைபுரிந்தமூர்த்திக்குமேற்றிசைப்பாற்
செந்தழற்கடவுள்பூசைசெய்தருளிலிங்கமேவும். (௫)

தொல்லைமாமுனிவீர்தூயசுடரொளிக்கடவுண்முன்னை
மெல்லைதீர்விருப்பிற்பூசையிழைத்தவவ்விலிங்கந்தன்னை
நல்லபேரன்பிற்போற்றிற்பவமெலாநாசமாகு
மல்லறீரின்பவாழ்க்கையழிவில்வீடெய்துமன்றே. (௬)

பூவினுலழலோன்முன்னம்பூசனைபுரிந்தவந்தத்
தாவிலாவிலிங்கத்திற்குவடதிசைதன்னிற்றங்குந்
தேவர்கள்பூசைசெய்தசிவலிங்கமதனைக்கண்டோ
ரோவறுதிருவினல்கியுயர்சிவலோகஞ்சேர்வார். (௭)

தேவர்கண்முன்னம்பூசைசிறப்பொடுசெய்தவந்தத்
தேவுசாலிலிங்கத்திற்குவடதிசைதன்னிற்செல்வத்

தேவநாடினிதிக்குஞ்செங்கணாயிரம்படைத்த
தேவர்கோன்பூசைசெய்தசிவலிங்கஞ்சிறந்துவைகும். (அ)

மருத்துநேர்செலுத்தியோகம்பரிதருமாதவத்தீர்
மருத்துணாலங்கன்மோலிவடிமுனிவச்சிரக்கை
மருத்துவனிலிங்கத்திற்குவடதிசையகத்துமன்னு
மருத்துவர்பூசைசெய்தமாசிலாவிலிங்கமன்றோ. (௯)

சாற்றியவிலிங்கமூர்த்திகளைவழிபாடுசெய்வோ
ரீற்றினையடைதல்செய்யாரிசைமறைமுழுதுணர்ந்த
மாற்றிலாமுனிவீரந்தமருத்துவரிலிங்கத்திற்கு
மேற்றிசையாளந்தேசன்மேவிவீற்றிருக்குமன்றே. (௧0)

ஆயுநூலறவீரந்தவானந்தவீசன்சோயில்
வாயுவின்றிசையகத்துமலரினன்முன்பிறந்தா
யேமாமலர்கடுவித்துகளறுபூசைசெய்த
சேயொளிவிரித்தசோதிச்சிவலிங்கமேவுமன்றே. (௧௧)

இசைதருமனையதெய்வவிலிங்கமாமூர்த்திக்கீசன்
றிசையினில்வெள்ளிமுன்னஞ்சிறப்பொடுபூசைசெய்த
வசைதவிரிலிங்கமூர்த்திவைகுமம்மூர்த்திதன்னை
நசையுடனொருகாற்போற்றினுஞ்சமாம்பாவம்யாவும். (௧௨)

மேதினிதழைப்பமேலாம்வேதமாமுனிவரோங்கப்
போதன்மான்முதலோருய்யப்புற்றிடங்கொண்டெழுந்த
கோதுதீர்மூர்த்திகோயிற்றுணதிசைதன்னிற்பாக
சாதனன்பூசைசெய்ததனுவீற்றிருக்குமன்றே. (௧௩)

இடியுயர்கொடிவலத்தினிந்திரனிலிங்கத்திற்கு
வடபெருந்திசையகத்துமாசிலாவிசுவதேவர்
விடலருமாகமாதிவிதிவழிபூசைசெய்த
முடிவறுபரமசோதிமூர்த்திதானுறையுமாதோ. (௧௪)

சாதலும்பிறப்புமில்லாச்சங்கரற்கன்புசான்ற
வேதந்தீரறிவின்மிக்கவீறிலாமாதவத்தீ
ரோதுஞ்சீர்விசுவதேவரிலிங்கத்தினுத்தரத்து
வேதம்பூசனைபுரிந்தவிளங்கொளியிலிங்கமேவும். (௧௫)

வேறு.

அவ்விலிங்கமாமூர்த்திக்குவடதிசையகத்துச்
செவ்விவெண்கமலத்திடைச்சிறந்துவீற்றிருக்கு
நவ்விவென்றகண்மதிநுதனங்கையர்ச்சித்த
தெய்வமூர்த்திவீற்றிருக்குமாதவத்தினிற்சிறந்திர். (கஙு)

ஆதிநாயகன்புற்றிடங்கொண்டருளமலன்
சோதிமாமணிக்கோயிலின்வடதிசைத்தொன்றுன
மாதர்மாமலர்மடமசண்மன்மகன்மரபிற்
நீதில்பூசனைசெய்ததோர்மூர்த்திசேர்ந்துறையும். (கஎ)

அந்தமூர்த்திக்குவடபெருந்திசையகத்தமருஞ்
செந்தண்மாமலர்க்கடவுள்சேய்சிறுவிதிசிவனை
நிந்தைசெப்பததோர்நீங்குறுவெம்பவநீங்க
முந்துபூசனைசெய்ததோர்சிவலிங்கமூர்த்தி. (கஅ)

அனையதோர்சிவலிங்கத்தின்வடதிசையகத்து
வினைசெய்வெம்முனைக்கடுமுரண்மேதிமாமுகத்தோன்
றனைவதைத்திடும்பொருட்டுமாசயமகண்முன்ன
மினியபூசனைசெய்ததோர்மூர்த்திவீற்றிருக்கும். (கசூ)

சயமடந்தையன்றருச்சனைதந்தசங்கரனை
நயமலிந்தபேரன்பினிற்போற்றிடுநல்லோர்
வயமலிந்ததோண்மாற்றலர்புறங்கண்டுவைய
மியல்பினேம்பியேவான்கதியெய்துவரொளிதின். (உ0)

அன்னதோர்சிவலிங்கத்தின்வடதிசையயலிற்
கன்னிமாதரோரெழுவருங்கடிமலர்தூவி
முன்னமர்ச்சனைபுரிந்ததோர்சிவலிங்கமூர்த்தி
மன்னிவைகுமான்மறைப்பொருடுணிந்தமாதவத்சீர். (உக)

முழுதுமாருயிருய்ந்திடமுகிழ்முலைமாத
ரெழுவரும்வழிபாடுசெய்தேத்தியவிறையைத்
தொழுதுசூழ்ந்தெதிர்துதித்திடுந்தூயவர்தமக்கு
வழுவிலெண்வகைச்சித்தியுமெளிதினில்வருமால். (உஉ)

வேறு.

மன்பதைதழைப்பமாதர்வழிபடுமிலிங்கத்திற்குத்
தென்பெருந்திசையிற்கோட்டுத்திங்கள்வெண்கோட்டினுலே

பொன்பொலிமேருவெற்பிற்பாரதம்பொறித்தபுத்தே
ளன்பொடுபூசைசெய்தசிவலிங்கமமருமன்றே. (௨௩)

கடகரிமுகம்படைத்தகருணையங்கடவுண்முன்னம்
படிமுழுதுய்யப்பூசைபண்ணியமூர்த்திகோயில
வடபெருந்திசையகத்துமன்னிவீற்றிருக்குமென்ப
வடல்கெழுமேதியூர்தியருச்சித்தவிலிங்கமம்மா. (௨௪)

முத்தலைபடைத்தவைவேன்முதுவலிமறலிமுன்னம்
புத்தலர்தூவிப்பூசைபுரிந்தனோர்புனிதமூர்த்திக்
குத்தரதிசைக்கணீங்காதுவீற்றிருக்குமென்ப
வத்திமாமுகத்துப்புத்தேளருச்சித்தவிலிங்கமம்மா. (௨௫)

கொடியவெஞ்சினத்துவாளைக்குஞ்சரமுகனைக்காய்ந்த
வடிகள்பூசனைபுரிந்தவமலமாமூர்த்திகோயிற்
குடதிசைமருவுமென்பகொடியிடைக்கௌமாரிப்பேர்
மடவரல்பூசைசெய்தமாசிலாவிலிங்கமன்றே. (௨௬)

வேறு.

காலமோர்ந்துணர்முனிவர்சான்முன்கவுமாரி
நூலினோதியவிதிமுறைநுவலருமன்பிற்
சாலவேவழிபாடுசெய்தாளுறுவின்வடபால்
வாலிபூசனைசெய்ததோர்சிவலிங்கமன்னும். (௨௭)

சீருடைத்திருமடந்தைகோனருச்சனைசெய்து
வாரருட்டிருமூர்த்திவாழாலயமதற்குப்
பூருவத்தினிற்பொலிந்தினிதுறைதருமென்ப
நாரதப்பெயர்மாமுனியருச்சித்தநாதன். (௨௮)

இருநிலம்புகழ்நாரதனருச்சித்தவீசன்
மருவுகோயிலின்வடதிசைமருவுமாமென்ப
புரைதவிர்ந்தபூபுகனெனும்பெயருடைப்புகழ்சா
லரசனர்ச்சனையாற்றியசிவலிங்கமம்மா. (௨௯)

அந்தமன்னவனன்பினாலருச்சனையமைத்த
விந்துசேகரன்கோயிலின்வடதிசையிருக்குஞ்
சுந்தரங்கொள்யாழ்வல்லவோர்தும்புருவென்பான்
முந்துபூசனைபுரிந்ததோர்சிவலிங்கமூர்த்தி. (௩௰)

வேறு.

தும்புருவென்னுந்தூயோன்ரெல்லைநாட்பூசைசெய்த
வெம்பிரானுகந்தகோயில்வட திசையிருக்குமென்ப
வும்பர்வான்கங்கைமுன்னமுலகெலாமுய்ந்துவாழ
வம்பவிழ்மலர்கடூவிவழிபடுமிலிங்கமன்றே. (௩௧)

பொங்குதெண்புனிதநன்னீர்ப்பொருதிரைக்கங்கையென்னு
மங்கைபூசனைபுரிந்தமூர்த்திக்குவடாதுபாங்கர்க்
கொங்கவிழ்மலர்கடூவிக்குளிர்புனல்யமுனையென்னு
நங்கைபூசனைபுரிந்தசிவலிங்கநண்ணுமன்றே. (௩௨)

தீவினையகற்றுமந்தத்திருநதியிரண்டும்பூசை
யாயுநூல்விதியிற்செய்தசிவலிங்கமவையிரண்டு
நேயமோடினிதுபோற்றினிறைந்தவங்நதியிரண்டிற்
றூயநல்விதியிற்றோய்ந்தநொலையிலாப்பயன்வந்தெய்தும். (௩௩)

நாரதன்பூசைசெய்தநாயகன்மேயசெம்பொ
னேர்கெழுகோயிற்கீழ்பாலிசைந்தினிதுறையுமென்ப
சீர்கெழுதிருவின்மிக்கதிகழ்விசுவாவசுப்பே
ராரியன்பூசைசெய்தசிவலிங்கமூர்த்தியம்மா. (௩௪)

மாமறைமுனிவீரந்தமூர்த்திக்குவடதிசைக்க
ணேமமாதவத்தின்மிக்கவியல்புடைவசிட்டனென்பான்
றாமமாமலர்கடூவித்தவலரும்பூசைசெய்த
நாமமாரிலிங்கமூர்த்திநண்ணிவீற்றிருக்குமன்றே. (௩௫)

இருந்தவமுனிவீரந்தவிலிங்கத்தின்வடபாலெல்லை
பொருந்திவீற்றிருக்குமென்பபுரைதவிர்கற்பின்மிக்க
கருங்கயலன்னவாட்கட்கதிர்நிலாமுறுவற்செவ்வா
யருந்ததிபூசைசெய்தவமலமாமூர்த்தியம்மா. (௩௬)

மொழிந்தவம்மூர்த்திதன்னைமும்முறைசூழ்ந்துதாழ்ந்து
குழைந்துளங்கரைந்துசெங்கைகூப்பியாங்கொருகாற்போற்றிற்
செழுந்தவமுனிவீரெல்லாச்சித்தியுந்திருவுமுண்டா
மழிந்திடாநிலைசாலின்பவமலமாம்வீடுமெய்தும். (௩௭)

அருந்ததியிலிங்கத்திற்குமேற்றிசையமருமென்ப
விருந்திறல்வச்சிரக்கையிந்திரனவையிற்பாடுந்
திருந்தியவீணைவல்லசிறப்புடையொருவன்பூசை
தருஞ்சிவலிங்கமூர்த்திதவலருந்தவத்தின்மிக்கீர் (௩௮)

ஆசிலாவிசையின்மிக்கவன்னவன்பூசைசெய்த
வேசிலாமூர்த்திகோயிற்கீசானன்றிசையகத்து
மாசிலாவறங்களெல்லாம்வளர்த்தவன்பூசைசெய்த
தேசுசாலிலிங்கமொன்றுசிறந்துவீற்றிருக்குமாதோ. (௩௯)

வயங்குமம்மூர்த்திகோயில்வடபெருந்திசைமருங்கிற்
பயன்றருகருணைநீங்காப்பராபரனைபண்டுபூசை
யியங்குநூல்விதியிற்செய்த பிணைதரிப்புனிதஞானங்
தயங்குமோரிரண்டுமூர்த்திசார்ந்தினிதுறையுமன்றே. (௪0)

மலைவறுமுனிவீரந்தமாசிலாவிரண்டுமூர்த்தி
யிலகுமாமணிப்பொற்கோயில்வடதிசையிருக்குமென்ப
வுலகெலாம்பயந்தவெப்பிலாள்சேடியாய
பொலனிழைவிசையையென்பாள்பூசனைபுரிந்தபுத்தேள். (௪௧)

(வேறு.)

விசுவாவசுவென்றுரைசெய்யுமேலோன்விதியாலருச்சித்த
வசைதீரிலிங்கமாமூர்த்திமருவுங்கோயிற்குணபாலிற்
றிசையாதரிக்கும்பெரும்புகழாற்றிகழும்வீரபத்திரன்ற
னசையாலினிதுபூசித்தஞானமூர்த்திநண்ணிடுமால். (௪௨)

புகழ்சால்வீரபத்திரனும்புனிதமேலோன்பூசனையான்
மகிழ்கூர்மூர்த்திகோயிற்குவடபாலினிதுவைகுறுமா
னகைமாமணிப்பூணிளங்கொங்கைநங்கைகாளிபூசித்த
திகழ்மாமணியிற்பொலிசோதித்தெய்வஞானச்சிவலிங்கம். (௪௩)

வேறு.

அன்றுகாளியருச்சனையாற்றிய
பொன்றயங்கொளிமூர்த்தியைப்போற்றிடில்
வென்றியேழ்பரிவெய்யவன்றன்னெதிர்
துன்றுகங்குலிற்பாவந்தொலையுமால். (௪௪)

அந்தமூர்த்தியமர்ந்துறைகின்றதோர்
மந்திரத்தின்வடதிசைமன்னுமான்
முந்துநூலின்முறைவழிபூசனை
தந்துசந்திரன்போற்றுந்தனிப்பொருள் (௪௫)

அமுதசந்திரனர்ச்சனையாற்றிய
குமரிபாகனெண்கோயில்வடதிசை

விமலவன்பின்விரிகதிர்பூசைசெய்
நிமலமூர்த்திநிலைதருமென்பவே. (௪௬)

பருதிபூசனைபண்ணியமூர்த்திதான்
மருவுகோயில்வடதிசைமன்னுமால்
விரைசெய்தார்நளனென்னும்வியன்பெய
ரரசனர்ச்சனைசெய்தவருட்கடல். (௪௭)

ஞாலமேத்துநளனருச்சித்தநங்
கோலமூர்த்திதன்கோயில்வடதிசைப்
பாலிருக்கும்பகழியொரைந்தினுன்
சாலுமர்ச்சனைசெய்ததோர்தாணுவே. (௪௮)

அப்பெருந்திருமூர்த்தியையர்ச்சனை
செப்புநூன்முறைசெய்ததிறத்தினு
லொப்பில்பேரொழில்பெற்றனனொண்சிலை
மைப்பொலிந்தவடிவுடைமாரனே. (௪௯)

வீரமிக்கதோர்மீனுயர்வெஞ்சிலை
மாரனர்ச்சனையாற்றியவள்ளலை
நேர்தெரித்தவர்நேர்தவிர்மாரனிற்
சீர்தழைத்ததிருந்தெழிலெய்துவார். (௫௰)

வேறு.

மாரவேள்பூசைசெய்தமாசிவலிங்கமூர்த்தி
சேர்தருசெம்பொற்கோயில்வடதிசைசிறப்பின்வைகும்
பூரணைமுலைதோய்மாலைப்பொன்னைவிர்கடகத்திண்டோள்
வீரமாசாத்தன்பூசைசெய்ததோர்விமலமூர்த்தி. (௫௧)

மறிங்கெழுமதுகைவெள்ளைவாரணமுகைக்குங்கொற்றத்
தறங்களுமுலகுங்காக்குமையன்பூசனைபுரிந்த
நிறைந்தபேரொளிகொண்ஞான்நிமலற்குவடபான்மேவுஞ்
சிறந்தமாகாளன்பூசைசெய்ததோர்தெய்வமூர்த்தி (௫௨)

அந்தமில்புகழின்மிக்கமாகாளனன்றுபூசை
தந்தருளொப்பிலர்ததாணுவின்வடாதுபாங்கர்
நந்தியந்தேவுபூசைபுரிந்ததோர்ஞானமுக்க
ணிந்துவார்சடிலத்தெண்டோளிறையினிதிருக்குமன்றே. (௫௩)

வேறு.

நந்திநாயகன்பூசனைபுரிந்ததோர்ஞான
வெந்தைகோயிலின்குணதிசையிருக்குமாலென்ப
முந்தைமாதவத்துயர்ந்தபிங்கிருடியாமுனைவன்
றந்துபூசனைவழிபடல்புரிந்ததோர்தானு. (௫௪)

ஆர்த்தமூதறிவுடையமாமுனிவீர்காளந்த
மூர்த்திதன்னையர்ச்சனைபுரிவரத்திலப்புதியோன்
கார்த்தயங்கியகண்டனைதடிநிழல்கண்ட
சீர்த்திமேதகுதெய்வமாகணங்களிற்சிறந்தான் (௫௫)

வேறு.

ஓதிசான்முனிவர்போற்றுமுயர்ந்தபிங்கிருடியென்னுந்
தீதுதீர்முதல்வன்பூசைசெய்ததோர்மூர்த்திதென்பா
லாதிசண்டேசன்பூசையாற்றியவமலஞானச்
சோதிவீற்றிருக்குமென்பசொல்லருந்தவத்தின்மிக்கீர். (௫௬)

அண்ணலம்புகழின்மிக்கவாதிசண்டேசன்பூசை
பண்ணியபுனிதஞானப்பரமனதிசன்றிக்கி
னண்ணிவீற்றிருக்குமென்பவலங்கொண்முதுருவனென்பான்
றண்ணிறைமலராற்பூசைதந்ததோர்தெய்வந்தானு. (௫௭)

கேடிலாவேதமுன்னூற்கேள்விசான்முனிவீர்முன்னெம்
பாடுயர்துருவன்பூசைபண்ணியபரமமூர்த்தி
நீடியகோயிலீசன்றிசையினினிலையாய்வைகு
மாடல்வேற்றுந்துமாரனர்ச்சித்தவிலிங்கமம்மா. (௫௮)

வடிசுடரிலைவேற்றுந்துமாரனர்ச்சனைமகிழ்ந்த
வடிகளின்கோயிற்றென்பால்யாதியென்றறையுநாம
விடுபரிவிசயதிண்டேர்வேந்தனர்ச்சனைபுரிந்த
படிதவிர்கருணைமுக்கட்பரம்பொருளுறையுமாதோ. (௫௯)

வேறு.

அருந்தவத்தினிராதியம்புற்றில்வாழ்
திருந்துமூர்த்திதன்கோயிலின்றென்றிசைப்
பொருந்துமென்பபுதுநறும்பங்கயத்
திருந்தவன்னருச்சித்தவிலிங்கமே. (௬௦)

பிரமனர்ச்சனைசெய்தபிறங்கொளி
யரியமூர்த்திதன்றென்றிசையம்பிகை
பரிவினர்ச்சனைசெய்தபரம்பொரு
ளுரியதோர்திருமூர்த்தியுறையுமால். (௬௧)

செப்புமத்திருமூர்த்திதன்றென்றிசை
வைப்பில்வைகும்வருணன்மலரினு
லொப்பில்பூசைபுரிந்ததோரொப்பிலாத்
துப்பிலங்கியவார்சடைச்சோதியே. (௬௨)

வருணனர்ச்சனையாற்றியவள்ளறன்
றிருமணிச்செழுங்கோயிலின்றென்றிசை
மருவுமாருதவானவன்பூசனை
புரியுந்தெய்வப்பொலன்சுடர்மூர்த்தியே. (௬௩)

வேறு.

மாருதம்பூசனைபுரிந்தமாசிலாப்
பூரணன்றென்றிசைப்பொலிந்துவைகுமாற்
சீர்கெழுகோசிகன்பூசைசெய்ததோ
ராரருளாழியாமமலனென்பவே. (௬௪)

கோசிகன்பூசனைபுரிந்தகோதிலாத்
தேசுடைமூர்த்திதன்கோயிற்றென்றிசை
காசிபன்பூசனைபுரிந்தகண்ணுத
லேசிலாமூர்த்திவீற்றிருக்குமென்பவே. (௬௫)

காசிபன்பூசைசெய்கடவுள்வைகிய
மாசறுகோயிலின்றெற்கின்வைகுமாற்
பாசவெவ்வினைதவிர்பரத்துவாசன்மு
னேசமோடருச்சனைபுரிந்தநின்மலன். (௬௬)

பார்புகழ்தவத்துயர்பரத்துவாசனு
மாரியன்பூசைசெயமலன்றென்றிசை
சீர்கெழுகோதமன்பூசைசெய்ததோர்
நேர்தவிர்பரஞ்சுடர்நிலைபெற்றோங்குமால். (௬௭)

வரைபெறுமடவரன்மரபிற்பூசனை
புரியுமாமதிமுடிப்புனிதன்மேற்றிசைப்
பிருகுமாமுனிவரன்பிறங்குமர்ச்சனை
தருநுதல்விழியுடைத்தாணுவைகுமால். (௬௮)

வேறு.

பிருகுவென்னும்பெருந்தவனர்ச்சனை
மாபினூற்றியமூர்த்திவடதிசை
யுறைசெய்சீர்த்தியுபமன்னியமுனி
யரியபூசைசெய்மூர்த்தியமருமால். (சுகூ)

அரியமாதவிரத்திருமூர்த்திதான்
மருவுகோயில்வட திசைவைகுமா
லுரவுநீருலகேத்துமுயர்புகழ்ப்
பரசுராமன்பரவும்பராபரன். (எ0)

அகிலமேத்தும்பயாதியருச்சனை
மகிழுமூர்த்திதன்றென்றிசைவைகுமாற்
புகரிலங்கும்பொருதிறல்வாகைவேற்
குகனருச்சனைசெய்தகொழுஞ்சுடர். (எக)

அவ்விலிங்கத்தின்றென்றிசையாழியம்
பவ்வநீருலகேத்தும்பகீரதன்
செவ்விதர்ச்சனைசெய்தினிதேத்திய
நவ்வியங்கைப்பரஞ்சுடர்நண்ணுமால். (எஉ)

வேறு.

அத்திருமூர்த்திதென்பாலமர்ந்திடுமென்பலோபா
முத்திரைபூசைசெய்தமூர்த்தியம்மூர்த்திதன்னைப்
பத்தியினொருகாற்போற்றிப்பவமெலாமகலுமெல்லாச்
சித்தியுந்திருவுமேலாஞ்சிவகதிதானுமெய்தும். (எங)

வித்தகமுனிவீரந்தவிமலற்குத்தென்பாலெல்லை
யத்திநீருண்டதொல்லையகத்தியனென்னுமேலோன்
மைத்தவிர்விதியிற்பூசைமரபொடுபுரிந்துபோற்று
முத்தமஞானமூர்த்தியுகந்தினிதுறையுமன்றே. (எச)

அலையாழியுண்டதொல்லையகத்தியன்பூசைசெய்த
தொலையாதகருணைஞானச்சோதிதன்றென்பான்மேவுங்
கலியாணசுந்தரப்பேர்ககந்தருவக்குலத்துத்
தலையாயதலைவன்பூசைசெய்ததோர்தனியிலிங்கம். (எ

மெய்த்தவமுனிவீரந்தமேதகுமூர்த்திமேவும்
புத்தொளிமணிப்பொற்கோயிற்றென்றிசைப்பொருந்துமென்ப

சித்தர்கள்விதிவழாமற்சிறப்பொடுபூசைசெய்த
முத்திதந்தருளுந்தெய்வமுடிவிலாஞானமூர்த்தி. (எசு)

சித்தர்கள்பூசைசெய்தசிவலிங்கந்தனக்குத்தென்பாற்
சத்தியமாதவத்தீர்சாத்தியர்தாங்கள்சாலப்
புத்தலர்தூவிப்பூசைபுரிந்தனர்போற்றிசெய்த
மைத்தவிரிலிங்கமூர்த்திமருவிவீற்றிருக்குமன்றே. (எஎ)

வேறு.

சாத்தியர்க்கருள்புரிந்ததோர்தனிப்பரஞ்சுடரா
மூர்த்திகோயிலினிருதிதன்றிசையினின்முன்ன
ரேத்தரும்புகழ்க்குய்யகரர்ச்சனையிழைத்த
வாய்த்ததோர்சிவலிங்கமாமூர்த்திதான்மருவும். (எஅ)

குய்யர்பூசனைபுரிந்ததோர்கோதிலாஞானச்
செய்யமூர்த்திதன்றென்றிசைச்சேர்ந்தினிதுறையு
மையில்சாரணர்மரபினிற்பூசனைபுரிந்த
துய்யதோர்சிவலிங்கமாந்தனிப்பெருஞ்சோதி. (எகூ)

தூயசாரணர்பூசனைபுரிந்ததோர்தொல்லைச்
சேயசோதிதன்கோயிலினிருதிதன்றிசையி
லாயுநான்முறைகின்னரரருச்சனையமைத்த
தாயினல்லருள்புரிதருக வுள்சார்ந்துறையும். (அ0)

தொல்லைமாநிலம்புகழ்கலியாணசுந்தரனுக்
கெல்லைதீர்வரநல்கியவெம்பிரானிருக்கு
மல்லன்மாமணிக்கோயிலின்மேற்றிசைவாழும்
வெல்லருந்திறல்வாணனர்ச்சித்ததோர்விமலன். (அக)

அன்னமூர்த்திதன்றென்றிசைவாசுகியலரான்
முன்னமர்ச்சனையாற்றியசிவலிங்கமூர்த்தி
மன்னுமத்திருமூர்த்திதன்றென்றிசைவாழும்
பன்னகேசனுமனந்தனர்ச்சித்ததோர்பரமன். (அஉ)

பொருவில்வாணனர்ச்சனைபுரிபுண்ணியன்கோயி
லிருதிதிக்கினிலுண்டொருநீள்பிலவாயின்
மருவுமப்பிலவாயிலின்றென்றிசைவைகு
மெரியையொத்தகார்க்கோடனர்ச்சித்ததோரிலிங்கம். (அங)

வாறூதமாந்தல்த்தினீர்வல்விடஞ்சொரிகாழ்
கோடணுதரித்தேத்தியகொழுஞ்சுடர்மூர்த்தி
நீடுகோயிலின்றென்றிசைநிலைதருமென்ப
பாடிலாததோர்தக்கனர்ச்சித்ததோர்பகவன். (௮௪)

திருத்தமாந்தவமுனிவிரம்மூர்த்திமேற்றிசையில்
வரத்தின்மேதகுபதஞ்சலிசிவலிங்கமருவு
முறைத்தவைவகைச்சிவலிங்கமொருமுறையோவா
விருப்பினாற்றொழுதேத்துவோர்வி துதிஞலயிளியார் (௮௫)

வேறு.

அலர்க்கதிரன்னசோதியசலேசன்சந்நிதிக்க
ணலத்தகுகோசிகன்றனர்ச்சித்தநாதனன்னும்
வலத்துயர்தவத்திரந்தமூர்த்திக்குவடபானன்னும்
புலத்தியன்புலகனென்னுமுனிவரர்ச்சித்தபுத்தேள். (௮௬)

வாய்த்தவம்மூர்த்திகோயிலவடதிசைமருவுமென்ப
சீர்த்தகுகிருதுவென்பானர்ச்சித்ததெய்வமூர்த்தி
யேத்தருமறையுணர்ந்தவிருடிகாளிசைந்தவந்த
மூர்த்திதன்வடபானன்னுஞ்சனகனர்ச்சித்தமூர்த்தி. (௮௭)

சனகனர்ச்சனைபுரிந்ததாணுவின்வடபான்மேவு
முனிசனற்குமரன்பூசைசெய்ததோர்முககண்மூர்த்தி
யனையதோர்மூர்த்திகோயிலவடதிசையமருமென்ப
புனிதனுமுதிட்டிரன்றன்பூசனைபுரிந்தபுத்தேள். (௮௮)

முரசுயர்கொடிபோனந்தமூர்த்தியைமுன்னம்பூசை
புரிதருவரத்தினாலேபொருதுபாரதப்போர்வென்று
திருநிலமுழுதுங்காவல்செய்தனனவ்விலிங்க
மொருமுறைதொழுவோரிந்தவுலகெலாந்தனிபுரப்பார். (௮௯)

தருமபுத்திரனர்ச்சித்ததாணுவின்வடபாற்றங்கும்
புரைதவிர்வினதைபூசைபுரிந்ததோர்புனிதமூர்த்தி
யுரியவம்மூர்த்திதன்னையர்ச்சித்தவரத்தினாலே
கருதருபுகழ்சால்வென்றிக்கருடனைப்பயந்தாளன்றே. (௯௦)

வினதைபூசனைபுரிந்தவிமலற்குக்குணபான்மேவும்
புனைகழலிராமன்பூசைபுரிந்ததோர்மூர்த்தியந்த
வனகமாமூர்த்திதன்னையர்ச்சித்தவரத்தாலன்னான்
கனைகடலிலங்கைவேந்தன்றன்வலிகடந்தானன்றே. (௯௧)

இலகியபுகழிராமனிலிங்கத்தின்வடபாலெல்லே
வலனருச்சனேபுரிந்தமாசிலாவிமலமூர்த்தி
நிலேதருமென்பவந்தநிமலற்குவடபானீடுஞ்
சிலேவலிவிசயன்பூசைசெய்ததோர்தெய்வமூர்த்தி. (கூஉ)

பொருசிலேவிசயனந்தமூர்த்தியைப்பூசைசெய்து
பரவியவரத்தினலேபாரதப்போரினேர்ந்த
மருவலர்தம்மைவென்ருன்வயங்குமம்மூர்த்திதன்னே
யுருகியேதொழுவோர்தங்கட்கொன்னலர்புறங்கொடுப்பார். (கூஙு)

வே று.

அவ்விலிங்கத்தின்வடதிசைவாசுதேவனெண்சிவலிங்கமமரு
மவ்விலிங்கத்தின்வடதிசைவியாதனருச்சித்தசிவலிங்கமுறையு
மவ்விலிங்கத்தின்வடதிசைமருவுமுரோமசனலங்கொளியிலிங்க
மவ்விலிங்கத்தின்வடதிசைமேவுமருந்துருவாசனதிலிங்கம். (கூச)

உரைத்தவம்மூர்த்தியீசன்மாதிசையிலுறைதருங்கருடனதிலிங்க, முரைத்தவம்மூர்த்திகுணதிசையகத்தி லுறைதருஞ்சுரர்குருவிலிங்க, முரைத்தவம்மூர்த்தியுத்தரதிசையி லுறைதருமத்திரியிலிங்க, முரைத்தவவ்வேழுமூர்த்திகடம்மைத் தொழுதவரொப்பில் வீடடைவார். (கூரு)

வே று.

அத்திரிபூசைசெய்தவத்திருமூர்த்திகோயி
லுத்தரதிசையில்வைகுமனசூயையொப்பின்மூர்த்தி
மைத்தவிரனேயமூர்த்திவடதிசைவான்மீகப்பேர்
மெய்த்தவன்பூசைசெய்தவிளங்கொளிமூர்த்திமேவும். (கூசா)

வே று.

கோத்தமாமறைமுனிவிரம்மூர்த்திதன்கோயிலின்வடபாலிற்
பார்த்தலம்புகழ்புதனருச்சனேபுரிபரமமாம்பொருண்மேவும்
வாய்த்தவப்பெருமூர்த்திதன்வடதிசைவைகுமாமலர்தூவிக்
காத்தியாயனிபூசனேபுரிந்ததோர்கதிதருசிவலிங்கம். (கூஎ)

வே று.

அன்னதன்வடபால்வைகுமார்க்கண்டனமலலிங்க
மன்னதன்வடபால்வைகுஞ்சிருங்கனதமலலிங்க
மன்னதன்வடபால்வைகுஞ்சங்கனதமலலிங்க
மன்னதோரிலிங்கமூன்றுந்தொழுபவரமலராவார். (கூஅ)

புதனருச்சனைபுரிந்தபுனிதமாமூர்த்திகீழ்பால்
வதிதருஞ்சைமினிப்பேர்மாமுனிபூசைசெய்த
வெதிராறமூர்த்தியந்தமூர்த்தியீசானதிக்கிற்
றுதிதருநகுடன்பூசைசெய்ததோர்சோதிவைகும். (௩௯௯)

நகுடனர்ச்சனைபுரிந்தநாயகன்கோயிற்றென்பாற்
சகமுழுதேத்துஞ்சீர்த்தித்தசரதன்பூசைசெய்த
திகழ்சிவலிங்கமேவுஞ்சிவலிங்கமதற்குத்தென்பாற்
புகழரிச்சந்திரப்பேர்ப்பூபதியிலிங்கமேவும். (௪௦௦)

மணமலியிதழிவேணியவன்மீகநாதன்கோயிற்
குணதிசைதருமப்புத்தேள்கோடறுபூசைசெய்து
துணைதவிர்மூர்த்திமேவுந்தூயவம்மூர்த்திதென்பா
லிணையில்விஞ்ஞானன்பூசையிழைத்ததோரிலிங்கமேவும். (௪௦௧)

தத்துவமுனிவீரந்தத்தாணுவின்றென்பால்வைகுஞ்
சித்திரசிகண்டிமைந்தாருச்சித்ததெய்வமூர்த்தி
வித்தகமுசுகுந்தப்பேர்வேந்தனர்ச்சனைபுரிந்த
வத்தன்வீற்றிருக்குமென்பவசலேசன்கோயிற்றென்பால். (௪௦௨)

வேறு.

இன்னுமித்தலத்தெண்ணிலாச்சிவலிங்கமுண்டான்
மன்னுநான்மறைமுழுதுணர்மாதவமுனிவீ
ரன்னபல்வகைச்சிவலிங்கவளவையாரறிவார்
பன்னகேசற்குமறைந்திடிற்பல்லுகஞ்செல்லும். (௪௦௩)

ஓதியாலுயர்முனிவிர்காளிங்ஙனமுரைத்த
தீதுதீர்தருசிவலிங்கதெரிசனஞ்செய்வோர்
பூதலம்புரந்தும்பர்நாட்டரசியல்புரிந்து
மாதுபாகனாடிநிழல்வாழ்வர்பின்வாய்மை. (௪௦௪)

சத்திமாபுரச்சர்வலிங்கச்சரித்திரத்தைப்
பத்தியோடுரைசெய்பவர்கேட்பவர்பகரொண்
சித்திமேவுவர்சேணுலகாளுவர்சிறப்பின்
முத்திவீடடைந்தின்பவாரிதியின்மூழ்குவரால். (௪௦௫)

சர்வலிங்கச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௪௨௩.

---

## கலியுகச்சருக்கம்.



இனப்பெருந்தவமுனிவரர்தங்களைச்சூதனுங்கெதிர்நோக்கிச்
சனற்குமாரனைமுதலியமுனிவர்முன்கலிவலிதனக்கஞ்சி
யனத்துவாம்பரிவிரிஞ்சனையடைந்தவன்விடுப்பவந்தாரூரிற் [வான்
புனற்கொள்வேணியாற்பூசைசெய்தருந்தவம் புரிந்தவாறுரைசெய்.

வேறு.

இலக்கம்பதினேழுடனிருபத்தெண்ணாயிரம்யாண்டெனப்புகல்வர்
புலத்தினுயர்ந்தோர்முதலுகத்தினளவுபுரைதீரறச்சுரபி
நிலத்தின்மிசையோரடிநான்குநிறுவிப்பொலிந்துநின்றிடுமா
னலத்தினுயர்ந்ததவவொழுக்கநான்குந்தெரிந்தநான்மறையீர். (௨)

இந்தவுலகத்துள்ளோர்க்குவாழ்நாளிலக்கம்யாண்டென்ப
ரந்தவிலக்கம்வருடத்தினந்தத்தன்றியந்தமுறார்
தந்தைதாயர்மகவிழக்குமின்னலறியார்தலைவனிழந்
துந்துயராங்கடன்மூழ்கியறியார்மாதருயர்தவத்தீர். (௩)

பாலப்பருவம்பதினாறாயிரம்யாண்டெல்லைவண்காளைக்
கோலப்பருவமாயிரமுப்பஃதோடிரண்டாக்கூறுவரப்
பாலுற்றணையுமெல்லெனவேவிருத்தப்பருவம்படராழி
ஞாலத்துறையுமன்பதைக்குஞானவாழ்வினற்றவத்தீர். (௪)

தந்தைதாயருரைதவறார்தனயர்மூத்தோர்தமதுரையை
நிந்தைபுரியாரிளையோர்கணெடியவடிவேனீலவிழிக்
கந்தமலர்ப்பூங்குழன்மாதர்கற்பால்வடமீன்றனைவெல்வா
ரந்தண்கமலைதனைவெல்வாரணிக்குமணியாம்பேரழகால். (௫)

வேறு.

வருணமோர்நான்கேயன்றிவருணம்வேறில்லைமாந்த
ருருவுறுமுயர்ச்சியைந்துபனையளவெனவுரைப்பர்
மிருகம்புட்குலங்களாதிபகையின்றிமேவிமேலா
மரியமாரியங்கிளக்குமுண்மரமகிலத்தின்றால். (௬)

உத்தமமாகுமிந்தவுகத்தினிலுள்ளோர்யாரு
மூத்தமமேலோரஃதொழுகுமாநெறியுமேலா
முத்தமநெறியேயன்றுருள்ளமேலுணர்வுஞ்சால
வுத்தமவுணர்வேயுண்மையுத்தமவுணர்வின்மிக்கீர். (௭)

பிறர்பொருள்வெஃகல்செய்யார்பெருந்துயிற்கனுவகத்தும்
பிறர்மனைவிழைதல்செய்யார்பெரியர்சொன்மறுத்தல்செய்யார்
பிறர்தழுக்கல்லல்செய்யார்கட்டுரைபிறழ்தல்செய்யார்
பிறர்தமையிகழ்தல்செய்யார்செய்ந்நன்றிபிழைத்தல்செய்யார். (அ)

கொலைகளவறியார்தீயகோளுரையறியார்நோயின்
மெலிவுழந்தறியார்வெய்யமிடிபெனுநெருப்பில்வெந்து
நலிவடைந்தறியார்சொல்லுநடுவிகந்தறியார்நிற்கு
நிலைபிறழ்ந்தறியார்வஞ்சநெஞ்சுகொண்டறியாரன்றே. (கூ)

மாரனைவென்றபொற்பின்வனப்பினர்மணியைவென்ற
சீரொளிநிறத்தர்மாயோன்செல்வத்தைவென்றசெல்வர்
கார்முகில்வென்றகையர்கடமுனிகலவிவென்ற
வோர்தருகலவிமிக்கோர்முதலுடத்துள்ளோர்யாரும். (க0)

கோதறுகுணத்தின்மேலோர்குறையிலாவலிபடைத்தோர்
மாதவம்கருணைசாலமலிந்துளோரமுச்சாறென்னும்
தீதிலர்சிவனிருக்குஞ்சிந்தையர்தேவுசான்ற
பூதியினொளிபொலிந்தநெற்றியர்புகழின்மிக்கோர். (கக)

வேறு.

சுருதியாகமமுதலதொலைநூன்
மரபினோதிமாமந்திரம்புசன
றானருச்சனைவேள்வியாற்றிநல
விரதமோம்பியேவாழ்வர்வேதியர். (கஉ)

வேலின்வென்றியுமமுதவெண்ணிலாப்
போலும்வெணகுடைத்தண்மையும்புகழ்க்
கோலின்செம்மையுங்குன்றிடாமலே
மாலின்வையகங்காப்பர்மன்னரே. (கங)

மனுவினீதியினீட்டிமாண்பொருள்
கனியுமன்பினிற்கடவுளாதரித்
தனகமாதவர்ப்போற்றியாவளித்
தினிதுவாழ்வரால்வணிகரொன்பவே. (கச)

இருபிறப்பினோரேவல்பூண்டொழுந்
தரைவளத்தினிற்றருமம்போற்றிமா
மரபின்மாண்புசால்வழிவழாமலே
பொருவில்சூத்திரர்புகழின்மேவுவார். (கரு)

மறக்களிற்றுவேல்வாகைமன்னர்த
மிறைப்பெருந்தொழிலியல்புமாமனுத்
திறத்தின்குறத்திருத்திப்பாதுகாத்
தறத்தினிற்பாலமைச்சின்மேலையோர். (கசு)

பார்முயற்சியின்றுதவும்பலவளன்
சோர்வில்வானவர்சுரபியின்பயன்
சீர்கொளானினலகுந்திங்கண்மும
மாரிபெய்திடுமாதவத்தினீர் (கஎ)

தருவும்வானவர்தருவினும்பல
மருநறுஞ்செழுந்தேங்கொள்வண்கனி
பருவமாறினும்பயக்குமிவ்வுகப்
பெருமையாவரோபேசவல்லரே. (கஅ)

வேறு.

இந்தவுகத்தினொருமுக்காலனையேயியல்லைபிறவுமிடை
யந்தவுகமோரிரண்டிற்குமறமாஞ்சுரபிமூன்றிருகா
லுந்துகடற்பாருறலூன்றியுலவுங்கொடியகலியெனுமபேர்
தந்தவுகத்தினியல்பனைத்துஞ்சாற்றக்கேண்மின்றவத்தீர்காள். ()

வேறு.

இயம்புநான்கிலக்கமுப்பானிராயிரம்யாண்டேயென்பர்
நயந்தவிர்கலியுகத்தினெலலைநற்றருமமென்னும்
பயன்கெழுசுரபியோர்கால்படியுறநிற்குமுககண்
வயங்கொளிவிளக்கைநெஞ்சின்மாசிருளிரியவைத்தீர். (உ0)

மாந்தர்கட்காயுணூறுவருடமேவடிவமெண்சாண்
சேந்தநல்லொளிவனப்புசிறப்பிலாவுருவினொருங்
காய்ந்திடுகுணத்தினொருங்கருணையில்கருத்தினொரு
மாய்ந்தநல்லறிவிலோருமாயுதித்தமர்வர்யாரும். (உக)

உருவுறுமுன்னிறப்பருருத்திரண்டிறப்பர்கண்வாய்
கரமுதலுறுப்புமுற்றிக்கருவினுளிறப்பர்தோற்றம்
வருபொழுதிறப்பர்தோன்றிவந்துடனிறப்பர்வந்தாங்
கிருநிலத்தொருநாளாதிசிலநாளேய்ந்திறப்பர்யாரும். (உஉ)

பாலராய்மாய்வர்பையநடைபயில்பருவமாய்வர்
வாலராய்மாய்வர்காளைப்பருவத்தின்மாய்வர்கூனுங்
கோலராய்க்கையிற்பற்றுங்கோலராய்க்குந்திச்செல்லுங்
காலராய்ப்பிணியராகிக்கருத்தறிவழிந்துமாய்வார். (உ௩)

மரபொடுகளிற்றுறுவாசிமுப்பானிரண்டு
கரமுயரொட்டகம்பத்திரண்டொடுநான்குகாரா
டொருபதிறுறுநாய்பன்னிரண்டியாண்டுறையுமற்ற
விரவுநாற்கால்விலங்குமேவும்யாண்டிருபத்தைந்தே. (௨௪)

உரைசெய்மற்றெல்லையன்றியிடையிடையுயிரிறக்கும்
விரிசிறைகழல்கட்கூகைவெஞ்சீருங்கழுகுகாகம்
வரைவில்பற்பலயாண்டெல்லைமாய்ந்திடாதுறையுமெண்டோ
ளரனடிக்கமலச்செம்போதலர்தருமகத்தடத்தீர். (௨௫)

இந்தவெங்கலியுகத்தினியற்கையையிசைப்பதென்னே
தந்தைதாய்மாற்றங்கேளாரன்னவர்தாளிற்றாழார்
மைந்தர்தாமூத்தோர்தம்மைவணங்கிடாரிளையர்வாட்கட்
பைந்தொடிமகளிர்கேள்வர்ப்பணிந்தவருரையினில்லார். (௨௬)

தேசிகர்ப்போற்றல்செய்யார்சிவபிரான்செம்பொற்றாள்கள்
பூசனைபுரிதல்செய்யார்கண்டிகைபுனைதலசெய்யா
ராசினீறணிதலசெய்யாரஞ்செழுத்தியம்பல்செய்யா
ரீசனாலயம்வலங்கொண்டிறைஞ்சுதல்செய்யாரொன்றும். (௨௭)

அறமொழிவிரும்பிக்கேளாரறமலாதறையுந்தீய
மறமொழிவிரும்பிக்கேட்பார்மறமிலாமாதவத்தீர்
பிறர்மனைவிழைதல்செய்வார்பெருந்தவம்விழைதல்செய்யார்
நெறிதருநெறியினில்லார்நெறியலாநெறியினிற்பார். (௨௮)

பொய்யுரையன்றிமெய்யைக்கனவினும்புகலார்பொல்லா
வெய்யமாகொலைகளஞ்சார்பிறர்பொருள்வெஃகித்தீமை
செய்திடர்விளைப்பர்மாதர்கற்பினைச்சிதைப்பர்தீராக்
கைதவவினையேசெய்வர்கதிதருங்கருமஞ்செய்யார். (௨௯)

கரவழுக்காறுமோகங்களிமதங்காமநோயே
மருவிநற்றொழில்விடுப்பர்செய்ந்நன்றிமறப்பர்முக்கட்
பரமனுக்கன்புபூண்டுபரமனேபொருளென்றெண்ணும்
பெரியவர்ப்பிழைத்துநாளும்பேரிருணிரயத்தாழ்வார். (௩௦)

பெருங்கிளைதந்தைதாய்முன்பிறந்தவர்மனைவிமைந்த
ரரும்பெறலாசானுற்றவதிதியர்பசிப்பவுண்பர்
விருந்தெதிர்கொண்டுபோற்றார்விரதநோன்பினைவிடுப்பர்
இருந்துசீர்த்தென்புலத்தார்செய்கடன்சிறிதுஞ்செய்யார். (௩௧)

உயர்பெருங்குலத்துதித்தவொண்டொடிமகளிர்தங்க
ணியல்புடைமகிழ்நர்தம்மைப்பிழைத்துவேறிழிகுலத்துப்
பயனறுமாந்தர்தோண்மேற்பற்றுடைவேட்கைவைத்து
மயக்குபெரிதுழந்துகாமநோயினுல்வருத்தங்கூர்வார். (௧௨)

யாணர்மங்கலஞ்செயாமுனிளஞ்சிறுமகளிர்காம
வேணவாவுற்றுமாழ்கிமெலிவர்பன்னிரண்டியாண்டிற்
பூணிழைமங்கைமாதர்புதல்வனைப்பெறுவர்பொய்தீர்
நாணமேயாதிநான்கினஃகொரீஇநவையினிற்பார். (௧௩)

மன்னருளீன்றோர்தம்மைமைந்தர்தாமகிழ்ந்துபோற்று
ரின்னிளமைந்தர்தம்மையீன்றவரினிதுபோற்றார்
முன்னவர்தம்மைப்பின்னோர்போற்றிடார்முன்னோர்தாமும்
பின்னவர்தம்மைப்போற்றார்பீடுசால்பெருந்தவத்தீர். (௧௪)

அடியவர்தம்மைப்போற்றாராள்பவராள்வோர்தம்மை
யடியவர்போற்றார்போற்றார்மாணுக்கரறஞ்சால்கேள்வி
யடிகளாங்குரவர்தம்மைமாணுக்கர்தம்மையன்பா
லடிகளாங்குரவர்போற்றாரந்தணர்திலகமன்னீர். (௧௫)

மாதனைமகிழ்நர்போற்றார்மகிழ்நனைமாதர்போற்றார்
பூதலவேந்தர்தம்மைப்பொருபடைமாந்தர்போற்றார்
மேதினிவேந்தர்தாமும்விறற்படைமாந்தர்ப்போற்று
ராதியங்கடவுளீசனடிமலரன்புமிக்கீர். (௧௬)

அந்தணர்வேதமோதாரருஞ்சிவபூசைசெய்யார்
செந்தழல்வேள்வியாற்றார்செயத்தகுநியமஞ்செய்யார்
மந்திரநவிற்றாரன்புவளாருண்மனத்தில்லவையார்
வெந்தொழில்வினைமேற்கொள்வார்விரதநல்வினைவிடுப்பார். (௧௭)

பொருளினைவெஃகிவேந்தர்புவியினோர்க்கிடுக்கண்செய்வார்
தருமமாமனுவினீதிதணந்துகூன்கடுங்கோலோச்சி
யருளினைவிடுப்பர்வேள்வியாற்றிடாரறங்கள்பேணார்
வெருவருந்தொழிலராவர்மிகுபெரும்பாவமஞ்சார். (௧௮)

தன்பெரும்பரிசனத்தாற்கள்வர்தந்திறத்தாற்றம்மான்
பின்பரந்திலங்கும்வைவாட்பகைவரால்விலங்காலெய்துந்
துன்பவெம்பகைதுரந்துதொடுகடலாடைமண்மேன்
மன்பதையோம்பிவாழார்மறவரின்வாழ்வார்மன்னர். (௧௯)

மனுமுறைமீரபினீட்டார்மாண்பொருள்வணிகர்வண்பா
லினியவானினங்கள்பேணாரீசனையீசற்கன்பாம்
புனிதனைப்போற்றல்செய்யார்புண்ணியக்கிழமைபூணார்
வினைமிகுகொடுமைபூண்டுவெம்பவம்விளைத்துவாழ்வார். (௪௰)

அறுதொழிலாளர்தங்கட்காசிலாவேவலாற்று
நெறிவழிநில்லார்வேதமந்திரநெறியிற்செய்யு
மறுவறுவேள்விசெய்வர்சூத்திரவருணத்துள்ளார்
குறைதவிர்நிறைசால்கேள்விக்குணப்பெருங்குன்றமொப்பீர். (௪௧)

அறநிலைதிருத்தார்வேந்தருஞ்செயிசுடுஞ்சொற்கூறி
மறநிலைவிலக்கார்கோளும்வஞ்சமும்படைத்துப்பொல்லா
நெறிவழிநிற்பர்நெஞ்சினெடும்பொருள்வெஃகியாங்குப்
பிறர்குடிகேடுசூழ்வரமைச்சர்கள்பெருந்தவத்தீர். (௪௨)

கூனொடுசெவிடுமூங்குங்குறளுமாயறிவுமஃகி
மானமும்வலியுமின்றிப்பிணியொடுவறுமைமிக்காங்
கீனவெந்தொழினடாத்தியிருளுறுபாவமீட்டு
மூனர்தங்குழாமேயோங்குமுலகெலாமுயர்தவத்தீர். (௪௩)

கோளுரைவஞ்சம்வெய்யகொலைகளவுலோபம்பொய்ம்மை
தேள்விடநாகமென்னத்தெறுகுணங்காமமோக
நீளழுக்காறுமுன்னுந்தீமையானிறைந்துளோரோ
வாளுடுக்கணத்திற்சாலமலிவரால்வையமெங்கும். (௪௪)

அருளறிவொழுக்கமானமாசாரம்பொறைசீரன்பு
தருமநன்னெறிநற்றானஞ்சத்தியந்தவத்தோடாண்மை
விரதநோன்பிரக்கமீசன்மெய்யருட்பத்தியுள்ளோ
ரொருவரையுலகிற்காண்பதரிதுகாணுயர்தவத்தீர். (௪௫)

பத்தினிப்பெண்டிரீட்டம்பல்கிடாதருகிமாயுஞ்
சித்திரப்பரத்தைமாதர்தங்குழாம்பல்கிமல்கு
மூத்தமமாந்தரொல்லாமுறுதுயருழந்துசோர்வர்
மைத்தருமனத்துத்தீயோர்மகவொடுமகிழ்ந்துவாழ்வார். (௪௬)

வறுமையும்பிணியுநல்லோர்தம்மையேவலிந்துபற்றும்
பொறையிலாப்புன்மையோராற்பொறையுளோர்புன்கண்சேர்வார்
சிறியவர்தம்மான்மேலாம்பெரியவர்செல்லல்கொள்வா
ரறிவிலாதவராலுண்மையறிவுளோரல்லல்கூர்வார். (௪௭)

தருமமேபொருளென்றெண்ணிச்சத்தியந்தவறாதோம்பி
விரதமேபயின்றுநித்தநியமங்கள்விதியிற்பேணி
யருள்புரிந்ததவியாற்றியனைவர்க்குமிதமேசெய்யும்
பெரியவர்தமக்கேதுன்பம்பெரிதுவந்தடையுமன்றே. (சஅ)

அறத்தினைவெல்லும்பாவமழித்திடும்பொய்ம்மைமெய்யை
யொறுத்திடுமுலோபமென்பதுபகர்ந்தனையொடுங்கச்
செறுத்திடுநற்குணத்தைத்தீக்குணந்தீக்கொள்செங்கைக்
கறைத்திருமிடற்றுப்புத்தேள்கமலத்தாள்கருத்துள்வைத்தீர். ()

வான்பயன்றராதாற்றவருந்தினும்விளைநெற்பூமி
தான்பயன்றராதம்மதருகினும்பொலிவுதாரா
தான்பயன்றராதந்தணலர்கனிமதுரமூறுந்
தேன்பயன்றராதோங்குந்தருவனஞ்செய்தவத்தீர். (ருo)

செந்தழல்வேள்விதானந்தீதுதீர்விரதநோன்பு
மந்திரந்தவங்கள்கங்கைமாநதிமுதலதீர்த்த
மந்தமில்பயன்களல்காதரும்பொருள்சான்றவேதச்
சந்தநூன்மாதவத்தோர்சாபமும்பலியாதன்றே. (ருக)

விலங்கினம்பறவையாதிவெம்பகைகொண்டுவைகும்
விலங்குபாம்பலகைதீயோர்வெய்யகால்கள்வர்தம்மால்
விலங்கருந்துன்பமேவிவறுமையான்மெலியும்வையம்
விலங்கலினுயர்தவத்துமேதகுமெய்யுணர்ந்தீர். (ருஉ)

இவ்வுகமுதிர்ந்தவெல்லையந்தணரிழிந்தோர்க்கேவல்
செய்வர்வேலரசர்கொற்றஞ்சிதைந்துகீழோர்க்கீழ்நிற்பர்
வெவ்வினைபுரிந்துநாய்கர்தயகுலமுறைவிடுப்பர்
தெய்வநூலொழுக்கம்பேணிச்சூத்திரர்தவமேசெய்வர். (ருங)

சாதிநான்கிழிந்தனந்தஞ்சாங்கரசாதிபல்கி
யேதமாய்கொலைவெம்பாவமிழிபுலைத்தொழிலேயீண்டிப்
பூதலமெங்குநோயுங்கரிப்புமேபொருந்திக்கள்ளூன்
வீதிதோறடருகாய்நீங்கனியெனவிற்குமன்றே. (ருச)

கதிர்நறுஞ்சாலிமுன்னூறுணின்றிக்கரிந்துவாடி
புதிரிலைகிழங்குகாய்களுணுமுதலூணையுண்டு
விதிநிலைமுறைவரம்புவிடுத்தழிந்தெவருமொன்றாய்ப்
புதினுறுவயதின்மூப்புப்பழுத்துமாய்ந்தொழிவரன்றே. (ருரு)

அரக்கராலசுரர்தம்மாற்பிறவற்றாலரியநோன்புக்
இருத்தகுதவமுமாண்டுமுனிவர்சிறுமையெய்தி
வெருக்கொடுதுயரின்மூழ்கிவெங்கொலைத்திருகுசீற்ற
வரிப்புலிச்சூழல்புக்கமானெனத்திரிவரன்றே. (ருசு)

உரைதருமிவ்வுகத்தினீற்றினிலுடல்குறைந்து
குரைதருதேரைபோலத்தோன்றியேவலியுங்குன்றித்
தரைபடுவெங்குபுக்குச்சார்ந்துபுள்விலங்குபாமபங்
கிரையெனக்கவரமாழ்கியின்னுயிரிழப்பர்யாரும். (ருஎ)

இன்னுமிவ்வுகத்தியற்கையெண்ணிலவுண்டியாவும்
பன்னுதுமென்றாற்கோடிபகலினுமுடியாதம்மா
நன்மைதீர்கொடியவிந்தவுகத்திடைநண்ணார்நல்லோர்
புன்மைசேர்தீயமாந்தர்நண்ணுவர்புலன்கடந்தீர். (ருஅ)

இப்பெருங்கொடியபாவவிருங்கலிக்கஞ்சிமுன்னு
ளப்பெருஞ்சனற்குமாரனாதியரன்றவானோ
மைப்பெருஞ்சூரற்கஞ்சிக்கயிலையிலவந்தேபோன்
முப்பெரும்புவனந்தங்கமுளரியானுலகம்போந்தார். (ருகூ)

வேறு.

முளரிமலர்க்கண்முகுந்தனளித்த
முளரிமிசைப்பொலிமூர்த்திதிருத்தாண்
முளரிமுடிப்படமும்முறைதாழா
முளரிமலர்களைமுகிழ்த்திவைசொல்வார். (சூ0)

மைந்தர்வருத்தமொழித்துவளர்த்த
றந்தருடந்தையர்தங்கடனன்றே
யெந்தையுனைப்பகலெய்தினமெம்மை
யந்தமிலன்பினளித்தருளென்றார். (சூக)

என்றவர்தங்களையஞ்சலியொன்றே
நன்றருள்செய்தயனன்குமொழிந்தே
மன்றவுமக்கிடர்வந்ததொர்காரண
மொன்றுணர்மாதவிரோதுமினென்றான். (சூஉ)

விரிந்தகொடுங்கலிவெங்கனல்வாட்டக்
கரிந்துடல்வெம்பினள்காசினிமங்கை
வருந்தியடைந்தனம்வைகிடனின்றி
யிருந்தவமாற்றவொரொல்லைசொலென்றார். ([illegible])

மாதவரோதியமாற்றம்வினவி
மூதெயின்மூன்றுமுருக்கியமுக்க
ணாதிபிரானடித்துணைநெஞ்சப்
போதிலிருத்துபுபோதனுரைப்பான். (சுச)

மாதவிர்மாதவன்மார்பினில்வைகு
மாதர்வனப்பின்மழைக்கண்மடந்தை
மாதவமாற்றியவன்கமலாலய
மாதலமென்றெருமாணகருண்டால். (சுரு)

அந்நகர்மேன்மையளப்பரிதந்த
நன்னகர்மான்மியநாஞ்சிலகூறுது
மின்னவிர்வேணியன்மெய்யருடன்றன்
மன்னியவான்புகழ்மாதவிர்கேண்மின். (சுசு)

வேறு.

நாயகிக்குமுன்னாயகனவின்றுளதிந்தத்
தூயமான்மியமுனிவிர்காள்சொல்லருமாரூர்
மேயினோர்தமைத்தீயதோர்வெங்கலிதொடரா
தாயமாநகர்தினையுமுன்பவமெலாமகலும். (சுஎ)

அரியமாதவம்புரிந்துநல்லறம்பலவிழைத்தும்
விரதவேள்விகளெண்ணிலவாற்றியுமேவு
முரியமாண்பயனெண்கமலாலயநகனாக்
கருதவேயுடனெய்திடுங்கருதருந்தவத்தீர். (சுஅ)

மாவிரும்புமாரூர்த்திருநகரிடைவாளா
மேவினுலுமாமேதமாற்றியபயன்மேவும்
பூவினூரொலாந்தொழும்பயன்கமலையம்புரத்தை
நாவினாலுரைசெய்யவேநண்ணுநற்றவத்தீர். (சுகூ)

உலகினூரொலாமொருபுறத்தொருபுறத்தாரூர்
துலையமைத்தரனருளின்யாந்தூக்கினந்தொன்னா
ளலகினூர்பதினாறிலொன்றமைந்திலவாரூர்க்
கிலகுமாதவிரந்நகர்ப்பெருமையாரிசைப்பார். (எ0)

அளவின்மாதவமுனிவிராரூர்நகரத்தி
னளவில்பல்வகையுலகங்களெவற்றினுமமைந்த
வளவிதீர்த்தமும்யோகருமமரருமீச
னளவில்பல்கணநாதருநாடொறுமமர்வார். (எக)

அனந்தகோடிமாசத்திகளனைத்துசேவிப்ப
வனந்தகோடிசெங்கதிரொளியருட்பராசத்தி
யனந்தகோடிமூதண்டமுமண்டத்திலுள்ள
வனந்தகோடியாருயிர்களுமளித்துவீற்றிருக்கும். (எஉ)

நீலநன்னிறமொருபுறமொருபுறநிறைசெங்
கோலநன்னிறங்கொண்டகற்பகமொருபுறத்தின்
பாலெழுந்தினிதூழிதோறூழிதெண்பரவை
ஞாலமுய்ந்திடநற்பயனுதவியேநண்ணும். (எந)

அந்தமூர்த்தியையருச்சனைபுரிந்துமாலலர்ந்த
செந்தண்மாமலர்த்திருவொடுதிகிரியும்படைத்தான்
முந்தைஞான்றியாமருச்சனைபுரிந்துமூவுலகும்
தந்திடுந்தொழில்பெற்றனமபெறற்கருந்தவத்தீர். (எச)

பொன்னும்வெள்ளியும்பூசனைபுரிந்துபல்கலையு
மிந்நிலம்புகழமிர்தசஞ்சீவினியென்னு
மன்னுவிஞ்சையும்படைத்ததையன்றிமுன்வழிபட்
டின்னருந்தமிழ்மாமுனியொலிகடலுண்டான். (எரு)

கலியுகச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௲அ

---

## பிரதக்ஷிணச்சருக்கம்.

---

கோசிகன்வழிபாடுசெய்தந்தணர்குலத்து
மாசிலாமுனியாயினனிந்திரன்வானோர்
பூசைசெய்துபொன்னுலகவாழ்வடைந்தனர்புகழ்சா
லாசிலிங்கர்க்கெல்லையைங்குரோசமதாகும். (க)

வேறு.

இந்தவெல்லைவலம்வந்தோர்க்கிரிந்திடாதபவமில்லை
யிந்தவெல்லைவலம்வந்தோர்க்கெய்திடாதபொருளில்லை
யிந்தவெல்லைவலம்வந்தோர்கூற்றனெல்லையிடம்போகா
ரிந்தவெல்லைவலம்வந்தோரொல்லையீசனுலகெல்லை. (உ)

யாவரேனுமிவ்வெல்லைவலமாச்சூழினிவ்வுலகம்
யாவும்வலஞ்சூழ்பயன்மேவுமெண்ணிலர்தவிரும்பாவம்

யாவுமீங்குமுன்னத்திலென்னுநின்றகல்வரங்கள்
யாவுமெளிதில்வந்தெய்துமிருடிகாண்மற்றிவைவாய்மை. (ங)

படவாளரவக்கிண்கிணிக்காற்பரமன்பனிவெண்டிங்கண்முடிச்
சடைவாளன்னதிருமேனித்தேவனாரூர்வலஞ்செய்யி
னெவ்வோரடிக்குப்பலவேள்வியுஞற்றும்பலன்வந்துடனெய்துங்
கைவாய்நெல்லிக்கனியென்னச்சித்தியனைத்துங்கைவருமால். (ச)

மங்கைமாதர்பாலருயிர்வதைத்ததீயபாதகமும்
பொங்குதீம்பாற்சுரபிவதைபுரிந்தகொடியபாதகமு
மங்கிவேள்வியந்தணர்தமாவியழித்தபாதகமு
மெங்களீசன்றிருவாரூரொல்லைசூழவேகெடுமால். (ரு)

காசியாதிதலஞ்சூழ்ந்துதொழுதபயனுங்கங்கைமுத
லாசிலாதநதியனைத்துந்தோய்ந்தவந்தவரும்பயனு
மாசிலாததவங்கோடிவருடம்புரிந்தமாண்பயனு
மீசனாரூர்நகரொல்லையொருகாற்சூழவெய்திடுமால். (சா)

ஒருகால்வலங்கொண்டவரிந்தவுலகமுழுதுந்தனிபுரப்பா
ரிருகால்வலங்கொண்டவரிமையோர்க்கிறைவனாவார்மூன்றுமுறை
வருவார்வலநான்முகன்பதத்துமன்னிவாழ்வார்நான்குமுறை
புரிவார்வலநாகணைத்துயிலும்புத்தேளுலகம்புகுவாரே. (எ)

ஐந்துமுறைசூழ்ந்தவரீசனுலகத்தடைவார்முறையாறு
வந்துசூழ்ந்தோர்சிவனருகுவாழ்வாரோரேழ்முறைசூழ்ந்தோ
ரெந்தைபெருமானுருவாவாரிரண்டுநான்குமுறைசூழ்ந்தோர்
நந்தலில்லாப்பேரின்பமுத்திவாழ்க்கைநண்ணுவரால். (அ)

அறையுமேடத்திங்கடனிலபரபக்கச்சதுர்த்தசியி
னிறைவனெந்தைதிருவாரூரொல்லையினிதுவலஞ்செய்வோர்
கறைகொள்பாவமுழுதகன்றுகடல்சூழுலகந்தனிபுரந்து
குறைவில்செல்வச்சிவலோகமடைந்துவீட்டிற்குடியுறைவார். (கூ)

பொலங்கொள்செவ்விநுண்டாதுபொதிந்ததோட்டுப்பூங்கொ ன்றை, யலங்கன்முடியார்திருவாரூ ரைந்துகுரோசத்திருவெல்லை, வலங்கொண்டழியாப்பெருஞ்செல்வ வரம்பெற்றுய்ந்தோர்கதைய வற்று, ணலங்கொள்காதையொன்றறைவனன்குகேண்மினுன்மறை யீர். (௰)

ஊமேன்வறியனொருவனிக ழாரானிளங்கன்மேய்த்தேய்
புக், இமைதீர்ந்ததொழில்பூண்டங் கொழுகுந்தினத்திலொருதின
த்தோர், காமர்சுரபியகன்றிடலு முடையோன்வெகுளக்கலங்க
றுத், தோமில்பசுத்தான்போஞ்சுவடு தொடர்ந்துபசியிலுடன்பெய
ந்தான். (கக)

படியோர்புகழுந்திருவாரூரொல்லைசூழ்ந்துபடிந்தணைந்தான்
கடியார்மலர்ப்பூங்கயாதீர்த்தக்கரையிலாவைக்கண்டனன்
மடிவார்ந்தொழுகிவழிநிம்பான்மடமென்னடையவண்பசுவை
யுடையோன்முன்னருடன்கொடுபோய்விடுத்தானகன்றானுமன்றான்.

அந்தவூமன்மேடமதியபரபக்கச்சதுர்த்தசியி
னந்தமில்லாவளஞ்சான்றநம்பனாரூர்நகர்சூழ
வந்தபயனாற்றசானனப்பேர்வளங்கொடேயமன்னன்பான்
முந்தையுணர்வோடுதித்துலகமுழுதும்புரந்தான்முனிவீர்காள். ()

பசுவுநகரஞ்சூழ்போந்தபயனாலவற்குமந்திரியா
யிசையுமுன்னையுணர்வோடுமினிதுதோன்றிவைகியதா
லசைவிறவத்திரரசனவனந்தக்காலந்தொறுமடைந்து
வசையில்புகழாரூரொல்லையமைச்சனோடும்வலஞ்செய்தான். (க[illegible])

செய்யுநாளிலாங்கொருநாட்செல்வக்கமலாலயத்துறையுந்
துய்யமுனிவர்கடற்றனைசூழவாரூர்வலஞ்சூழு
மையில்புகழ்வேந்தனைநோக்கியாண்டுதோறும்வந்துவலம்
பொய்யிலன்பிற்புரிநிமித்தம்புகலிங்கென்னப்புகன்றனனால். (க[illegible])

புகலக்கேட்டுமுனிவோர்கள்போர்வேலரசன்றனைவாழ்த்தி
மிகவற்புதமுற்றன்றுமு ல்விளம்புமந்தவேலைதனி
னகர்மற்றதனைவலஞ்செய்துநாதனடிக்கீழ்நண்ணினரால்
பகர்தற்கரிதப்பதிவலங்கொண்டுய்ந்தோர்தொகுதிபடிமையினீர்

நிமித்தம்புகன்றநிருபர்பிரானிறைதேம்பொழிலாரூர்வலஞ்சூழ்க்
தமைச்சரோடுந்தன்பதிசென்றந்தமுறையிற்பன்முறைசூழ்ந்
திமைப்பிலாதாரிறைவனெனவிந்தஞாலம்புரந்தேபி [ந்தான்
னுமைக்கோர்பாகமுகந்தளித்தோனொண்டாமரைத்தாணிழலுறை

பிரதக்கிணச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகககு.

---

## புராணங்கேட்குமகிமைச்சருக்கம்.

இத்தலத்துள்ளதீர்த்தமோவனந்தமெண்ணிலாவூழியுமழியா
வித்தலத்துள்ளசிவலிங்கமனந்தமிம்பரும்பருமேத்து
மித்தலத்துள்ளவற்புதமனந்தமெம்பிரான்சத்திதன்மயமா
மித்தலத்துள்ளசிறப்புமோவனந்தமிருந்தவத்திசைபெறுமுனிவீர்.

இத்தலத்துள்ளதீர்த்தநீர்படிந்துமித்தலத்திருந்தவமிழைத்து
மித்தலத்திலிங்கந்தாபனஞ்செய்துமியல்புளியருச்சனைபுரிந்து
மித்தலத்தீசன்மந்திரபேதமெண்ணியுந்தானங்களீந்து
மித்தலந்தன்னிலறம்பலபுரிந்துமித்தலந்தனைவலஞ்சூழ்ந்தும். (உ)

சித்தியுமேலாம்பதங்களுநீங்காச்செல்வமும்போகமுஞ்சிறப்பு
முத்தியும்பெற்றதேவர்தந்தொகையுமுனிவர்தந்தொகுதியுமனந்த
மெத்துநீருலகத்தரசர்தந்தொகையுமேனையர்தொகுதியுமனந்தஞ்
சுத்தமாமுனிவீர்மற்றவர்காதைத்தொகுதியின்பேதமுமனந்தம். ()

மற்றவையனைத்தும்வரம்புறவகுத்து வழுத்துதுமென்னின்மாமலர்மே, லுற்றவனனந்தநாப்படைத்தனந்த மூழிநாளுரைப்பினுமுலவா, வற்றமிலனந்தம்புகழ்நிறையாரூ ரணிநகர்க்காதைகளனைத்தும், வெற்றிசாலனந்தன்மிசைத்துயில்விடையூர் விமலனேயறிவன்மெய்த்தவத்தீர். (ச)

ஆதலாலாரூர்க்காதையிற்சிலயா மறிந்தவாறறைந்தனமிப்பா, லேதமில்சிறப்பினிப்பெரும்புராண மெழுதுவோரெழுதிடப்பணிப்போ, ரோதுவோர்கேட்போரோதுவோர்க் குதவியுகந்தினிதாற்றுவோரெய்துந், தீதுதீர்பலனிற்சிறிதியாமெடுத்துச் செப்புதுஞ்செப்பருந்தவத்தீர். (ரு)

வேறு.

பூதமோரைந்தும்விண்ணோர்தொகுதியும்புரைதீர்காட்சி
மாதவர்கணமுமுய்யவன்மீகத்தெழுந்தமுக்க
ணாதிதன்சத்திபீடமாகியவாரூர்க்காதை
யோதுமிப்புராணமோர்காலோர்திழலுகந்துகேட்கில். (சா)

மணியினுன்மந்திரத்தான்மருந்தினுன்மாய்ந்திடாத
பிணிகளுமாயுமாயப்பெரும்புகழ்சிறப்புவாய்மை
குணமிகுநெறிமெய்ஞ்ஞானங்குருமொழியறமொழுக்க
முணர்வுசால்கல்விசெல்வமொழிந்திடாவாயுளுண்டாம். (எ)

தினற்பொருட்டுயிர்வதைத்தபாவமுஞ்சிதையும்வேறு
மனைப்பொருட்டார்வம்வைத்தபாவமுமடியுஞ்சொன்றி
புனற்பகர்பாவந்தானும்பொன்றிடுமகளிர்வாசி
தனைப்பகர்பாவந்தானுந்தழற்படுபஞ்சின்மாயும். (அ)

பரமனைவணங்கல்செய்யாப்பாவமும்பரமற்கன்பாம்
பெரியவர்தமையிகழ்ந்தபாவமும்பீடுசான்ற
திருவெண்ணீறணிதலசெய்யாப்பாவமுஞ்சிவனதுண்மை
யரியவஞ்செழுத்துக்கூறுப்பாவமுமகலுமம்மா. (௯)

வேறு.

இருடிகாளின்னுமுரைக்குதுங்கமலை
யெனுந்தலத்தொப்பதோர்தலமு
மருளும்வன்மீகலிங்கமூர்த்தியைப்போ
லளித்திடுமூர்த்தியுமழ்கின்
மருளகறேவதீர்த்தநீர்போல
வன்பவமகற்றுநன்னீருந்
தெரியினிம்முறைமூவுலகினுமில்லை
செப்புமீதுண்மைசெய்தவத்தீர். (௧0)

என்றுபல்வகையாற்சூதமாமுனிவ
னிசைபெறுஞ்சௌனகராதி
நன்றுசான்முனிவர்யாவருங்கேட்ப
நவிற்றியாரூர்ப்புராணத்தை
யொன்றுறுமனத்தோடுயர்தவர்யார்க்கு
முவக்குநல்லாசிகளியம்பி
வென்றிகொள்வியாதமுனிபதநினைந்து
விளம்பினன்பற்பலதுதிகள். (௧௧)

கைத்தலத்தமருநெல்லியங்கனியிற்
கமலைநன்மான்மியமுழுதும்
பத்தியிற்கேட்டசௌனகராதி
பன்னருங்கலையுணர்முனிவர்
வித்தகச்சூதமுனிவனைப்பூசை
விதிமுறைபுரிந்தனர்வலஞ்செய்
தத்தநீபுகலுமருமறைப்பொருள்கேட்
டடியரோமுய்ந்தனமன்றே. (௧௨)

தவப்பெருவகுணநேசார்ந்தவர்க்காக்குந்
தலைவனேசம்புவேப்ரனென்
றுவப்பொடுபேணியுமோதிசான்முனியே
யுத்தமர்தம்மிலுத்தமனே
பவப்பிணியகற்றும்பரமசற்குரவ
படியிலாப்புகழினோனெனச்
சிவப்பெருந்தவத்தர்யாவருந்துதித்துச
செம்மைசேரின்பமேவினரால. (கங)

வேறு.

ஆதிபராசத்தியெனுமன்னைவாழி
யல்லியங்கோதைப்பெயராமம்மைவாழி
மாதவர்சேர்வன்மீகநாதன்வாழி
மகிழ்வருளுந்தியாகேசவள்ளல்வாழி
போதமுதவுந்தேவதீர்த்தமவாழி
புனிதசிவனடித்தொண்டர்பொருந்திவாழி
நீதியருள்சிவதருமகருத்தர்வாழி
நிறைசெல்வத்திருவாரூர்நீடுவாழி. (கச)

புராணங்கேட்டுமகிமைச்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம - உகூஉகூ

---

திருவாரூர்ப்புராணம்
முற்றிற்று.



சிவமயம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧௨ | ௩௫ | ௧ | அன்னலார் | அங்கலார் |
| ௨௬ | ௧௦௧ | ௧ | அன்னலார் | அங்கலார் |
| ௨௯ | ௧௨௬ | ௧ | சிலைக்... | சிலை |
| ௩௨ | ௧௪௫ | ௧ | யிடையின் | யிடையிற் |
| ௪௨ | ௪௮ | ௧ | தானமாய்ப்பெற்ற | தானமாட்பெற்ற |
| ௫௫ | ௬௨ | ௩ | யமுதாய் | வமுதாய் |
| ௫௯ | ௬௩ | ௪ | மனிதராய் | மனிதரா |
| ௬௨ | ௪ | ௧ | மதற்கிழ் | மதன்கிழ் |
| ” | ” | ௪ | மேன்மைப் | மேன்மை |
| ௬௫ | ௨௯ | ௨ | ஆயிரங்கோடி.. | ஆயிரகோடி |
| ” | ௩௪ | ௨ | காலதூய | காலத்தூய |
| ௬௮ | ௯ | ௩ | வலமாய் | வலமா |
| ௭௧ | ௩௨ | ௨ | தொரும் | தொரு |
| ௧௦௫ | ௬௧ | ௪ | கந்திருவர் | கந்தருவர் |
| ௧௧௫ | ௩ | ௩ | மேனி | வேணி |
| ௧௧௮ | ௨௨ | ௩ | ஞானப் | ஞான |
| ௧௨௦ | ௩௬ | ௪ | இருப்பா | இருப்பார் |
| ௧௨௧ | ௪௭ | ௪ | மாதவர் | மாதவிர் |
| ௧௫௪ | ௫௬ | ௧ | டொற்றயங்கிய | டொன்றயங்கிய |
| ௧௬௦ | ௨௧ | ௨ | அன்றேன் | அங்நான் |
| ௧௬௫ | ௨௪ | ௧ | வாமொழி | வாமொழு |
| ௧௭௦ | ௬௭ | ௨ | கௌரி | கவுரி |
| ௧௮௨ | ௩௪ | ௨ | பெருது | பொருது |
| ௧௯௮ | ௫ | ௪ | கிழ்பெரும் | கிழ்ப்பெரும் |
| ௨௦௩ | ௪௩ | ௧ | ஆயிரங் | ஆயிர |
| ௨௦௮ | ௧௪ | ௨ | சுத்திட | சுற்றிட |
| ௨௧௦ | ௨௮ | ௨ | வாளொளி | வாலொளி |
| ௨௧௫ | ... | ... | மண்டனத்திர்த்த | மண்டனதிர்த்த |
| ௨௧௭ | ... | ... | மண்டனத்திர்த்த | மண்டனதிர்த்த |
| ௨௧௯ | ... | ... | மண்டனத்திர்த்த | மண்டனதிர்த்த |
| ௨௨௦ | ௩௫ | ௨ | ஆயிரங் | ஆயிர... |
| ” | ௩௬ | ௨ | மண்டனத்திர்த்த | மண்டனதிர்த்த |
| ” | ... | ... | மண்டனத்திர்த்த | மண்டனதிர்த்த |
| ௨௨௫ | ௩௯ | ௩ | பொருளாயென்ணி | பொருளாவெண்ணி |
| ௨௨௯ | ௭௦ | ௩ | அறைந்த | அறைந்து |
| ” | ” | ௪ | காங்கையன் | காங்கெயன் |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௩௧ | ௮௬ | ௩ | பரிந்து | புரிந்து |
| ,, | ௮௮ | ௪ | னந்தமிழ் | லந்தமிழ் |
| ௨௩௩ | ௬ | ௨ | சிருக்கும் | சிருக்கு |
| ௨௩௫ | ௫ | ௪ | பொலிந்தது | பொரிந்தது |
| ௨௩௬ | ௧௨ | ௨ | புல்லி. | புல்லிக் |
| ௨௭௨ | ௧ | ௧ | திசைத்தென் | திசைதென் |
| ௩௧௮ | ௪௨ | ௪ | எண்ணிய | எண்ணிய |
| ௩௩௧ | ௧௫ | ௨ | ஆலயத்திற் | ஆலயத்தின் |
| ,, | ௧௬ | ௧ | எய்திய | எய்தியவ் |
| ௩௫௨ | . | . | ௫௩௨ | ௩௫௨ |
| ௩௬௧ | . | . | விசையை | விசயை |
| ,, | ௧ | ௨ | ௸ | ௸ |
| ,, | ௪ | ௧ | ௸ | ௸ |
| ௩௬௨ | .. | .. | ௸ | ௸ |
| ௩௬௬ | | .. | பரசுராம | பரசிராம |
| ,, | ௧ | ௩ | ௸ | ௸ |
| ௩௬௭ | .. | . | ௸ | ௸ |
| ,, | ௪ | ௩ | செறுனர் | செறுநர் |
| ௩௯௬ | ௬ | ௪ | மாரியம் | வாரியம் |